# 1

சோஃபியாவை நான் முதலில் அறிய நேர்ந்தது, எகிப்தில். இப்பொழுது அவள் மீது உயிரையே வைத்திருக்கும் நான், ஆரம்பத்தில் அலுவலக நிமித்தமாய்த்தான் சந்திக்கத் துவங்கினேன். அவ்வாறு நிகழ்ந்த ஒவ்வொரு சந்திப்பிலும், அவள் மீதான பிரமிப்பு கிடுகிடுவென கூடிக் கொண்டே இருந்தது, எனக்குள் மாபெரும் வியப்பை ஏற்படுத்திற்று. பெரிய அளவிலான ஒரு சில பலசரக்குக் கடைகளை ஒருங்கிணைத்து இயக்கும் தலைவியாய் செயலாற்ற, எத்தனை திறமைகளைக் கொண்டு விளங்குகிறாள்! அதுவும் இந்த சிறிய கன்னி வயதில்! என்பதே என் வியப்பிற்குண்டான காரணம்.

ஒவ்வொரு கடையிலும் குறைந்தபட்சம் 40 வேலையாட்கள். இது போல பத்துக்கும் மேற்பட்ட கிளைகள். அத்தனை வேலையாட்களும் வலிய வந்து பேசும்படி - திறந்த மனதுடன், உரையாடலில் எப்போதும் ஊடாடும் நகைச்சுவையுடன் சோஃபியா திகழ்வதை - ருசித்துப் பார்ப்பேன். பணியின்போது நிகழும் ஒவ்வொரு சம்பவத்துக்கும் வெடுக் வெடுக்கென அவள் கூறும் வர்ணனைகள் அத்தனையும், சிறப்பான நாவலாசிரியர் ஒருவர் பிரயோகிக்கக்கூடிய தரத்தில் இருப்பதை, ஒரு நாள் அவளிடம் சொல்லியே விட்டேன். கலகலவென சிரித்தாள்! வேலை பார்க்கும் போது, நான் எப்போதும் தலைவி என காண்பித்துக் கொள்ள எத்தனித்ததே இல்லை.... அவர்களுக்குள் ஒருத்தியாய் இருக்கவே நினைப்பேன்! இப்படி எல்லோரும் என் சொல்லைக் கேட்டுப் பணியாற்ற, இது மட்டுமே காரணம் என்றாள். நண்பர்களானோம்.

சோஃபியா ஏதோ பணியாளர்களிடம் வேலை வாங்கத்தான், இப்படி திறந்த மனமுடையவள் போலவும், தொழிலாளர்களில் ஒருத்தியாய் காட்டிக் கொள்வதாயும் நான் நினைத்தது எவ்வளவு தவறு என்று, அவளை, ஒரு நாள் மாலை டின்னருக்கு அழைத்த போது, தாமதமின்றி, வெகுளித்தனம் மிகுந்து, கல்மிஷமின்றி அவள் ஒப்புக்

கொண்ட விதத்தில் விளங்கிற்று. அத்தனை அழகு குழந்தை மனம் சோஃபியாவுடையது! அவளோடு இரவு உணவு பகிர்ந்த போது நெஞ்சு முழுவதும் குளுகுளுவென புது ஆறு ஓடும் தண்மையை நான் உணர்ந்தேன்! இந்தக் குளுமையை சோஃபியா, அடிக்கடி எனக்குத் தர ஆரம்பித்தது, என் அதிர்ஷ்டம்!

கடந்த 10 மாதங்களாய் சோஃபியாவுடன் நான் பழகுவதில் அறிந்தவை இவை. ஆனால், சோஃபியா அளவுக்கு திறனில்லா திருந்தாலும், எதனாலோ, நான் பணியாற்றுவதில் திருப்தி கொண்ட உயரதிகாரிகள், என்னை, இங்கிருந்து 700 கி மீ. தள்ளி ஆரம்பித்துள்ள அலுவலகத்தின் புதுக் கிளைக்கு தலைவனாக அறிவித்து இடமாற்றம் செய்த போது, இன்னொன்றையும் அறியப் பெற்றேன்! தினம் தினம் அவளின் பூர்ண சந்திர முக தரிசனம் இனி கிட்டுவது அரிது என உறைத்து விக்கித்த போது - தீவிரமாக சோஃபியாவை நான் காதலிப்பதையும், அவள் என்னுள் கரைந்து விட்டிருப்பதையும், அவளையே வாழ்க்கைத் துணைவியாக ஆக்கிக் கொள்ள, என்னையுமறியாமல், நெஞ்சு முழுக்க ஆசை ஒன்று வளர்ந்து செழித்திருப்பதையும் - அறியப் பெற்றேன்!

இத்தனை நாட்களும் டின்னர் நிகழ்ந்த போதெல்லாம், நான் சற்று உற்று ஊடுருவிய சோஃபாவின் கண்கள், இன்றென்னவோ புதிதாய் மின்னின. கண்கள் மட்டும் தானா...? அவளிடம் இன்று எல்லாமே எனக்குப் பிடித்துப் போயின. வெண் நெற்றியில் சுருட்டை சுருட்டையாய் விழுந்து நெளிந்து, வீசும் காற்றில் சன்னமாய் ஆடிக்கொண்டேயிருந்த அந்த கன்னங்கரிய முடிக் கற்றைகள்! இளமை ஒழுகும் நீல விழிகள்! அவள் பேசும் போதெல்லாம் துடிதுடித்து விளையாடும் வெண்ணை உருண்டை முகவாய்! பெருத்து-வளைந்து-சிறுத்தெல்லாம் இல்லாது, நேரே பூமியைக் குறி பார்த்து நீண்டு வளர்ந்திருந்த அந்த கூரிய நாசி! தன் அதீத சதைப்பற்றற்ற குடுவை உடல் வாகினைப் பறை சாற்ற அவள் உடுத்தியிருந்த பேண்ட்-டீ ஷர்ட் - என எல்லாமே என்னைக் கட்டிப் போட்டன!! இவையத்தனையும், 'கவரும் இவள் தரிசனத்தை இனி காண முடியாதே....' எனும் இழப்பால் விளைந்த ஆதங்கத்தால் என்னுள் நடக்கும் போரின் விளைவு!

இவ்வலியின் காரணமாய், மனம் இது நாள் வரை நாங்களிருவரும் பேசிக் கொண்ட பல சம்பாஷணைகளை அசை போட்ட வண்ண

மிருந்தது. இருவருக்கும் பிடித்தவை- பிடிக்காதவை பற்றி சம்பாஷித்திருக்கிறோம். எதிர்கால திட்டங்கள், நெருங்கிய நண்பர்கள், கல்லூரி கால புல்லரிப்புகள், நிகழ்கால அலைக்கழிப்புகள், மனம் சந்தித்த ரணங்கள்- வலிகள்- ஒத்தடங்கள் என எல்லாமும் பகிர்ந்துக் கொண்டிருக்கிறோம்.

இவ்வாறு, இருவரும் உரையாடி மகிழ்ந்த அத்தனை வசனங்களையும், நான் மனதில் மறுபடி மறுபடி ஓட்டிப் பார்த்து, ரசித்து, பின் வெதும்பிக் கொண்டே இருக்க, அதனால், மன லயிப்பு வேறெங்கோ இருப்பதை என் முகம் பிரதிபலித்ததோ என்னவோ! எனது முகமருகே தனது விரல்களை விசிறியாக்கி வீசி வீசி, ''என்ன அப்படி ஓர் ஆழ்ந்த தியானம் சார்லஸ்...?'' என்றாள் சோஃபியா.

''சோஃபி! எத்தனை மாலைகள்! எத்தனை இரவுகள்! நாம் சந்தித்துப் பேசி பகிர்ந்துள்ளோம்! இருப்பது, இல்லாதது என எதையும் விட்டு வைக்காமல், மணிக்கணக்காய் பேசியே தீர்த்துள்ளோம்! ஆறு மணி நேரம் பேசியிருப்போம்... ஆறு நொடி சென்றதோ என சிலிர்ப்போம்! இருந்தாலும், இந்த அத்தனை சந்திப்புகளிலும் நீ படு கெட்டிக் காரியாய் இருந்துள்ளதை இப்போது நான் உணர்கிறேன்.''

க்ளாரினெட் இசை, உணவகத்தின் அமைதியைக் குலைக்காமல், சன்னமாய் ஒலிபெருக்கிகளில் வழிந்துக் கொண்டிருந்தது.

அவளுக்கு மிகவும் பிடித்த 'ஸ்பிரிங் ரோலில்' ஒன்றை அதற்கு வலிக்காமல் கடித்தபடி சொன்னாள்: ''விளங்கவில்லை, சார்லஸ்... நீ ஏதோ குற்றம் சாட்டுவதாய் தோன்றுகிறது. அதாவது, நான் எதையோ மறைத்து மறைத்துப் பேசியுள்ளதாய் நீ உணர்வதாய் படுகிறது. அப்படியா?''

ஆஹா.... மெல்லிய சிறு விளக்குகளின் ஒளியில், சோஃபியாவின் வெண்ணிற முகம், கரு வானத்தில் தனியாய் தெரியும் முழுச் சந்திரனைப் போல, எத்தனை பளபளப்பாய் ஒளிர்கின்றது! என்ன ஒரு வித்தியாசம்.... நிலவின் முகத்தில் களங்கங்கள் உண்டு.... சோஃபியாவிக்கு அவை கிடையாது! அத்தனை சுத்தம்!

''என்னாயிற்று சார்லஸ்... யாரைப் பற்றி சிந்தனை?''

''உன்னைப் பற்றித் தான்.''

''நான் தான் எதிரிலேயே உள்ளேனே...! பின் ஏன் என் நினைப்பு...?!''

''சோஃபி....! உன் குடும்பம் எது? நீ எங்குள்ளாய்? உன் குடும்பப் பின்னணி யாது? இவை ஒன்றையும் நீ கூறியதே இல்லை. இது நாள்

வரை இவற்றை கேட்க வேண்டும் என்று எனக்குத் தோன்றவு மில்லை. உன் போன் எண்கள் மட்டுமே, நானறிந்த உன் விலாசம்!! இப்படி எப்படி ஒரு தூரத்தை, நம்மிருவரிடையே, அழகாய் பாதுகாக்கிறாய் என எண்ணினேன். பிரமித்து அமர்ந்துள்ளேன். இதைத் தான் உன் கெட்டிக் காரத்தனம் என்றும் சொன்னேன்....!''

இப்போது, அந்த விசாலமான அறையின் நடுவில், அழகுபடுத்தி ஒளியூட்டப்பட்டிருந்த ப்யானோவை வாசிக்க, வெண்ணிற உடை உடுத்திய தேவதை போன்ற பெண்ணொருத்தி வந்தாள். வட்டமான சிறு நாற்காலியில் அமர்ந்து, அவள், ப்யானோ கட்டைகளைத் தன் விரல்களால் குத்திக் குத்தி இசை எழுப்பும் போது, தினுசு தினுசாக ஏழெட்டு பேர், கட்டைகளில் நடனமாடுவது போலிருந்தது. அப்படியொரு விரல் நளினம்! சுற்றும் முற்றும் திரும்பித் திரும்பி, வந்திருந்த வாடிக்கையாளர்களைப் பார்த்து, லேசாக புன்முறுவல் செய்தபடி இசைத்தாள் அவள்! நெஞ்சின் ஆழம் வரை சென்று அமரும் உயர் இசையாயிருந்தது அது.

''நன்றாய் வாசிக்கிறாள் இல்லை...?'' - அவளைப் பார்த்தபடி கேட்டாள் சோஃபியா.

நானும் ப்யானோ திசையைப் பார்த்தபடி, ''ஆம்! தேவ இசையாய் படுகிறது! நல்ல கலைஞர்! என் ஹ்ருதயத்துள் உள்ளதாய் நான் சமீபத்தில் கண்டுபிடித்துள்ள ஒரு தகவலை, உன்னுடன் பகிர்ந்துக் கொள்ள அமைதியான, நல் இசை வடியும், சுகந்தமான இந்த அறை, எனக்கென்னவோ மிக மிகச் சரியாய் படுகின்றது சோஃபி..!''

இருவரும் ப்யானோ கலைஞரிடமிருந்து கண்களை அகற்றி, ஒருவரை ஒருவர் பார்க்கிறோம். ''அப்படியென்ன தகவல் சார்லஸ்... எப்போது வேண்டுமாயினும் சொல்லியிருக்கலாமே....''

''அத் தகவலின் மையமே நீ எனும் போது, இடம் பொருள் ஏவல் பார்க்க வேண்டியுள்ளதே...'' - என்று லேசாக சிரித்தேன். அந்தச் சிரிப்பில் எப்போதுமற்ற ஒரு படபடப்பும், நரம்பதிர்வும் இருந்தன. இவற்றால், வார்த்தைகள் கோவையாய் விழாமல், நகர்ந்து நகர்ந்து விழுந்தன.

''சோஃபி!'' - ஏதோ தீர்க்கமாய் ஆரம்பிப்பது போல் காட்டிக் கொண்டாலும், மனம், சூறைக் காற்றில் முறியும் மரம் போல அவதித்தான் பட்டது. ''இதுபோல் தினமுமோ, வாரம் ஒரு முறையோ கூட, இனி நம்மால் சந்திக்க இயலாது. ஆனால் ஒன்று.... நான் சில மாதங்களிலோ ....இல்லை.... இவ்வருட இறுதியிலோ இங்கு வரும்

போது, நான் முதலில் செய்யவுள்ள காரியம் எதுவாக இருக்கும் தெரியுமா?''

என் நெஞ்சுக் குழி வறண்டு, உதடுகள் காய்ந்து, அந்தக் குளிர் அறையிலும் என் உடலெங்கும் ஓர் வியர்வைப் போர்வைப் போர்த்தப்பட, நான் கேட்ட கேள்வியை ஓர் ஆர்ப்பரிப்புமின்றி எதிர் கொண்டாள் சோஃபியா.

இது வரை சந்தித்த நாங்கள், திடுமென ஏன் சந்திக்க இயலாது? ஒரு வருடம் கழித்து சந்திக்கும் அளவுக்கு நான் செல்லவுள்ள தூர தேசம் எது? அதற்கு பிறகு செய்யவுள்ள காரியம், இப்படி விடுகதை போட்டு விடை வாங்குமளவு அதிசயமானதா? எல்லாமே கிறுக்குத் தனமாய் உள்ளது - என்பது போல், ஆர்ப்பரிப்பே இன்றி பார்த்துக் கொண்டேயிருந்தாள் அவள்...! அது தான் சோஃபி....! எதற்கும் தடதடவென்று அதிராத அழகு....!

எனக்கு மிக லஜ்ஜையாக இருந்தது. பீடிகை போட்டபிறகு தான் அது எத்தனை அர்த்தமற்றதாய் விளங்கிக் கொண்டிருக்கிறது என்பது புரிந்தது! சந்திக்க முடியாமல் போவதற்குண்டான காரணம் சொல்லி விளக்காமல் என்ன கேலிக் கூத்து இது...?! எனவே, மறுபடியும் ஏதேனும் பேசி, கேலி சிரிப்பினை அவளிடமிருந்து பதிலாய் வாங்கி கூசுவதற்கு பதில், நேரே விஷயத்திற்குள் நுழைந்தே விட்டேன்: ''நான் செய்யும் முதல் காரியம்... உன்னை மணமுடிப்பதாய்த் தானிருக்கும்''

இதற்கும் எச்சலனமுமின்றி, பதிலேதுமின்றி, சோஃபியா என்னைப் பார்த்துக் கொண்டேயிருப்பதை உள்வாங்கிக் கொள்ள இயலாதவனாய், ''வேறெந்தத் திருமணத்தாலும் எனக்கு உபயோகம் கிடையாது சோஃபியா. நிறைய நிறைய யோசித்துத்தான், இதோ, இங்கு - என்... இல்லையில்லை, நம் - திருமணம் பற்றிப் பேச ஆரம்பித்துள்ளேன்.'' - மனத்தை அரித்துக் கொண்டிருந்ததை சொல்லி விட்ட களிப்பில், மளமளவென ஒரு டம்ளர் குளிர் நீர் குடித்து ஆசுவாசமானேன். நீ சொல்வதை சொல்லு எனும் தொனியில் என்னைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள் சோஃபியா. அப்போது, உதடு பிரியாமல், அதே சமயம் கன்னங்கள் நன்றாக குவிய, கொஞ்சம் பெரிய புன் முறுவல் பூத்தாள். இது எதற்கு? கிண்டலா? ஆமோதிப்பா? ம்ம்.... இருக்கும் குழப்பத்தில், இது போன்ற குழப்பங்களும் வேண்டாம் என தீர்மானித்து பேச ஆரம்பித்தேன்.

''உன்னை உடனடியாக திருமணம் செய்துக் கொள்ள நிர்ப்பந்திக்க மாட்டேன். அதற்கு இரு காரணங்கள் உள்ளன. நீ, இந்தக் கோணத்தில்

பழகவில்லை என என் விருப்பத்தை நிராகரிக்கலாம். அது நிச்சயம் என்னை தாடி வளர்த்து தெருத் தெருவாக அலையும் மனக் கோளாறுள்ளவனாக ஆக்கி விடும் என்பதில் ஐயம் வேண்டாம். எனவே நீ அவகாசம் எடுத்துக் கொள்! சிந்தி! இயன்ற வரை இருவரும் இணையும் வழிவகைகளைக் கூறி விடு.''

இரண்டாவது காரணம் கூறுமுன், இது வரை நான் பேசியதில் அவள் என்ன உணர்ந்திருப்பாள் என, அவள் முகத்திலிருந்து படிக்க முயற்சித்தேன். என் முதல் காரணம் கேட்டதற்கு, தன் இரு புருவங்களையும், மிக அழகாக புருவ மையத்துக்கு சுருக்கி, கண்களைக் குறுக்கி அதில் சிறு சிரிப்பையும் கொடுத்து, இரு உதடுகளையும் உள் மடக்கி, காகம் போல் தலையை ஒருபுறமாய் சாய்த்து, கிண்டலில்லாத ஒரு கிண்டல் முக பாவத்தை என் மீது வீசிய வண்ணமிருந்தாள்.

''இரண்டாவது காரணம்: நீ ஒப்புக் கொண்டு, திருமணம் உடனே நிகழ்ந்து, வேலை நிமித்தமாய் பிரிந்து விடலாம். அது எதற்கு? தேவையில்லை. உன்னோடு வாழவே திருமணம் கேட்டேனே அன்றி, பிரிய அல்ல. எனவே காத்திருப்பேன். இவையே இரண்டு காரணங்கள், உன் இல்லை மற்றும் ஆம் மீதான இரண்டு காரணங்கள்...!''

இப்போது மேற்கூறிய தன் முக பாவத்தை மாற்றி, தன் இரு புருவங்களையும் நன்றாய் மேலே தூக்கி, நீளமாய் மூச்சை உள்ளிழுத்து வெளிவிட்டாள் சோஃபியா. சரி.... ஏதோ பேசத்தான் போகிறாள் என்று பார்த்தால், தட்டிலிருந்த ஒரு வெள்ளரித் துண்டெடுத்து அதன் நுனி கடித்து, இன்னும் வசதியாக நாற்காலியில் சாய்ந்து அமர்ந்துக் கொண்டாள். நான் என் பிரசங்கத்தைப் பின் வருமாறு முடித்தேன்:
''உன் மீது எனக்குள் வளர்ந்துள்ள திருமண முடிவுகள் இவை. என்ன, இவன் திருப்பித் திருப்பி திருமணம் என்றே அழுத்திப் பேசுகிறான் என நீ எண்ணலாம்...! மீண்டும் சொல்கிறேன் சோஃபி...! வேறெந்தத் திருமணத்தாலும் எனக்கு உபயோகம் இருக்காது...!''

''எனக்கு மட்டும் வேறெந்தத் திருமணத்தாலும் நிறைவு இருந்து விடுமா சார்லஸ்...? உன்னையன்றி வேறு ஓர் ஆடவனை கற்பனை கூட செய்ய இயலாது சார்லஸ்...!'' - குனிந்தபடி சாப்பாட்டுத் தட்டிலிருந்த பதார்த்தத்தைக் களைந்துக் கொண்டே இப்படிச் சொன்னவள், கண்களை மட்டும் மேலே உயர்த்தி என்னைப் பார்த்து,

பின் தாழ்த்திக் கொண்டாள். அவள் கன்னங்களில் சிறு சிகப்புக் கூட, தட்டைப் பார்த்து புன்னகைத்துக் கொண்டிருந்தாள்.

''நன்றி சோஃபியா, நன்றி....!'' - விண்டு விண்டு விழுந்துக் கொண்டிருந்த வார்த்தைகள், இப்போது சரசரவென வந்து விழுந்தன. ''டார்லிங்....! புரிகிறதா...! என் உணர்வுகள் உனக்குப் புரிகிறதா....!''

''புரியாமலா....! உனக்கு வேண்டுமானால் உன்னைப் புரியாமலிருக்கலாம்...! இடமாற்றம் நிகழவுள்ளதால் என்னைக் காதலிப்பதைக் கண்டு பிடித்துள்ளாய்...! ஆனால், சில நாட்களாகவே, என்னைக் கண்டதும் - உன் உடலில் கொஞ்சம் அதிக புத்துணர்வும் அளவு கடந்த சந்தோஷமும் குடி கொள்வதையும், அதனால் நீ நிலை கொள்ளாது செயல்கள் புரிவதையும் - கவனித்துக் கொண்டு தான் இருக்கின்றேன்...!''

''ஓ...!'' - வார்த்தைகள் எழாத ஆச்சரியம்.

நான் இவ்வாறு பேசிய வண்ணமாயிருந்ததால், அதிகம் சாப்பிட்டிருக்கவில்லை. ஆனால், அவள் நீரருந்தி சிறு ஏப்பம் வெளியிட்டதிலிருந்து, போதும் எனும் அளவு சாப்பிட்டிருப்பதாய் பட்டது. ''சார்லஸ்... வாழ்வில் எது நிலையற்றது...?'' - இது சோஃபியா.

''... ... ... ....''

''பதிலேதுமில்லையெனில், இக்கேள்விக்கு நீ துணுக்குறுவதாய் பொருள் கொள்ளவா??''

''... .... .... ....''

''எல்லாமே நிலையற்றவை....! நம் கைகளுக்கு அப்பாற்பட்ட, அகப்படாத, இயற்கை உந்துதலால், எல்லாமே மாறவல்லவை. சரி சரி...! ஏன் உன் முகம் இப்படி சிறுக்கின்றது? நீ உணர்வுகளுக்கு உடனுக்குடன் அடிமைப்படுகின்றாய் சார்ல்ஸ். நான் காதலை ஆமோதித்ததும் அப்படி முகம் மலர்ந்தாய்....! சாதாரணமாய் வாழ்க்கையின் எதிர்பாரா மாற்றத்தை எடுத்துச் சொன்னால் வாடுகிறாய்...! நான் ஆட்சேபித்தால் மன நோயாளியாகி விடுவேன் என்றெல்லாம் வசனம் சொன்னாயே...! காதலில், முதலில் நம்மை தயார் படுத்திக் கொள்ள வேண்டியது, காதல் தோல்விக்குத் தான்...! தெரியுமா...! அதற்காகத்தான் சொன்னேன். உன்னுடைய, எதற்கெடுத்தாலும் உணர்ச்சி வசப்படும் குணாதிசயத்திற்கு, இந்த இயற்கை விதியைச் சொல்லி வை...! போதுமப்பா...! தொங்கிய

முகத்தை மாற்றிக் கொஞ்சம் சிரியேன்...! புண்ணியமாய் போகும்...! ஆங்... நான் இங்கு இங்கிலாந்தில் எங்கு குடியிருக்கிறேன் தெரியுமா?''

என் சந்தோஷத்தை, ஏதோ வேண்டாததைப் பேசி அவித்துப் போட்டு விட்டாள் சோஃபியா. காதல் ஆமோதிக்கப்பட்ட மறு சம்பாஷணையே, தோல்வி அது இது என்று அமைந்தது, எனக்கு அபசகுனமாய் பட்டு நெஞ்சைத் தைத்தது. இருப்பினும், காதல் ஏற்றுக் கொள்ளப்பட்ட இந்த நல்ல தருணத்தில், மனம் வாடக் கூடாது என தீர்மானித்து, ''அதான் சொன்னேனே....! நீ, நம் எந்த சந்திப்புகளிலும், உன் சரிதையைக் கொஞ்சமும் சொல்லாத கெட்டிக் காரி என்று...!'' என்றேன்.

இருவரும் சிரித்தோம். மனம் லேசாயிற்று. பேச்சு ஸ்வாரஸ்யத் தில், என் தட்டிலிருந்த பதார்த்தங்கள் சில்லிட்டுப் போயிருந்தன. பிடிக்கவில்லை. எனவே, வெயிட்டரைக் கூப்பிட்டு இரண்டு ஐஸ் கிரீம்களுக்கு நான் ஆணையிட, சோஃபியா, தன்னைப் பற்றிய சில தகவல்களை உதிர்க்க ஆரம்பித்தாள்.

''நண்பா....! நான் இங்கிலாந்தின் சற்றே ஒதுக்குப் புறமான ஸ்வின்ஸ் டீனி 'ல் வாழ்கிறேன்.'' என்றவள். தொடர்ந்து சின்ன பாடல் வரி போல *''அது ஒரு குரூர வீடு...''* என்று சிறு புன்னகையினூடே பாடினாள். ''ஆம்...! சார்லஸ், நாங்கள் வசிப்பது, ஒரு குரூர வீட்டில்....'' என்று மீண்டும் அழுத்தந்திருத்தமாய் சொன்னது என்னைத் துணுக்குற வைத்தது.

குரூர வீடு என்றால்?

''விளங்கவில்லை சோஃபி....! குரூர வீடு என்றால்...?''

''இதனை விளக்க எனக்கும் இரு காரணங்கள் உள்ளன சார்லஸ். ஒன்று : அது அத்தனை பழைய வீடு...! சுவர்களில் காரை படிந்தும், அதன் ஈர வாடை எப்போதுமிருந்தும், சிறு சிறு ஜன்னல்கள் மட்டுமே கொண்டு அதிகம் இருட்டு பரவியும், ஒரு திட்டமில்லாமல் வளைந்து கழிந்து செல்லும் அறைகள் மற்றும் திரேதாயுக மர அலங்காரங்கள் கொண்டும் இருப்பதால், அசாதாரண வீடாய் தெரியும். இரண்டு : குடும்பத்தில் பல குணாதிசயங்களில் - கோபம், பொறாமை, ஏக்கம், தவிப்பு என மனக் குழப்பத்தின் பல பரிமாணங்களில் பிரஜைகள் வாழ்கிறார்கள். இவ்விரு காரணங்களால், அதனை, குரூர வீடு என்றேன்.''

''குடும்பம் பெரிசோ.... தம்பி தங்கை, மாமா, மாமி... ??''

''ஒரு சகோதரன், ஒரு சகோதரி, அம்மா-அப்பா, மாமா, மாமி, பெரியப்பா, பெரியம்மா, பாட்டி, பல வேலையாட்கள், இவர்களுக்கெல்லாம் மேல், எங்கள் தாத்தா....!''

''ஓ....! பின் குரூர வீடு என்று சொல்லாதே....! கலாட்டா வீடு என்று சொல்.'' கொஞ்சம் தூக்கலான சந்தோஷமாய் சொன்னேன். சிரித்தாள்.

''ஆனாலும் நாங்களெல்லோரும் காலகாலமாய் ஒன்றாய் வசித்ததில்லை சார்லஸ். பணி மாற்றம், பணி ஓய்வு இவையெல்லாம் தான் எங்களை இப்போது ஒன்றிணைத்துள்ளன'', என்றவள் ஒட்டலறையின் உச்சி பார்த்து யோசித்து பின் தொடர்ந்தாள்: ''எங்கள் வீட்டில் பூஜை புனஸ்காரம் கொஞ்சம் ஜாஸ்தி. பண்டிகைக் காலங்களில் எல்லோரும் ஒன்று சேர வேண்டும் என்பது தாத்தாவின் கட்டளை'' என்றவள், ''தாத்தா....'' என பெருமை-பக்தி-பயம்-நிறைவு பொங்க உச்சரித்து, ''எங்கள் குடும்பத்தில், ஏதோ ஒரு வகையில், ஒவ்வொருவரிடமிருந்தும் பிரிக்கவேயியலாத கதாபாத்திர மாய் உள்ளார், தாத்தா'' என்றாள். ''எண்பதுக்கு மேல் வயது...! நான்கடி குள்ளார்...! கறுப்பு...! அழகே கிடையாது...! ஆனாலும் பாதகப்படாமல், எப்போதும் சுறுசுறுப்பு...! தினமும் ஏதேனும் கற்க வேண்டும் என்பதில் தீராத ஆசை...! இரண்டு வயது குழந்தை முதல் தொண்ணூறு வயது கிழவர் வரை, அந்தந்தத் தளத்தில் அமர்ந்து பேசி ஆளை அசத்தி விடுவார். அவருக்கருகில் யாரிருந்தாலும் சற்று மங்கியே தெரிவர் சார்ல்ஸ்...! குடும்பத்தில் அனைவரும் ஒரே ஒரு குடையின் கீழ் தான் வாழ்கிறோம்! அந்தக் குடை: தாத்தா...!''

''இண்ட்ரஸ்டிங்....!''

''நிச்சயமாக, சுவாரஸ்யமானவர் தான். அடிப்படையில் ஒரு கிரேக்கர். பிழைப்புக்காக இங்கு வந்து சிறு வயதிலேயே குடி புகுந்தவர். பெயர் லியோனைட்'' என்றவள், என்னைப் பார்த்து கண் சிமிட்டிச் சொன்னாள்: ''நல்ல பசையுள்ள மனிதர். கொடை பணக்காரர்.''

''பல்லாயிரத்துக்கு சொந்தமானவரோ...??''

''ம்ம்...! பல லட்சத்துக்கு, பல கோடிக்கு...!'' - சொல்லிவிட்டு முத்துப் பற்கள் அகல சிரித்தாள். ''அவரை நான் நிரம்ப மதிக் கிறேன்...! நேசிக்கிறேன்...! வியக்கிறேன்...! உலகில் வேறு யாரையும் விட, அவரை மட்டும் நெஞ்சில் வைத்துப் பூஜிக்கிறேன்...!

எண்பதைக் கடந்த இளைஞரவர்...! பழகத் தெரிந்த மாமனிதர்....! என் இனிய தாத்தா....!''

அந்த டின்னரோடு பிரியா விடை பெற்றோம். பிறகு இரு வருடங்கள் கடந்ததே தெரியாமல், இதோ, மீண்டும் சோஃபியாவைக் காண வந்துள்ளேன். வேலைப் பளு இத்தனை அத்தனை என்று சொல்லி மாளாது. அதன் ஆக்கிரமிப்பால், 24 மாதங்கள், 24 நாட்களாய் சென்றுள்ளன...!

இக்கால கட்டத்தில் எனக்கும் சோஃபியாவுக்கும் கடிதப் பரிமாற்றம் நிகழ்ந்த வண்ணமிருந்தது. என் கடிதங்களைப் போல, அவள் கடிதங்கள் காதலில் திளைத்து எழாமல், தினசரி வாழ்க்கையில் நடந்த ஹாஸ்யங்கள், வாழ்க்கை அனுபவங்கள் -அணுகுமுறைகள் என, ஆத்மார்ந்த நண்பனின் மன அழகோடு இருந்தன. இருந்தாலும், என்னைப் பொறுத்தவரை... ஏன், அவளைப் பொறுத்த வரையும் கூட.... ஒருவர் மீது மற்றொருவருக்கு இருந்த மன ஸ்பரிஸங்களும் தேடலும் வளர்ந்து கொண்டேயிருந்தன. இறுகிக் கொண்டேயிருந்தன.

# 2

செப்டம்பர் மாதம். மாலைச் சூரிய ஒளியில், தூசு காணாத மர இலைகள், வெள்ளி முலாம் பூசப்பட்டதைப் போல ஜ்வலித்தன. இங்கிலாந்துக்கு வசந்தக் காலமிது. நாமறிந்த அத்தனை நிறங்களிலும் மலர்கள் பூத்து, சற்றே பலமாய் வீசிய தென்றல் முழுவதும் மணம் நிரப்பியிருந்தன. காற்றில் கலைந்தாடி, என் நெற்றியில் விழுந்து குறுகுறுத்த முடிக்கற்றைகளை, விரல்களைச் சீப்பாக்கி சரி செய்தபடி, *''இப்பொழுதுதான் வந்தேன் கண்ணே... நம் ஆஸ்தான உணவகமான மரையோ-வுக்கு, இரவு 9 மணிக்கு, இரவு விருந்துக்காக வர இயலுமா? - சார்ல்ஸ்''* - என்று சோஃபியாவுக்குத் தந்தி மூலம் தகவல் தெரிவித்தேன். பல முறை முயன்றும், அவள் தொலைபேசி மூலம் அவளை அடைந்து பேச முடியாததால், இவ்வாறு தகவல் மட்டும் அனுப்பினேன். 24 மாதங்கள் கடந்து விட்டன, சோஃபியாவைப் பிரிந்து... ப்ச்...!

சோஃபியாவிடமிருந்து பதில் வரும் வரை காலம் கழிக்க, டைம்ஸ் பத்திரிகை வாங்கினேன். என் தந்தை சொல்லித் தந்த ஒரு வழக்கம். எப்போது செய்தித்தாள் வாங்கினாலும், அதைப் பிரித்தவுடன், இறந்தோர் பகுதியைப் பார்த்து விடு...! நெருப்புக்கும் பருப்புக்கும் போகாமல் இராதே...! இதன் படி, இறந்தோர் பகுதியில் கண்களை மேயவிடும் போது, லியோனைட் எனும் பெயர் என்னை நிறுத்திற்று. இப்பெயர், சோஃபியா, தன் தாத்தா என்று அறிவித்த பெயரன்றோ...!

***செப்டம்பர் 19, ஸ்வின்லீ டீன், லியோனைட், ப்ரெண்டாவின் அன்புக் கணவர், 80 வயது, காலமானார்.***

இந்த விளம்பரத்தை அடுத்து, இதையே அறிவிக்கும் மற்றொரு விளம்பரம் பின் வருமாறு இருந்தது.

***லியோனைட், திடீரென தன் ஸ்வின்லீ டீன் இல்லத்தில் காலமானார். வருந்தும் பிள்ளைகள் மற்றும் பேரப் பிள்ளைகள். புனித எல்புரட் சர்ச், ஸ்வின்லீ டீன்.***

பத்திரிகை அலுவலக அச்சுக் கோப்பாளன், கவனமின்றி, ஒரே தகவலை இரு முறை தந்ததாய் பட்டது. இது ஒரு புறமிருக் கட்டும். உடனே என் மூளை முழுவதையும் ஆக்கிரமித்தாள் சோஃபியா. தன் தாத்தா மீது எத்தனை அபிலாஷை கொண்டவள் அவள்! இப்பொழுது எப்படி வாடிக் கொண்டிருக்கின்றாளோ! இதனால் தான் தொலை பேசியை எடுத்துப் பேசாமலேயே இருக்க வேண்டும்! உடனடியாய் இன்னொரு தகவலைத் தந்தியில் அனுப்பினேன்:

*''இந்த நொடியில் தான் உன் தாத்தா மரணமான செய்தியைப் படித்தேன். வருந்துகிறேன். இன்று உன்னால் வர முடியுமோ, முடியாதோ...! நீயே சொல்...! எப்பொழுது நான் உன்னை சந்திக்கலாம்? - சார்ல்ஸ்.''*

32 பக்கங்களுக்கும் மேலிருந்த செய்தித்தாளில் மனம் லயிக்கவே யில்லை. எவ்வளவு சுகந்தமான காதல் நினைவுகளோடு ஓடோடி வந்தேன்! கிட்டதட்ட ஒன்றரை நாள்! சோஃபியா மீதான நினைவு மட்டுமே நிறைந்த ரயில் பயணம். சோஃபியாவைக் காணப் போகிறேன் என்ற எண்ணத்தால் துளியும் அலுப்புத் தட்டவில்லை. ஆனால் இப்பொழுது, ஒவ்வொரு நொடியும், நகர்த்தவே இயலா பாறாங்கல்லாய் நகராமல் நிற்பதாய் தோன்றியது எனக்கு.

நாமனுப்பிய தகவல்களை அவள் பார்த்திருப்பாளா? அவள் வீட்டுக்குப் போய் விடலாமா? அதெப்படி முடியும்? எங்கள் காதல், ஊர் உறவு அறியாத ரகசியக் காதலாயிற்றே! இருந்தால் என்ன? தாத்தா இறந்தத் தகவலைப் பார்த்து, வந்ததாய் இருக்கட்டுமே!

தலைக்குள் நண்டு ஊறி ஊறிக் கீறிற்று. லேசாய் தலைவலியும் கிளம்பிற்று. 'சே...!', என என் அதிர்ஷ்டத்தை நொந்துக் கொள்ளும் போது வெறுப்புணர்ச்சியும் மிகுந்தது.

நல்ல வேளையாக, *''மரையோவில் ஒன்பதுக்கு இருப்பேன் - சோஃபியா''* என்ற தந்தித் தகவல் அவளிடமிருந்து எனக்கு வந்தது. அத்தனை மன இறுக்கமும் தளர்ந்திற்று. போனில் பேசாமல், ஏன் அவளும் தகவல் அனுப்ப வேண்டும் என்று திகைத்தாலும், குளித்து, உடை மாற்றி, அரை மணி முன்னமேயே உணவகம் சென்று நான் காத்திருந்தேன்.

**சி**ல காலம் பார்க்காமல், ஆனால் நொடிக்கு நூறு தரம் நினைத்துக் கொண்டிருந்த உறவை மீண்டும் பார்க்கும் தருணம் நெருங்க நெருங்க, நரம்பெல்லாம் மின்சாரம் பாயுமே... அதை எழுதவும் முடியுமா ?!

சோஃபியாவின் நினைவில் நானும், என் நினைவில் (நிச்சயமாய்) அவளும் இந்த 24 மாத காலத்தில் எவ்வளவு மருகியிருப் போம். உருகியிருப்போம். நன்றி இறைவா...! எங்கள் பிரிவை இப்போதாவது முடித்து வைத்ததற்கு....!

ஐந்து நிமிட தாமதம் தான். 9.05 க்கு உணவகத்தின் தள்ளுக் கதவினைத் திறந்து நுழைந்த அந்த சோஃபியா, இது வரை நான் கண்டிராத சோஃபியா. அலங்காரமில்லாத கறுப்பு உடையில் வந்திருந்தாள். இதுவே எனக்கு ஒரு பேரிடியாய் விழுந்தது. எப்போதும் மினுமினுவென அழகழகாய் தினுசு தினுசாய் மட்டுமே உடையணிய விரும்பும் சோஃபி அல்லவே இது! இதை வேண்டுமானால் 'துக்கத்தை வெளிப்படுத்த' என்று எடுத்துக் கொள்ளலாம். ஆனால் ஏனிந்தப் படபடப்பு... பரபரப்பு... ? சிரிப்பு அற்று அவள் முகம் இறுகி-வெளிறிப் போயிருந்தது. துள்ளித் துள்ளி விளையாடும் அவள் கண்களில் மானின் மருட்சி. உள்ளே வந்தவள், கண்களால் என்னைத் தேடும் போது கூட, அவசர அவசரமாய் தேடினாள். அது ஒரு பீதி நிறைந்த அவசரம்.

இரு உள்ளங்கைகளையும் இணைத்துப் பிசைந்த வண்ண மிருந்தாள்; இது, அவள் ஏதோ தர்ம சங்கடமான மனோ நிலையில் இருப்பதை பறைசாற்றிற்று. என்னை அவள் கண்கள் தேடித் துளாவும் போது, கூடவே, வேறு யாரேனும் அவளைக் கண்காணிக்கிறார்களா எனும் தொனியில் அவள் திண்டாடியது, அவளுக்குள் எங்கும் வியாபித் திருந்த பய உணர்வினைக் காட்டிற்று. அவள் பின்னாலிருந்த நான், அவளை நெருங்கி, தோள் தொட்டதும், 'ஹக்' கென்று வாய் விட்டு விக்கித்து, புருவங்கள் முடிச்சிட பயந்து அவள் திரும்பியதில், நிச்சயம் அவள் மனம் சமநிலையில் இல்லை, குழம்பிக் கிடக்கிறது என்பது விளங்கியது. வெளியே நல்ல குளிர். உள்ளேயும் தான். பின் ஏன் சோஃபியின் நெற்றி மேட்டில் இத்தனை வியர்வை...?!

எப்படித் துள்ளிக் குதித்து ஓடியாடி சிரிக்கச் சிரிக்கப் பேசுபவள் இவள்! இப்பொழுது இதழ் கூட பிரியாமல், எங்களுடைய பழைய நண்பர்களைப் பற்றி, ஏதோ, சம்பந்தமேயன்றி பேச ஆரம்பித்தாள். வெறும் நாடகத்தனமான ஒட்டுறவற்ற உரையாடல். உடைந்து போனேன் நான்! குதிரைக்குப் போட்ட கண் திரை போல, சோஃபியா மீது, என் மனதில் ஒரே ஒரு பார்வை தான் விழுந்தது. அது: மாற்றம் வரும்...! தாங்கத் தயார்படுத்திக் கொள் என்றாளே...! அது வந்து

விட்டதா? அவள் என் மீது கொண்டிருந்த காதலில், முறிவேதும் நேர்ந்து விட்டதா?

அவள் ஒரு சிந்தனையிலும் நான் ஒரு சிந்தனையிலும் சஞ்சரிக்க, அப்போது உடைக்கவே இயலா ஒரு அமைதி எங்களை சூழ்ந்துக் கொண்டது. அதை நீடிக்க விடுவது தவறு என உணர்ந்து, ''தாத்தாவின் மரணத்துக்கு என் ஆழ்ந்த அனுதாபங்கள் சோஃபி...'' என நிகழ்காலப் பேச்சுக்கு அடித்தளமிட்டேன். அருகிலிருந்த உணவு மேடைக்கு இருவரும் அமரச் சென்றோம். ''திடுமென விட்டுப் போய் விட்டார் சார்லஸ்'' என்றாள். இவள் சொன்னதில் சோகத்தை விட பயம் தோய்ந்த ஓர் எதிர்பார்ப்பு தான் தெறித்தது. இருவரும் அமர்ந்தோம். மீண்டும் அமைதி.

ஏதோ... ஏதோ ஒன்று... விபரீதமாய் எங்களைச் சூழ்ந்துள்ளது, என்பது தீர்மானமாய் புரிந்தது. ஆனால் என்ன விபரீதம் என மோப்பம் பிடிக்க முடியவில்லை. நேரடியாய் அடி வாங்கியிருப்பவள், இவள். அந்த அடி, தாத்தாவின் மரணமா? அல்லது எங்கள் காதல் முறிவா? எது? அந்த அடியின் வீரியம் தான் சோஃபியாவை மனப் பிராந்தி பிடித்தாற் போல் ஆக்கியுள்ளது. அது எது?

இதனிடையே, எங்கள் நாடகத்தனமான உரையாடலைத் தொடர்ந்தோம். வந்த வெயிட்டரிடம் இயந்திரத்தனமாய் ஏதோ பதார்த்தத்தை நான் சொல்லும் போது, ''பார்த்தாயா சார்ல்ஸ்....! எதேச்சையாகத்தான் நாம் இந்த உணவு மேடையைத் தேர்ந்தெடுத்தோம்...! ஆனால், மேஜையின் ஓரம் பார்....! இதோ...! இங்கே...! நீ என்னைப் பிரியும் போது, என் பெயரை, ஆழமாய் இதில் பொறித்தாயே...! நினைவிருக்கிறதா! அந்த என் பெயரைப் பார் சார்ல்ஸ்...!'' என்று உணர்ச்சி வயப்பட்டாள்.

''சோஃபியா....!''

''அப்படியென்றால், இந்த இரு வருடங்களும், நாம், இந்த மேஜையை விட்டு நகரவில்லையென்றும், பிரியவில்லையென்றும் பொருள் கொள்ளத் தோன்றுகிறது, இல்லையா சார்ல்ஸ்....!''

''சோஃபியா...!''

உடனடியாய் ''டியர் சார்ல்ஸ்...!'' என்று காதல் பொங்கித் ததும்ப சொன்னாள் சோஃபியா.

சுற்றுமுற்றுமிருந்தக் காற்றையெல்லாம் வழித்து உள்ளுக்கிழுத்து, ஒரு நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். ''கடவுளுக்கு நன்றி....!

நெஞ்சையழுத்திய பாரம் நகர்ந்தது....!'' என்று வாய் விட்டே சொன்னேன். ''மடையன்... மடையன்...''

''என்னாயிற்று சார்ல்ஸ்...? யாரை வைகிறாய்...? நலம் தானே...?!''

''நலமே தான்....!''

எதிர்பாராது, ஒரு சிறு நகைச்சுவையாய் இது அமைந்து விட, சந்தித்த 15 நிமிடங்களுக்குப் பிறகு முதலாவதாய் புன்முறுவல் பூத்தோம்.

''டார்லிங்....!'' எதிரேயிருந்த அவள் கையைப் பிடித்திழுத்து, என் உள்ளங்கைகளுக்குள் அடக்கி, ''எவ்வளவு விரைவாய் என்னை மணப்பாய்?'' என்றேன். இக்கேள்வியே மளமளவென என்னுள் புது ரத்தம் ஊறச் செய்தது.

முளைத்த அவள் புன் முறுவல் மரித்தது. அவள் மனத்தை அரித்த அந்த விபரீதம்... அந்த மனப் பிராந்தி.... அது எதுவோ..... அந்த அபாயம் அவளுக்குள் மீண்டும் குடி புகுந்தது.

''தெரியவில்லை....! ஆனால் இப்போதைக்கு இல்லை.....! எப்பொழுதாவது நிச்சயம் உன்னை மணப்பேன் என்று கூட சொல்ல இயலாத சூழ்நிலை சார்ல்ஸ்....!''

''சோஃபி...?''

''... .... ... ....''

''ஏன்? எதற்கு? ஒரு வேளை, என்னைக் காதலிப்பதாய் அன்று நீ உணர்ந்தது, வெறும் கானல் என, நம் பிரிவு இப்போது உணர்த்தி விட்டதா?''

''... .... ... ....''

''என்னுடன் இன்னும் பழகி, நம் பொருத்தம் பற்றி ஆழமாக அறிய விருப்பமா...?''

''.. .... ... ....''

''இல்லை... என் இடத்தை... வேறு யாருக்காவது...??'' - நான் உடைந்துப் போகும் நிலை வரும்போது, ''நோ, நோ...! உன்னைத் தவிர வேறு ஒருவருடனான திருமணத்தால் எனக்கு ஓர் அர்த்தமும் இருக்காது, என நான் உன்னிடம் சொன்னது சொன்னது தான் சார்ல்ஸ்...! நீ கூறுபவை போன்ற எந்தக் காரணமும் கிடையாது...! நம் காதலின் மீது சந்தேகப்படாதே...! தயவுசெய்து...!'' - என்று சொல்லி என் வயிற்றில் காமதேனுவின் பால் வார்த்தவள், சுற்றும்

முற்றும் பார்த்து, மிகவும் தாழ்த்திய, ஒலியற்ற குரலில் சொன்னாள்: ''காரணம் என் தாத்தாவின் மரணம்.''

நான், சந்தேகம் - அதிலிருந்து மீட்சி, என மேலும் கீழுமாய் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தேன்! இன்று மாலையிலிருந்தே, எல்லா நிகழ்வுகளும் திடுதிப்பென முளைத்த வண்ணமுள்ளன. இதோ, இப்போது, புதிதாய் இது! எங்களிருவரின் திருமணத்துக்கான தடைக்கல், இறந்து போன இவளது தாத்தாவாம்....! தலை சுற்றியது!!

''உன் தாத்தாவின் மரணமா! எப்படி! அவர் பணக்காரர் என்றாயே! ஒரு வேளை, அவர் மரணத்தால் உனக்கு பெரும் பங்கு பணம் வந்து நான் தாழ்ந்து விட்டேனா சோஃபி?''

''பணப் பிரச்னை இல்லை சார்ல்ஸ்...! மறுபடி மறுபடி நீ நம் காதலை சந்தேகிக்கிறாய்.''

''சந்தேகமில்லை சோஃபி. நீ எப்பொழுதும் போலில்லாமல் தத்தளிப்பதால் உண்டான பயம்.''

''எனக்குத் தெரியும். உடுத்திய உடையோடு என்னை நீ ஏற்றுக் கொள்வாய் என....!''

''பிறகு?''

''தாத்தா மரணம் சார்ல்ஸ்! அவர் மரணம்...!'' –இதைச் சொல்லும் போதே, அவள் கொஞ்சம் கொஞ்சமாய் குரூரமானாள். ''பார்... நான்... நான்... நினை..க்கி..றேன்... சார்ல்ஸ்...! என் உள் இருக்கும் அந்தராத்மா சொல்கிறது சார்ல்ஸ்....! தா..த்..தா... இறக்கவில்லை... அவர்... கொல்லப்பட்டிருக்கிறார்...!''

அந்த நொடியில் என் மூச்சு தற்காலிகமாய் நின்றது. நான் சொல்லவில்லை, மாலையிலிருந்தே என் நேரம் சரியில்லையென்று! என் வாழ்நாளில், இனி ஒரு நாள், இந்நாள் போல் வந்து விடக் கூடாது! கண்களை விரித்து சோஃபியாவை விழுங்குவது போல் பார்த்தேன். ''என்ன விபரீதமான கற்பனை....! எப்படி உன்னால் இப்படி யெல்லாம் முடிகின்றது...! என்னாயிற்றம்மா உனக்கு?''

''கற்பனையல்ல சார்ல்ஸ்...!'', என்று வெயிட்டர் வைத்து சென்ற சாப்பாட்டைப் பார்த்தாள். இருவருக்கும் உணவு இறங்கவில்லை. மனம் மற்றும் எண்ணத்தில் ஸ்திரத் தன்மை சற்றும் குலைந்துப் பழகாத சோஃபியா, இவ்வாறு அடித்துக் கூறும் போது, நானும், அவள் கருத்தை, விளையாட்டாய் ஒத்திப் போடப் பிரியப்படவில்லை.

''என் இச்சந்தேகம் எங்கள் குடும்ப மருத்துவருக்குத் தான் முதலில் முளைத்தது. அவர், மரணச் சான்றிதழை அங்கீகரிக்கப் போவதில்லை.

தாத்தாவின் உடலைப் பிரேதப் பரிசோதனை செய்ய உள்ளார். எங்கோ மாபெரும் குற்றம் நிகழ்ந்துள்ளதாய் மருத்துவக் குழு சந்தேகிக் கின்றது.''

நான் அவளிடம் வாக்குவாதம் செய்வதில் இனி பிரயோஜன மில்லை. என்னவெல்லாமோ அரங்கேறியுள்ளன. இப் பிரச்சினை இத்தோடு நின்றாலும் சரி... மேலே மேலே வளர்ந்தாலும் சரி... சிக்கல் தான். ஆகவே, ''எதெப்படியோ இருக்கட்டும். இப்படிச் சொல்வதற்கு தவறாக நினைக்காதே. இதனால் நம் திருமணம் எப்படி தடைபடும்?'' என்று கேட்டேன்.

''அடிபட சில சூழ்நிலைகள் உருவாகலாம் சார்ல்ஸ். நீ பணி புரிவது, ஒரு டிப்ளோமேடிக் துறையில். அதாவது, ராஜ தந்திர துப்புத் துலக்கும் அரசு அலுவலகத்தில். அத்துறை, உயர் பதவி வகிக்கும் பணியாளரின் கணவன் அல்லது மனைவி பற்றிய பின்னணி குறித்து மிகவும் பார்க்கும் துறை.''

''என்ன பார்க்கும் சோஃபியா...?''

''கொஞ்சம் பொறு சார்ல்ஸ். காதல் வேகத்தில் பரபரக்காதே. அவர்கள் குற்றப் பின்னணி கொண்ட வாழ்க்கைத் துணையாய் இருப்பின், பணியாளரை, வேலையை விட்டே அகற்றி விடலாம்.''

''போகட்டும். எனக்கு வேலை முக்கியமன்று.''

''பொறு. நாம் நம் காதலையோ, செய்யும் தொழிலையோ இழக்கவா இத்தனை பிரயத்தனப்பட்டுப் பேசுகிறேன்...! உங்களைக் காதலிப்பதிலும், கை பிடிக்க நினைப்பதிலும், எனக்கு வான் உயர பெருமை உண்டு. ஆனால், எக்குழப்பமுமில்லாமல், என் பழைய மன நிலையில் நம் திருமணம் நடக்க வேண்டும். அது ஒன்றே என் ஆசை....! நீ ராஜ தந்திரி உத்தியோகத்திலிருப்பதால் உன்னிடம் சொன்னேன். மேலும் சார்ல்ஸ்...! பிரேதப் பரிசோதனைப் பிசுபிசுத்துக் கூட போய் விடலாம்...!'' என்று சொல்லிவிட்டு ஒரு டம்ளர் நீரருந்தி, பய உணர்வுகளால் காய்ந்திருந்த தொண்டையை ஈரமாக்கிக் கொண்டாள்.

என்னைக் காதலிப்பது பெருமை எனவும், பிரேதப் பரிசோதனை பிசுபிசுத்து விடலாம் எனவும் அவள் சொன்னது என்னை ஆசுவாசப் படுத்திற்று. ''அதாவது, டாக்டர், தவறாக ஊகித்திருக்கலாம் என்கிறாயா?...?''

''அப்படியன்று...! பிரேதப் பரிசோதனையில் உண்மை தெரியா மல் கூட ... அவர் சொல்லப்பட்ட உண்மை புலப்படாமல் கூடப்

போய் விடலாம்...! பாதகமில்லை...! சரியான நபர் அவரைக் கொன்றிருக்கும் பட்சத்தில், உண்மை புலப்படாமல் போய் விடுவதில் பாதகமில்லை சார்ல்ஸ்...!''

''சோஃபியா...!'' - சற்றே அதிர்ந்து உயர்ந்த என் குரலால், அருகிலிருந்த சிலர் சட்சட்டென்று திரும்பிப் பார்த்தனர். எங்கள் முக பாவங்களைக் கண்ணுற்று, ஏதோ காதல் தகராறு என எண்ணியிருப்பர். சாப்பாட்டைத் தொடர்ந்தனர். ''என்ன தான் ஆயிற்று உனக்கு?''

''ரொம்ப மிருகத் தனமாய் தோன்றலாம் சார்ல்ஸ். ஆனால் ஏதோ ஒரு நபர், தாத்தாவைக் கொல்லும் தன் கடமையில், உண்மை ஊழியனாகத்தானிருக்க வேண்டும்...!''

''ஏன்...? ஏன்...? 80 வயதைத் தாண்டிய 'மாமனிதர்' என நீ பட்டம் சூட்டிய ஒருவருக்கு, கொல்லும் வெறி கொண்ட பகைமை இருந்திருக்க இயலுமா?''

''இது, அவரது மிக நீண்ட கடந்த காலத்தின் மீதான ஆய்வில் மட்டுமே வெளிச்சமாகும்...! ஆனால் அவர் கொல்லத்தான் பட்டிருக்கிறார்...!'' என்றவள், நான் இடைமறித்துப் பேச முயன்றதைத் தடுத்து, ''இல்லை சார்ல்ஸ்...! இப்போதைக்கு இது போதும்...! நான் அதிகம் பேசி விட்டதாய் நினைக்கிறேன்...! உன்னை இன்றிரவு கண்களால் பருகவே வந்தேன்...! என் மன நிலையை உன்னிடம் எடுத்து வைக்கவும் வந்தேன்...! இரண்டும் முடிந்தன...! முடிச்சுகள் அவிழும் வரை நாம் எந்தத் தீர்மானமும் எடுக்க முடியாது...!''

''என்ன சோஃபி இது? நம் சந்திப்பு இப்படியா முடிய வேண்டும்? என்ன தான் நடந்திருக்கும்? அது யாராயிருக்கும் என்று எண்ணுகிறாய்?''

தீர்க்கமாய் தலையசைத்து மறுத்தாள். ''இப் பிரச்னையில் நான் எண்ணுவதிருக்கட்டும். என் கோணத்திலிருந்து நீ பார்ப்பதை நான் விரும்பவில்லை. விருப்பு வெறுப்பின்றி, மூன்றாவது மனிதனாய், வெளியில் நின்று, பாரபட்சமற்ற கோணத்தில் பார்த்து உதவு.''

''அதெப்படி இயலும்? உன் குடும்பத்தின் அட்சரம் கூட எனக்குத் தெரியாது. அடி எது முடி எது என அறியாதவன் நான். எப்படி உதவுவது...? எங்கிருந்து தொடங்குவது..?''

என் கண்களை இப்போது தான், நேருக்கு நேர் பார்க்கிறாள். ஆழமான அர்த்தமான பார்வை. அதே பாவனை மிகு குரலில் சொல்கிறாள்: ''உன் அப்பாவிடமிருந்து தொடங்கு.''

# 3

எங்கள் ஆரம்பக்கால அறிமுக நாட்களில், என் தந்தையார் ஸ்காட்லாண்ட் காவல்துறையின் துணை கமிஷனர் என்று சொல்லியிருந்தது நினைவுக்கு வந்தது. அத்துணை சக்திமிகு துணை கமிஷனரின் துணை தேவைப்படுமளவு கடுமையானதா இந்தக் கொலை...?! கேட்டேன்.

''ஆமாம் சார்ல்ஸ்...! எதேச்சையாய் பார்ப்பது போல் உணவக நுழைவாயில், கதவருகே உள்ள மேஜையைப் பார் சார்ல்ஸ்....! அங்கு ஒரு மனிதன்...! நல்ல மிலிட்டரி ஆள் போல வாட்டசாட்டமான ஓர் ஆசாமி...! சிகப்புச் சட்டை அணிந்து அமர்ந்திருப்பது தெரிகின்றதா...?''

நுழைவாயிலில் ஒளிர்ந்துக் கொண்டு அழகூட்டிய வண்ண விளக்குகளின் ஒளியை ரசிக்கும் தோரணையில், சோஃபியா குறிப்பிட்ட இடத்தைப் பார்த்து விட்டு, ''ஆமாமாம் சோஃபியா...! அவன் ஏன் நம்மைக் கூர்மையாய் கவனிப்பது போல் உள்ளது?'' என்று கேட்டேன்.

''போல இல்லை சார்ல்ஸ்...! கவனிக்கத்தான் வந்துள்ளான்...! நான் ஸ்வின்லீ டீனில் ரயிலேறும்போது ப்ளாட்பாரத்தில் பார்த்தேன். உள்ளூர ஓர் உறுத்தல், என்னையே அவன் பார்ப்பது போல! பிறகு ரயிலிறங்கியதும் கவனித்தேன்...! என் பின்னாலேயே வந்தான்...! இப்போது இங்கே....!''

''எனில், உன்னைத் தொடர்ந்து வந்துள்ளான் என்கிறாயா?'' என்று கேட்டேன், இனி, கொஞ்சம் கூட, 'சோஃபியா குறிப்பிடும் தாத்தா மரணக் கருத்துக்களில் பிள்ளைத்தனமாய் விளையாடுவதில்லை' எனும் முடிவோடு. ஒரு காதலனை விட, உளவாளியாய் என் துணையை அவள் விரும்பி நிற்பது இப்போது வெளிச்சமாயிற்று.

''ஒரு சில நாட்களாய் எங்கள் குடும்பமே கண்காணிக்கப் படுகின்றது சார்ல்ஸ்...! போலீஸாரால்...! வீட்டை விட்டு வெளியே போவது ஆபத்தைத் தரும் என்று எச்சரிக்கை செய்துள்ளார்கள்...! மீறி, மொட்டை மாடி சென்று, தண்ணீர் குழாயில் இறங்கி, உன் வெறியால், ஓடோடி வந்துள்ளேன் சார்ல்ஸ்...!''

''உயிரின் உயிரே...!'' - இருவர் கண்களிலும் காதல் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

''இதோ, இருவரும் ஒன்றாயிருக்கிறோம்...! அருகருகே...! ஆனால் சார்ல்ஸ்...! இனி, நாம், அதிகம், தனித்தனியே இயங்க வேண்டும்....!'' என்று நிறுத்தி என்னைப் பார்த்து, ''இருப்பினும் நம் காதல் பரிவர்த்தனையில் சந்தேகப்படாதே சார்ல்ஸ்...! இது மார்க்கண்டேயக் காதல்....! சாவற்றது...!'' என்று கிளுகிளுக்க வைத்தாள்.

இங்கிலாந்து திரும்பி கிட்டத்தட்ட ஏழு மணி நேரம் ஆகி விட்டது. இன்னும் அப்பாவைப் போய் பார்த்தபாடில்லை. நான் மாலை வீடு சென்றபோது அவர் அலுவகத்திலிருந்து வந்திருக்கவில்லை. பிறகு சோஃபியாவை சந்தித்து நிலைகுலைந்து நான் திரும்பிய போது, 'ஓல்ட் மேன்' தன் லைப்ரரியில் இருப்பதாய் பணியாளன் சொன்னான்.

மேஜை முழுதும் பரப்பியிருந்த தாள்களில் மூழ்கியிருந்தார் அப்பா. அவர் மேஜைக்கு மட்டும் பிரகாசமாய் ஒரு விளக்கு. மற்ற பகுதிகள் ஒரு பூஜ்ய வாட் விளக்கால் மங்கலாயிருந்தன. வலது-இடது-மற்றும் எதிர்ப்புற சுவர்கள் எங்கும், அவர் போலீஸ் உத்தியோகத்துக்கு உதவிக்கரம் நீட்டும் புத்தகங்கள். அவருக்குப் பின்னால், சுவர் முழுதும் வியாபித்திருக்கும், சிரிக்கும் அம்மாவின் க்ளோஸ்-அப். படிக்கும் அறையில் பூரண அமைதியை விட மிக மிக சன்னமான ஒலியால் அறை நிரப்பும் வாத்ய மெல்லிசை, அவருக்கு மிகப் பிடிக்கும். அதற்காக ஒரு டேப்-ரிகார்டர்.

கதவு திறந்ததும், அப்பாவுக்குப் பிடித்த சாம்பிராணி ஸ்பிரே வாசம்,நெஞ்சை நிறைத்து உடலுக்குள் அமைதி தந்தது. ஓசை கேட்டு நிமிர்ந்தவர், என்னைக் கண்டதும் துள்ளிக் குதித்து எழுந்தார். ''சார்ல்ஸ்....! வா வா! உன் வரவை எதிர்பார்த்தே உள்ளேன். வெறும் தொலைபேசி உரையாடல்கள் தான்...! இரு வருடங்கள் ஆகி விட்டதேயப்பா உன்னைப் பார்த்து...!'' என்று பேசியபடி மேஜை

சுற்றி ஓடி வந்து அணைத்து நெற்றியில் முத்தமிட்டார். ''பெருத்துள் ளாயடா போக்கிரி'' என்றார்.

இந்த ஓல்ட் மேனும் நானும், அப்பா-பிள்ளையாய் இருந்ததாய் எனக்கு நினைவில்லை. ரொம்ப நெருங்கிய, ஒருவர் மனம் மற்றவர் அறிந்த, சிறப்பானதோர் உறவாய் தான் எனக்கு நினைவிலுள்ளது. ''புது விஸ்கி வாங்கியுள்ளேன்....!'' என்றார். ''சொல்...! எப்போது வைத்துக் கொள்ளலாம்....!'' என்றபடி திரும்பி தன் இருக்கையில் போய் அமர்ந்தார். ''நீ வருவதாய் சொல்லியிருந்தும், தலைக்கு மேல் வேலை இருந்ததால், நீ வரும்போது என்னால் இங்கு இருக்க இயலாமல் போய்விட்டது. ஒரு நரக கேஸ். துப்பு துலங்கவே மாட்டேனென்கின்றது. அதனால் தான். மன்னித்து விடு கண்ணா.''

அப்பா எதிரில் அமர்ந்த நான், நீண்ட ஒரு சோம்பலை வெளியிட்டேன். பிரயாணக் களைப்பால் அல்ல....! சோஃபியா ஊட்டி ஊட்டி தந்த குழப்பக் களைப்பு. ஒரு சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு, ''லியோனைட்....?'' என்று, தாத்தாவின் பெயரை, அந்த நரக கேஸுக்கான காரணமோ எனும் தொனியில் கேள்வியாக் கினேன். ஏ ஸி கொஞ்சம் அதிகமாய் தோன்றியது.

டக்கென நிமிர்ந்து, வியப்பில் புருவத்தினை உயர்த்தி, என்னை மதிப்பாய் பார்த்தார். இனி அப்பா பிள்ளை இல்லை. நாங்களிருவரும் இரு போலீஸ் அதிகாரிகள்.

''இப்போது, அந்தப் பெயரைக் குறிப்பிட, உன்னை எது தூண்டியது சார்ல்ஸ்?'' என்றார் - தீர்க்கமாக, நிதானமாக, பயமற்ற, எஃகு போன்ற உறுதியில். துணை கமிஷனர். அஞ்சா நெஞ்சர்.

''லியோனைட் குறித்து தான் இந்த வழக்கு என்று எப்படி ஊகித்தாய்?''

''கிடைத்த தகவலின் பேரில் ஊகித்தேன்'' - மேலே நான் எதுவும் குறிப்பிடாமல் விட்டேன். துணை கமிஷனர் காத்திருந்தார். விட்டால், அவரும் அப்படியே விட்டு விடுவார். தகவல்களுக்காக தான் அலைவதாய் எப்போதும் காட்டிக் கொள்ளாத பாறாங்கல், இந்த ஓல்ட் மேன். ஆகவே, சில நொடிகளில், தொடர்ந்து ''எனக்குக் கிடைத்த தகவல், இவ்வழக்கின் களத்திலிருந்தே வந்தது'' என்றேன்.

''ஓ! சொல்! எனக்கும் சில தகவல்கள் மிக நம்பிக்கையானவர் களிடமிருந்து கிடைத்துள்ளன. பகிர்ந்து கொள்வோம். ரொம்ப சிக்கல்கள் ஏற்படும் போலுள்ளது சார்ல்ஸ்....!'' - என்றவர்,

மேஜைக்கு மட்டும் ஒளி தந்த விளக்கை அணைத்து, குழல் விளக்கை எரிய விட்டார். எங்கும் பரவிய வெளிச்சம் கண்ணுக்கு இதமாய் பட்டது.

''நிச்சயம் பேசலாம். ஆனால், அதற்கு முன் நான் தரவிருக்கும் தகவல் உங்களுக்குப் புதிதாயிருக்கும். மறைக்க வேண்டும் என்று மறைத்து வைத்திருக்கவில்லை. காலம் கூடவில்லை. இப்போது, இங்கிலாந்து திரும்பியதும் முதல் வேலையாய் என் திருமணம் பற்றி உங்களிடம் பேச வேண்டியுள்ளதால், கால நேரம் கூடி விட்டது. நான் சோஃபியாவை விரும்புகிறேன் அப்பா...!''

''சோஃபியாவா? யாரது?''

''ஓ...! இப்படிச் சொன்னால் உங்களுக்கு நிச்சயம் விளங்கி விடும்...! சோஃபியா லியோனைட்...!''

சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தவர், நிமிர்ந்து, தன் பக்க மேஜையின் நுனிக்கு வந்து, ''யார்....! இறந்த லியோனைடின் பேத்தி என்றொருத்தி, அந்தக் கிழவன் வீட்டில் எனக்கு அறிமுகமானாளே...! அந்த தேவதையா...!''

நான் சற்றே கூச்சமாய் தலை குனிந்துக் கொண்டேன். கண நேரத்தில் என் காதலை அறிந்து யாரவள் என நினைவுபடுத்தி, அதனால் காதலை அங்கீகரித்து விட்டதை 'தேவதை' என்று அவளைக் குறிப்பிட்டு விளக்கிய விதம், அப்பாவை இன்னும் என் மனத்தில் உயர்த்தியது. ''அவளை மண முடிக்கவுள்ளேன். இரு வருட ஆழமான நேசிப்பு. இன்று இரவு 9 மணி அளவில் சந்தித்தோம். இரவு உணவு பகிர்ந்துக் கொண்டோம்.''

''என்ன... என்ன...! சந்தித்தீர்களா...! ஓட்டல் சென்றீர்களா..?! இங்கா...! இங்கிலாந்திலா...! அவளால் எப்படி இது இயன்றது என எண்ணும் போது பேராச்சரியமாய் உள்ளது...! அந்தக் குடும்பத்தையே, சில நாட்கள் வீட்டுக்குள்ளேயே பத்திரமாக இருக்கும் படிக் கூறி, நான் போட்ட காவலையும் மீறி, எப்படி வந்தாள் அவள் வெளியே....! சார்ல்ஸ்...! சோஃபியா முகமொன்றும் நீ மறந்து விடவில்லையே...! வேறு பெண்ணோடு உணவு உண்டு அது சோஃபியா என மகிழ்ந்து விட்டாயா என்ன....!''

''அப்பா...'' - என்று சற்றே கொஞ்சி அவர் ஹாஸ்யத்தை நிறுத்தினேன். ''அவள், வீட்டு மொட்டை மாடி வழியே இறங்கி, என்னைக் காண வந்திருக்கிறாள். அப்படி ஓர் அவா, என் மேல்....''

நொடிப்பொழுது இந்த கேஸை மறந்தார் அப்பா. அவளின் காதல், அப்பாவைத் தொட்டது. முறம் போன்று வறண்ட அவர் உதடுகள், அர்த்தமாய் புன்முறுவி, ''நல்ல சமயோஜிதம் அறிந்த பெண்ணடா அவள்'' என்றார். ''அவள் வீட்டைச் சுற்றிலும் அங்கு வருவோர் போவோரைக் கண்காணிக்க என்று நான் காவலுக்கு வைத்திருந்த போலீஸ்காரர்கள் என்ன செய்கிறார்கள்...?'' என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டார்.

''உங்கள் போலீஸ் அவள் சமயோஜிதத்தை அன்றோ விழுங்கி நிற்கின்றது....!'' என்றேன் நான். சிகரெட்டைக் கடைசியாய் இழுத்து விட்டு, ''ஆறு அடி...! கோதுமை நிற முடி...! அதே நிற கண்கள்...! சிகப்புச் சட்டை அணிந்திருந்தான். புடைக்க நிற்கும் உடல் வாகு. மனதில் ஆழப் பதிந்துள்ள அவனை எந்த நேரத்திலும் என்னால் அடையாளம் காட்ட இயலும்....! சோஃபியாவை, அவள் வீடு விட்டு கிளம்பியது முதல், ஓட்டல் வரை பின் தொடர்ந்துள்ள ஆசாமி அவன்...! உங்கள் ஆள் தான்....!'' - தீர்ந்த சிகரெட்டின் நுனியைத் தட்டி, கவிழ்த்து அமுக்கி அவித்தேன்.

திருப்தியானார்.

சில நொடி மவுனம். ''இந்த வழக்கில் ரொம்ப ஈடுபடுகிறீர்களோ...?'' - இது நான்.

''நேற்று வரை இல்லை. அது ஒரு கொடை பணக்காரர் குடும்பம். அதீத வசதி. இப்பெண்ணுக்கும் பண முடை இருக்க வாய்ப்பில்லை. நீ அவளைக் காதலிக்கிறேன் என்கிறாய். சரி. ஆராயாமல் முடிவெடுக்கும் பிரிவல்ல நீ...!'', என்று, இது வரை பேசிய வேகத்தைக் குறைத்து, இப்போது - விட்டு விட்டு, இழுத்து இழுத்து - பின்வரும் வார்த்தைகளைச் சொன்னார்: ''இது... .... வரை... ... எல்லாமே.. சரி... ..எ..ல்..லா..மே.. ச..ரி... ஆனால்...???''

''ஆனால் என்னப்பா?''

''அந்த சரியான நபர் லியோனைடைக் கொன்றிருக்கும் வரை, எல்லாமே சரிதான்...''

சோஃபியாவுடன் பேசும்போது, திடீர் திடீரென திருப்பங்கள் கொடுத்து அவள் அதிர்ச்சிக்குள்ளாக்கிய விதத்தில், இங்கு எங்களிருவரின் சம்பாஷணையும் திருப்பம் காண்பதை உணர்ந்த என்னுள் ஒரு விழிப்பு ஏற்பட்டது. இன்று மாலையிலிருந்து இரண்டாவது முறையாக இதே தொடரைக் கேட்கிறேன். *'சரியான நபர்...'!* எனில், இம்மரணத்தை, ஒரு துணைக் கமிஷனரின்

தரத்திலன்றோ சோஃபியா ஆராய்ந்திருக்கிறாள்...! லியோனைடின் மரணத்தின் மீதான அவள் கருத்துக்களை இனி ஒதுக்கவே கூடாது. இவ்வாறு நான் சிந்தனையில் மூழ்கி விட, ''அந்த சரியான நபர் லியோனைடைக் கொன்றிருக்கும் வரை, எல்லாமே சரிதான்...'' என காற்றில் பேசினார் ஓல்ட் மேன். 'சரியான' என்று நியாயப்படுத்தும் அடைமொழி சூட்டப் பெற்ற குற்றவாளி...!

''சரி... உனக்கு இந்த வழக்கில் எந்த ஆழம் வரை தெரியும்?''

''நத்திங்...! ஆம்...! ஒன்றும் தெரியாது..!''

ஆச்சரியமாய் பார்த்தார். ''ஒன்றும் தெரியாதா...?!'' என்றவர் சொன்னதில் கிண்டல் தொனித்தது. ''அந்தப் பெண் ஒன்றுமா உன்னிடம் சொல்லவில்லை....?!''

''இல்லை....! மறுத்து விட்டாள்...! அவள் நினைப்பதை சொல்லி விட்டால், வேறு கோணத்தில் - அது சரியோ, தவறோ - ஒரு புதுக் கோணத்தில் நான் சிந்திப்பது சிதைந்து விடுமாம்....!''

''உயிருக்குயிரான காதலனை சந்திக்க வந்தவள், சொல்ல வில்லையா? வினோதமாக உள்ளது....!''

''என்ன வினோதம்...? அவ்வாறு எண்ணியதில், கொலையாளி கிடைக்க வேண்டும் என்பதில் ஒரு தெளிவு தெரியவில்லையா?''

''தெளிவு? அதற்குள்ளா? வழக்குத் தொடங்கியுள்ள இன்றேவா..? அப்படி ஒன்றும் எனக்குத் தென்படவில்லையே...!''

இருவருக்குள்ளும் ஓர் உராய்வு. வழக்கு சம்பந்தமாயிருந்தாலும், சோஃபியாவின் அணுகு முறை மீது விமர்சனமாய் போனதால், பேச்சு நின்றது. சிகரெட்டைப் பற்ற வைத்து, எழுந்து, இப்படி அப்படி நடந்தார். நானும் பேசவில்லை. சிகரெட்டும் தீர்ந்தது. இந்த பத்து நிமிடமும் சிந்தனையின் ஆதிக்கத்திலிருந்தார். இது, இந்த வழக்கினை, துணை கமிஷனர், எந்த அளவு கையகப்படுத்தியுள்ளார் என்பதைக் காட்டியது. ''இக்குடும்பம் பற்றி உனக்கு எந்த அளவு தெரியும்?'' - சற்று முன் கேட்ட அதே கேள்வி, மீண்டும் ஒரு கணை போல் என்னைத் தாக்கி உசுப்பியது.

''போதும்...! போதும்....! என் காதலியின் தாத்தா என்பதால் தான் நான் இத்தனை தூரம் மெனக்கெட்டு பேசுகிறேனே ஒழிய, மற்றபடி, ஏனைய உங்கள் வழக்குகளில் என் நிலை என்னவோ, அதே நிலை தான் இதிலும்...!'' என்ற என் வார்த்தைகள் சற்று நிராதரவாயிருந்தன. ''அவ்வீட்டில் ஒரு தாத்தாவும், சில பிள்ளைகள், பேரப்பிள்ளைகள், பெண்கள் இருந்தனர் என்பதை தவிர வேறெதும் அறிகிலேன்...!

புரிந்துக் கொள்ளுங்கள்....! சரியான அறிமுகம் தந்து விளக்கினால், எதிர் வரும் நாட்களில் நான் உதவலாம்....!''

''ஓ! பேஷாக!'', என்றவர் திரும்பி வந்தமர்ந்து, ''லியோனைடுக்கு 24 வயது இருக்கும் போது இங்கிலாந்துக்குள் நுழைகிறார், எனும் அவரது இங்கிலாந்து ஜாகைத் துவக்கத்தில் ஆரம்பிக்கிறேன்...!''

''கிரேக்கத்திலிருந்து வருகிறார், இல்லையா?''

''பார், பார்...! மறைத்தது எப்படி வருகிறது என்று! 60 வருடங்களுக்கு முன் நடந்தது கூட உனக்குத் தெரியுமா...?!''

''ஆமாமாம்....! மறைக்க என்ன உள்ளது...! இத்தகவல் மட்டும் சொல்லியிருக்கிறாள்....! அதனால் தெரியும்...!'' - என நான் முடிக்கும்போது, அன்றயின் வாசலருகே நிழலாடியது. அந்த நிழல், வராண்டா விளக்கொளியில் மிக நீளமாய் தெரிந்தது. மூடியிருந்த கதவும் தட்டப்பட்டது.

''யாரது?'' என்று உறுமினார் அப்பா. கதவு திறந்து காவலாளி வந்தான். ''டேவரெனர் வந்துள்ளார்...!'' என்று சல்யூட் போட்டான்.

உள்ளே அனுப்பச் சொல்லி விட்டு ''டேவரெனர் தான் இவ்வழக்கின் தலைவர். நாம் பேச ஆரம்பிக்கும் போது அவர் இணைவதும் நலமே. இதில் என்னை விட நிச்சயம் பல தகவல்கள் அவருக்குத் தான் தெரியும்...!'' என்றார் அப்பா. சிறு வயது முதலே டேவரெனரின் செல்லப்பிள்ளை நான். முதன்மை இன்ஸ்பெக்டர். ஆஜானுபாகுவான ஆறடி. நல்ல வெண்ணிறம். அவர் தூக்கி நடக்க வளர்ந்தவன் நான்!

உள்ளே நுழைந்தவரின் பாதம் தொட்டு வணங்கினேன். தோள் தொட்டு தூக்கியவர், ஆசி கூறி, நல்லபடியாய் மீண்டும் வீடு திரும்பியதற்கு வாழ்த்தினார். ''வா டேவரெனர்...! லியோனைட் வழக்கில் சார்ல்ஸையும் ஓர் அங்கமாக்குகிறேன்...! இது குறித்து அவனுக்கு சில தகவல்கள் தர உள்ளேன்...! தவறு நேரின் திருத்து...!'', என்று தொடர்ந்தார் அப்பா. ''தன் 25 வயது வாக்கில் லண்டன் வந்தார். பிழைப்புக்காக சிறு உணவகம் துவங்கினார். லாபம் தந்தது. மேலும் மேலும் அவற்றைப் பெருக்கி ஏழெட்டு உணவகங்களுக்கு சொந்தக்காரராகிறார். எல்லாமும் லாபம் தந்தன. நல்ல பணம்.''

மேஜையிலிருந்த டம்ளர் தண்ணீரை அருந்தி வீட்டு, ''துவங்கும் எந்தப் பணியிலும் கடுகளவு கூட தவறு நேராது நிர்வகித்த சிறப்பான நிர்வாகி அவர். பணம் ஒன்றே குறி'', என்று தகவல் தருவதில் அப்பாவுக்கு உதவினார் டேவரெனர். ''இவை தவிர நகை வியாபாரம்,

துணிக் கடை, பலசரக்குக் கடை இத்யாதிகள்! பல கடைகள் மட்டுமல்ல...! பல துறைகள் சார்ந்த பல கடைகளை நிர்வகிக்கும் பளு சேர்ந்தது....! காலப் போக்கில் உள்ளிருந்து வேலைப் பளுக்களும் வெளியிலிருந்து வேலைப் பளுக்களும் தாக்கம் தந்தன.''

''ஓ...!''

''எத்தனை தாக்கினாலும், சந்து பொந்துகளிலெல்லாம் நுழைந்து வந்து, எல்லா முறுக்குகளுக்கும் வளைந்துத் தரும் முறுக்குக் கம்பியாய் தான் திகழ்ந்தார்.''

''ஆக, தந்திரம் மிகும் குள்ள நரியாய் எனலாமா?'' - இது நான்.

''கூடாது! குள்ளநரித்தனம் நிறைந்திருந்தார்! ஆனால் குள்ள நரியாய் இல்லை! இரண்டுக்கும் வித்தியாசம் விளங்குகின்றதா?''

''கொஞ்சமாய்...! இருப்பினும், விளக்க முடியுமா?''

''சட்டத்தைச் சுற்றி சுற்றி வந்து, அதில் அகப்பட்டு மட்டும் விடாத வழிமுறை தெரிந்த அசகாய சூரன், வியோனைட்.....! எல்லா விவகாரங்களும், கூடுமான மட்டில், சட்ட ஓட்டைகளுக்குள் நுழைந்து தப்பி விடும் வண்ணமாய் இருந்ததால், அவர் செய்த எதுவும் சட்ட விரோதமாகாது நிலைத்தன....! அப்படி ஏதேனும் ஒரு செயல் தடம் மாறி நின்று விட்டால், அது குற்றமில்லை என ஸ்தாபிக்க, ஒரு சட்டம் தேடிக் கொடுத்து விடுவார்...! அவரின் நண்பர் வட்டம், அவரை ஒரு வக்கீல் தொனியிலேயே பார்க்கும் அளவுக்கு சட்ட நாடி அறிந்தவர்...!''

''பிறகு எது தான் சட்ட விரோதமாகும் ?!''

''ரொம்ப சரி....! லியோனைடின் இந்த குணாதிசயத்தைப் பிடித்து விட்டால் போதும்...! ஒரு துறையில் சட்டம் சார்ந்த குழப்பம் நிகழும் போதே, அதை எப்படியோ சரி கட்டி முடித்த சுவடு அழியுமுன், இணையாக வேறு துறையில் கால் பரப்பியிருப்பார்....! அத்தனை ப்ரில்லியண்ட்....!''

''அவ்வளவு ஒன்றும் நல்ல மனிதர் போல் தோன்றவில்லையே.''

''இது, அவர் நிர்வாகம் நிமித்தமாய் தேவைப்பட்டிருக்கலாம்...! ஆனால் அவர் ஒரு காந்தம்... கவர்பவர்...! கறுப்பனாய், வெகு குள்ளமாய், அதிக களை கூட இல்லாமலிருந்தாலும், ஒரு முறை அவருடன் பேசி விட்டால் போதும்.. காந்தத்தில் ஒட்டிய இரும்பாய் ஒட்டி விடுவோம்.''

இரண்டு வயது குழந்தையோ, எண்பது வயது கிழமோ, அந்தந்தத் தளத்துக்குத் தாவி இயையும் திறம் படைத்தவர் என சோஃபியா

சொல்லியிருந்தது நினைவுக்கு வந்தது. வெளிக் காட்டிக் கொள்ள வில்லை. என்னவோ கொலையாளியே யாரென்று நானறிந்து வைத்து, வேவு பார்ப்பதாய் அப்பா நினைப்பார்.

''சர்க்கஸ் கோமாளி போல் அழகு குறைந்த குள்ளராய் தோன்றினாலும், வியத்தகு திருமணங்களை செய்து கொண்டே யிருந்தார். பல தாரர். வெறும் அழகு பேச்சால் மட்டுமே பெண்களை அள்ளிக் கொண்ட அழகற்ற ஆசாமி, இந்த பூமியில் லியோனைட் தான்! அவர் முதல் திருமணம் கூட காதல் திருமணமே....! அதுவும் எப்படி...! கிராமத் தலைவரின் பெண் அவள்...! தோற்றமேயற்ற லியோனைடை மணக்கப் பெரும் எதிர்ப்பு விளைந்தாலும், உதறித் தள்ளி வந்து மணந்த அவள், திமிரின் மறு அவதாரம்....!''

''திமிர் பிடித்தவளென்றால், திருமணம் நிலைத்ததா?''

''பின்னே...? ! போதும் போதும் எனும் அளவு நிலைத்தது! ஊருலகமே கர்வம் பிடித்தவள் என்று முத்திரைக் குத்திய ஒருத்தியை, தன்னை விட்டுப் பிரிந்தேப் போகாத அளவு வளைத்து விட்டா ரென்றால், அவரின் 'பெண் மேதாவித் தனத்தை' விளக்கவும் வேண்டுமா....!''

''வேண்டவே வேண்டாம்....!'' - சிரிப்பொலி அறையெங்கும் நிறைந்தது.

அப்போது வந்தப் பணியாள், பெரிய கோப்பைகளில் சுடச்சுட காபி வைத்தான். குளிர்; தொடர்ந்து நிகழும் பேச்சு; இவ்விரண்டுக் கும் பரிகாரமாய் தொண்டைக்கு ஒத்தடம் தந்தது, அந்தச் சூடு காபி. நாங்கள் கதை கேட்ட சுவாரஸ்யத்தை விட, சொல்வதில் டேவரெனருக்கு ஈடுபாடு அதிகம் இருந்தது. காபியின் ஒவ்வொரு மடக்குக்கு இடையிலும் தகவல் தந்த வண்ணமிருந்தார். ''இவையன்றி, லினோனைட் கணக்கிட்டு முடிவெடுப்பதில் எந்த அளவு கை தேர்ந்தவர் என்பதற்கு, அன்றே, 50 வருடங்களுக்கு முன்னரே, ஸ்வின்லீ டீனில் நிலம் வாங்கி வீடு கட்டியதே, யதேஷ்டமான எடுத்துக்காட்டு. அன்று ஒரு காடு அது....! இன்று, மூன்று கோல்ஃப் மைதானங்களைக் கொண்டு, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாய் திகழ்கின்றது'' என்றவர், 'ஹா' வென்று வாய் திறந்து ஆசுவாசப்பட்டார். ''தொண்டையின் மேலன்னம் அப்படி வலிக்கிறது....! காலையிலிருந்து பல சந்திப்புகள்....! பேச்சு, பேச்சு....!'' என்று சன்னமாய் சிரித்தபடி, காபியை முடித்தார்.

''இத்தனை பெரிய வீடு தனக்கா என வியக்க வைத்து, கர்வம் நிறைந்த மனைவியைத் தன்னகப்படுத்தி, வரிசையாய் கர்ப்பமாக்கிக் கொண்டேயிருந்தார்.. எட்டு பிள்ளைகள்...!'' - என்ற நகைச்சுவையை மூன்று பேரும் ரசித்தோம். சற்று நேரம் சிரிப்பொலி அறையை நிறைத்த வண்ணமிருந்தது. ''பனிரெண்டு வருட திருமண வாழ்விற்கு பிறகு, நிமோனியாவால் மனைவி காலமாகும் வரை, வெகு புஷ்டியாய் வாழ்ந்தார்.''

''ஓ...! எட்டுக் குழந்தைகளோடு லியோனைட் மட்டும்....! பாவமே...!'' என்றேன் நான்.

''நீண்ட ஆயுசு வாழ, எல்லா குழந்தைகளும் கொடுத்து வைக்கவில்லை சார்ல்ஸ்...! ஒன்று மிகச் சிறு வயதிலேயே தவறி விட்டது. தீவிரமாய் நடந்த போரில் விளைந்த குண்டு வீச்சில் இரு மகன்கள் பலியாயினர். ஆஸ்திரேலியாவுக்கு மணமாகிப் போன ஒரு பெண் அங்கு காலாவதியானாள். ஒரு சாலை விபத்தில், வாலிப வயதில் இன்னொரு பெண் இறந்தாள். மற்றொருத்தி சென்ற வருடம் மரித்தாள். ஆக மிச்சமிருப்பது இருவர். மூத்தவன் பெயர் ரோஜர். திருமணமாகி விட்டாலும் பிள்ளைப் பேறில்லை. மற்றவன் பிலிப்ஸ். ஒரு நடிகையை மணந்துள்ளான். இவனுக்கு மூன்று பிள்ளைகள் உண்டு'' - இத்தனையையும் சொல்லிவிட்டு, அசூயையால் சிரித்தார் இன்ஸ்பெக்டர்.

''ஆச்சர்யமாயிருக்கிறது டேவரெனர், உன் தொழில் சிரத்தையைக் கண்டு! எவ்வளவு ஆழமான தகவல்கள்....!'' - இது அப்பா.

''ரத்தத்தில் ஊறிய தொழில் தர்மமன்றோ இது...! இவர்கள் தவிர எடித் டி ஹெவிலேண்ட் என்ற பெண்மணியும் உண்டு. இவள் லியோனைடின் மூத்தத் தாரத் தங்கை. ஆரம்பம் முதலே, லியோனைடின் கறுப்பு குள்ள-ஒரு வகை சூனியக் காரத் தோற்றத்தை வெறுத்தவள். இருப்பினும், அக்காள் தவறியதும், 'பிள்ளைகளை வளர்க்கவாவது என்னை மணந்துக் கொள்' என்று லியோனைடிட மிருந்து வந்த அழைப்பை, பிள்ளைகள் முகம் கருதி தட்டாமல் ஏற்று, வேண்டா வெறுப்பாய் அவனை மணந்தாள். வெகு ஸ்திரமானவள். பல சமயங்களில், சரியாக அமையாத லியோனைடின் நடவடிக்கை களை, அணுகுமுறைகளை, முகத்திற்கு நேராய் விமர்சித்தவள்.''

''சரி... சரி...! எத்தனை பாத்திரங்கள்..! ஹவுஸ் ஃபுல் என்றால் அது லியோனைடின் வீடு தான்...! இவ்வளவு தானா, இன்னும் வேறு யாராவது....!'' ? என இழுத்தேன் நான்.

''சோஃபியா, ஆஸ்டஸ், ஜோஸஃபைன் என மூவர். இவர்கள் பிலிப்'பின் பிள்ளைகள். அவ்வளவு தான்.''

''போதும்.... போதும்...! ஒரு முறை இருப்பவர்களை மனதில் நிறுத்திக் கொள்கிறேன்...!'' - எனச் சொல்லி, கண்மூடி நாற்காலியில் சாய்ந்து, உயிரோடு இருக்கும் அவ்வீட்டின் பிரஜைகளை மனதில் ஓடவிட்டு மனதுள் நிலை நிறுத்தினேன். பல்வேறுபட்ட மன நிலைகளில் அந்த வீட்டில் நபர்கள் வாழ்ந்துள்ளனர் என்பது என்னுள் ஸ்திரமாயிற்று.

கண் திறந்து - ''சொல்லுங்கள் டேவரெனர். உங்களுக்கு யார் மீது சந்தேகம்?'' - சிறு வயது முதலே நான் அவரைப் பெயர் சொல்லி அழைப்பதை அவர் பொருட்படுத்தாததால் அப்பழக்கம் நிலைத்து விட்டது.

''ஹஹ்ஹா...!'' என வாய் விட்டுச் சிரித்தார் டேவரெனர். ''இவ்வளவு சீக்கிரத்தில் அது புலப்பட்டு விடுமா என்ன...?''

''மறைக்காதீர்கள் டேவரெனர்...! இது என்ன நீதிமன்றமா, அளந்து அளந்துப் பேச....! துப்புத் துலக்கும் நாம், நம் சந்தேகப் பார்வை யாரிடம் உள்ளது என்று பகிர்ந்துக் கொள்ளத்தானே வேண்டும்...!''

''இல்லை சார்ல்ஸ்...!'' - ஸ்திரமாய் மறுத்தார் அவர். ''யார் மீதும் இப்பொழுது எனக்கு ஐயமில்லை...! ஆனால் ஒன்று மட்டும் தோன்றுகிறது....! கொலையாளி யாரென்று கடைசி வரை தெரியாமலே போய் விடலாம்....!''

டேவரெனர் இவ்விதம் சொன்னதும், ''அப்படியானால், லியோனைடை யாரும் கொலை செய்யவில்லை என்கிறீர்களா?'' - என்றேன் நான்.

''கொலை தான் செய்யப்பட்டுள்ளார். விஷம் வைத்து. இந்த விஷ வழக்குகள் பற்றி அதிகம் அறியாதவன் நீ. சாட்சிகளே கிடைக்காத வாறு படு சாமர்த்தியமாய் இடம் பெற்றிருக்கும். கத்தி கொண்டு துப்பாக்கி கொண்டு நிகழ்த்தப்பட்ட கொலைகளை அறிவது போல், விஷம் கொண்டு நிகழ்த்தப்பட்ட கொலைகளை அறிவது சுலபமல்ல சார்ல்ஸ். சூழ்ச்சியும் புத்திசாலித்தனமும் செறிந்த அப்பழுக்கற்ற திட்டமிடல் நடந்து, அதன் பின்னணியில் கொலை முடிந்திருக்கும். ஆதலால், இதுவோ, அதுவோ என பல நிலைப்பாடுகள் தோன்றித் தோன்றி முடிவெடுக்கவிடாமல் குழப்பும்.''

''அதைத்தான் கேட்டேன். நீங்கள் யாரையேனும் சந்தேகப் படுகிறீர்களா? உங்கள் மூளையில் பதிவாகியுள்ள நிலைப்பாடுகள் என்னென்ன?''

''கூறுவது கடினம்! ஏனெனில், அத்தனை நிலைப்பாடுகளிலும் எது சாத்தியப்படும் என்றோர் ஆய்வு நடத்தும்போது தான், அந்த ஆய்வுகளில் சில ஆதாய முடிவுகள் வரும் போதுதான், அவ்வாறு தேறும் சாத்தியப்படுவற்றை, சந்தேகங்களாய் வகைப்படுத்திக் கூற இயலும்.''

இருவரும் முட்டி மோதி தன்னிடம் தான் வர வேண்டும் எனும் தொனியில் துணை கமிஷனர் அமர்ந்திருந்தார்! நான் மேலதிகாரி களிடம் செலுத்தும் வணக்கத்தைக் கண்களில் 'பாவனை' யாக்கி அவரைப் பார்த்தேன். ''கண்ணா...! தலை சுற்றுகிறதா..?! கொலை வழக்குகளில் நீ பரபரப்பது போல கண்களில் படுபவர்களை யெல்லாம் சந்தேகப்பட்டு விடக் கூடாது. சந்தேகம் வாழ்க்கைக்கு வேண்டுமானால் அர்த்தமற்றது...! துப்பு துலக்குவதில், அர்த்தமுள்ள சந்தேகங்கள் தரும் முடிவுகள் பிரமிப்பானவை. ஆகவே, அர்த்தமுள்ள சந்தேகம் எழ காத்திருக்க வேண்டும். சில விஷயங்கள் நம்மை உடனடியாய் சந்தேகப்படத் தூண்டும். ஆனால் கடைசியில் பார்த்தால் அவை உபயோகமே இல்லாமல் போய் விடும். டேவரெனர் சொல்லத் தவறிய ஒரு தகவலை இப்பொழுது தருகிறேன். அதைக் கேட்டால், எல்லாவற்றையும் விட்டு விட்டு நான் குறிப்பிடுபவரை, சந்தேகக் களமாய் பிடித்துக் கொள்வாய்...! சார்ல்ஸ்...! லியோனைட், பத்து வருடங்களுக்கு முன்னால் ஒரு திருமணம் முடித்துள்ளார்....!''

''என்ன...?!'' - தூக்கிவாரி போட்டது எனக்கு. ''தனது 75 வயதுக்கு மேலா??''

''ஆம்...! 24 வயது பெண் அவள்...! பெயர் ப்ரெண்டா!''

நான் விசிலடித்தேன். ''லியோனைட் என்றென்றும் மார்க்கண் டேயனா? மனிதனுக்குப் பெண்ணில்லாத இரவே கிடையாதா?''

''இத்தனை பணக்காரர், ஒரு டீக் கடையில் அவளைப் பிடித்துள்ளார். இருப்பினும் மரியாதையும் குணமும் கொண்ட பெண்.''

''என்ன சொல்ல வருகிறீர்கள் அப்பா...! அவள் மீது சந்தேக மென்றா?''

டேவரெனர் இடைமறித்தார். ''லியோனைட் தன் 87 வயதில் மிக பலவீனமாகி விட்டார். அவளுக்கோ 34 வயது தான். பேரப்

பிள்ளைகளுக்கு பாடம் புகட்டவென ஒரு நடுத்தர வாத்தியாரும் அங்கு உள்ளார். இவர்களிருவருக்கும் சற்றே நெருக்கமிருந் திருக்கிறது'' - என்றவர் அர்த்த புஷ்டியோடு எங்களைப் பார்த்தார். ''இரு இளைஞர்களும் சரியான பொருத்தம். ஆரம்பம் முதலே வெகு மரியாதையுள்ள பெண்ணாய் வளைய வந்தவள், இந்த மூன்றாம் தாரம். 'மரியாதை' எனும் போர்வைக்குள் நிகழ்ந்த பல கொலைகள், எனக்கும் உன் அப்பாவுக்கும் அத்துப்படி.''

இருவரும் சற்றே பெருமையாய் சிரித்துக் கொண்டனர்.

மணி, நள்ளிரவைத் தாண்டி பனிரெண்டரை. ஒன்றரை மணி நேரம் பேசியுள்ளோம். இருந்தாலும், இவ்வழக்கு பற்றிப் பேச பல மணி நேரத்துக்குண்டான சரக்கு இருப்பதாய்ப்பட்டது. ''என்ன விஷம் அது? வழக்கமாய் கொலையாளிகள் பயன் படுத்தும் ஆர்சனிக் கலவையா?'' என்றேன் நான்.

''சொல்ல இயலாது. ஆய்வறிக்கை வரவில்லை. மருத்துவர்கள் பிரேதத்தைப் பார்த்த மாத்திரத்தில் எஸரின்-ஆக இருக்கலாம் என எண்ணுகிறார்கள்''

''கொஞ்சம் அசாதாரணமாய் படவில்லை...?! சுற்று வட்டாரத்தில் எஸரின் சப்ளை செய்பவர்களைத் துப்பறிந்தால் உதவுமே.''

''இதில் அதுவும் முடியாது. எஸரின், லியோனைட் வைத்திருந்த மருந்து. அவர் தினமும் கண்ணுக்கு உபயோகப்படுத்தி வந்த சொட்டு மருந்து.''

இத்தருணத்தில், வேறு கோணத்தில் இவ்வழக்கை அணுக அப்பா தந்த தகவல் உந்திற்று. ''லியோனைட் நீரிழிவால் அவதிப்பட்டார். காலையும் மாலையும் இன்சுலின் ஊசி இல்லையென்றால் அவர் உயிருக்கே பெருத்த ஆபத்து நேரிடலாம் என்ற எச்சரிக்கை உண்டு. சில, சிறு சிறு பாட்டில்களில் நிரப்பப்பட்ட இன்சுலீன், அவரது மருத்துவ அலமாரியில் இருந்தன.''

''அப்படி நிறைந்திருந்த இன்சுலீன் பாட்டில்களின் இடையே, ஒரு சில எஸரின் நிரப்பப்பட்ட கண் மருந்து பாட்டில்களும் இருந்துள்ளன. இல்லையா?'' - நான் கொஞ்சம் ஆர்வம் மிகுந்து கேட்டேன்.

''மிகச் சரியாக.''

''இன்சுலீன் கொடுக்கும் பாவனையில், எஸரின் உறிஞ்சப்பட்டு குத்தப்பட்டிருக்கும் என எண்ணுகிறீர்களா?''

''ஆமாம்''

''மகா தற்காப்பு நிறைந்தவர் லியோனைட். இன்சுலீன் பாட்டிலுக்குள் எஸரினை மாற்றி நிரப்பி, அதனைக் காட்டி, அவரை

நம்ப வைத்து, காரியம் நிறைவேறியிருக்கலாம் என்பது சரியான தர்க்கமே. எனில் ஊசி குத்தியது யார்?''

''அவர் மனைவி...!'' - ஸ்திரமாய், ஒரு முடிவாகவே சொன்னார் அப்பா. 'சரியான ஆள்கொன்றிருக்கும் பட்சத்தில் பாதகமில்லை' என சோஃபியாவும், அப்பாவும் குறிப்பிட்டதன் அர்த்தம் விளங்கிற்று. இருவரின் சந்தேகமும் அந்த மூன்றாவது மனைவியின் மீது. அதை வெளிப்படையாகக் கூறாமல், 'சரியான ஆள்' என சூசகப்படுத்தி உள்ளனர்.

''டேவரெனர்! குடும்ப அங்கத்தினருக்கும் அந்த மூன்றாவது மனைவிக்குமான உறவு முறை சுமூகமானதா?''

''இல்லை. பேசிக் கொள்வது கூட கிடையாது என்பது தகவல்.''

நான் முழுமையாகவும், அப்பா சற்றும், லியோனைடின் மூன்றாவது மனைவியே குற்றவாளி என முடிவாக்கும் போது, இன்ஸ்பெக்டர் அப்படி ஒரு முடிவுக்கு வர மறுத்தே விட்டார். ''சிக்கல் உள்ளது. தாத்தாவுக்கு ஊசி போடுவது தினசரி நடவடிக்கை. அதையே கொலைக்கு சாதகமாக்கியிருக்கிறார்கள். ஆகவே, இன்சுலீன் மருந்தினை எடுத்து எஸரின் நிரப்பும் பட்சத்தில், துப்பு கிடைக்காமலிருக்க, எண்ணிக்கை குறைந்த பாட்டில்களை சமன் செய்ய, புது இன்சுலீன் பாட்டில்களை வைத்திருக்க வேண்டும்... இல்லையா? ஏன் கொலையாளி அதை செய்யவில்லை?''

''அதெப்படி டேவரெனர்...? ஓரிரு பாட்டில்கள் குறைவதை யார் எண்ணிப் பார்க்கப் போகிறார்கள், எனும் சராசரி எண்ணத்தினால் விட்டிருக்கலாமில்லையா?'' - இது நான்.

''அது தவறு சார்ல்ஸ்...! இது மனித உளவியல் சம்பந்தப்பட்டது. தற்செயலாக கீழே விழுந்து உடையும் பாட்டிலுக்கு வேண்டுமானால் நீ சொல்லும் தர்க்கம் சரிப்படும். ஒரு கொலையை நிகழ்த்துபவன், நிச்சயம் குறையும் எண்ணிக்கையை, பயத்தாலும் சந்தேகத்தாலும், ஈடுகட்டவே நினைப்பான்.''

''......''

''அங்கு சில நிரப்பப்பட்ட, மேலும், காலியான இன்சுலீன் பாட்டில்கள் இருந்தன. காலி பாட்டில்களில் எஞ்சியிருந்த திரவத்தை ஆராய்ந்த டாக்டர் தான், அது, இன்சுலீன் இல்லை என்றார்.''

இவ்விதம் டேவரெனர் சொன்னதும் அப்பா அவரையே மடக்கிப் போட்டு பின்வரும் கேள்வியை எழுப்பினார்: ''இன்ஸ்பெக்டர்! இன்சுலீன் பாட்டிலைக் காலி செய்து எஸரின் நிரப்பிக் கொன்றவன்,

அந்த பாட்டிலைக் கையோடு கொண்டு சென்று தூர வீசியிருக்கலா மில்லையா? ஏன் அங்கேயே விட வேண்டும்?''

''எண்ணிக்கைக்காக...! அவன் அறிந்த கொலைக்கலை அவ்வளவே!!'' - சமயோஜிதமாய் பதில் வந்தது இன்ஸ்பெக்டரிட மிருந்து. அப்பா, மேலே பேசாமல் சிந்திக்க ஆரம்பித்தார்.

நான் ''பிறகென்ன ஐயம்? பிரேதப் பரிசோதனையில் குட்டு வெளியாகப் போகின்றது'' எனும் அபிப்பிராயத்தை, சரி கிளம்பலாமா எனும் தொனியில் முன் வைத்தேன். டேவரெனர் விடுவதாயில்லை. ''இல்லை சார்ல்ஸ்...! எஸரின் செலுத்தி நடத்தும் பிரேதப் பரிசோதனைகளில், பத்துக்கு ஒன்றில் கூட, எஸரின் தடயம் தெரிவதில்லை.''

''அப்படியென்றால்?''

''சிம்பிள்...! விஷம் செலுத்தி லியோனைட் கொல்லப்பட்டி ருப்பதை நிரூபிப்பது சிக்கலான ஒன்று....!'' என்ற டேவரெனரை இடைமறித்து, ''இன்சுலீன் அளிக்கப்படும் அளவில் கூட லியோனைடின் உயிருக்கு ஆபத்து உண்டு. இன்சுலீனை மிக அதிகம் ஏற்றி, அல்லது கொஞ்சம் கூட தராமல் நிறுத்தி, தாத்தாவை அழித்திருக்கலாம்...!'' என்று அப்பா, அவர் பங்குக்கு புது விளக்கமளித்தார். ''லியோனைடின் மனைவியோ... வேறு எவரோ...! துப்பு துலங்காமல் சிக்கல்கள் தெரியும் வண்ணம்தான் கொலை செய்துள்ளனர்.''

''சரி. அந்த மூன்றாவது மனைவியை விட்டு வைப்போம். வேறு யாராவது?''

''என் அருமை சார்ல்ஸ்...!'' - இது அப்பா. ''பசையுள்ள மனிதர் லியோனைட். உறவுகள் எல்லாவற்றுக்கும் வேண்டிய மட்டும் பணம் தந்துள்ளார். இருப்பினும், பணத்தைப் பொறுத்தமட்டில், வேண்டிய மட்டும் எனும் அளவுகோல் இல்லை அல்லவா...?''

''பணத்துக்காக கொலை நடந்திருக்கும் என்கிறீர்களா?''

''நிச்சயமாக. இன்சுலீன் பாட்டில்களை வைக்கவென்றே ஓர் அலமாரி உண்டு. யார் வேண்டுமானாலும் அந்த வழியே போகலாம், வரலாம். வீட்டுக்குள்ளே அறைகளுக்குள் சென்று வர என்ன கட்டுப் பாடு இருந்து விடப்போகின்றது? ஆகவே, யார் வேண்டுமானாலும் கச்சிதமாக திட்டம் தீட்டி, இக்கொலையை அரங்கேற்றியிருக்கலாம்.''

''வீட்டுக்கு வந்து பாடம் கற்றுத்தரும் வாத்தியாரும் ஏழையாகத் தானிருந்திருக்க வேண்டும்.''

''ஏழையே.''

''மூன்றாவது மனைவிக்கும், இந்த வாத்தியாருக்கும் வேறு நட்பு இருந்திருக்கின்றது.''

''ஆமாமாம்.''

''ஒரு வேளை இருவரும் கூட்டாக சேர்ந்து, மாஸ்டர் ப்ளான் போட்டு, கொலை அரங்கேற்றம் நிகழத்தியிருக்கலாம்.''

இப்போது இன்ஸ்பெக்டர் ஆமோதித்துப் பேசினார்: ''சாத்தியமுண்டு. சுக வாழ்வு வேண்டும் எனும் தாகம் அவளுக்கு நிறைய. மற்றும், முழுக்க முழுக்க நாடி தளர்ந்த கணவன். இவ்விரண்டும் அவள் போக வாழ்வு எனும் தீக்கு நெய் வார்த்திருக்கும். லியோனைட் மறைந்தால் அத்தனையும் இவளுக்குத் தானே! அவள் தான் கொலையாளி என எனக்கு நிரம்ப எண்ணம் உள்ளது. ஆனால் சாட்சி?''

ரொம்பச் சரி. எங்கள் எல்லோருக்கும் ஆதாரபூர்வமான சாட்சி வேண்டும். லியோனைடை, ப்ரெண்டாதான் விஷம் வைத்துக் கொன்றார் என்பதற்குண்டான ஸ்தூலமான சாட்சி வேண்டும். நான், சோஃபியா, முதன்மை இன்ஸ்பெக்டர், துணை கமிஷனர், என எல்லோரும் வாய் திறந்து எதிர்பார்ப்பது, சாட்சியை.

ஆனாலும், கூடவே, நான், சோஃபியா, முதன்மை இன்ஸ்பெக்டர், துணை கமிஷனர், என எல்லோரும், ஒரு வேளை ப்ரெண்டா அல்லாது வேறு யாராவது லியோனைடைப் பழி வாங்கி அடங்கியிருப்பார்களா என்றும் இணையாக எண்ணத் தவறவில்லை...!

சாட்சி கை கூடும் பட்சத்தில், காய்ந்துக் கிடக்கும் இந்த வழக்கு எனும் நந்தவனம், வெற்றி பெற்றுப் பூத்துக் குலுங்கும்; இல்லையேல், மழையில் நனைந்த பட்டாசாய் எக்காலத்திலும் வெடிக்காமல், நமுநமுத்துப் போய்விடும்.

எது நடக்கும்...?

மூளை சுட்டது. இப்படியும் அப்படியும் எத்தனை தர்க்கங்கள்...! ஆகவே, இத்துடன் நிறுத்திக் கொண்டோம். ஆழமாய் துப்பறிந்து கொலையாளியின் அடையாளம் காண வேண்டிய முடிச்சுகள் நிறைந்த வழக்கு இது என்று உணர்ந்து ஒப்புக் கொண்டு, மூவரும் விடை பெற்றுக் கொண்டோம்.

# 4

மறுநாள் அப்பாவும் நானும் வெளிவேலைகள் ஏதும் வைத்துக் கொள்ளவில்லை. நான்தான் சோஃபியாவைப் போய் சந்திப்பதாய் முற்பகலில் கிளம்பினேன். அப்போது அப்பா சொன்னார்: ''இந்த வழக்கு எப்படியாவது முடிய வேண்டுமென்றால், அந்த வீட்டில் உள்ள அனைவரின் உள் மனதையும் தெரிதல் வேண்டும். வெளியில் நின்று பார்க்கும் உளவாளியாய் அல்ல. அவர்கள் குடும்ப அங்கத்தினன் போன்ற நிலையில் நின்று. இதை சாத்தியப்படுத்த உன்னால் மட்டுமே இயலும்.''

இது எனக்குப் பிடிக்கவில்லை. கையிலிருந்த, அப்போது தான் பற்ற வைத்து சிகரெட்டைக் குப்பையில் எறிந்து, ''நான் என்ன உங்கள் உளவாளியா...! எப்படி, எப்படி...! உயிருக்குயிராய் நான் காதலிக்கும் என் அருமை காதலி சோஃபியாவையே நான் வேவு பார்க்க வேண்டுமா....! அப்படி என்ன தேவை இப்போது...!'' என்று எரிச்சலானேன்.

''தேவை உள்ளது.'' - அப்பாவும் கொஞ்சம் எரிச்சலானார். சுரீரென்று உரையாடத் துவங்கினார். ''நீ ஓர் அரசாங்க ராஜதந்திரி. சாதா மனிதனைப் போல உணர்வுகளுக்கு அடிமையாகிப் பேசுவதை நிறுத்து. உன் காதலி சோஃபியா, அவள் தாத்தாவைக் கொன்றதாய் சந்தேகப்படக் கூட நீ பிரியப்படவில்லை, இல்லையா?''

''நிச்சயமாய் இல்லை. இப்படிப்பட்ட சந்தேகம் அபத்தமான- நம் தேடலுக்குத் தொடர்பற்ற ஒன்று''

''நன்று. ஆனால் நாங்கள் அப்படி நினைக்கவில்லை. ஏனென்றால், உன்னைப் போலக் கண்களை மறைக்க எங்களுக்கு காதல் போன்ற வஸ்து ஏதுமில்லை.'' இதைக் கேட்டதும் என் உடம்பெங்கும் பற்றிக் கொண்டு வந்தது. அவர் எனக்குப் பேச அவகாசம் தராமல் தொடர்ந்தார். ''சோஃபியா சில காலம் வெளியூர் ஜாகையில் இருந்தாள். தாத்தாவுடனும் சுமூக உறவு கொண்டிருந்தாள்.

நல்ல சம்பாத்தியமும் கூட. உன்னைக் காதலிப்பது அறிந்திருந்தால், உளம் மகிழ்ந்து, ஜாம்ஜாமென்று, விமரிசையான ஒரு திருமணத்தை நடத்தித் தந்திருப்பார் தாத்தா. இதையெல்லாம் பார்க்கும்போது, சோஃபியா மீது துளியும் சந்தேகம் வரவில்லை. கண்ணில் படுபவற்றையெல்லாம் சந்தேகப்பட நாங்கள் என்ன மூளை குழம்பியவர்களா....! இருந்தாலும் பல வாய்ப்புகளை ஆராயும் போது, அவளும் குறிக்கப்படுகிறாள். ஓ கே! ஆனால் ஒன்று மட்டும் தெரிந்துக் கொள் சார்ல்ஸ். இந்தக் கொலை ருதுவாகும் வரை, அந்தப் பெண் உன்னை மணக்க மாட்டாள். நான் அவளிடம் பேசிய சிறிது உரையாடல், மற்றும் நீ சோஃபியா பற்றி சொன்னவை, இரண்டிலிருந்தும், இது நிச்சயமாய் எனக்குப் படுகின்றது. தவிர, முடியவே முடியாமல் காற்றில் கரைந்து விடும் வழக்குகளைப் போன்றது, இது. முடிவு தெரியாமலே கூட போய் விடலாம்.''

''அப்பா....''

''ஆகவே, உன் கல்யாணம் பொருட்டாவது, கொலையாளியின் முகவரி தேடி நாம் துரிதப்பட வேண்டியுள்ளது.''

அப்பாவின் மீதிருந்த கோபம், என் காதலுக்கு நேர்ந்த தேவையற்ற தடங்கலின் மீது திரும்பி நின்றது. 'காதலிக்க ஆரம்பித்ததும், காதல் தோல்வியையும் அறிந்து கொள்' என எந்த நேரத்தில் சோஃபியா சொன்னாளோ... அது நிஜமாகி விடும் போலுள்ளதே, எனும் சகுன பயம் வேறு கோபத் தீக்கு சாமரம் வீசிற்று.

''சார்ல்ஸ்...! தாத்தாவின் மனைவியே கொலையாளி என முடிவு கட்ட பல வாய்ப்புகள் உள்ளன. எல்லாம் வாய்ப்புகளே. சாட்சிகள் அல்ல. அந்த வாத்தியாரும், மூன்றாம் தாரமும் கை கோர்த்துக் கொண்டு கொன்றிருக்கிறார்கள் என்பது என் கண்களை மறைக்கும் பூதாகார ஐயம். ஆனால் ஆதாரபூர்வ சாட்சி கிட்டும் வரை, அங்கிருக்கும் ஏனையவர்களை ஆராயாது, சந்தேகப்படாது, விட்டுவிட முடியாதல்லவா...! எந்தப் புற்றில் எந்தப் பாம்போ...? என்ன பேச்சையேக் காணோம்... புரிகிறதா...?!''

புரிந்தது. எனக்குப் புரிந்ததை அறிந்ததும் சற்று சாந்தமானார். ''இந்த நிலையை சோஃபியாவுக்கு விளக்க வேண்டும்.''

''எப்படி.... நீ... நீ... கொ..லை.. செய்தாயா என்று, நா..ன்... சோஃபியாவை.. ... ...?'' - நான் நரம்புகள் எகிற தடுமாற, ஆம் என தலையசைத்தார் துணை கமிஷனர்.

''என்னப்பா இது...? எப்படியப்பா இயலும்...?''

''என்ன உள்ளது இதில்? அவளே தானே கொலையாளியைக் கண்டறிய உன்னை நாடினாள்....! எனில், நீ அந்த வீட்டிலுள்ள அனைவரையும், சோஃபியா உட்பட, அலசுவதில் தவறேது? நீ மென்று விழுங்காது, இதை உன் நிலைப்பாடாய் கூறு. அவள் எவ்வாறு எதிர் கொள்கிறாள் என்பதைக் கூர்ந்து கவனி. அதில் தான் துப்பு உள்ளது. அனுபவம் உள்ள ஒரு ராஜ தந்திரியான நீ இப்படிப் பதறுவது தகாது....!'' என்று முடித்தார், பழுத்த அனுபவம் கொண்ட துணைக் கமிஷனர்.

இப்படி நீண்டு முடிந்த உரையாடலால், சிதறுண்ட என் மனத்துடன் அவளைப் போய்ப் பார்த்து, சிலாகிக்கும் எதையும் அனுபவிக்க இயலாது, ஆகையால், அவள் வீட்டுக்கு ஆசை பொங்கக் கிளம்பிய நான், பேசாது திரும்பி என் அறைக்கே சென்றேன். லேசாய் ஆரம்பித்திருந்த தலைவலி, ''நான் டேவரெனரிடம் சொல்கிறேன், நீ, நாளை, அவரை சோஃபியா வீட்டுக்கு அழைத்துச் செல்வாய் என...! சரியா?! தாமதம் வேண்டாம்....! நாளையே புலனாய்வு தொடங்க வேண்டும்'' என்ற அப்பாவின் கட்டளையால் தீவிரமாயிற்று.

நான் பரபரப்பது, காதலி சோஃபியாவை எப்படி சந்தேகப்படுவது என்று தான்; இருந்தாலும் அப்பாவின் போதனை சோஃபியா வீட்டுக்கு துப்புத் துலக்கச் செல்ல என்னை முழுதுமாக தயார்படுத்திற்று. மறுநாள் கிளம்பும் போது, வழியில், இன்ஸ்பெக்டர் டேவரெனர் மற்றும் புலனாய்வுத் துறைத் தலைவர் லாம்ப் ஆகியோரையும் சேர்த்துக் கொண்டேன்.

அப்பா அளவுக்கு எனக்கு தாட்சண்யம் அகற்றத் தெரியாததால், செல்லுமிடத்தில் என்ன உரையாடல்கள் நிகழவுள்ளதோ, நாம் கேட்பவற்றை தப்பர்த்தம் செய்துக் கொண்டு மலர வேண்டிய உறவு வதங்கி விடுமோ, என்றெல்லாம் ஒரு படபடப்பு இருந்த வண்ணமிருந்தது. போர் போன்ற கால கட்டங்களில் அரசுக்கு அறிவுரை தரும் உளவுத் துறையில் நல்ல பதவியில் நானிருந்தாலும், இது முழுக்க வித்தியாசமான மோதல். அத்தனை பெரிய வட்டத்துள் இயங்கிப் பழகிய எனக்கு தனி நபர் கொலை எனும் குறுகிய வட்டத்துள் இயங்கப் புரியவில்லை. மேலும் காதலி சோஃபியாவின் சம்பந்தமும் உள்ளதால் எதுவும் பிடிபடவில்லை.

அங்கிருந்த கோல்ஃப் மைதானத்தை ஒட்டி ஓடிய குறுகலான, வளைந்த சாலையில் நழுவி நழுவி பயணித்த ஐந்தாவது நிமிடத்தில் தாத்தா லியோனைடின் வீட்டினை அடைந்தோம். ஒரு பூதக் கண்ணாடி கொண்டு தெருவோரம் இருக்கும் குடிசையைப் பார்த்தால் எப்படியிருக்கும்.... அது போல நல்ல பெரிய அளவிலான ஆனால் பழைய வீடாயிருந்தது அது. அறைகள் நிறைய இருக்கும்போல் தோன்றியது. வெளிப்புறச் சுவர்கள் முழுதும், கூம்புக் கூம்பாய் பல கூரைகள் இருந்தன; எதுவுமே சம தளமாயில்லை. இந்தக் கூரைகள் உட்பட எல்லா சுவர்களும் மரத்தினால் தான் செய்யப்பட்டிருந்தன. அவையனைத்தும் மழை நீரில் ஊறி ஊறி ஊதியிருந்தன. இதனால் உண்டான மக்கிய வாடை காற்றை ஆக்கிரமித்திருந்தது. பெரிய வீடாயிருந்தாலும், சோஃபியா குறிப்பிட்டது போல, இது ஒரு பாழடைந்த வீடே. இங்கிலாந்தினை விலைக்கு வாங்க வல்ல ஒருவர் வீடாய் படவில்லை... அவசரத்துக்கு இரவில் முளைத்திட்ட பெரிய காளானாய்த்தான் பட்டது!

இருப்பினும் காரணம் விளங்கிற்று. எகிப்து நாட்டினன், இங்கிலாந்து வந்து முன்னேறுகின்றான். இங்கு குவிந்துக் கிடக்கும் ஆடம்பர வீடுகளைப் போல ஒன்றினைக் கட்ட முயன்று, அது இங்கிலீஷ்காரன் வீடாயுமில்லாமல், எகிப்தியனின் ஜாகையாகவும் அமையாமல், இப்படி முடிந்துள்ளது!

''வியப்பா?'' என்றார் டேவரெனர். ''எல்லாம் வெளியிலிருந்து பார்க்கத்தான் இப்படி. உள்ளே மூன்று வீடுகள் உள்ளன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனி சமையலறை குளியலறை என. ஓர் ஐந்து நட்சத்திர ஓட்டலின் நேர்த்தியுடன், அனைத்தும் டிப்-டாப்.''

இப்பொழுது, சோஃபியாவே, வீட்டிலிருந்து வெளியே வந்தாள். முட்டியளவில் ஒரு பாவாடையும், அதே நிற மேல் சட்டையுமணிந்து அழகு மிளிர வந்தவள், என்னைக் கண்டதும், நம்பவே முடியாத வளாய் நின்றாள். கண்கள் அகல, இதழ்கள் முழுதும் சிரிப்பு விரிய, இரு கைகளையும் என்னை நோக்கி நீட்டி ''நீ?'' என்று புளகாங்கிதம் கொண்டாள். அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை. என்னைக் கண்டதன் பூரிப்பு. முதல் முறையாய் முன்னறிவிப்பின்றியன்றோ அவள் இல்லத்துக்கு வந்துள்ளேன்!

ஓடி வந்து தன் இரு உள்ளங்கைகளால் என் கைகளைப் பற்றிக் கொண்டவளிடம், ''சோஃபியா... நலமா? உன்னிடம் பேச வேண்டியுள்ளது. எங்கு போகலாம்?'' என்றேன். என் விருப்பத்துக்கு

தயக்கம் காட்டுவாள் என நினைத்தேன். ஆனால் மாறாக, ''இதோ, இவ்வழியில்...'' என்று பாதை காட்டினாள். சில நிமிட நடையில், வீட்டின் பின்புறப் பகுதியில், ஏகமாய் வியாபித்திருந்த ஒரு சிறு தோட்டத்தை அடைந்தோம். இங்கிருந்து பார்க்கும் போது, நெடுநெடுவென வளர்ந்திருந்த பைன் மரங்களின் பின்னணியில், பல ஏக்கர் பரப்பில் அகண்டு விரிந்திருந்த கோல்ஃப் மைதானம், கசங்காமல் விரித்துப் போடப்பட்டிருந்த பச்சைப் போர்வையாய் மிளிர்ந்தது. மைதானத்தின் தொலைவிலிருந்த எதிர் விளிம்பு முழுவதும், நிமிர்ந்து நிற்கும் தோரணங்களாய், சிறிது சிறிதாக தென்பட்டன, இங்கிலாந்தின் பெரிது பெரிதான கட்டிடங்கள்...!

அங்கிருந்த ஓர் அசௌகரியமிக்க திண்ணையிலமர்ந்தோம். காற்று குளுகுளுவென்றிருந்தது. பறவைகளின் ஒலியின்றி வேறில்லை. ''ம்..?'' என்றாள் என்னைப் பார்த்து. அந்தக் குரலில், சற்று முன்னிருந்த உற்சாகம் துளியுமில்லை. நான் வந்த காரணம் அத்தனையையும் சொன்னேன். கூர்ந்து கவனித்தாள். அவ்வப்போது அவளின் முகபாவத்தில், அவள் மன ஓட்டங்களை சற்றே படிக்க இயன்றாலும், நான் சொல்லி முடித்ததும்,அவள் வெளியிட்ட மிக நீண்ட பெருமூச்சின் நோக்கம் விளங்கவில்லை.

''உன் அப்பா...'' என்றபடி கொஞ்சம் வசதியாய் உட்கார்ந்தவள், ''அதி அதி புத்திசாலி'' என்றாள். எதனால் இப்படி சொல்கிறாள்? என்னையே அனுப்பி விவரம் சேகரிப்பதாலா? சோஃபியாவையும் ஐயப் பட்டியலில் வைத்திருப்பதாலா? எதுவாகினும், ''அப்பாவின் அணுகுமுறைக்கு ஏற்ப அவரின் கருத்துக்கள் உள்ளன சோஃபி....! என்னைப் பொறுத்தவரை, அவர் வீட்டையே ஒட்டு மொத்தமாய் சந்தேகக் கூண்டில் ஏற்றுவது, ஓர் அழுகிய அபத்தம்'' என்று என் அபிப்ராயத்தை முன் வைத்து, உரையாடலுக்கு உயிர் தந்தேன்.

அவள் களையிழந்திருந்த முகம் இன்னும் இறுகிற்று. ''கிடையவே கிடையாது.'' - என்னை ஆட்சேபித்தாள். ''அது அபத்த கருத்தே அல்ல. ஒன்று தெரியுமா... அவரின் அணுகுமுறை மட்டுமே உண்மையை விண்டு வைக்கப் போகின்றது. என்னிடம் பேசிய துரித கதியில், என் மனத்திலும் மூளையிலும் ஓடுவதை அப்படியே படம்பிடித்து விட்ட சூரனவர். இத்தனை காலம் பழகியும் உன்னால் முடியாதது இது...!'' என்றவள், டக்கென்று, இயலவில்லையே என்பது போல், ஓர் உள்ளங்கையை மற்றோர் உள்ளங்கைக்குள் மாற்றி மாற்றிப் புதைத்தெடுத்து, ''எனக்கு நடந்த உண்மை தெரிய வேண்டும்...'' என்று இயலாமையால் படபடத்தாள்.

''தெரிய வரும் சோஃபி...! அது... நம்... திருமணத்தை... தடுக்க வேண்டுமா...?''

''ப்ச்...! உன்னுடன் துவங்கவுள்ள திருமண பந்தத்தைக் குழப்பமேயின்றி நான் முழுவதுமாக அனுபவிக்க வேண்டும், சார்ல்ஸ்...!'' என்று என்னை நேருக்கு நேர் பார்த்து உறுதிபடச் சொன்னவள், ''நமக்காக மட்டுமல்ல சார்ல்ஸ். என் மன நிம்மதிக்காக. என் சலனமற்ற தூக்கத்துக்காக. என் பாதுகாப்புக்காக. இவற்றிற்காக நடந்த உண்மை தெரிந்தே தீர வேண்டும்'' என்று சத்தியம் போல் முடித்தாள். தொடர்ந்தாள்: ''இரவு உன்னை ஓட்டலில் சந்தித்த போது சொல்லவில்லை. ஆனால் உண்மையில், என் அடி வயிறு முழுதும் பயம் ஊறிக் கொண்டேயிருக்கின்றது சார்ல்ஸ்.''

''பயமா? உனக்கா?''

''ஆமாம்.. பயம் தான். பயம்... பயம்... *பயம்*....'' - சற்றே உரக்க வீறிட்டாள்.

**தூ**க்கி வாரிப் போட்டது எனக்கு. சோஃபியாவுக்கா, எதனையும் எதிர் கொள்ளவல்ல துணிவு கொண்டவளாய் நான் கண்ட சோஃபியாவுக்காக பயம்? ''பயமா? எதைக் கண்டு? எதன் பொருட்டு?''

''நீ நினைக்கிறாய். உன் தந்தை, இன்ஸ்பெக்டர், போலீஸ், என எல்லோரும் நினைக்கிறீர்கள்... தாத்தாவின் மூன்றாவது மனைவி ப்ரெண்டாதான் கொலைகாரி என.''

''அது ஒரு சாத்தியக்கூறு....''

''ரொம்பச் சரி. சாத்தியக் கூறே... செய்திருப்பாள் எனும் அளவிலான சாத்தியக் கூறு. ப்ரெண்டா செய்திருக்கலாம் என நான் சொல்கிறேன் என்றால், எனக்கு நன்கு தெரியும், அதை நான் ஒரு தோராயமாய் தான் சொல்கிறேன் என்று. பலர் குழுமியிருக்கும் இவ்வீட்டில் ஒருவர் பக்கம் விரல் நீட்டப்படும் போதே, சந்தேகத்தின் பேரில் தான். ஆக, 'ப்ரெண்டாவே' என நான் முடிவெடுக்கவில்லை.''

''... ... ...''

''ஆனால் நீங்களெல்லோரும் ஏன் அவளை மட்டும் கண்கொத்தி பம்பாய் குறிப்பிட வேண்டும்?''

''நீ அப்படி முடிவெடுக்கவில்லையா சோஃபி?''

''*தெரியவில்லை.* மூன்றாவது மனிதனாய் வெளியிலிருந்து பார் என நான் வேண்டியது போல, நீ நடந்துள்ள விபரீதம் பற்றி வெளியிலிருந்து படித்துள்ளாய். இனி நான் உள்ளிருந்து காட்டுகிறேன்.

ஒவ்வொரு நபரின் குணாதிசத்தையும் உள்ளிருந்து காட்டுகிறேன்'' என்றவள், ஒரு நீண்ட உரையாடல் நிகழவுள்ளதை உணர்த்தும் வகையில் ஆரம்பித்தாள் : ''ப்ரெண்டா, விபரீதங்களுக்குள் தன்னை இட்டுக் கொள்ளும் அளவுக்கான பெண்ணாய் எனக்குத் தோன்ற வில்லை. அவள், தன்னைக் குறித்து, மிக எச்சரிக்கையானவள் என்பது என் கணிப்பு.''

''அவளுடன் நெருக்கமுள்ளவனாய் கூறப்படும் அந்த வாத்தியார்... லாரன்ஸ் ப்ரௌன்... அவன் எப்படி?''

''லாரன்ஸ் ஒரு முழு பூனை. புலி அல்ல. அவனறிந்ததெல்லாம், துணிச்சலற்று, பயந்து ஒதுங்குவது மட்டுமே.''

''ஓ...!''

''ஆமாம். ஆனால் யார், எப்பொழுது, எந்த விதமாய், நம்மை பயங்கரமாய் ஆச்சரியப்பட வைப்பார்கள் என நமக்குத் தெரியாது சார்ல்ஸ்! ஒருவரை பற்றி நாம் போட்டு வைத்திருக்கும் மனக்கணக்கு சில சமயம் முழுசாய் பொய்யாகி விடும். எப்போதுமல்ல.... சில சமயம் தான்! பூனையாய் கணித்திருப்போம். புலியாய் காரியம் முடித்திருப்பார்கள். ஆனால் ப்ரெண்டா...'' என்று, கண நேரம் யோசித்து, பின் தலையை தீர்க்கமாய் ஆமோதிக்கும் பாணியில் அசைத்து, ''ஒரு சிறப்பான அந்தப்புரராணியாய் வாழ்ந்தவள்'' என்றாள்.

''விளங்கவில்லை.''

''அவளுக்குப் பேசாமல் அமர்ந்திருக்க வேண்டும். அது போதும். மேலும் - கொஞ்சம் இனிப்பு, பலகாரம், விதவித ஆடைகள், அழகழகாய் நகைகள், சுமாரான நாவல்கள், மாலை சினிமா, இரவு தாத்தா, என்று வாழ்ந்தவள். இப்படிப்பட்டவளை வேறென் னென்பது! அந்தப்புர ராணி! இதில் விந்தை என்ன என்றால், 87 வயது தாத்தாவின் அடிமையாய், அவரைக் கண நேரமும் பிரிய விரும்பாமல் வாழ்ந்தாள் என்பது தான்! அதுதான் தாத்தாவின் பலம். அது எந்த பெண்ணாயிருக்கட்டும் - அவளே இவ்வுலகின் மகாராணி என ஸ்தாபித்து விடுவார். இருவருக்கும் அறுபது வயதுக்கும் மேலான வித்தியாசம். இருந்தால் என்ன...! அவளைப் பொறுத்த வரை, தாத்தா, ஒரு மின்சாரம் பாய வைக்கும் காதலன்! தாத்தா பெண் களைக் கவர்ந்து கையகப்படுத்துவதில் அத்தனை புத்திசாலி. அது ஒரு கலை சார்ல்ஸ். பல கோடி பேர் முயன்று தோற்ற கலை!''

தற்போதைக்கு ப்ரெண்டா தலைவலியை ஒதுக்கினேன். என்னை அதிர வைத்த சோஃபியாவின் பயத்தினைப் பிடித்துக் கொண்டேன்.

''எதை வைத்து உன்னுள் அச்சம் பரவியுள்ளது என பதறினாய் சோஃபி?''

மீண்டும் பயத்தை நினைவு படுத்தியதும் அதிர்ந்தாள். தன் உள்ளங்கைகளை ஒன்றோடொன்றுப் பின்னிப் பிணைத்துப் பிசைந்துக் கொண்டாள். முகம் வெளிறிற்று. ''ஏனெனில் அது தான் உண்மை சார்ல்ஸ்....'' என்று தாழ்த்திய குரலில் சொன்னாள். ''நீ என் பயத்தைப் புரிந்து கொள்ள வேண்டியது மிக அவசியம் சார்ல்ஸ்'' என்று நெற்றியில் புதிதாய் துளிர்த்திருந்த வியர்வையை துடைத் தெறிந்தாள். ''எங்கள் குடும்பம் பெரிது. இதில் இங்கும் அங்குமாய் பல வாக்குவாதங்கள் நடந்தேறியுள்ளன. இதனால் எங்களுக்குள் பிளவுகள் உண்டு. அதுவே இரக்கமற்ற நெருப்பாய் மனதில் இருக்கலாம். அதுமட்டுமல்ல....! ஒவ்வொருவரும், பிஸினஸ் காரணமாய், பலப்பல விரோதங்களை சம்பாத்தித்திருக்கலாம். இந்நினைவுகள் தான் என்னைப் பாதித்து பயமேற்படுத்துகின்றன.''

'எந்த வீட்டில் தான் சச்சரவு இல்லை?' - என்ற என் எண்ணம் முகத்தில் பிரதிபலித்திருக்க வேண்டும். இந்த உணர்விற்கு பய உணர்வு பீறிட, படபடப்போடு பதில் தந்தாள்: ''உனக்கு விளங்க வைக்கிறேன். தாத்தாவையே எடுத்துக் கொள்வோம். அவரது சிறு வயது வாழ்க்கையை எங்களுடன் பகிர்ந்துக் கொள்ளும் போது, ஏதோ ஒரு தகராறில் இரண்டு நபர்களை கூரான ஆயுதம் கொண்டு குத்திக் கிழித்தெறிந்ததாகவும், அவர்களுக்குப் பின் ஒரு கூட்டமே இயங்கியதாகவும் கூறியிருக்கிறார்.''

''கொலையா?''

''கொலை நிகழவில்லை. அதற்கு முன் கட்டம் வரை நடந்துள்ளது. பிறகு தாத்தா அச்சம்பவத்தை முழுதுமாக மறந்து விட்டார். இங்கிலாந்தில் இது போன்ற அராஜக அடிதடி சகஜமானாலும், அடிபட்ட கூட்டம் மறந்திருக்க நியாயமில்லை, இல்லையா...? அதுவும் குடல் கிழியும் வரை பாதிக்கப்பட்டவன் மறப்பானா?''

நான் ஆம் என தலையசைத்தேன்.

''இது ஒரு வகை குரூரம்... தன்னிலை இழந்த குரோதம்...'' என்று தன் பயத்தை நியாயப்படுத்தி இன்னும் தொடர்ந்தாள்: ''என் பாட்டி. அவள் முகம் எனக்குத் தெரியாது. தலை மீறி ஆடும் தற்பெருமையாலும் நேர்மையாலும், ஒரு வினோதக் கலவையாய் ஆக்கப்பட்டவள் என்று மட்டும் கேள்விப்பட்டிருக்கிறேன். பொய்யென தெரிந்தால் கண்டவுடன் சுடும் வகை! இவ்வழியில் கற்பனைக்கப்பாற்பட்ட அவள் அட்டகாசங்கள் மறக்க முடியாதவை. உண்மை தவிர

வேறொன்றுமில்லை என்றேயிருந்து, சமூகத்தோடு அனுசரித்துப் போகாமல், பல விரோதிகளை சம்பாதித்த பாட்டிக்கு வாழ்வும் சாவும் ஒன்றே. விரோதத்தை சம்பாதித்துக் கொள்வதால் தன் வாழ்வு குறித்துக் கொஞ்சமும் அதிராதவள். அஞ்சாதவள். இது இன்னொரு வகை குரூரம்... தன்னிலை இழக்க வைக்கும் குரோதம்...!''

''முழுக்க முழுக்க நேர்மையாய் வாழ்ந்து விடத்தான் முடியுமா?''

''முடியாது. இவ்வகை பாத்திரங்களைக் கண்டாலே எனக்கு கலக்கம் தான். முழு நேர்மை கூட, காட்டுமிராண்டித்தனம்தான். என் தாயாரும் பலரின் விரோதத்தை சேமிப்பதில் இளைத்தவளல்ல. அவள் ஒரு நடிகை. என் அபிமானமானவள். என் கண்மணி. ஆனால் பழகும் தன்மையற்றவள். ஈகோ ஈன்றெடுத்தவள். நிகழும் எதிலும் தன் மேதாவிலாசத்தை மட்டுமே நோக்குபவள். தான் பின்னுக்குத் தள்ளப்படுவது தெரிந்தால், உடம்பே பற்றிக் கொண்டதாய் ஆகி விடும் அவளுக்கு. மிக ஆபத்தான குணமிது. இக்குணத்தால், ஒன்றுமே நிகழாதபோது கூட, தான் ஒதுக்கப்பட்டதாய் பாவித்து, எத்தனை பேரைப் பொது இடங்களில் தூஷித்திருக்கிறாள் தெரியுமா? பெரியப்பா ரோஜர் தன் கட்டுப்பாட்டை இழந்து கத்திக் கூப்பாடு போடும் கோப ஆத்மா. எப்போது இந்த வண்டி நிலை தடுமாறும் என அவருக்கே தெரியாமல் ஓடும் இயல்பு. பற்பல பேரை, என் கண் முன்னமேயே தூ என தூற்றியவர் இவர். இவரின் அமிலக் கோபத்துக்கு ஆளான பலர், உன்னையும் உன் குடும்பத்தையும் கவனித்துக் கொள்கிறேன் என்று சாபமிட்டு சென்றுள்ளனர். அவரின் மனைவி க்ளெம்ஸியோ இவருக்கு நேர் விரோதம். உலக உருண்டை இன்றோடு உடையப் போகிறது என்றால், அதனைப் பார்க்க வாசல் வந்து நிற்கும் ரகம். அத்தனை சாந்தம்! ரோஜருக்கு ஏதாவது என்றால் மட்டும், அவருக்காக, அவர் பாதுகாப்புக்காக, தன் நிலைதடுமாறி எதையும் நிறைவேற்றித் தள்ளும் குணம் உடையவள்.''

ஒரு சிறு இடைவெளி தந்தாள். முடிக்கும் தொனியில் தன் அப்பா பற்றியும் விமர்சித்தாள்: ''அப்பாவும் என் மற்றொரு கண்மணியே. அமைதியின் ஸ்வரூபம். இருந்தாலும் அவரையும் பல தருணங்களில் அம்மாவும் இன்ன பிறரும் கோபத்தின் உச்சிக்கு இட்டுச் சென்றுள்ளனர். அடங்கி விடுவார். ஒரு வேளை, அம்மாவின் உணர்ச்சிபூர்வ ஆதிக்கத்துக்காக இவ்விதம் அடங்கிப் போனாரோ, என்னவோ. ஆனால் அடக்கி வைக்கப்படும் அப்பாவின் வன்மமும் என்னைக் கவலைப்படுத்துகிறது....! என்றாவது ஒரு நாள் அவர் வெடித்திருந்தால், அல்லது வெடித்தால், அவரை அவராலேயே

கட்டுப்படுத்த முடியுமா...? முடியாதல்லவா...?'', என்றவள், ''என்ன சிரிக்கிறாய் சார்ல்ஸ்?'' என்றாள் சிறு குழந்தையாய்.

''என் அருமை காதலியே....'' என அருகிலிருந்த அவளை இழுத்து என் தோளோடு அணைத்துக் கொண்டேன். உச்சந்தலையில் முத்தமிட்டு ஆசுவாசப்படுத்தினேன். ஒரு சில நிமிடங்கள் அப்படியே விட்டேன். ''தேவையில்லாமல், கடந்ததையெல்லாம் போட்டு, உன்னை நீயே அதிகம் குழப்பிக் கொள்கிறாய் என் கண்ணே...! நீ சொல்வதையெல்லாம் கேட்டேன். அதிலிருந்து, உன் சிந்தனை பற்றி, ஒரு முடிவுக்குத் தான் வர முடிகின்றது.''

என்னிடமிருந்து விடுவித்துக் கொண்டு ''சொல்... என்ன அது? என் மன அழுத்தத்தை உன் முடிவு குறைக்கட்டும்'' என்று ஏங்கினாள்.

நான் புன்முறுவி, ''வீட்டிலிருக்கும் எல்லோரும் கொலை செய்யத் தகுதியானவர்களே... என்பதே அம்முடிவு....!''

முக இறுக்கம் சற்றென்று குறைய ''போ சார்ல்ஸ்...'' என்று இளகினாள். ''பின் என்னம்மா....! எல்லோரின் குணாதிசயங்களும், அது நல்லதோ கெட்டதோ, உனக்கு குரூரமுள்ள குணமாகத் தானே படுகின்றது. ஏதோ வீட்டின் அங்கத்தினர் அனைவரும் கத்தி கபடா கொண்டு யாரையேனும் குத்த என்று அலைந்ததாகவே பேசுகிறாய்...!''

''ஆமாம்... நான் உட்பட!''

''ஓ நோ....!''

''ஓ யெஸ், சார்ல்ஸ்....! என்னை மட்டும் நீ விதிவிலக்காக்க முடியாது. நானும் உணர்ச்சிகளுக்கு அடிமைப்பட்டவளே... நானும் கொலை செய்யலாம்...!'' என்றவள், ''ஆனால் அந்தக் கொலை நிச்சயம் அவசியமான தேவையான ஒன்றாய்தானிருக்கும்'' என்றாள்.

''கொலைக்கு நியாயமா?'' என்று கலகலவென சிரித்தேன். அவள் புன்னகைத்தபடி, ''சார்ல்ஸ்... ப்ரெண்டா ப்ரெண்டா என அலையாமல், பல கோணங்களில் துருவி, தாத்தாவின் மரண ரகசியத்தை அறிந்தே தீர வேண்டும் சார்ல்ஸ்...! தயவுகூர்ந்து...!'' என்றாள்.

அந்தக் கணத்தில், ப்ரெண்டா லியோனைட்ஸின் மீது, எனக்குப் பரிதாபமேற்பட்டது.

# 5

**நா**ங்கள் வீடு நோக்கி திரும்புகையில், எங்களுடன், விறுவிறுவென ஒரு பெண்மணியும் சேர்ந்துக் கொண்டாள். நல்ல உயரம். ''என் பாட்டி, செல்வி. எடித் டி ஹெவிலேண்ட்'' என்று அறிமுகப்படுத்தினாள் சோஃபியா. ''பாட்டி....! இது சார்ல்ஸ்.''

எடித்'துக்கு எழுபது வயது இருக்கலாம். வாராத நரைத்த முடி. சுருக்கம் கண்ட முகம். துளைக்கும் பார்வை. அதில் சமயோஜித நோக்கு.

''எப்படி உள்ளாய்?'' என்றார் என்னைப் பார்த்து. ''உன்னைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளேன். நீ கிழக்கு இங்கிலாந்தில் பணி புரிய போயுள்ளதாய் சொன்னாளே... வந்து விட்டாயா? உன் போலீஸ் அப்பா எப்படியுள்ளார்? ம்?'', என்று, என்ன இது போதுமா இன்னும் வேணுமா என்பது போல முடித்தார். கிழவிக்கு எத்தனை க்ஷணத் துல்லிய ஞாபக சக்தி! வியந்தபடி, நன்றாயுள்ளார் என்றேன்.

''அவரை சிறு பிள்ளையாயிருந்தே தெரியும்'' - எடித்! ''உன் அப்பாவை விட உன் அம்மா இன்னும் நல்ல பழக்கம். அவளைப் போலத்தான் நீயுள்ளாய். அதிர்ஷ்டக்காரன். அப்பனைப் போல பையனும் போலீஸ்காரனாக உத்தியோகம் பண்ணக் கூடாது என்பது அவளாசை. நடந்திருப்பதோ வேறு'' என்று, பேசும் ஒவ்வொரு வார்த்தையையும் தீர்க்கமாக அறிவிப்பு போல பேசினார். ''இந்தப் பக்கம் வந்திருக்கிறாய். உதவவா? இல்லை வேறு மாதிரியா?''

இப்படி ஒரு கேள்வி லஜ்ஜையாயிருந்தது. ''உதவவே விருப்பம்'' என்று பதில் சொன்னாலும் இன்னும் கொஞ்சம் சூடாய், காரசாரமாய் பதில் தந்திருக்கலாமோ எனப்பட்டது எனக்கு. என் பதிலுக்கு ஆமோதித்துத் தலையாட்டி, ''சோஃபியா, ஆயா உன்னை தேடிக் கொண்டிருந்தாள். மீன் வாங்கச் சொன்னாளாமே'' என்றார் சோஃபியிடம்.

அவளும், ''ஆமாமாம்...! இவரைப் பார்த்ததில் மறந்தே விட்டேன்..! இதோ...!'' என்றபடி வீடு நோக்கி ஓடினாள்.

நாங்களிருவரும் மெல்ல நடக்க ஆரம்பித்தோம். ''இந்த ஆயாக்களில்லாவிட்டால், அவ்வளவு தான் போல! எல்லா வீட்டிலும், எப்படியோ ஒருத்தி கிடைத்து விடுகிறாள். பெருக்க, சமைக்க, வீடு காக்க, துணிமணி துவைக்க, அவற்றை மடிக்க, என்பதற்காக ஆயாக்கள்! இது ஒரு பாரம்பரியமாகவே ஆகி விட்டது. இவளை பல வருடங்கள் முன்பு பிடித்து வந்தேன். விசுவாசி.'' - என்றவர் நின்றார். வேலியில் படர்ந்திருந்த ஓர் அழகு கொடி, தன் மடல் குழல்களைத், தேவையின்றி வெளியே நீட்டியபடியிருந்தது. அதை வெகு மூர்க்கத் தனமாய் இழுத்துப் பிய்த்து தூர எறிந்தார். ''தொல்லை. தினம் தினம் பாதையை இதுபோல கொடியின் குழல்கள் மறைக்கின்றன. பாதைக்குத் தடை. எத்தனை முறை பிய்த்தெறிந்தாலும், தலையைப் பிடித்திழுக்க, கால்களை இடறி விட என்று நீளுகின்றன....! இந்த வயதில் கீழே விழுந்து வைத்தால், என் கதி...!'' என்றவர், கைப் பிடியில் அகப்பட்டிருந்த பசுந்தழைகளைக் காலுக்கடியில் போட்டு முரட்டுத் தனமாய் நசுக்கினார். விடாமல் நசுக்கினார். இத்தனை கோபமும் எனக்கு வீண் எனப்பட்டது. கொடிக்குழல் இழுத்தா தடுமாறப் போகின்றோம்?!

கரடுமுரடாய் நடந்துக் கொள்ளும் எடித்'துடன் நடப்பது எனக்கு இயல்பாயில்லை. இருப்பினும் நடை தொடர, ''இது தேவையற்ற வேலை...!'' என்றார், நெருங்கிக் கொண்டிருந்த வீட்டினைப் பார்த்தபடி. ''போலீஸ் ஏன் இப்படி மண்டையைப் பிய்த்துக் கொள்கின்றது? போலீஸான உன்னிடம் கேட்கக் கூடாது தான். ஆனாலும் உன்னைப் பார்த்ததும் சொல்வது சரியெனப்படுகின்றது! லியோனைட் விஷம் வைத்துக் கொல்லப்பட்டார் என்பது நகைப்புக்கு இடம் தரவில்லை? சரி... ஆரம்பத்தில் தான் தோன்றவில்லை. இத்தனை தோண்டியுமா, அதை நம்புகிறீர்கள்...?! வயது 87. எப்பகையும் கிடையாது. பின் யார் வந்து கொல்வார்?! பார்....! எனக்கு அவரின் அழகற்ற குள்ளத் தோற்றத்தைக் கண்டாலே பற்றிக் கொண்டு வரும். பிடிக்கவே பிடிக்காது. இருப்பினும் வீட்டின் அச்சாணியாய் திகழ்ந்து, எல்லோரையும் ஏதோ ஒரு வகையில் தன்னகப்படுத்தி வைத்திருந்த அவரின் இறப்பு, என்னையே உலுக்கியுள்ளது. வீட்டில் எத்தனை பெரிய வெற்றிடம் உருவாகி யுள்ளது தெரியுமா? அப்படியிருக்கையில் எல்லோராலும் அணுகப் பட்ட அவரை யார் கொல்ல துணிந்திருப்பர்? ஏதாவது ஒரு வழக்கு கிடைத்து விட்டால், கிடைத்தது போதும் என, சும்மாவே துருவிக் கொண்டிருக்குமா, இந்த போலீஸ்...?!'' - என்றவர் நின்றார். ''இன்று

தான் சூரியன் தலை நீட்டுகின்றான். குளிருக்கு இதமாய் உள்ளது சூரிய ஸ்பரிஸம்''

நான் பதிலேதும் கூறவில்லை. அவர் மலரும் நினைவுகளைப் பேச விட்டேன். நின்றபடி தொடர்ந்தார்.

''காலையில் அசை போட்டுக் கொண்டிருந்தேன் சார்ல்ஸ். இங்கு நாற்பது வருடங்களுக்கும் மேலாய் வாழ்கிறேன். என் அக்காள் இறந்ததும் வந்தேன். வரச் சொல்லி சேதியனுப்பினார். அவருக்கு ஏழு குழந்தைகள். கடைசி பிள்ளைக்கு ஒரு வயது தான். இன்னும் சில, பத்துக்குள். தாதியிடம் வளரட்டும் என்று அத்தனை பிஞ்சுகளையும் விட்டு விட மனம் வரவில்லை. எனவே மணம் வந்தது. திருமணம்! நான் நினைத்துப் பார்த்திராத வகையிலான என் திருமணம்! என் நடுவிரல் அளவிலான ஒருத்தனுடன் என் திருமணம்! இருப்பினும் வீட்டின் நிர்வாகம், அதிகாரம் அனைத்திலும் முழு சுதந்திரம் தந்திருந்தார்.''

''அன்று தொடங்கி இன்று வரை இங்கு கட்டுப்பட்டு விட்டீர்கள்?''

''கட்டப்பட்டு விட்டேன்...!'' என்றார். சமயோஜித நகைச்சுவை. ''விட்டுப் போயிருக்கலாம். குழந்தைகள் வளர்ந்து திருமணம் புரிந்துக் கொண்டதும் இப்படி தோன்றியதுண்டு! ஆனால் முடியவில்லை. பல காரணங்கள். பிலிப் அதில் ஒன்று. நடிகையை மணந்தான். இந்த நடிகைகளுக்குகெல்லாம் ஏன் தான் திருமணமோ...! பிள்ளைகள் பிறந்ததும், திரையின் ஓரத்தில் நிற்கும் பாத்திரமாக இருந்தாலும் பரவாயில்லை என அவள் மீண்டும் நடிக்கப் போனாள். குழந்தை களைக் கட்டி மேய்க்க பிலிப்பால் முடியவில்லை. விவாகரத்து அது இது என்றால் வெறும் மண்டைக் குடைச்சல் தான் மிஞ்சும். புத்திசாலித்தனமாக முடிவெடுத்தான். இந்த, ஆடிப்போன, அப்பாவின் வீட்டுக்கே வந்து விட்டான். மீண்டும் இரு பிஞ்சுகள் என் கைகளில்!''

''பிலிப் லியோனைட்' டின் தொழில் என்ன?''

''புத்தகம் எழுதுவான். அத்தனையும் சரித்திர தகவல்கள். உனக்கு சரித்திரத்தில் நாட்டமுண்டா?''

இல்லை என்பதாய் தலையசைத்தேன்.

''அப்படி நாட்டமிருந்தால், படித்து விடாதே. சரித்திர ஆசையே போய் விடும். சுவாரஸ்யமான கதை போலன்றி, ஒன்றிரண்டு போட்ட தகவல் பட்டியல். யாருக்கும் அவற்றைப் படிக்க பிடிக்காது.''

''ஆனால், புத்தகங்கள் சிறப்பான தொகையை ஈட்டித் தருமில்லையா?''

''அது தானில்லை. தன் துறையில் ஜாம்பவானாக அவனிருந்த தெல்லாம் கடந்த காலம். இப்போதில்லை. புத்தகம் எழுதித்தான் அவன் குப்பைக் கொட்ட வேண்டும் என்றில்லை. அவனப்பா, லியோனைட், அவன் மீது ஒரு லட்சம் டாலர் எழுதிச் சென்றுள்ளார்! எத்தனை பெரிய தொகை! இந்த வகையில் லியோனைடைப் பாராட்டியே தீர வேண்டும். பண விஷயத்தில் தன் பிள்ளைகளை சுதந்திரமாக்கி விட்டார். ரோஜருக்கு ஓர் ஓட்டல். சோஃபியாவுக்கு சில பலசரக்குக் கடைகள். குழந்தைகளுக்கு வங்கிகளில் பெருந் தொகை''

''ஆக, அவர் இறந்ததால், பண வகையில், யாருக்கும் லாபம் இல்லை எனலாமா?''

நிமிர்ந்து என் கண்களை ஊடுருவினார். நம் கண்களை நம்மையே தாழ்த்திக் கொள்ள வைக்கும் ஆழப் பார்வை. ''அப்படி சொல்ல வாய்ப்பில்லை. அவர் மரணத்தால் எல்லோருக்கும் நிறைய நிறைய பணம் வர வழி வைத்துள்ளார். விசேஷம் என்னவென்றால், அத்தனை பணத்தையும் அவரிடம் கேட்டிருந்தாலே போதும்...! மறு நொடியே விமரிசையாய் கிடைத்திருக்கும். அவர் மரணத்தின் பேரில் தான் கிடைக்க வேண்டுமென்றில்லை. இது அத்தனை பேருக்கும் கூட தெரியம்...!'' - இவ்வாறு எடித் தந்த பதில் என் கேள்விக்கு சிறப்பான முழு பதிலாய் அமைந்தது.

''விஷம் தந்து தான் கொல்லப்பட்டுள்ளார். இது நிஜம். உங்களுக்கு யார் மீதாவது சந்தேகம் உண்டா?''

''இல்லை. இல்லவே இல்லை. இப்படி எங்கள் வீட்டுக்குள்ளேயே நீங்கள் தேடுவது என்னைப் புண்படுத்துகின்றது. அப்படியா ஒரு கொலையாளியை வீட்டுக்குள்ளேயே உலவ விட்டிருப்போம்...? அதுவும் இத்தனை ஆண்டுகளாய்...? நீங்கள் அந்த அப்பிராணி ப்ரெண்டாவைக் கவ்வுகிறீர்களாமே....''

''கூடாதா...?! போலீஸின் இந்த நடவடிக்கையை ஏன் மறுக்க வேண்டும்?''

''அவள் குடும்பத்தைக் கவனிக்கும் ஒரு சராசரி பெண்ணாய் தான் வளைய வந்துள்ளாள். அவருக்கு விஷம் வைப்பாளா என்று சொல்லத் தெரியவில்லை. இருந்தாலும், நான் இப்படியும் நினைப்பதுண்டு...! ஓர் இருபத்து நான்கு வயது கன்னி, எண்பது வயதுக்கும் மேற்பட்ட ஒரு நாடித் தளர்ந்த பணக்காரக் கிழவனை மணந்தால், அது, அவரின் பணம் சார்ந்தே என்பது வெட்ட வெளிச்சம். ஒரு வேளை, ரொம்பவும் காத்திருக்காமல், விரைவிலேயே, கோடீஸ்வர விதவையாக அவள் பிரியப்பட்டிருக்கலாம்...! அதற்கு லியோனைட் வழிவிட வில்லை....!''

''அப்படியென்றால்...?''

''அவருக்கிருந்த ஒரே நோய் சர்க்கரை வியாதி தான். சரியான மருத்துவத்தால் அதுவும் கட்டுக்குள் தானிருந்தது. லியோனைடுக்கு வயது தான் கூடவே தவிர, வெகு சுறுசுறுப்பு. நூற்றுக்கும் மேல் வாழ்வார் என்பதே பழகுவோரின் கணிப்பு. ஒரு வேளை, இன்னும் காத்திருக்க வேண்டுமா என அவள் நினைத்திருக்கலாம்....!!''

''அதே தான்...! அப்படியெனில்...??'' - என்று நிறுத்தினேன்.

''அப்படியெனில்'' என்ற எடித், பளிச்சென்று சொன்னாள்: ''உங்கள் கணிப்பு சரியாகிறது. ஆனால் இக்குடும்பம் அவள் ஒருத்தியால் மட்டும் ஆக்கப்படவில்லையே...! எத்தனை பேர் உள்ளனர்....!''

''உங்களுக்கு வேறு கோணத்தில் ஏதேனும் ஐயங்கள்...?''

''எந்தக் கோணத்தில் இருக்க வேண்டும் என ஊகிக்கிறாய்?''

நான் பிரமித்தேன். எடித்' தின் சம்பாஷணை, துல்லியமான நேரடிப் பேச்சாய் இருந்தாலும், நரைத்த தலைக்குள் பல சிந்தனைகள் அரங்கேறிய வண்ணமுள்ளதாய் தோன்றியது. இல்லையேல், என்னையே தடுமாற வைக்கும் எதிர்க் கேள்விகள், ஒரு தற்காப்புக் கவசமாய் தோன்றத் தேவையில்லை. போலீஸின் எல்லா அணுகு முறைகளையும் - ப்ரெண்டா மீதான சந்தேகம், லியோனைட் கொலை செய்யப்பட்டுள்ளதன் ஊர்ஜிதம் - விமர்சிப்பதில் காட்டும் வேகம், இப்பொழுது என்னை மடக்கும் விதம், என எல்லாவற்றிலும், தன்னை உசத்திக் காட்டும் (வி)வேகம் இருக்கின்றது. எடித்'தை ஓரப் பார்வை பார்த்தேன். அடுத்து என்ன பேசலாம் எனும் பரபரப்பில் அவர் அகம் இருப்பதை முகம் காட்டிற்று. சட்டென்று.... எனக்கு.... எடித் மீதே....

இந்த எண்ணம் ஒன்றும் தவறாய் படவில்லை. படர்ந்த தளிர்க் கொடியின் குழல்களை மூர்க்கத்தனமாய் எடித் மிதித்து அழித்திலிருந்தே அவளின் ஸ்தாபிக்கும் குணம் பிரசித்தமாயிற்றே...! சிந்தனையற்ற உடனடி செயல்பாடு! வாய்ப்புக் கிடைத்தால் போதும்.... சிந்தனை அகற்றி சிதைத்து விடுவாள்...! குடும்ப அங்கத்தினரைப் பட்டியலிட்டு, எப்போது வேண்டுமானாலும் வெறி கிளம்பலாம் என சோஃபியா விளக்கியது ஏனோ இப்போது நினைவில் நிழலாடிற்று....!

இருந்தாலும், ஏற்கெனவே மிகவும் வெறுத்து வந்த லியோனைடு டனான வாழ்க்கையில், சிந்தனை அற்றுப் போகும் அளவுக்கான 'வாய்ப்பு' எடித்துக்கு ஏற்பட்டிருக்குமா...?

இதற்கு விடை காண, எடித்தை, நான் இன்னும் ஆழ அறிய வேண்டும்....!

# 6

வீட்டுக்குள் நுழைந்தோம். வெளியிலிருந்து பார்த்த வீட்டின் பழைய தோற்றத்திற்கும், இப்போது உள்ளே காணும் வரவேற்பறைக்கும் ஆச்சரியமிக்கவாறு நிறைய வித்தியாசங்கள் இருந்தன. ஆடம்பரமான விசால வரவேற்பறை. விலையுயர் ஓக் மரங்களாலான சன்னல், கதவு மற்றும் அலமாரி. விரிந்திருந்த அறையின் எதிர் சுவரில், அப்பக்கம் செல்ல பெரிய வெள்ளைக் கதவொன்று இருந்தது. ''என் கொழுந்த னாரின் பகுதி இது. கீழ்த்தளம் பிலிப் மற்றும் அவன் மனைவி மகதா'வுக்கு'', என்றார் எடித்.

இடப்புறமிருந்த கதவின் வழியே தென்பட்ட மற்றுமொரு பெரிய அறைக்குள் நுழைந்தோம். கண்ணுக்கு இதமூட்டிய வான் நீல நிற சுவர். சுவர்-கதவு-சன்னல் சட்டங்கள் என எங்கிலும் நடிகைகள், நாட்டியத் தாரகைகள், படக்காட்சிகள் மற்றும் நாடகக் காட்சிகளின் புகைப்படங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. விருதுகளைக் கூறும் சான்றிதழ்கள், கேடயங்கள், பூங்கொத்துகள், விதவிதமான பாராட்டு நினைவுப் பரிசுகள் எல்லாம், அறை முழுதும் நிரம்பிக் கிடந்த சிறுசும் பெரிசுமான அலமாரிகளில், அழகாய் வரிசைப்படுத்தப்பட்டிருந்தன. அறையின் அனைத்தையும் மனதில் பதிய வைத்தேன்.

''பிலிப்பைப் பார்க்க வேண்டும் என எண்ணம் உள்ளது, இல்லையா?'' என்றார் எடித். நான் பிலிப்பைப் பார்க்கவா எண்ணி யிருந்தேன்? இல்லையென்றே நினைக்கிறேன்...! நான் முக்கியமாய் எண்ணி வந்ததெல்லாம் சோஃபியாவை தரிசிக்கத்தான்...! அது கிடைத்தாயிற்று...! துப்புத் துலக்குவதில், அப்பாவின் எண்ணத்திற்கு முழு ஒத்துழைப்பு நல்குவதாய் அவளும் கூறி விட்டாள். இப்பொழுது என்னை இந்த எடித் பாட்டியிடம் சிக்க வைத்து மீன் வாங்கப் போய் விட்டாள்...! பிலிப்பைப் பார்க்கிறாயா என்கிறார் எடித். இன்றே பார்க்க வேண்டுமா? எந்த வகையில் அவரைப் போய் பார்ப்பது?

சோஃபியாவை ஆழக் காதலிக்கும் கட்டழகு இளைஞனாய் போய் முன் நின்று, தங்கள் பெண்ணைத் தருகிறீர்களா என்ற அளவிலா?! இல்லை, வீட்டிற்கு வந்தேன், அப்படியே உங்களையும் பார்த்துப் போகச் சொன்னார்கள் எனும் அளவிலா?! இல்லை, போலீஸாருடன் வந்த நபராகவா?!

இவ்விதமாய் நான் பூவா தலையா போட்டுக் கொண்டிருக்க, சிந்தித்தெல்லாம் பதில் தர அவகாசம் கொடாமல், ''ம்...! வீட்டின் நூலகத்திற்கு செல்வோம்...! வா'' என்றார் எடித். சொல்லப் போனால், எடித், பிலிப்பைப் பார்க்கிறாயா எனக் கேட்டது கேள்வி வகையே யல்ல.... அது ஒரு வகை உத்தரவு. கேள்விக்குள்ளேயே உத்தரவாய் பதிலைப் பொதித்து வைக்கும் கைங்கர்யம்....! ஒரு வீட்டிற்குள் வந்த பிறகு இன்னாரை மட்டும் பார்க்காமல் கிளம்புகிறேன் என சொல்லத்தான் முடியுமா...?! எந்த விஷயத்திலும் பதிலை எதிர்நோக்காது, உத்தரவிலேயே வாழும் பிறவி - எடித், என அலசி வைத்தேன்...!

இந்த அறையின் இடப்புறக் கதவு வழியே வெளியே வந்தோம். அழகிய தாழ்வாரம். அதன் நடைபாதை நெடுகிலும் இருபுறமும் அழகுப் பூந்தொட்டிகள். அப்பூக்களிலிருந்து கிளம்பி மயக்கும் ஏகாந்த வாசம்.

இது மட்டுமில்லாமல், நிறைய கொடி வகைகளைப் பயிரிட்டு, ஒரு சிறு காட்டின் சூழலும் செய்யப்பட்டிருந்தது. ''பிலிப் ஒரு கலா ரசனை மிக்கவன்'' - நூலகத்துக்கு இட்டுச் செல்லும் இத்தாழ் வாரத்தின் எழிலை நான் வியப்பதைப் பார்த்துக் குறிப்பிட்டார் எடித்.

நூலகமும் தாழ்வார நேர்த்தியுடன் காக்கப்பட்டிருந்தது. புத்தக அலமாரி, நெடுநெடுவென மேற்கூரை வரை அமைக்கப்பட்டி ருந்தது. டீ-பாயில், மேஜைகளில், சில நாற்காலிகளில் கூட, புத்தகங்கள் இருந்தன. ஆனால் சிதறி அல்ல. ஓர் ஒழுங்குடன்...! இங்கு தான் பிலிப் முழு நாளும் இருப்பதாயும் அவர் வாழ்வே புத்தகங்கள் தான் என்றும் அழுத்திச் சொன்னார் எடித். முழுக்க அடைக்கப்பட்டிருக்கும் அறை. ஏசி தயவால் குளிரூட்டப் பட்டிருந்தது. புத்தகத் தாள்களின் வாடை தவிர, நான் தேடிய அந்த வாடையில்லை. சிகரெட் வாடை...! ஆக பிலிப் புகைப் பிடிப்பவரல்லர்...!

நாங்கள் நுழைந்ததும் ஏற்பட்ட ஓசையால், நூலக அறையின் எதிர் மூலையில் போடப்பட்டிருந்த படிக்கும் பகுதியிலிருந்து எழுந்தார்

பிலிப். ஆறரை அடி நிச்சயம், அத்தனை உயரம். நல்ல சிகப்பு. பரந்த தோள்கள். களைமிகு முகம். இத்தனைக்கும் மேலே அந்த ஆணழகு...! வயது ஐம்பதிருக்கும். இந்த ஐம்பதிலும் தொய்யாத உடற்கட்டும், திண்ணென்ற உடற்பயிற்சி தேகமும், சுண்டியிழுக்கும் கூர் மூக்கும், கொஞ்சங்கூட நரைக்காத நெற்றி தொடும் கரும் முடிக் கற்றைகளும்... நான் மிகப் பிரபல படத்தின் அதிரூப கதாநாயகனைப் பார்ப்பது போல், பிலிப்பைப் பார்த்தபடி நின்றேன். அசிங்கம் அவலட்சணம் என்று லியோனைடைப் பற்றிப் பத்தி பத்தியாக பேசிய ஜனங்கள் எப்படி இப்படிப்பட்ட சுந்தரனைப் பற்றி, அதுவும் அழகற்ற லியோனைடுக்குப் பிறந்துள்ள அழகனைப் பற்றி, ஒரு வார்த்தை கூட பேசாமல் விட்டுள்ளார்கள் என ஆச்சரியம் பொங்கியது. ''பிலிப்...! இவர் சார்ல்ஸ்..!'' என அறிமுகப்படுத்தி வைத்தார் எடித்.

''ஓ... எப்படி இருக்கிறீர்கள்..?'' - இது பிலிப். ஒரு வேளை என்னைப் பற்றி ஏற்கெனவே கேள்விப்பட்டிருப்பாரோ....! விளங்கவில்லை. கை குலுக்கலின் போது அவரின் கை அதீதமாய் சில்லிட்டிருந்தது. எனக்குத்தான் - சோஃபியாவின் தந்தை, காணக் கிடைக்காத ஆணழகு - போன்ற சிறு சிறு அதிர்வுகளால் பரபரப்பு இருந்ததேயன்றி, பிலிப் முகம் நிர்சலனமாகவே இருந்தது. கைகுலுக்கல் முடிந்ததும் 'அடுத்து....?' எனும் தொனியில் பொறுமையாக ஈடுபாடு அதிகமின்றி நின்றுக் கொண்டிருந்தார் அவர்.

''ஏதோ போலீஸ் அதிகாரிகள் வருவதாய் சொன்னாயே பிலிப்....'' என, எடித் தான் எங்களின் அறிமுக இறுக்கத்தைத் தளர்த்தார். ''வந்தாயிற்றா...?''

''ம்... முதன்மை காவல் அதிகாரி... ஏதோ பெயர் என்று...'' என யோசித்தபடி, டீ பாயில் கிடந்த பார்வையாளர் அட்டை ஒன்றை எடுத்துப் பார்த்து, ''ஆங்... டேவரெனர்...! என்னுடன் பேச வருவதாய் ஏற்பாடு'' என்றவர், ''உட்காருங்கள் சார்ல்ஸ்'' என்று ஒரு நாற்காலியை சுட்டிக் காட்டி, அதன் எதிர் சோபாவில் அவரமர்ந்தார்.

''அவர் வந்தாயிற்றா, பிலிப்...?'' - இது எடித்.

''அப்படியே நினைக்கிறேன்....''

''இப்போது எங்குள்ளார்...?''

''தெரியவில்லை... ஒரு வேளை மாடியிலிருக்கலாம்...''

''யார்.. ப்ரெண்டாவுடனா...!!''

''அதெல்லாம் தெரியாது தாயே...!''

இருவரின் உரையாடலின் இடையே, பிலிப்பை நோக்கிய படியே இருந்தேன். மிக மிக அமைதியாக, ஒவ்வொரு கேள்விக்கும் ஸ்பஷ்டமாய் பதில் தந்தபடி, எவ்வித சலனமுமில்லாமலிருந்தார் பிலிப். இந்த குணாதிசயத்தைப் பார்க்கும்போது, பிலிப்பின் அருகாமையில், குலை நடுங்க வைக்கும் ஒரு கொலை நிகழ்ந்திருக்க வாய்ப்பில்லை எனப்பட்டது எனக்கு.

''மகதா எழுந்தாயிற்றா...?''

''எனக்குத் தெரியவில்லை. பதினொரு மணிக்கு முன் எழுந்திருக்கும் வாடிக்கை அவளுக்குக் கிடையாது..!''. இதைக் கூட ஒரு குற்றமாய் கூறாமல், தினசரி நடவடிக்கையாய் கூறியது, பிலிப்பின் குழம்பாத மனோநிலையைக் காட்டிற்று.

''ஏய்...! அதோ...! வருகிறதே குரல்...! மகதா தான் போல...!'' என்று எடுத்துக் குறிப்பிட்ட குரல், நூலக நுழைவாயில் பக்கத்திலிருந்து வந்துக் கொண்டிருந்தது. மூடப்பட்டிருந்த கதவையும் தாண்டி எங்களை நெருங்கிய – படபட படபட' வென்று, இடைவெளியில்லாது பேசிய கனத்த குரல் அது. சில நொடிகளில், நூலகக் கதவு, உடைத்தெறியப்பட்டாற் போல் பளீர் என திறக்கப்பட, மகதா மட்டும் நுழைந்தாள். எனக்கு வியப்புத் தாளவில்லை. வந்திருப்பது ஒருத்தி. எப்படி இவளால் ஒரு பெண் கூட்டமே வந்ததைப் போன்ற அபிப்ராயத்தை உண்டு பண்ண முடிந்ததோ... ?!

வலக்கையில், நீண்ட குழலொன்றில் சிகரெட்டை ஏந்தியிருந்தாள். இடக்கை, அவளணிந்திருந்த நீண்டு தரை தொட்ட பாவடையைத் தூக்கி நிறுத்திய வண்ணமிருந்தது. நடிகை. ஆனாலும் மேக்-அப் போடவில்லை. இருந்தாலும், நீல நிற விழிகள் கொண்ட பெரிய வில் போன்ற கண்கள், அவளுக்குக் கவர்ச்சியூட்டின. எண்ணெயில் கடுகு வெடிப்பது போல மூச்சு விடாமல் பேசிய வண்ணமிருந்தாள். அந்த அத்தனை பேச்சிலும், நல்ல ஏற்ற இறக்கம் கொண்ட கிறக்கக் கவர்ச்சியும், கொஞ்சலும், பாராட்டும்படியான நிறுத்தங்களும் இருந்தபடியால், குழப்பமே ஏற்படவில்லை. ''டார்லிங்...! பொறுக்க மாட்டேன். இனி பொறுக்கவே மாட்டேன்...! விசாரணை. மண்டையைப் போட்ட உன் தகப்பனார் குறித்த விசாரணை. இது குறித்த அறிவிப்பு இன்னும் வெள்ளைத் தாளில் வரவில்லை. ஆனால் வந்து விடும். சரி என்னையும் கூப்பிட்டு விசாரிக்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். விசாரணையின் போது என்ன உடை அணிவது? சோகத்தில் ரொம்பத் தாழ்ந்து போயிருப்பது

போல பிரதிபலிக்க வேண்டும்...! கறுப்பு? அது எனக்கு சரிப்படுமா? இல்லை, கருநீல நாவற் பழ நிற உடை? அது எனக்கு சரிப்படும் தானே? எனக்கு உடை விற்கும் அந்த வியாபாரியின் முகவரி அட்டையை இப்போதென்று எங்கோ வைத்துத் தொலைத்து விட்டேன்! பெரி அவன்யூ அருகில் என்று சொன்னதாய் ஞாபகம். இப்பொழுது பெரி அவின்யூவுக்கு நான் கடையைத் தேடி புறப்பட்டே னென்றால், பின்னோடேயே போலீஸூம் வந்து கழுத்தறுக்கும்! அர்த்தமற்ற கேள்விகள் கேட்கும்! கேட்கும் தானே?'' - இப்படியாய் அங்குமிங்கும் உலவியபடி பேசியவள், திடுமென்று பிலிப்புக்கு எதிரேயிருந்த நாற்காலியில் தூக்கி வைத்த கல் போல திண்ணென்று அமர்ந்தவள், ''பார்...! நான் என்ன குதி குதிக்கிறேன்...! நீ எத்தனை அமைதியாக இருக்கிறாய்..?! எப்படித் தான் உன்னால் எத்தருணத் திலும் இப்படி அமைதி சொரூபமாய் இருக்க முடிகிறதோ...! மரம்...மரம்...!'', என்று பொங்கினாள். அதே பரபரப்பில், கால்களைத் தூக்கி நாற்காலியில் குத்துக் காலிட்டு, இன்னும் தொடர்ந்தாள்: ''பிலிப்...! இனி இந்த வீட்டை விட்டு நாம் வெளியேறலாம் என உனக்குத் தோன்றவில்லையா? விடுதலை! முழு விடுதலை! லியோனைட் இருந்தவரை அவரை நாம் தனித்திருக்க விட்டதில்லை. இனி ? கிளம்பலாமே...! வற்றாத அன்பை நம் மீது பொழிந்தார்...! இல்லை என்று சொல்லவில்லை...! அதுவும் அந்த மாடிப் பகுதி புது சுந்தரி நம் உறவுக்குள் ஏற்படுத்த முயன்ற குழப்பங்களையும் மீறி. அவரைத் தனியே விட்டு விட்டு நாம் வெளியேறியிருந்தோம் என்று வைத்துக் கொள். கிழம், நமக்கு கிடைத்திருக்க வேண்டிய அத்தனை சொத்துக்கும் சேர்த்து ஒரு பெரிய நாமம் இட்டுத் தொலைத்திருக்கும். தெரியுமா உனக்கு?! அப்படி ஒரு பயங்கர ஆசாமி!'' - இவ்வாறாக அங்கும் இங்கும் நடந்தவற்றை சேர்த்தெடுத்து கதம்பமாக்கிக் கொண்டிருந்தவள், ஜிவ்வென்று தனது நடிப்புத் துறைக்குத் தாவினாள்: ''பிலிப், பிலிப்...! என் ராஜா...! எடித் தாம்ஸன் நாடகத்தை அரங்கேற்ற இந்தக் காலகட்டம் தான் எனக்கு மிக மிக உகந்ததாய் படுகின்றது. அப்பாவின் மரணம், செலவின்றி நமக்கு வேண்டிய விளம்பரம் தந்துள்ளது! ஆகையால், அந்நாடகத் திற்கு, என் பெயர், செலவற்ற விளம்பரம்....! நான் காமெடி பாத்திரம் தான் செய்ய வேண்டுமென அந்த யூனிட்டே சொல்கின்றது. நான் காட்டும் என் கண்களின் சுழிப்பும் என் மூக்கும் அத்தனை நகைச்சுவை நிரம்பி உள்ளதாம்...'' என்று வெட்கப்பட்டாள். ''ஆங்...!

அந்நாடகம் துப்பறியும் வகையைச் சார்ந்ததாம்...! அதில் நகைச்சுவை, கதையின் கனத்தைத் தொய்யாமல் கூட்டுமாம்....! அதனால், எனக்கும் நல்ல பெயர் கிடைக்குமாம்...!''

குனிந்து, கையிலிருந்த தீர்ந்த சிகரெட்டை, டீ-பாயிலிருந்த அணைக்கும் தட்டில் புதைத்து அழுத்தி விட்டாள். பிலிப், அணைந்த அச்சிகரெட் துண்டினை எடுத்து அங்கிருந்த குப்பைத் தொட்டியில் போட்டார். இப்போது, திடுமென மகதா நிமிர்ந்து, ''கொலை...'' என்றார். ''கொலை....'' - என பய உணர்வில் கதறி, பிலிப்பை எரிப்பது போல் பார்த்தாள். கண்கள் பெரிதாகி சிவந்தன. அவளுக்கு மூச்சிரைத்து, முகம் இறுகிற்று. டீ-பாயில் ஊன்றியிருந்த கைகளை, வெறியேறியவளாய், அதில் வேக வேகமாய் குத்தினாள். ''ஹா..ஹா...'' வென பலமாய் சிரித்தாள். இது ஒரு முப்பது நொடிகள் நிகழ்ந்தது. பிறகு, கலைந்து முகத்தில் விழுந்திருந்த முடிக்கற்றைகளை விரல்களால் கோதி சரி செய்து, நாற்காலியில் சாய்ந்து வசதியாய் அமர்ந்து நிலையானாள். துணி வைத்து துடைத்தாற் போன்று, இத்தனை நொடிகள் அவள் முகத்தில் நிலைகொண்டிருந்த குரோதம் ஓடிப்போயிற்று. சாதாரணமானாள். என்னை நோக்கித் திரும்பி, ''எப்படி என் நடிப்பு? இப்படி ஒரு காட்சியை நேற்று ஒரு நாடகத்தில் செய்ததற்கு என்ன பாராட்டு தெரியுமா...?'' - என சிரித்தாள்.

எனக்கு பெருமூச்சு வந்தது. இவள் விட்டால் நாள் முழுதும் ஓயாமல் பேசுவாளென்றும், நேரம் தான் விரயமாகும் என்றும் எனக்குப்பட்டது. இருந்தாலும் மகதா கோவையாய் உரையாடலை வளர்த்த வண்ணமிருந்தாள்.

''சார்...! எடித் தாம்ஸனின் துப்பறியும் கதையைக் கூட, இது போல நடித்துக் கொடுத்தால் போதுமல்லவா...!''

இது தான் நடிகையர் திலகத்தின் பங்களிப்பு... ரொம்பச் சரி என்றேன். வேறென்ன சொல்ல? சோஃபியா தாயாரின் பேச்சைத் திசை திருப்ப விரும்பினேன். அதற்குள், ''அல்லது ப்ரெண்டாவை நினைத்துக் கொண்டால் போதும்...! இது போன்ற குரூர பாத்திரங்களைப் பட்டைத் தீட்டி விடலாம்...! இன்ஸ்பெக்டர் வரட்டும்...! இது பற்றியும் பேசலாம்...!''

இப்போது பிலிப் வாய் திறந்தார்: ''அவரை நீ பார்க்க வேண்டிய அவசியமேயில்லை மகதா...'' இவ்வாறு சொல்லி விட்டு, சிறு இடைவெளி தந்தார். மகதாவின் பேச்சில் அவருக்கு உடன்பாடில்லை என்பதை இந்த சிறு இடைவெளி உணர்த்துவதாய் பட்டது.

''அவருக்குத் தேவைப்படும் அத்தனை தகவல்களையும் நானே தந்து விடுவேன்....''

''ஏன் நான் அவரைப் பார்க்கக்கூடாது?'' - என அவள் குரல், நிர்தாட்சண்யமாய் உயர்ந்தது. ஆமாம்....!அவள் ஏன் டேவரெளரைப் பார்ப்பதிலிருந்து ஒதுக்கப்பட வேண்டும்...! ''ம்ம்...! நான் பார்த்தே ஆக வேண்டும்?...! டார்லிங்...! நீ உன் வேலையுண்டு நீயுண்டு என வாழ்பவன்... உனக்கு தகவல்களின் மதிப்புத் தெரியாது. அவர் கேட்டால், ஆமாம் என்பாய், இல்லையேல் இல்லை என்பாய். இவற்றை வைத்துக் கொண்டு அவர்களுக்கு என்ன லாபம்? இக்கொலை வழக்கு வளரும்போது வீட்டு அங்கத்தினரின் மனம் எப்படியெல்லாம் அலைந்தது என அறிய விரும்புவார், இன்ஸ்பெக்டர்! அது, என் போன்ற கலைஞனால் தான் வர்ணித்து விளக்க முடியும்.''

''ஆனாலும், அம்மா....'' என சொல்லியபடி உள்ளே நுழைந்தாள் சோஃபியா. ''உனக்குள்ளான கலைஞனின் கற்பனை பொய்யான - தவறான கோணத்தை போலீஸுக்குத் தந்து விடக்கூடாது... ஓ கே?''

''சோஃபியா... கண்ணே...'' என்று அவளை நோக்கி ஓடினாள் மகதா.

நெருங்கிய மகதாவின் கைகளைப் பற்றிக் கொண்டு சோஃபியா சொன்னாள்: ''உனக்குத் தெரிந்ததாய் பீற்றிக் கொண்டு உளறிக் கொட்ட நீ தயாரென்பது எனக்குத் தெரியுமம்மா...! ஆனால், யாரோ ஒருவர் மீது மட்டும் சந்தேகம் கொண்டுள்ள உன் கணிப்புத் தவறு....!''

''போடீ... உனக்குத் தெரியாது.''

''சரி. தெரியாமலே இருக்கட்டும். அதற்காக முதல் விசாரணை யின் போதே அத்தனையையும் கொட்ட வேண்டுமா என்ன..? குடும்பத்தை மனதில் கொண்டு, அதனைக் காக்க வேண்டிய கடமையை நெஞ்சில் வைத்து, மிகத் தாழ்ந்து, தாழ்மையோடு, கேட்டதற்கு மட்டுமே பதில் தர வேண்டிய தருணமிது...! உன் நடிப்பு மேடையல்ல விசாரணை....!''

உடனே மகதா கொண்ட கோபம் பறந்தோடிற்று. குழந்தையாய் நடந்துக் கொண்டாள் மகதா. ''சோஃபிம்மா... அப்படியென்றால், ப்ரெண்டா மீது, உனக்கு....?!''

''ஒவ்வொருவரைப் பற்றியும் நாம் நினைப்பது, அந்த ஒருவருடனான நம் அனுபவத்தைப் பொறுத்தது. அதை விடு. உனக்கு

பிடிக்குமே என்று சில சாக்லெட், சுடச்சுடச் செய்துள்ளேன். வரவேற்பறையில் உள்ளது. போய் சாப்பிடு...''

தனக்கு ரொம்ப பசிப்பதாயும், சாக்லெட் தான் வேண்டுமென நினைத்திருந்ததாயும், அது எப்படி சோஃபியாவுக்குத் தெரிந்தது என்றும் வியந்து, ''உனக்குத் தெரியாது சோஃபிம்மா...'' என தழுதழுக்க, அவள் கன்னங்களை வருடிப் பேசினாள்: ''உன்னைப் போல ஒரு பெண் இருப்பதைப் போன்ற வரமுண்டா....'' - ஓடிப் போனாள் மகதா.

ஏழெட்டு வயது குழந்தை ஒன்று ஓடிப் போனதாய் தான் எனக்குத் தோன்றியது.

அவள் ஓடிய திசையைப் பார்த்து பிரமித்தபடி, ''மகதாவுக்குக் கூட வெளிச்சமில்லை...! அந்தக் கடவுளுக்கே வெளிச்சம்...! போலீஸிடம் என்னவெல்லாம் சொல்லப் போகிறாளோ...!'' என்று பெருமூச்சு விட்டார், செல்வி எடித் டி ஹெவிலேண்ட்.

''ஒன்றும் கவலைப்பட வேண்டாம்...'' என்றாள் சோஃபியா. ''எல்லாம் சரியாக நடக்கும்''

''அவள் என்ன வேண்டுமென்றாலும் பேசுவாளடி. முதிர்ச்சி அற்ற பெண்.''

''ஒரு பொருட்டாகக் கொள்ள வேண்டாம். விடுங்கள். இயக்குனர் சொல்வதை செய்யும் பக்கா நடிகை அவள். இங்கு நானே இயக்குனர். பிறகேன் குழப்பம்?''

மகதாவைத் தொடர்ந்து வெளியேறிய சோஃபியா, ''ஓ... வாருங்கள்...'' என்று, சுழன்று திரும்பி, ''அப்பா... இது இன்ஸ்பெக்டர். உங்களைப் பார்க்கவே வந்துள்ளார்...!'' என்று வரவேற்றாள்.

நான் சட்டென பிலிப்பின் முகத்தில் பார்வையைப் புதைத்தேன். கொஞ்சமாய்... மிக மிகக் கொஞ்சமாய், பதற்றம் அவர் முகத்தில் படர்ந்தது. ஆனால் பட்டும் படாத அவர் குணாதிசயமே மேலோங்கி நின்றது. ''நானிருக்கலாமா...?'' என்றேன். ''ஓ... நிச்சயமாய்...'' என்றார்.

முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனர், கனிவான முகம் கொண்ட - நம்பத்தகுந்த நபராய் உள் நுழைந்து, ''முழு ஒத்துழைப்புத் தேவை...'' என, விசாரணையைத் தவிர வேறு வேண்டாம் எனும் தொனியில் நெருங்கியது, எந்த இறுக்கத்தையும் தராது நிலைமையைக் காப்பாற்றிற்று. எங்களருகிலிருந்த நாற்காலியை

இழுத்து அமர்ந்ததிலேயே, தொடங்குகிறேன் என இன்ஸ்பெக்டர் உணர்த்தியது, எனக்குப் பெருமை கலந்த ஆச்சர்யமாயிருந்தது.

''யெஸ்... முதன்மை இன்ஸ்பெக்டர்...'' என பிலிப் எடுத்துத் தர, எடித் டி ஹெவிலேண்ட், ''நான் இருக்க வேண்டுமா?'' என அழகாய் இடை மறித்தார். ''இப்போதைக்குத் தேவையில்லை எடித். பிறகு, தேவைப்பட்டால், ஓரிரு வார்த்தைகள் பேச, உங்களை நான் தொந்தரவு செய்யலாம்...''

''தொந்தரவா...? போலீஸுக்கு உதவுவது தன் கடமை...! மாடியிலிருப்பேன். வரட்டுமா?'' - கதவை மூடி விட்டு வெளியே சென்று விட்டார்.

''நீங்கள் இலக்கியத்திலேயே வாழும் மனிதரென்றறிவேன். தங்கள் பொன்னான நேரத்தை அதிகம் கேட்க மாட்டேன். ஆனால், எங்கள் சந்தேகம் - அதாவது தங்கள் தந்தையார் இயற்கை மரணம் அடையவில்லை.... கொலையாகியுள்ளார் எனும் சந்தேகம் - சந்தேகத்துக்கிடமின்றி ஊர்ஜிதமாகியுள்ளது. எஸரின் எனும் மருந்து அதிகம் தரப்பட்டு அவர் கொலை செய்யப்பட்டுள்ளார்.''

பிலிப் ஓஹோ என்பது போல் தலையசைத்தார். எவ்வித உணர்வினையும் வெளிக்காட்டவில்லை.

''இந்தச் செய்தி உங்களுக்குள் ஏதேனும் நிலைப்பாட்டைத் தருகின்றதா...?''

''எந்த நிலைப்பாட்டைத் தர வேண்டும்...? எனக்கென்னவோ, அறியாமல், உணராமல், தானாகவே, நீங்கள் சொன்ன அம் மருந்தினை, அப்பா, அதிகம் எடுத்துக் கொண்டிருப்பாரோ என்றே தோன்றுகின்றது.''

''நிஜமாக..? அப்படி ஓர் எண்ணம் ஸ்திரமாய் உங்களுக்குள்ளதா, பிலிப் லியோனைட்ஸ்...?''

''ஆம். அதிகபட்ச எஸரினால் மரணம் சம்பவித்ததாய் கேள்விப் படும்போது, இது சாத்தியம் என்றே என் மனதுக்குத் தோன்றுகின்றது. அவர் தொண்ணூறு வயதை நெருங்கிய வெகு முதியவர். ஞாபக சக்தி அற்றுப் போகும் வயது. மிக மோசமான கண் பார்வை வேறு....!''

''ஆக, ஒரு பாட்டிலிலிருக்கும் எஸரின் நிறைந்த கண் மருந்தைப் போய், வேறோர் இன்சுலீன் பாட்டிலில் விட்டு நிரப்பிப் பார்க்கும் அளவுக்கு, அவர் மூளை சக்தியற்றிருக்குமா...?! இது நம்பகத் தன்மை வாய்ந்த கருத்தாய் உங்களுக்குப் படுகின்றதா...?''

பிலிப் பதிலேதும் உரைக்கவில்லை. அவர் முகம் மேலும் உணர்ச்சியற்று ஆயிற்று. படபடப்பில்லை. டேவரெனர் தொடர்ந்தார்: ''கண் மருந்து பாட்டிலை குப்பைக் கூடையிலிருந்து எடுத்துள்ளோம். அதில் துளி கை ரேகையும் இல்லை. ஆச்சரியம். பார்க்கப் போனால், அதில் கை ரேகை இருந்திருக்கத்தான் வேண்டும். உன் அப்பா, உன் தாய் அல்லது வேலைக்காரன்... யாராவது ஒருவருடைய கை ரேகை...!''

அப்போது, ''அந்த வேலைக்காரன் ஜான்சன் எப்படி...?'' - என்று கேட்டார் பிலிப்.

''லியோனைடின் அந்தரங்க வேலைக்காரன் ஜான்சனைக் குற்றவாளியாக முன் நிறுத்துகிறீர்களா....? அந்தரங்க வேலைக்காரன் எனும் அளவில் அதற்கு வாய்ப்பு வேண்டுமானால் அதிகம் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் குறிக்கோள் இல்லாமல் எப்படி கொலை நிகழும்? தன் முதலாளியைக் கொலை செய்ய, ஜான்சனுக்கு முகாந்திரம் இருந்திருப்பதாய் தோன்றவில்லை. வருடா வருடம் அவனுக்கு போனஸ் தருவது லியோனைடின் வழக்கமாயிருந்திருக் கிறது. போனஸாய் கொடுக்கப்பட்ட தொகை பெரிதென்று அறிந்தேன். அத்தொகையும் ஒவ்வொரு வருடமும் உயர்த்தப்பட் டுள்ளதேயன்றி குறைக்கப்படவுமில்லை, நிறுத்தப்படவுமில்லை. பரம ஏழையான ஜான்சன், வேறு போக்கிடமும் இல்லாதவன். வேறு யார் இப்படி அள்ளி அள்ளிக் கொடுக்க...? மேலும் தன்னிடமிருந்த பணத்தை தான தர்மம் செய்தே கழிக்கப் போவதாய், இவனிடம் பல முறை உன் தந்தையார் உணர்த்தியிருக்கிறார். ஆக, லியோனைட் பல நூறு ஆண்டுகள் வாழ வேண்டும் எனும் ப்ரார்த்தனையன்றி, அவரைக் கொல்லும் திட்டமா அவனிடமிருந்திருக்கும்....?'' - என்று கொஞ்சம் நிறுத்திய இன்ஸ்பெக்டர், ''அவனை விட்டு விடுவோம். அவனை நாங்கள் சந்தேகிக்கவில்லை'' என்றார் ஸ்திரமாய்.

''அப்படியா...!'' என்று பிடிப்பின்றி பதில் வந்தது பிலிப்பிட மிருந்து.

''சரி பிலிப்....! கொலை நடந்த அன்று, இந்த வீட்டில் நிகழ்ந்த அத்தனை நிகழ்வுகளைப் பற்றியும் எனக்கு தகவல் தரயியலுமா...?''

''நிச்சயமாக முதன்மை இன்ஸ்பெக்டர்...! இதோ, இந்த அறையில் தான் நானிருந்தேன். முழுநாளும். சாப்பிட இளைப்பாற என்று மட்டும் கொஞ்சம் நகர்ந்திருப்பேன்.''

''அன்று உங்கள் தந்தையைப் பார்த்தீர்களா...?''

''காலை சிற்றுண்டி சாப்பிட்டதும் காலை வணக்ககங்கள் தெரிவித்து வந்தேன். இது புதிதல்ல. தினசரி நடவடிக்கையே.''

''நீங்கள் அவருடன் அப்போது தனியாக இருந்தீர்களா...?''

''எப்போது...?''

''காலை வணக்கம் தெரிவித்து குசலம் விசாரித்த போது.''

''என் வளர்ப்புத் தாய், இரண்டாவது சித்தி, கூட இருந்தாள்''

''அப்போது உங்கள் தந்தை சாதாரணமாகத் தான் தென் பட்டாரா...? இல்லை...?''

ஒரு சின்னஞ்சிறு சிந்தனைக்குப்பின், ''இன்று கொலையாகப் போகிறோம், இறக்கப் போகிறோம், போன்ற ஆரூடம் புரிந்தவராய் தென்படவில்லை....!'' என்றார் பிலிப்.

''இப்பகுதியிலிருந்து, உங்கள் தந்தையின் அறை அடங்கிய பகுதி, முழுவதுமாய் தனித்துள்ளதா...?''

''ஆமாம். மாடியில், அவர் அறைப் பகுதிக்கு, அங்குள்ள வரவேற்பறை கதவு மூலம் தான் செல்ல முடியம். வேறு வழி கிடையாது.''

''அக்கதவு பூட்டப்பட்டிருக்குமா...?''

''இல்லை.''

''எப்போதுமே...?''

''எனக்குத் தெரிந்து, அது எப்போதும் பூட்ட ப்பட்டது கிடையாது...''

''ஓ கே...! அவர் அறைக்கும் வீட்டின் மற்ற பகுதிகளுக்கும் யார் வேண்டுமாயினும் போய் வரலாமா...?''

''பின்னே...? அவர் வசதிக்கும் தனிமைக்கும் அன்றி, வேறெந்த காரணத்துக்கும் அவருக்காக அறை ஒதுக்கப்படவில்லை.''

''அப்பா தவறிய விஷயம் எப்பொழுது உங்கள் காதுகளுக்கு முதலில் எட்டியது...?''

''என் சகோதரன் ரோஜர் ஓடி வந்தான். மேல் தளத்தின் மேற்கு பகுதியில் வசிக்கிறான். அப்பா ஸ்மரணையற்று தவிப்பதாய் அலறினான். அவர் வசித்து வந்த முதல் மாடிக்கு விரைந்தேன். அப்பாவுக்கு மூச்சு விடுவதில் கடும் சிரமம் இருந்தது. படு வேகமாய் மோசமானார்.''

''அப்போது நீங்கள் என்ன செய்தீர்கள்...?''

''எது செய்வதென அறியாமல் வீடே ஸ்தம்பித்து நின்றது. நான் மருத்துவருக்கு போன் செய்தேன். அவரில்லை. வந்ததும் உடனே இங்கு வரும்படி தகவலைப் பதிவு செய்து வைத்தேன்.''

''ம்...''

''மளமளவென அப்பா தன்னிலை இழந்தார். மருத்துவர் வருமுன் தவறி விட்டார்.''

லியோனைட் மரணித்த நிமிடங்களில் வீட்டின் நிலைமையையும், குடும்பத்தாரின் நிலைப்பாட்டையும் விவரித்து முடித்த பிலிப், உணர்ச்சிவயப்படவேயில்லை. நடந்த உண்மைகளை அளிக்கும் சாட்சியமாய் தானிருந்தார்.

''குடும்பத்தின் மற்ற நபர்கள் அப்போது எங்கிருந்தனர்....?'' – தொடர்ந்தார் டேவரெனர்.

''என் மனைவி லண்டலினிருந்தாள். விஷயம் தெரிந்ததும் வந்து விட்டாள். சோஃபியாவும் இல்லை என நினைக்கிறேன். ஆஸ்டஸூம், ஜோஸஃபைனும் இருந்தார்கள்.''

''உங்கள் தகப்பனாரின் மரணம், எந்த அளவுக்கு உங்களுடைய பண நிலைமையை பாதிக்கும் அல்லது அனுகூலம் செய்யும் என அறிய விரும்புகிறேன். தவறாக எண்ண வேண்டாம்....''

''எல்லா கோணங்களிலும் உண்மை திரட்டி கொலையாளியை அறிய எண்ணும் உங்கள் நிலையைப் பாராட்டுகின்றேன் டேவரெனர். பண விஷயத்தில், பல வருடங்களுக்கு முன்னமேயே எங்களைப் பரிபூரண சுதந்திரமடைய வைத்து விட்டார் அப்பா. என் அண்ணன் ரோஜரை, அப்பா நடத்தி வந்த மிகப் பெரிய உணவகத்தின் முதலாளியாகவும், அதன் முதல் பங்குதாரராகவும் ஆக்கினார். எனக்கு அதற்கு இணையான பணம் தந்தார். ஏறத்தாழ ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் பவுண்டுகள். இப் பெருந்தொகையால் வட்டி வரும்படியும், முதலை, நான் எப்படி வேண்டுமாயினும் பயன் படுத்தும்படியும் விட்டு வைத்தார். இறந்த பிள்ளைகளின் மீதும் தர்ம ஸ்தாபனங்களை ஸ்தாபித்து வைத்தார்.''

''இவ்வளவு செய்தும் அவருக்கென்று பல லட்சம் பணம் வைத்திருந்தாரில்லையா?''

''இல்லை. உங்கள் ஊகமோ அல்லது திரட்டிய தகவலோ தப்பு இன்ஸ்பெக்டர். தனக்கென தினம் வாழும் வசதிக்குத் தான் பண முதலீடு வைத்திருந்தார். அந்த முதலீட்டின் அதீத வட்டியால் மீண்டும் பெட்டி பெட்டியாய் பணம் சேரப் போகிறது என்று கூட

சொல்வார்....!'' - முதல் முறையாய் சிறு, ரொம்பச் சிறு சிரிப்பு, இறுகியேயிருந்த பிலிப்' பின் இதழ்களில் முளைத்து அடங்கியது.

''பிலிப்....! நீங்களும், உங்கள் சகோதரரும் இங்கு ஒண்டி வாழ என மீண்டும் வந்தீர்கள்.''

''சரி.''

''அது, பணமுடையால் எடுக்கப்பட்ட முடிவா...?''

''இல்லவே இல்லை. வெறும் வசதிக்காக. என் பல குடும்பக் காரணங்களுக்கு கூட்டுக் குடும்பம் எனக்கு வசதியெனப் பட்டது. அப்பாவின் இந்த வீட்டில் நாங்கள் வந்து குடித்தனம் செய்ய வேண்டும் என்பதும் அவரது தீராத ஆசை. எனக்கும் அப்பாவின் மீது தீராத அவாவும் மரியாதையும் உண்டு. இவை எல்லாமும் என்னை சுலபமாக உள்ளிக்கிழுத்து விட்டன.''

''உங்கள் சகோதரர்....?''

''அவன் வீட்டருகே நிகழ்ந்த போரில், அவன் வீடு சின்னா பின்னமாகி விட, இங்கு வந்து சேர்ந்தான். பிறகு வெளியேற சூழலே ஏற்படவில்லை.....''

''பிலிப்...! உயில் சம்பந்தமான உங்கள் தந்தையின் மனப் போக்கு, அவர் இஷ்டம், எப்படி இருந்தன? இது பற்றி உங்கள் கணிப்பு ஏதேனும்...?''

''விரிவாகச் சொல்ல முடியும். என் தந்தையார் ரகசியம் காப்பவர் அல்லர். அவரின் இக்குணத்தைப் புரிந்துக் கொள்வது, துப்பறியும் உங்களுக்கு அவசியம். குடும்பம், அதன் கட்டுக் கோப்பு இவற்றில் அலாதி ஈடுபாடு கொண்டவர். அவரைப் பொறுத்த வரை வீடு என்பது அனைத்து அங்கத்தினரும் கூடுமிடம். இதில் கூடுதலாய் வக்கீலும் உண்டு. அவர், அப்பாவின் வழிகாட்டுதலின் பேரில், உயிலை, அனைவரும் அறிய விளக்கினார். அந்த சாராம்சம் உங்களுக்கும் தெரிந்திருக்கும் என நம்புகிறேன். இதில், கிட்டத்தட்ட பத்து லட்சம் பவுண்டுக்கும் மேற்பட்ட அளவு பணம் என் சித்திக்கு உள்ளது. இது மட்டுமில்லை... திருமணத்தின்போதும், அவருக்கு, தாராளமாய் பணம் தரப்பட்டது. இது போக மீதமிருந்த பணம், எனக்கு, என் சகோதரனுக்கு மற்றும் பேரப் பிள்ளைகளுக்கு என பகிர்ந் தளிக்கப்பட்டது. மேலும் விலைமதிப்பற்ற எஸ்டேட் உள்ளது.''

''இவை தவிர பற்பல ஆண்டுகளாய் பணி புரியும் வேலைக் காரர்களுக்கென, ஏதாவது...? ஏனென்றால், அறுபது வருடங்கள் கடந்து பணியாற்றும் வேலைக்காரர்கள் இருப்பதாய் அறிந்தேன்...!''

''அதெல்லாம் எதுவும் கிடையாது. மறு வருடமும் பணியிலிருந்தால் மட்டும் அவர்களின் சம்பளம் நன்றாய் உயர்த்தித் தரப்பட்டது.... அவ்வளவே.''

''நீங்கள் - கேட்பதற்கு மன்னிக்க - நீங்கள், பணம் வேண்டும் எனும் இக்கட்டில் இல்லை, இல்லையா?''

''நான் செலுத்தும் வரி அதிகம் இன்ஸ்பெக்டர். ஆனாலும் முதலீடுகளால் வரும் வட்டியும் என் சம்பாத்தியமும் எனக்கும் என் குடும்பத்துக்கும் போதும் போதும் எனும் அளவு உள்ளன. தவிர, எங்களை எப்போதும் பணத்துக்காக அப்பா தவிக்க விட்டதேயில்லை. இத்தனை தந்திருந்தும், மிக மோசமான பண நெருக்கடி எனக்கு வந்திருந்தால், அதற்கு உதவ ஓடோடி வந்து நின்றிருக்கும் ஒரே ஆசாமி, அப்பாவாய்த் தானிருந்திருக்கும்'' என்ற பிலிப், அமைதி கலையாமல் ஆனால் சற்றே ஸ்திரமாகச் சொன்னார்: ''உங்களுக்கு நிச்சயப்படுத்துகிறேன்...! அப்பா இறந்தால் இத்தனை பணம் வருமே என்று கணக்கு வைத்துக் கொண்டு அவரின் மரணத்தை நான் எதிர் நோக்கிக் காத்திருக்கவில்லை இன்ஸ்பெக்டர்...!''

''ஓ நோ...! இந்தக் கோணத்தில் நான் கேட்டேன் என தோன்றினால், மன்னிக்க மன்னிக்க...! ஆனால், எல்லா ஐயங்களும் எங்களுக்கு விலக வேண்டுமே...! அடுத்து ஒரு சங்கோஜமான கேள்வியும் கேட்க வேண்டியுள்ளது...! அதற்கு நீங்கள் இதுபோல மனம் கோணுவீர்களோ எனவும் யோசிக்க வேண்டியுள்ளது...!''

''கட்டாயம் இல்லை. கேட்கலாம்.''

''நன்றி. உங்கள் தந்தைக்கும் அவரின் புது மனைவிக்குமான உறவு குறித்து. அவர்கள் சந்தோஷமாகத்தான் வாழ்ந்தார்களா...?''

''நானறிந்தவரை, நிச்சயமாக.''

''சண்டை சச்சரவுகள்? வாக்குவாதங்கள்? பிடிவாதப் பேச்சுகள்?''

''இருந்ததில்லை என்றே எண்ணுகிறேன்.''

''இருவருக்குமிடையே மாபெரும் வயது வித்தியாசமும், தலைமுறை வித்தியாசமும் இருந்திருக்கின்றதே பிலிப்....!''

''இருந்திருக்கின்றது...!''

''தங்கள் தந்தையின் இந்தத் திருமணத்தை - அதுவும் எழுபத்தைந்து வயது கடந்து நடந்த திருமணத்தை - அனுமதித்தீர்களா...?''

''என் அனுமதி கேட்கப்படவில்லை.''

''இது சரியான விடையல்ல பிலிப்....!''

''உங்கள் கேள்விக்கான விடை எனும் அளவில் மிகச் சரியானதே இன்ஸ்பெக்டர்! எனினும், மீண்டும் அதே கேள்வியே முன் வைப்பதால் சொல்லுகிறேன். இத்திருமணம் எனக்கு புத்திசாலித்தன மானதாய்ப் படவில்லை.''

''காரணங்களை எடுத்துக் கூறி நீங்கள் ஆட்சேபிக்கவே யில்லையா..?''

''விஷயமறியும்போது, இத்திருமணம், நடந்து முடிந்த ஓர் உண்மையாய் தான் என்னை அடைந்தது.''

''உண்மையாகவா, இல்லை, அதிர்ச்சியாகவா...?''

சரியான சமயத்தில் நிகழ்ந்த டேவரெனரின் கிடுக்கிப்பிடி ஒரு பிரமிப்பு என்றால், அதற்கு, பிலிப், மவுனத்தையே பதிலாக்கியது, ஒரு பிரமிப்பு....!

''ஆக, இந்தக் காதல் திருமணம் குறித்து - இப்படிச் சொல்வதில் தவறில்லை என எண்ணுகிறேன் பிலிப் - உங்களுக்கு மனக் கசப்பே இல்லை...?''

''ஆரம்பம் முதலே எங்களுக்கு எப்படி முழுச் சுதந்திரம் தந்திருந்தாரோ - பண நிலைமை உட்பட - அத்தகைய சுதந்திரத்தில் தான் இன்ஸ்பெக்டர், அப்பாவும் வாழ்ந்தார். அவர் தனிப்பட்ட வாழ்க்கை, ஒரு வட்டம். அவர் மட்டுமே தீர்மானித்து செயல்படுத்த வல்ல வட்டம். எந்தக் கண்டிப்பும் அதிகாரமும் கூச்சமுமின்றி, யாரும் அவ்வட்டத்தின் செயல்பாட்டில் தலையிடாமல் வைத்தது அவர் திறமை. போதுமா...?''

''இது திருப்தியான பதில் பிலிப். உங்களுக்கும் திருமதி லியோனைடுக்குமான உறவு அமைதியாயிருந்ததா...?''

''ஆமாம்.''

''நல்ல நட்பு ரீதியலான உறவாக இருந்ததா...?''

''இக்கோணத்தில் நான் சொல்லவில்லை. நான் அவரை சந்தித்தது, சந்திப்பது, மிக மிக அரிது. பேச்சு வார்த்தையே நிகழ்ந்ததில்லை எனலாம். எனில், உறவு அமைதியாகத் தானே இருந்திருக்க வேண்டும்...?!''

பிரமித்தேன். உறவு அமைதியாயிருந்ததா என்றதற்கு ஆம் என்று சொல்லி விட்டு, அதற்கான விளக்கம், இருவருக்கும் இடையே பேச்சு வார்த்தை கூட நிகழ்ந்ததில்லை என அமையும் போது, பிலிப்பின்

பதில்களில் ஆழ அர்த்தம் தேட வேண்டும் என விளங்கிற்று. நிச்சயம் டேவரெனர் எரிச்சலாகியிருக்க வேண்டும். ஆனால் துளியும் காட்டிக் கொள்ளவில்லை. அப்படியே கேள்விகளின் தளத்தினை மாற்றிக் கொண்டார். ''லாரென்ஸ் ப்ரௌன் பற்றிய தங்கள் அபிப்பிராயத்தைத் தரயியலுமா...?''

''இல்லை இல்லை. என்னால் இயலாது. என் அப்பாவால் வேலைக்கு அமர்த்தப்பட்டவர் அவர். அவ்வளவே.''

''ஆனால், உங்கள் அப்பாவுக்குப் பணியாற்ற அவர் அமர்த்தப்பட வில்லை, திரு பிலிப். உங்கள் குழந்தைகளுக்கு பயிற்றுவிக்க சேர்க்கப்பட்டவர்.''

முதல் முறையாக துணுக்குற்றார் பிலிப். அதனை என்னால் அவர் முகத்தில் வெகு துல்லியமாக படிக்க முடிந்தது. ஆனால் நொடியின் பின்ன அளவுக்குள் அத்துணுக்குறலிலிருந்து மீண்டு, ''நிஜம் தான். என் மகன் இளம்பிள்ளை வாதத்தால் தாக்கப்பட்டவன். அதிர்ஷ்டவசமாக தீவிரமாய் பாதிக்கப்படவில்லை. இருப்பினும் நடக்க சிரமப்படும் அவனைப் பள்ளிக்கு அனுப்பி இம்சிக்க அப்பா விரும்பவில்லை. என் மகள் ஜோஸஃபைனும் சின்னவளே. ஆகவே இரு குழந்தைகளுக்குமாக சேர்த்து ஒரு வாத்தியரை வீட்டோடு அமர்த்த அப்பாவும், ஆரம்பம் முதலே குழந்தைகளை அன்பாய் வளர்த்து வந்த எடித் சித்தியும் முடிவெடுத்து, விளம்பரப்படுத்தி, லாரென்ஸைத் தேர்ந்தெடுத்தனர். எனக்கும் சரியெனப் பட்டது. இன்னுமொரு விஷயம்....! போதுமான அளவாயும் திருப்திகரமாயும் உள்ள லாரென்ஸின் போதித்தலில் எனக்கு குறை ஒன்றும் தென்பட வில்லை'' என்று தீர்க்கமாய் பதிலளித்து, தான் துணுக்குறவில்லை என்பது போல நிலைநிறுத்தினார்.

''அவர் தங்கியுள்ள பகுதி, உங்கள் அப்பா அறைகளை ஒட்டித் தானே உள்ளது...? இங்கில்லையே...?''

''அங்கு அறைகள் ஜாஸ்தி. இங்கு கம்மி.''

இந்தப் பதிலில் நிச்சயம் டேவரெனர் திருப்தியடைந்திருக்க வாய்ப்பில்லை. ஆனால் காட்டிக் கொள்ளவில்லை. பிலிப்பின் பதில்கள் தொக்கித் தொக்கி நிற்பதை அடிக்கடி சுட்டிக் காட்ட விரும்பாமல் இருந்திருக்கலாம்.

''எப்போதாவது கவனித்துள்ளீர்களா...? லாரென்ஸுக்கும் உங்கள் சித்திக்கும்.... ஏதாவது நெருக்கம்....? தொடர்பு...?''

''அப்படி ஒன்றை கவனிக்கும் நிலை இது வரை எனக்கு நேர்ந்ததில்லை....''

''அல்லது, அவர்கள் இருவரையும் இணைத்து கிசுகிசு, வம்புப் பேச்சு...?''

''கிசுகிசு, வம்புப் பேச்சு இவற்றில் நான் என்னை எப்பொழுதும் புகுத்திக் கொள்வதில்லை, இன்ஸ்பெக்டர்....!''

''ஓ... வெகு மதிப்பு மிக்கவர்...! கெட்டதைப் கேட்பதில்லை... பார்ப்பதில்லை... பேசுவதில்லை...!!!''

''அதுபோல தாங்கள் முடுவெடுக்கும்பட்சத்தில், நன்றி இன்ஸ்பெக்டர்...!''

''ஓ கே...'' - எழுந்தார் டேவரெனர். ''மிக்க நன்றி, திரு பிலிப் லியோனைட்ஸ். தேவைப்பட்டால் மீண்டும் சந்திப்போம்...''

வேகமாக வெளியேறிய டேவரெனரை அவசரமாய் பின்தொடர்ந்து இணைந்துக் கொண்டேன். ''ஊஃப்...'' என்று, விழிகளை விரித்து, பயங்கரமான ஒன்றைப் பார்த்து விட்ட முக பாவத்தைத் தந்த இன்ஸ்பெக்டர், ''இவனைப் போல, எப்படிக் கழுவினாலும் நழுவும் மீனை, நான் என் பல்லாண்டுக் கால அனுபவத்தில் கண்டதேயில்லை'' என வியந்தார்.

# 7

"வா சார்ல்ஸ்..." என்று என் தோள்களில் கை வளையமிட்டு அணைத்தபடி, "இப்பொழுது பிலிப்பின் மனைவியைச் சந்தித்து சில வார்த்தைகள் பேசுவோம்..." என்றார், டேவரெனர்.

"அதில் ஏதேனும் தேறுமா...?" - கேட்டேன். "அவள் பெயர் சற்று பிரசித்தம். சிலபல நாடகங்களில் அவள் நடிப்பைப் பார்த்த மாதிரி நினைவு. ஆனால் குறிப்பிட்டு சொல்ல முடியவில்லை."

"சார்ல்ஸ்...! மகதா போன்ற வளவள குணாதிசங்களால் தான் வெற்றி நெருங்கும்...!" என்றார் டேவரெனர். "மகதாவைப் பற்றி இரு விஷயங்கள் கிரகித்துள்ளேன் சார்ல்ஸ்...! ஒன்று, தன் சம்பாத்தியத்தை, தன் இஷ்டத்துக்கு முழுவதும் உபயோகப் படுத்துவதாய் அவளுக்கு திருப்தி இல்லை. மகதாவுக்கு எல்லாம் தானாகவே செய்ய வேண்டும் - துணியெடுப்பது, சமைப்பது என....! இது அவளின் அடிப்படை குணம். மிக சுதந்திரமானவள். இதனாலேயே தான் பணியாற்றும் படக் குழுவினரோடு எப்போதும் அரசல் புரசல் கொண்டிருந்திருக்கின்றாள். இனி இரண்டாவது கிரகிப்பு - கலை உலகில் இவளுக்கு தொந்தரவு தருபவள் என்று பொதுப் பெயரும் உள்ளது. சக கலைஞர்களுடனும் நல்லுறவு பேணவில்லை", என இன்ஸ்பெக்டர் முடிக்கும்போது, பிலிப் வசிக்கும் பகுதியை அடைந்திருந்தோம்.

சோஃபியா அவர்கள் பகுதியிலிருந்து வெளிப்பட்டு, "அம்மா இங்கே இருக்கிறார் இன்ஸ்பெக்டர்..." என்று சொல்லி விட்டு, திரைச் சீலை விலக்கி, நாங்கள் உள்ளே முன்னேற வழி செய்து தந்தாள். அந்த விசாலமான அறையில், மகதா, மெத்தையினாலான ஒரு பெரிய நாற்காலியில், மிக அமைதியாக அமர்ந்திருந்தாள். தலையை அழுந்த வாரிக் கொண்டையிட்டிருந்தாள். கருப்பும் சாம்பலும் கலந்த நிறத்தில் ஒரு மேல் கோட்டும், முட்டி வரை நீண்ட பாவாடையும் அணிந்திருந் தாள். எங்களைக் கண்டதும், "வாருங்கள். நீங்கள் தான் இன்ஸ்பெக்டர்

டேவரெனரோ...? இதோ, இங்கு அமருங்கள். புகை பிடிப்பீர்களா...? ம்.. நடிப்பு ஓர் உயிரெடுக்கும் பிழைப்பு, தெரியுமா...?! அலுப்புத் தீர என் அருமருந்தே சிகரெட் தான்...!''

அவள் பழக்கம் போலவே படபட' வெனத் தான் பேசினாள். ஆனால், அதில், வேகமில்லை; உணர்வு இல்லை; சப்தமுமில்லை. மிக மெதுவாக, அவள் இயல்பு நழுவிப் பேசிக் கொண்டிருந்தாள். ''சொல்லுங்கள் இன்ஸ்பெக்டர்...! எந்த வகையில் என் உதவி தேவைப்படுகிறது...?''

''நன்றி திருமதி பிலிப்....! லியோனைடின் துயரம் நிகழும் போது நீங்கள் எங்கிருந்தீர்கள்...?''

''லண்டனிலிருந்து வந்து கொண்டிருந்ததாய் நினைவு. அன்று பிற்பகலில், நண்பர் ஒருவரோடு மதிய உணவு பகிர்ந்துக் கொண்டேன். ஓட்டல் இவ்'வியில். பிறகு வழியில் இன்னும் சில நண்பர்களும் சேர்ந்துக் கொள்ள, பெர்க்லி'யில், இளைப்பாற என்று, கொஞ்சம் குடித்தோம். பிறகு அனைவருக்கும் விடை கொடுத்து விட்டு வீடு நோக்கிப் புறப்பட்டேன். இங்கு வந்தால், வீடே குழப்பத்திலும் அமைதியிழந்தும் கிடந்தது. கேட்டேன். திடீரென மாமனார் தவறி விட்டதாக சொன்னார்கள்.'' - இதைச் சொல்லும் போது அவள் குரல் சற்று நடுங்கிற்று.

''உங்கள் மாமனாரை நிரம்ப பிடிக்குமா...?''

''ஓ... யெஸ்...'' - சட்டென - வேகமின்றி, உரக்க ஓசையுமின்றி பேசி வந்த அவள் முறையை மாற்றித் துள்ளி விட்டு, குதி குதித்துப் பேசலானாள். ''நான் அவரின் பக்தை தெரியுமா...?!'' குரல் உயர்ந்தது.

மகதாவின் அருகில் நின்றுக் கொண்டிருந்த சோஃபியா, டீ-பாயில் இருந்த சிலை ஒன்றினை சிறு ஓசை வரும்படி, மெல்ல நகர்த்தினாள். துள்ளி எழுந்திருந்த மகதா, அப்படியே அமர்ந்து, பழைய, அமைதியான, பணிவான பாவனைக்குள் புகுந்துக் கொண்டாள்!

''அவரை எனக்கு விமரிசையாய் பிடிக்கும்'' - அமைதியாய் சொன்னாள். ''நான் மட்டுமா...! எல்லோருமே விரும்பியவர் அவர். எங்கள் எல்லோருக்கும் மிக நல்லவர் அவர்...!'' - என மேலும் பேச எத்தனித்த மகதா, என்ன நினைத்தாரோ...! நிமிர்ந்து சோஃபியாவை ஒரே நொடி பார்த்து, பாவாடையை சரி செய்வது போல் அசைந்துக் கொடுத்து, பேசுவதை அப்படியே நிறுத்திக் கொண்டார்.

''உங்கள் மாமனாரின் புது மனைவியோடு உங்கள் பழக்கம், குழப்பமில்லாமல் இருந்ததா...?''

''நாங்கள் அதிகம் ப்ரெண்டாவைப் பார்ப்பதில்லை.''

''அது ஏன்...?''

''எங்களனைவருக்கும் அவளுக்கும் அதிகமாய் கருத் தொற்றுமைகள் காணப்படவில்லை. ப்ரெண்டாவுக்கு இதனால் பல சமயங்களில் வாழ்க்கை கடினமானதாகத் தானிருந்திருக்க வேண்டும்...!''

இப்போது மறுபடியும் சோஃபியா சிலையை நகர்த்தி ஓசையெழுப்பிக் காட்டினாள். மகதா, மேற்சொன்ன பதத்தைத் தொடர்வதை நிறுத்திக் கொண்டாள்.

''ஓ... அப்படி ஒரு சூழலா...?'' என்று மகதா சொன்ன கருத்தை ஆமோதித்து விட்டு, ''ப்ரெண்டா, லியோனைடுடன் மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்தினாளா...?'' என்றார் டேவரெனர்.

''அப்படித்தான் என நினைக்கின்றேன்.''

''இருவருக்குமிடையே சண்டைகளே இருந்ததில்லையா...?''

சின்னதாய் சிரித்து ஆம் என்று தலையசைத்தாள். ''எனக்கு விவரம் தெரிய வாய்ப்பில்லை இன்ஸ்பெக்டர். அவர்கள் வாழ்ந்த பகுதி, இந்த மாளிகை போன்ற வீட்டில், எங்கள் பகுதியிலிருந்து ரொம்பவும் தள்ளி இருக்கின்றது.''

''அப்பெண்ணும் லாரென்ஸும் நல்ல நெருக்கமான நண்பர்கள் என்கிறேன் நான். நீங்கள்...?''

மகதா முகம் இறுகிற்று. கடிந்துக் கொள்ளும் முகத்தோடு, ''இது போன்ற கேள்விகளை என்னிடம் கேட்கத் தான் வேண்டுமா...?'' என்றாள். இதுவரை நேராய் இன்ஸ்பெக்டரைப் பார்த்துக் கொண்டிருந்த தன் பார்வையை இப்போது மாற்றிக் கொண்டாள்.

''உங்களுக்கு லாரென்ஸைப் பிடிக்குமா...?''

இப்படி ஒரு கேள்வியை அங்கிருந்த நாங்கள் எதிர்பார்த்திருக்க வில்லை. போலீஸ் எனும் வரையில் நான் வேண்டுமானால் இக்கேள்வியை சகிக்கலாம். ஆனால் பெண்கள் இருவரும் கண நேரம் ஆடிப்போயினர். அதிலும் மகதா, ''என்னடியம்மா சோஃபி இது...! எனக்கேன் லாரென்ஸைப் பிடிக்க வேண்டும்....?!'' என அலறியே விட்டாள். சோஃபியா சுதாரித்துக் கொண்டு, ''அதாவது, லாரென்ஸின் குணாதிசயம் பிடிக்குமா என்கிறார் அம்மா...'' என விளக்கியதும், மகதா சற்று ஆசுவாசமானாள். பின் பதில் தந்தாள்: ''அவன் அமைதியானவன். அவன் இருக்கிறான் என்பது கூட தெரியாத அளவு

அமைதி. அவனை நான் அடிக்கடி பார்த்தது கிடையாது. பேசியதும் கிடையாது.''

''அவன் குழந்தைகளுக்கு பாடம் நடத்துவது திருப்திகரமாக உள்ளதா...?''

''எனக்குப் பாடம் பள்ளியெல்லாம் அதிகம் புரியாது. நடிப்பேன். அவ்வளவுதான். பிலிப் திருப்தியாக இருப்பதாக சொல்லியிருக் கிறார்''

மகதா, அந்தரங்கக் கேள்விகளுக்கு அதிர்வதைக் கண்ணுற்று வைத்த டேவரெனர், அவளை மீண்டும் அதிர வைத்து, கலங்கிய குட்டையில் மீன் பிடிக்க ஆயத்தமானார்: ''கொஞ்சம் அந்தரங்கமாய் கேட்பதற்கு பொறுக்கவும். உங்கள் கருத்தின்படி, ப்ரெண்டாவுக்கும், லாரென்ஸுக்கும் காதல் நாட்டமிருந்திருக்க வாய்ப்புள்ளதா....? இந்த ரீதியில் எப்போதாவது அவர்களிருவரையும் பார்த்ததுண்டா...?''

மகதா பட்டென எழுந்தார். ''அப்படி எப்பொழுதும் நான் கண்டதில்லை. இது இங்கிலாந்து குடும்பமாக இருந்தாலும், கட்டுக்கோப்பான எகிப்திலிருந்து வந்தபடியால், லியோனைட், எல்லோரையும் கட்டுப்பாடாய் தான் வைத்திருந்தார். அதை எல்லோரும் விரும்பினோம். வரவேற்றோம். கடைபிடித்தோம்.'' - மகதா, கோபத்தின் உச்சியில் இருந்தாள். ''இப்படியெல்லாம் கேள்விகள் கேட்டு என்னை தர்மசங்கடத்தில் ஆழ்த்த வேண்டாம் இன்ஸ்பெக்டர். நான் நடிகையாதலால், என்ன வேண்டுமாயினும் கேட்பதா...? ம்...?''

''அப்படி தப்பர்த்தம் செய்துக் கொள்ளக் கூடாது திருமதி பிலிப்...!''

''பின்...? ப்ரெண்டா என் மாமனாரின் மனைவி. நினைவிருக்கட்டும்...!''

மகதாவின் வெகுளித்தனத்தை அப்போது பிரமித்த நான், அவளின் துணிவை இப்போது பாராட்டியே விட்டேன்! டேவரெனரும் எழுந்தார். ''நன்றி மகதா....! சந்திப்போம்...!'' என்று வெளியேறினார் டேவரெனர்.

அவர் சென்றதும், தன் தாயை அப்படியே அள்ளி அணைத்துக் கொண்டு, ''கொன்று விட்டாய் அம்மா...! அற்புத நடிப்பு'' என்று ஒரு முறை மகதாவை தட்டா மாலை சுற்றி விட்டாள் சோஃபியா. உடனே அருகிருந்த நிலைக் கண்ணாடியில், இடவலமாய் அசைந்து

அசைந்து தன்னைப் பார்த்துக் கொண்ட மகதா, ''ஆஹாஹா....! எத்தனை நுணுக்கமான நடிகையடி நீ...! இங்கு நடந்த விசாரணைக் காட்சியை, உன்னை விட வேறு யார் இத்தனை அற்புதமாய் செய்திருக்க இயலும்...!'' என்று தன்னைத் தானே பாராட்டிக் கொண்டிருந்தாள்.

''என்ன சார்ல்ஸ்...!'' என்று என்னை நெருங்கிய சோஃபியா, ''இன்ஸ்பெக்டர் பின்னால் ஓடவில்லையா..?'' என புன்னகைத்தாள். இது கிண்டலா... குறும்பா.. நிஜமா..? விளங்கவில்லை. ஆனால் எனக்கே கூட குழப்பம் மிகுந்தது. இங்கு என் பணி என்ன...?! தெரியவில்லை. ஏனோ நானிருப்பது சோஃபியாவின் தாயாருக்கு பிடித்தமில்லாமலேயே இருக்கிறது. எனக்கு இதில் சற்றே மனத் தாங்கல் தான். நான் ஒரு ராஜதந்திரியாக... அல்லது சோஃபியாவின் காதலானாக.... அல்லது முதன்மை இன்ஸ்பெக்டரின் துணையாள ராக... எப்படி வேண்டுமானாலும் இங்கு நான் உலாவினாலும், மகதாவைப் பொறுத்தமட்டில், என் இருப்பு, ஒரு பார்வையாளனாகத் தான் உள்ளது...! அப்படித் தான் அவர் என்னை வைத்துக் கொண்டுள் ளார்...! இதோ, இப்போது கூட, தானணிந்திருந்த காலணியைப் பார்த்து, ''இந்த ஷூ, இக்காட்சிக்கு ஏற்றதல்ல சோஃபியா....! மாற்றியிருக்க வேண்டும்...!'' என்று, நடைபெற்று முடிந்த விசாரணைக் காட்சியைப் பிரித்தாராய்ந்துக் கொண்டிருக்கும் போது கூட, என்னை ஒரு பொருட்டாய் கவனியாது, ஏதோ சோஃபி மட்டுமே இங்கிருப்பதாய் பாவித்துப் பேசினார்.

எதிர்காலத்தில், என் வருங்கால மாமியாரின் அதி சுதந்திர குணம், என்னை ஒதுக்கி வைத்துப் பார்க்குமோ எனும் அளவில் கொஞ்சம் பயம் வந்தது.

டேவரெனர் எந்த அறைக்குள் நுழைந்திருப்பாரோ எனும் கேள்வி நெஞ்சில் முளைக்க, நானும் சோஃபியாவும் கண்களால் விடை பெற்றுக் கொண்டோம். தாழ்வாரத்திற்கு விரைந்தோடி வந்தேன். முதல் மாடிக்கு இட்டுச் செல்லும் மாடிப்படியருகே சென்றுக் காத்திருந்தார் இன்ஸ்பெக்டர். ''பிலிப்புடைய அண்ணன் ரோஜரைக் காண மேலே போக எண்ணம்'', என்றார். படியேற எத்தனித்தார். என் குழப்பத்தை அவர் முன் வைத்தேன். ''நீங்கள் எல்லோரையும் விசாரணை செய்து விட்டு வீட்டுக்கு வந்து விடுங்கள். நான் கிளம்புகிறேன். நீங்கள் இங்கிருப்பதில் அர்த்தமுள்ளது. நான் ஏன்...?''

ஆச்சரியமாய் என்னைப் பார்த்தார். ''பார்த்து நட. பழைய மரப்படிகள் போல....!'' என்று படியேற ஆரம்பித்தார். ''ஏன் என்றால்...? விளங்கவில்லை.''

''காரணமேயின்றி நான் இங்கு இருப்பதாய் படுகின்றது. இது எனக்குப் பிடிக்கவில்லை. நீ யார், எதற்கு இங்கு சுற்றுகிறாய் என யாராவது கேட்டால், பதில் சொல்ல ஸ்திரமான காரணம் என்னிடமில்லை.''

''ஓ...'' என்று ஒரு கணம் நான் குறிப்பிட்டதை உணர்ந்து நின்றார். ''ஏன் திடீரென இப்படி ஒரு லஜ்ஜை...? சார்ல்ஸ்... சொல்! அப்படி யாரேனும் உன்னிடம் கேட்டார்களா...? மறைக்காமல் சொல்.... அது எனக்கு மிக உதவும்!''

இன்ஸ்பெக்டரின் இக்கேள்விக்கு, தீர்க்கமாக மறுத்துத் தலையசைத்து, ''நல்ல வேளையாக இது வரை இல்லை...'' என்றேன்.

''எனில், விட்டு விடு! யாராவது கேட்டாலும் *விளக்கத் தேவையே யில்லை*. இது போன்று குழம்பிக் கிடக்கும் வீட்டினில் அதுவே மிகச் சரி. எல்லோரும் அவரவர் சொந்தக் பிரச்சினைகளாலும், போலீஸ் வந்து என்ன கேள்வியைக் கேட்டுத் தொலைக்கப் போகின்றதோ எனும் நரம்பதிர்வாலும் கவலையில் உள்ளனர். ஒன்று தெரிந்து கொள். தேவையில்லாத தருணங்களில் தன்னிலை விளக்கம் தரவே கூடாது. அதுவும் இது போன்ற சமநிலையற்று குழம்பியவர்களிடம் கூடவே கூடாது. பாவம்... அவர்களறியாமலேயே, நம்மை பலிகடாவாக்கி விடுவர்! சரி, இதோ மாடியடைகிறோம்.'' என்றவர், குறும்பாய் என்னைப் பார்த்தபடி, ''உனக்கு நான் கேட்கும் கேள்விகளில் சலிப்பு கூட தட்டியிருக்கலாம். மரணம் நிகழ்ந்த அந்நாளில் வீட்டுக்குள் யாரிருந்தால் என்ன, இல்லாவிட்டால் என்ன! விசாரணை என வந்து விட்டு, இப்படி திருப்பித் திருப்பிக் கேட்கப்படும் அடிமட்டக் கேள்விகளால் என்ன பெரிய பயன் விளைந்து விடப் போகின்றது என சலிப்பு -'' என்று கூற,

''ரொம்பச் சரி...'' என இடை மறித்தேன். ''நானே கேட்க வேண்டுமிருந்தேன். திருப்பித் திருப்பியா? அதுவும் நீ அப்போது எங்கிருந்தாய் எங்கிருந்தாய் என....!''

என் இடைமறிப்பை ஒதுக்கித் தொடர்ந்தார்: ''இப்படிப்பட்ட அடிமட்டக் கேள்விகளுக்கு அவர்கள் தரும் பதிலின்போது, தந்துக் கொண்டிருக்கும் பதிலில் தான் அவர்கள் பூரண கவனம்

வைத்திருப்பர். அது.... அது தான் விசாரணையின் போது நமக்குத் தேவை! சாட்சியைக் கூர்ந்து கவனிக்க-சாட்சியின் குணாதிசயத்தை அடியோடு படிக்க-அவரின் மனோநிலையினை, அதன் நிலைப்பாட்டை உள்ளது உள்ளபடி கிரகிக்க-இயல்பினைப் படம் பிடிக்க - கிடைக்கும் அற்புத வாய்ப்பு இது. நொடியும் நழுவவிடக் கூடாது. யார் உண்மை, யார் பொய், யார் நடிப்பது, யார் வெகுளி, யார் ஆழம், யார் வழக்கிற்கு கொஞ்சமும் சம்பந்தமில்லாதவர், யாரை நழுவ விடவே கூடாது, யார் குற்றவுணர்வு மிகுந்திருப்பது, என எல்லாம் தளம் தொடும்! இப்படி நாம் தொகுத்துக் கொண்டிருக்கும் போதே, இணையாக, கொலைக் களம் பற்றி சிறு பொறி கிளம்புமா என கிஞ்சித்தும் வீணாக்காது தேடிக் கொண்டிருக்க வேண்டும். அப்படிப்பட்ட நிஜப் பொறி - உண்மைப் பொறி - உதவி, வழக்கை முடிக்க உதவும் பொறி - எப்போதும் கிடைக்காது. ஆனால், எப்போதாவது கிடைத்தே விடும்....!'' - தன் பேச்சில் திருப்தி அடைந்தவராய் சிறு பெருமை புன்சிரிப்பைத் தவழ விட்டார். அந்த அனுபவத்திற்கு முன்னால், நான் குறுகியிருந்தேன்! அப்புன்முறு வலின் கடையில், என் காது மட்டும் கேட்க முணுமுணுத்தார்: ''பந்தயம் சார்ல்ஸ்...! நினைத்தால், உதவும் பொறிகளைக் கிளப்பிவிட, நிச்சயம் மகதாவால் இயலும். ஆனால் கட்டுப்படுத்தப் படுகிறார். ஏன்...?! விளங்கவில்லை, பார்ப்போம்...''

''உண்மைப் பொறியை எப்படி அறிவது...? அது நம்பகத்தன்மை வாய்ந்து இருக்குமா....?'' என கேட்டேன்.

''அதுதான் சொன்னேனே...! எப்போதாவது தான் அகப்படும். அதுவே, இருண்ட அறைக்குள் நீளும் ஓர் ஒளிக் கோடு. அதில் பிரயாணித்து ஒளியின் உற்பத்தி ஸ்தானத்தை அடைந்து விட வேண்டும்....! என்ன சொல்ல வருகிறேன் என புரிகிறதா...? வீட்டிலுள்ள எல்லோருக்கும் இப்படியோ அப்படியோ என நடந்தக் கொலைக்கான வாய்ப்புகளும் சந்தர்ப்பங்களும் தோணலாம். சொல்வார்கள். அவையனைத்தும் வீண்.''

''...! ....! ...!''

''கொலைக்கான உள்ளெண்ணம்...! திட்டவட்ட குறிக்கோள்...! 'ஆணித்தரமாக இலக்கு' என நமக்கு உணர்த்தும் ஒரு மோட்டிவ்...! சரமாரியாய் கேட்கப்படும் கேள்விகளுக்கு நடுவில், திடுதிப்பென்று இது யாரிடம் வெளியாகிறதோ, அவரே, நான் குறிப்பிட்ட ஒளிக் கோடு.''

துப்பறிதலில், என் கல்லூரி நாட்களில் கிட்டியிராத அனுபவ சொற்பொழிவு, இச்சில நிமிடங்களில் வாய்த்தது. மாடியில் இப்போது நாங்கள் நெருங்கியிருந்த அறைப்பகுதியின் கதவு தாழிடப் பட்டிருந்தது. அதிக ஓசையெழா வண்ணம் தட்டினார். தட்டிய உடனேயே தாமதமின்றி கதவு திறக்கப்பட்டது. திறந்தவர் கதவருகேயே இருந்திருக்க வேண்டும், அதனால் தான் உடனேயே திறந்து விட்டார். ராட்சஸன் போல இருந்தார் அவர். என்ன தோள்கள்...! என்ன அகலமான புடைத்தெழும் மார்பு...! அடர்த்தி மிகும் கருங்காடாய் சுருள் முடி...! கறுப்பு நிறம் மிகுந்த சுமாரான முகம் தான்.... ஆனால் அதில் தெறித்த சிரிப்புக் களை ஓர் ஈர்ப்பு...! எங்களை பார்த்தார். உடனே, ''ஓ... யெஸ்...'' என்று சொல்லி, மளமளவென பின்னுக்குத் தள்ளிக் கொண்டு நாங்கள் உள்ளே நுழைய வழி விட்டார். இது, யார் வேண்டுமாயினும் என் வீட்டுக்குள் வரலாம் எனும் குணம் கொண்டோர் காட்டும் உபசரிப்பாய் தோன்றியது.

''ம்...! வாருங்கள்...! நான் கிளம்பிக் கொண்டிருந்தேன்...! எனினும் பரவாயில்லை! வந்து அமருங்கள். நான் என் மனைவி க்ளெம்சியை அழைக்கிறேன்...! ஓ...! இங்கே தான் இருக்கிறாயா டார்லிங்...! வா..! இது தான் இன்ஸ்பெக்டர் டேவரெனர். இயன்றால், ஒரு நிமிடம் காத்திருக்க முடியுமா இன்ஸ்பெக்டர்..?'' என கேட்டபடி வலப்புறமிருந்த ஓர் அறைக்குள் நுழைந்து, திரைச்சீலையைப் இழுத்து மூடி, ''மன்னிக்கவும். காக்க வைக்கிறேன்...'' என மிகுந்த மரியாதைக் காட்டினார்.

அறையிலிருந்து, ரீங்காரமிட்ட தேனீ ஒன்று வெளியேறிட, அதனால் ஓர் அமைதி உண்டானது போலிருந்தது!

திருமதி க்ளெம்சி ரோஜர், அந்த அறையின் எதிர்ச் சுவரில் பதிந்திருந்த சன்னல் வழியாக வெளியே பார்த்தபடி நின்றுக் கொண்டிருந்தார். இப்போது எங்களைப் பார்த்து நன்றாக புன்னகை பூத்தார். அவரின் தோற்றமும், அறையின் அமைப்பும், ஒரு கணம் துணுக்குற வைத்தன.

அறை சுவர் முழுதும் வியாபித்திருந்த வெண்ணிற வர்ணம் தான், 'வெள்ளை' என்பதற்கு முழு விளக்கம் தர முடியும். தந்த நிறமோ, மக்கிய க்ரீம் நிறமோ கொண்டு சொல்லப்படும் வெள்ளை அல்ல இது...! தீர்க்கமான வெள்ளை. சுவரில் படம், பொம்மை, கடிகாரம் எதுவும் மாட்டப்படவில்லை... சாம்பல் மற்றும் நீல நிறத்தில்

முக்கோண வடிவிலான ஒரு வினோத சாதனம் மட்டுமிருந்தது. அறையுள், உட்கார சில நாற்காலிகள், ஒரு கண்ணாடி டீ-பாய், ஒரு சிறு புத்தக அலமாரி ஆகியவை மட்டுமே இருந்தன. அலங்காரப் பொருட்களேதுமில்லை. நல்ல வெளிச்சமும் ஜிலுஜிலுவென காற்றோட்டமும் மட்டுமே குவிந்திருந்தன என சுருங்கச் சொல்லலாம்!

இங்கு பார்க்கும் ரோஜரின் மனைவிக்கும் பழகிய பிலிப்பின் மனைவிக்கும் அதீத வித்தியாசங்கள் புரிந்தன. வெண்ணைக்கும் சாக்குக் கட்டிக்கும் போல! ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு வகை! ஒரு தனித் தீவு! ஒரு குணாதிசயம் கொண்டுள்ள பெண்ணைப் போல இன்னொரு பெண்ணைப் பார்ப்பது வெகு அரிது! ஆனால் மகதா மட்டும் விதிவிலக்கு. மகதா, யார் எது சொன்னாலும் அப்படியே இளகி சட்சட்டென குணம் மாறும் இயல்போடு, பல வித பெண்களின் கலவையாய், நம்பகத் தன்மையற்ற - முதிர்ச்சியற்ற ஒரு பெண்ணாய் வளைய வருகிறார். ஆனால் க்ளெம்சி நிச்சயம் அவ்வகையல்ல என என்னால் தெளிந்தறிய முடிந்தது. க்ளெம்சி - பேசுவோர் பேச்சால் கவரப்பட்டு பேசுபவராகவோ, அல்லது வேறு யாராகவோ மாறிக் கொள்ள முடியாது. அவர், அவர் தான்! தெளிவான அதே சமயம் கூர்மையான பாத்திரம்! ஐம்பது வயதுக்கு சற்று மேலிருக்கும். கொஞ்சமாய் நறுக்கி வளர்க்கப்பட்டிருந்த அவர் நரைத்த முடி, அவரது சிறிய, புத்திசாலித்தனமும் புத்துயிரும் மிகுந்திருந்த முகத்திற்கு மிக அழகாய் பொருந்தியிருந்தது. சற்றே கருமை குறைந்திருந்த, பார்க்கும் யாவற்றிலும் எதையோ ஆழ ஊடுருவித் தேடும் பூனை விழிகள். சராசரிப் பெண்ணின் மனச் சூழலில் க்ளெம்சி வாழ்ந்திருக்கவில்லை என்பது நிச்சயமாயிற்று. இவரின், தெளிவான அதே சமயம் கூர்மையான பாத்திரம் கூட ஆபத்தானது தானோ...! இந்த வீட்டில் இருக்கும் ஒவ்வொருவரும் முழுக்க முழுக்க வேறுபட்டவர்கள்; அவர்களின் போக்கு எப்போது வேண்டுமானாலும், அவர்களைத் தன்னிலை இழக்க வைக்கும் குரோதத்துக்குள் நுழைக்கும்; இவ்விதமாய் முழுக்க முழுக்க வேறுபட்ட கதாபத்திரங்களை வேறு எந்த வீட்டிலும் பார்க்கவே இயலாது என சோஃபியா விளக்கியதன் முக்கியத்துவம் உணர்ந்து, இக்கணத்தில் அவளை மனமாற உயர்த்தினேன்.

''உட்காருங்கள் இன்ஸ்பெக்டர். மேலும் ஏதாவது துப்புக் கிடைத்ததா...?'' என்று துல்லியமாகக் கேட்டார் க்ளெம்சி.

''மரணம் எஸரின் உட்கொண்டிருப்பதால் நிகழ்ந்துள்ளது, திருமதி ரோஜர்.''

''ஓ...'' என சிந்தித்தபடி சொல்லி, ''எஸரின் உட்கொண்டது, தெரியாமல் ஒரு விபத்தாய் நிகழ்ந்திருக்க வாய்ப்பில்லையா இன்ஸ்பெக்டர்...?'' என்று கேட்டார்.

''கிடையவே கிடையாது''

''சரி. தயவுசெய்து என் கணவரிடம் சற்று மென்மையாய் நடந்துக் கொள்ளுங்கள். நடக்கவுள்ள விசாரணை அவரை நிச்சயம் பாதிக்கும். தன் தந்தையை பூஜித்தவர் ரோஜர். அதனால், நடந்த சோகத்தினை, தன் மனத்தில் மிக தீவிரமாக எடுத்துக் கொண்டுள்ளார். ஏகமாய் உணர்ச்சிவசப்படும் நபரும் கூட!''

இதற்கு அதிக முக்கியத்துவம் தராது, ''உங்கள் மாமனாரோடு உங்கள் உறவு சுமூகமாய் விளங்கிற்றா...?'' என்றார் டேவரெனர்.

''ஆமாம்'' என்று விட்டு, பிறகு ''இருந்தாலும் அவரை எனக்கு அதிகம் பிடித்திருக்கவில்லை...!'' என்று சிறு குரலில் கூறினார்.

''அது ஏன்...?''

''வாழ்க்கையில் அடைய வேண்டும் என அவர் வைத்திருந்த குறிக்கோள்களிலும், அவற்றை அடைய அவர் கையாண்ட அணுகு முறைகளிலும், எனக்கு உடன்பாடே வந்ததில்லை.''

''ஓ...! ப்ரெண்டாவுக்கு...?''

''ப்ரெண்டா...? அவளை நான் முழுதுமாக பார்த்தது கூட கிடையாது...!''

''அவளுக்கும், லாரென்ஸுக்கும் இடையே ஏதேனும் இருந்திருக்கலாம் என நம்பும் சந்தர்ப்பம் வந்ததுண்டா...?''

''ஏதேனும் என்றால்...? காதல் உறவு..?''

''ம்...!''

''நான் அப்படி எண்ணுதல் தவறு...! ஆனால் ஊர்ஜிதமாய் தெரியாது'' - எனச் சொல்லும் போது, அவரின் குரல் பாவம், இது போன்ற விஷயம் நடந்ததோ இல்லையோ, எனக்குத் தேவை இல்லாதது என்பதை கோடிக் காட்டிற்று.

இப்பொழுது உள்ளே சென்றிருந்த ரோஜர், அறைக்குள் நுழைந்த தேனீயாய் மீண்டும் வந்து, ''ஒரு தொலைபேசி வந்தது. அதனால் தான் தாமதம். சொல்லுங்கள்.. சொல்லுங்கள், இன்ஸ்பெக்டர், சொல்லுங்கள்...! கொலையாளி யாரென மேலும் ஏதேனும் ருதுவாயிற்றா...?'' என பரபரத்தார்.

''எஸரின் ஏற்றப்பட்டு மரணம் சம்பவித்துள்ளது.''

''அப்படியா? தெய்வமே! அந்தப் பெண்ணே தான்! அவளால் காத்திருக்க இயலவில்லை! அவளை தன் உயிராய் வைத்திருந்தார்! அதற்கான பரிசு தானிது! பாதகக்காரி! கதறக் கதற கொலை செய்துள்ளாள்! என் ரத்தம் கொதிக்கிறது இன்ஸ்பெக்டர்!'' - வந்த ரோஜர் அப்படியும் இப்படியுமாக, எதையோ இப்பொழுதே செய்து முடிக்க வேண்டும் எனும் வேகத்தில் நடந்தார். இரு கைகளாலும் தலைமுடியை இறுகப் பற்றி இழுத்தும் கொண்டார். ''நாங்களெல் லோரும் இங்கேயே இருந்திருக்கிறோம். அப்பா கொலை செய்யப்பட்டுள்ளார். எங்களால் என்ன பயன்...?''

''அவள் தான் என தீர்மானிக்கிறீர்களே....! இதற்கு குறிப்பிடும் படியான காரணம் உள்ளதா...?''

''காரணமா...? வேறு யார் அப்படி துணிய முடியும்...? பற்பல வருடங்களாய் அவருடன் உள்ள யாரும் இப்படி செய்ய கற்பனையில் கூட நினைத்திருக்க மாட்டார்கள். அந்த ப்ரெண்டாவை நான் என்றுமே நம்பியவனல்ல. பிடிக்கவும் செய்யாது. எனக்கு மட்டு மல்ல. வீட்டில் யாருக்குமே...! ஒரு நாள் இவளை அழைத்து வந்து, தான் செய்த காரியத்தையும் சொல்லி, என்னையும் பிலிப்பையும் திடுக்கிட வைத்தார் அப்பா. அதுவும் இந்த வயதில் ...! பைத்தியக் காரத்தனம், பைத்தியக்காரத் தனம்....!'' - பற்களை நரநரவெனக் கடித்தார் ரோஜர். குரோதம். சோஃபியா பயந்துப் பயந்துக் குறிப்பிட்டுக் காட்டிய குரோதம். தன்னிலை இழக்க வைக்கவல்ல குரோதம். ''அப்பா ஒரு விசித்திரமானவர் இன்ஸ்பெக்டர். சுறுசுறுப் பிலும், மனத்தளவில் - கல்மிஷமற்ற இளமை துள்ளலிலும், அவருக்கு வயது நாற்பதே...! அவருக்காக இவ்வுலகை நான் விலையாய் தருவேன். எனக்காக அவ்வளவு செய்திருக்கிறார். நான் கேட்டு மறுத்த தில்லை. என்னை ஏமாற்றியதில்லை. இங்கு குத்துக்கல்லாய், ஒரு பாக்ஸிங் வீரனைப் போல ஆகிருதியுடன் நானிருந்தும்... நான்... நான் தான்.. நான் தான் அவரை ஏமாற்றி விட்டேன்...! அவரின் துர் மரணத்தை அனுமதித்து, நான்... நான் தான்...! அப்பா...!!''

நின்றுக் கொண்டிருந்தவர், அப்படியே தன்னை நாற்காலியில் போட்டு அமர்ந்தார். க்ளெம்சி அமைதியாய் அவரருகில் வந்து, ''தெரியும் கண்ணா...! என்ன செய்வது...! முதலில், இவ்விஷயத்தில், பதறும் உங்கள் போக்கைக் குறைத்து அமைதி கொள்ளுங்கள்... அப்பாவையே அதிகம் சிந்திக்காதீர்கள்...'' என்று எடுத்துக் கூற,

கைகளை இறுக்கமாய் பற்றிக் கொண்டு, ''எப்படி அமைதியா யிருப்பேன்? அந்த உன்னத தந்தையின் நினைவுகளை எப்படி களைந்தெறிவேன்? அது முடியுமா? முடிந்தால் அது நியாயமா?'' என்றார் ரோஜர். திருமதி ரோஜர் க்ளெம்ஸி தொடர்ந்தார்: ''ஆனாலும் அமைதி தேவை தான் ரோஜர். முதன்மை இன்ஸ்பெக்டருக்கு நம் உதவி தேவையாயுள்ளது. அவர் ஐயங்களை நிவர்த்தி செய்துக் கொள்ளத்தான் இங்கு வந்துள்ளாரேயன்றி, ஆறுதல் சொல்ல அல்ல. ஓ கே? நாமறியாமல் நிகழ்ந்து விட்ட அசம்பாவிதத்தைத் தடுக்க முடியவில்லையே என கதறுவதை விட்டு, அதைச் செய்யத் துணிந்தவரைப் பிடிக்க உதவினால், அப்பாவைக் காப்பாற்றாமல் விட்டு விட்டோமே எனும் உங்களின் குற்றவுணர்வும் தணியும்...! இது மட்டுமே இப்போது முடியும்..'' என்றார் க்ளெம்சி. இப்படிப் பேசியதில் கொஞ்சமும் காட்டம் கலக்கவில்லை அவர். நிலைமையை எடுத்துரைக்கும் மந்திரியாகத் தானிருந்தார். அந்த முதிர்ச்சி என்னை ஈர்த்தது.

''நன்றி க்ளெம்சி...'' என்று அவரை வாழ்த்தினார் டேவரெனர்.

ரோஜர் அழுதார்: ''எனக்கு என்னத் தோன்றுகிறது தெரியுமா...? அந்தக் கிராதிகியின் கழுத்தினை'', என்று பற்களைக் கடித்துத் தொடர்ந்தார், ''அப்படியே நெறிக்க வேண்டும் போலுள்ளது...'' –ஏதோ அவர் கைகளுக்கு இடையில் ஒரு கழுத்துள்ளது போல பிசைந்துப் பார்த்துக் கொண்டார். இத்தனை வெறியா?

''ரோஜர்...'' - கத்தி போன்று கூர்மையாய் கூப்பிட்டார் க்ளெம்சி. இப்போது ரோஜர் அடங்கினார். தன் ஆரவாரத்திற்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். தன்னைத் தன் உணர்வுகள் ஆள்வதாய் சொல்லி, அனுமதி கேட்டு,அறையை விட்டு வெளியேறினார்.

''உண்மையில் ஒரு சிறு ஈ-யை அடித்தால் கூட துடிக்கும் ரகம் ரோஜர்'' என்ற க்ளெம்சியின் வர்ணிப்பை அமைதியாய் தலை யசைத்து ஏற்றுக் கொண்ட டேவரெனர், தன் வழக்கமான கேள்விகள் ஒவ்வொன்றையும் அடுக்கலானார். அமைதி குலையாது பதில் தந்தார் க்ளெம்சி. ரோஜர் உணவகத் தலைமையகம், லண்டனில் பாக்ஸ் ஆபீஸ் எனுமிடத்தில் உள்ளது. கொலை நிகழ்ந்த நாளில், ரோஜர் அங்கு இருந்திருக்கிறார். ரோஜர் சீக்கிரமாக வீடு திரும்பிவிட்டால், தந்தையுடன் அதிக நேரம் செலவழிப்பது வழக்கமாம். அன்றும் அது நடந்திருக்கிறது. க்ளெம்சி அவளது அலுவலகத்திலிருந்திருக்கிறார். மாலை ஆறு மணி வாக்கில் வீடு வந்திருக்கிறார்.

''வந்ததும் உங்கள் மாமனாரைப் போய் பார்த்தீர்களா...?''

''இல்லை. ஆனால் அவர் அறைக்கு சென்றிருந்தேன். ரோஜர், அவருடைய சிகரெட் பைப்-பினை அங்கு மறதியாய் வைத்து விட்டு வந்து விட்டார். அதை எடுத்து வரப் போயிருந்தேன். இது போன்ற மறதி சமயங்களில், அவர் அங்கு வழக்கமாய் வைக்குமிடத்தில் தான் பைப் இருந்தது. எடுத்துக் கொண்டு வந்து விட்டேன். வயதானவரை எழுப்ப ஒப்பவில்லை. ஆறு மணி வாக்கிலேயே படுத்து விடுவது அவர் வழக்கம்.''

''அவர் சுகவீனமடைந்த செய்தி உங்களை எப்போது எட்டியது...?''

''ப்ரெண்டா ஓடி வந்தாள். ஆறரை மணி கடந்த சமயம்.''

இந்த ஒரு கேள்வியும் பைசா பெறாது என்பது எனக்கு இப்போது புரிந்தது. ஆனால் பதில் சொல்லும் நபரின் உண்மையான குணத்தை, பதில் சொல்லிக் கொண்டிருக்கும்போது அங்குலம் அங்குலமாக ஆராய இப்படிப்பட்ட முக்கியம் போலத் தோன்றும் கேள்விகள் டேவரெனருக்கு எத்தனை அத்தியாவசியம் என்று எனக்கு தீர்க்க மாயிற்று. அவர் என்ன மாதிரி வேலைக்கு சென்று வருகிறார் என கேட்டார். அணு பிளப்பின் போது நிகழும் கதிர் வீச்சு சம்பந்தப்பட்ட துறையில் வேலையிலிருப்பதாய் சொன்னார். இடம்: லண்டன்.

''அணு குண்டுத் துறையிலா வேலை பார்க்கிறீர்கள்...?''

''இருந்தாலும், இந்த நிறுனத்தில் நடத்தப்படும் ஆய்வுகள் பாதகமான காரணங்களுக்காக அல்ல. நோய்களைக் குணப்படுத்து வதற்கான காரணங்களுக்காக...!''

உரையாடலை நிறுத்திவிட்டது போல எழுந்த டேவரெனர், வீட்டில், இவர்களிருவரின் பகுதிகளைப் பார்க்க விழைவதாய் சொன்னார். ஆச்சர்யப்பட்டாலும், உடனேயே பார்க்கலாம் என உணர்த்தினார் க்ளெம்சி. படுக்கையறையில் பளீர் வெள்ளையில் இருந்த - இரு படுக்கைகள், சுவர், தளம், சிறு குளியலறை எல்லாம் - ஒரு மருத்துவமனையின் அறையை ஞாபகப்படுத்தின! ஆடம்பர சாமான்களோ, விதவித வாசனை வஸ்துக்களோ அற்று, மற்றொரு வெண் பிரதேசமாய், ஓரிரு பக்கெட்டுகளும் குவளைகளும் கொண்டிருந்தது, குளியலறை. பிறகு தென்பட்ட அறைக் கதவினைத் திறந்து விட்டபடி க்ளெம்சி சொன்னார்: ''இது என் கணவரின் பிரத்யேக அறை.''

''வாருங்கள்...'' என்றார் அங்கு போய் அமர்ந்திருந்த ரோஜர். நுழைந்தோம்.

ஒரு சிறு விடுதலை மூச்சு விட்டேன். எங்கோ, மனிதனுக்குள் அகப்படாமல், தியானங்களுக்கும் சிக்காத, நெறி வழுவாத நிலையில் இருக்கும் அந்த ஆழ்நிலைக்குள் நான் புதைவதாய் பட்டது. நிச்சயம் இது பிரத்யேக அறையே! அத்தனை தனிமை! அத்தனை அமைதி! கண்களை மேய விட்டேன். அங்குமிங்குமாய் இருந்த வட்ட மேஜைகளில், தாள்களும் பழைய பைப்புகளும் புகைத் தூள்களும் நிறைந்திருந்தன. கிழிந்த ஈஸி-சேர்கள் சில. சுவர்களில் நிறமிழந்த சில குழு புகைப்படங்கள்... பள்ளியில், கல்லூரியில் மற்றும் மிலிட்டரியில் இருந்தபோது எடுக்கப்பட்டவை. தீட்டப்பட்ட - பாலைவனம், கடலின் கப்பல், மறையும் சூரியன் - போன்றவற்றின் வண்ணம் மங்கிய ஓவியங்கள். ஒரு மென்மையான அறையாய் மனதில் பதிந்தது... அன்பான, நட்பு மிகுந்த, அரவணைப்பினலான, ஒரு மென்மையான மனிதனின் அறையாய்...!

எங்களைக் கண்டதும் நாற்காலிகளில் கூடிக்கிடந்த புத்தகங்களை அள்ளி கீழே போட்டு, அமர இடம் செய்து, ''இவ்விடம் குப்பைக் காடாகி விட்டது. இப்போதைய என் மனத்தின் பிரதிபலிப்பு...'' என்றபடி, தனக்கும் எங்களிருவருக்குமாய் 'ஒய்ன்' நிரப்பிய கோப்பைகளை நீட்டினார். ''மன்னிக்க. என் உணர்வுகள் என் கட்டுக்குள் இல்லை. அப்பாவை நினைக்க நினைக்க என் நிலை இப்போதெல்லாம் அப்படி தவறுகிறது...! அப்பா...!'' என்று ஒரு மடக்கு குடித்தார். நான் என் கோப்பையைப் பெற்றுக் கொண்டேன். டேவரெனர் மறுத்தார். சுற்றி க்ளெம்சியைத் தேடினார். எங்களை அனுப்பி விட்டு அவர் போய்விட்டார்.

''விவரம் தெரிந்த மனுஷி'' என்றார். ''க்ளெம்சியைத்தான் சொல்கிறேன். என் தனிமை அறைக்குள் என்னை என்றுமே அவள் தொந்தரவு செய்ததில்லை. இது நாள் வரை நான் வாழ்ந்த வாழ்வில் அவள் ஓர் அற்புதம்...! அற்புதம்! அவளை எந்த அளவு நான் மதிக்கிறேன் என விளக்கத் தெரியவில்லை. வாழ்க்கையில் கடும் காலகட்டங்களை சந்தித்தவள் அவள். அத்தனையையும் வென்றுள்ளாள். அவற்றை நான் உங்களுக்கு சொல்லியே தீர வேண்டும். உங்களுக்கு உதவுமோ உதவாதோ...! எப்படியோ, அனுமதியுங்கள்....!''

டேவரெனர் கண்களால் ஆமோதித்து உன்னிப்பானார்.

''அவளது முதல் கணவன் மிக நல்ல மனம் படைத்தவன். புத்திசாலி. படிகப் பொருட்களின் மீது ஆழ்ந்த ஆராய்ச்சி செய்து வந்தான். இவளும் அணுத் துறையில் ஆய்விலிருந்தாள். இருவரும் சரியான ஜோடி. அவன் கொஞ்சம் கொஞ்சமாய் மடிந்துக் கொண்டிருக் கிறான் என தெரிந்தும், அவன் மீது உயிரை வைத்துப் பொத்திப் பொத்திப் பாதுகாத்து வந்தாள் க்ளெம்சி. ஆம்... அவனுக்குக் காச நோய்! ஒரு முக சுளிச்சல்...! ஓர் எரிச்சல்...! ம்ம்..! மனைவியாய் அவனுக்குப் பணிவிடை செய்வது தன் கடமை என்றும், அது தன் சந்தோஷத்துக்குத் துளியும் பங்கமில்லை என்றும் மட்டுமே சொல்லி வந்தாள். துரதிர்ஷ்டசாலி. ஒரு நாள் இறந்து விட்டான்'' - கண்களை மூடி கிட்டத்தட்ட ஒரு நிமிட மவுனம் அமைத்தார் ரோஜர். மீண்டும் தொடர்ந்தார்: ''முழுசுமாய் நொறுங்கிப் போனாள். காலம் ஓடியது. கொஞ்சம் அமைதியானாள். சிலபல முயற்சிகளுக்குப் பிறகு என்னை மணக்க ஒப்புதல் தந்தாள். அவள் வாழ்வுக்கு ஒரு போர்வையாக இருப்பதிலும், அவளுக்கு அமைதியை மீட்டுத் தந்ததிலும் எனக்கு அபரிமித மகிழ்ச்சி. வேலைக்குப் போக வேண்டாம் என்றேன். அணுத் துறை, அரசு சம்பந்தப்பட்டது. அரசுக்கு ஒத்துழைப்பதில் தவறில்லை என்றாள். ஆய்வினைத் தொடரவும் பிரியப்பட்டாள். ஆனாலும் நூறு சத மனையாளாக விளங்குகிறாள். அவள் என் அதிர்ஷ்டம். எந்த ஆடவனுக்கும் கிடைத்திராத அதிர்ஷ்டம். அவளுக்காக என்ன வேண்டுமானாலும் செய்வேன். என்ன வேண்டுமானாலும்....!''

இவ்வளவு உணர்வுபூர்வமாக ரோஜர் விளக்கிக் கொண்டிருக்க, டேவரெனர், தானுண்டு தன் கடமை உண்டு எனும் ரீதியில், தனது ஆஸ்தானக் கேள்வியை எடுத்து விட்டார். உன் தந்தை மரித்தபோது நீ எங்கிருந்தாய்...?!

''ப்ரெண்டா தான் ஓடி வந்து, அப்பா மிக மயக்க நிலைக்குள் இறங்கிக் கொண்டிருப்பதாய் படபடத்தாள். என் மிகப் பிரியக் கிழவனோடு அரைமணி முன் வரை இருந்தேனே ; அப்போது மிக நன்றாய்த்தானிருந்தார் என்று துடிதுடித்தேன். ஓடினேன். முகம் முழுதும் நீலம் பாய்ந்து விட்டிருந்தது. இழுத்துக் கொண்டிருந்தார். பிலிப்பை நோக்கி ஏறத்தாழப் பறந்தேன். அவன் வந்து பார்த்து மருத்துவருக்குத் தொலைபேசி செய்தான். யாராலும் காப்பாற்ற முடியவில்லை. கனவாயிருந்து விடக் கூடாதா என ஒரே ஒரு கணம் ஆசைப்பட்டேன். கனவு...! ம்...!'' - விரக்தியாய் முடித்தார்.

ரோஜரின் அறையிலிருந்த இறுக்கமான சூழ்நிலையிலிருந்து சிறு தயக்கத்தோடு விடைபெற்று, அவர்களது வீட்டிலிருந்து வெளியே வந்தோம்.

''பிலிப்புக்கும் ரோஜருக்கும் தான் எத்தனை வேறுபாடு...! இத்தனைக்கும் இருவரும் சகோதரர்கள் வேறு...! ஆச்சரியம்...!'', என்றவர், அனுபவித்து சொன்னார்: ''ஒவ்வொருவரிடமும் வித விதமான பொருட்கள், அறைகள். அவை ஒவ்வொரு கருத்தை, கற்பனையை, ஊகத்தை நம்முள் தூவுகின்றன. வேடிக்கையா யில்லை..?!''

நான் ஒப்புக் கொள்ள, ''விதவிதமான ஆட்களும் திருமண பந்தத்தால் இணைகிறார்கள்.... இல்லை?'' என்று அவர் தற்போது சொன்னது அமைதியான பிலிப் மற்றும் ஆரவாரமான மகதா ஜோடியையா, அல்லது, ஆரவாரமான ரோஜர் அமைதியான க்ளெம்சி ஜோடியையா எனப் பிரித்துப் பார்க்க முடியவில்லை. ஆனால் இரு ஜோடிகளுக்கும் பொருந்தும்!

''இவரை ஒரு கொலைகாரனாய் என்னால் தற்சமயம் ஏற்க முடியவில்லை...! உனக்கு..?'' - என்று கேட்டுவிட்டு, பின் என் பதிலை அனுமதிக்காது, ''ஆனால் சொல்ல முடியாது...! யார் எப்படி மாறுவரோ...!'' என முடித்தார். சோஃபியா, தான் கூட கொலை செய்து விடும் மனோ நிலைக்குள் உந்தப்பட்டு விடலாம் என அலறியது நினைவுக்கு வந்தது. என்ன வீடய்யா இது....?!

''க்ளெம்சி ஆபத்தான குணம் கொண்டுள்ளதாய் படுகிறது. பச்சாதாபம் அற்றவராய். பிடிக்காவிடில், எத்தனை பழகியிருப்பினும், குற்றவுணர்வேயற்று வெறுத்துத் தள்ளி விடும் குணம்...!''

''எனக்கும் இதே முடிவு தான் மனதில் பட்டது. ஆனால் டேவரெனர்...! ஒருவர் வாழ்க்கையை அணுகும் முறையும், இலக்குகளை அடைய கடைபிடிக்கும் வழிகளும் சரியில்லாத ஒரே காரணத்திற்காக, அவர் கொலை செய்யப்பட்ட வரலாறு உண்டா..? அவ்வரலாற்று வழி க்ளெம்சியும் இருப்பாளா...? நல்ல முதிர்ச்சி உள்ள, வாழ்க்கையில் அடிப்பட்ட பெண்ணாயிருப்பதால் கேட்கிறேன்...!''

''அது போல ஒரு வழக்கினை நான் கேள்விப்பட்டதில்லை. பார்ப்போம். இப்போதைக்கு ப்ரெண்டாவை சுற்றி மையம் கொள்வது தான் சிறந்தது. ஆயினும் சரியான சாட்சி வேண்டும் சார்ல்ஸ்...! அது கிடைக்காமலே போய் விடுமோ என மீண்டும் எனக்கு சிறு அச்சம் உதிக்கிறது...!

# 8

"எதிரேயிருந்த அறைப்பகுதியின் கதவினை, அப்பகுதியினைக் காத்துவரும் பிரதான வேலைக்காரி திறந்தாள். முகத்தில் பயம் படர்ந்தாலும், டேவரெனரைக் கண்டதும் ஆசுவாசமானாள்.

''அம்மாவைப் பார்க்க வேண்டுமா...?''

''ஆமாம்...''

அங்கிருந்த ஒரு பெரிய வரவேற்பறைக்குள் செல்லுமாறு வழி காட்டிவிட்டு சென்று விட்டாள். நாங்கள் நுழைந்தபோது கீழே கண்ட வரவேற்பறையைப் போலத்தான், இதன் அளவும் இருந்தது. சுவர்களில், ஓவியங்கள் வரையப்பட்ட பட்டுச் சீலைகள் ஆங்காங்கே தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் வண்ணங்கள் கொஞ்சம் சாயம் போயிருந்தன. சன்னல்களிலும் கதவுகளிலும் திரைச் சீலைகள் பொருத்தப்பட்டு இழுத்து விடப்பட்டிருந்தன. சுவரில், என் பார்வையை - ஏன், டேவரெனர் கவனத்தையும் - ஆணியிலடித்தாற் போல் கட்டிப்போட்ட ஓர் ஓவியமும் இருந்தது. இதற்கு, அதனை உருவாக்கியிருந்த ஓவியக் கலைஞனின் கைத் திறனின் மேதாவிலாசம் மட்டுமல்ல... அதில், காண்போரை அப்படியே கைது செய்து வைக்கும் வகையில் தீட்டப்பட்டிருந்த முகமும் ஒரு காரணம்! அது, ஒரு குள்ள மனிதன் குறித்த ஓவியம். கறுப்பானவன், ஆனாலும் எதிரிலிருப்போனைத் துளைத்தெடுத்து விடும் பார்வை. ஒரு மண்டை ஓடு வரையப்பட்டிருந்த வெல்வெட்டினாலான கறுப்பு மேல் கோட்டு அணிந்திருந்தான். அவனுக்கு கழுத்து உள்ளதா எனும் சந்தேகத்தைக் கிளப்பும் வகையில், கழுத்து தோள்களுக்குள் புதைந்திருந்தது. ஓவியம் தான்..! இருப்பினும் அக்கண்களில் மிளிர்ந்த காந்தம் என்னைக் கட்டிப் போட்டுத்தான் வைத்தது. அந்த ஈர்ப்பு அக்குள்ளனின் உடலிலும் இருப்பதாய் ஓவியம் அமைந்திருந்தது. அவனைக் கிழவன் என்று வரைந்திருந்தாலும், உடல், வைரம் பாய்ந்த இளையது என்பதை ஓவியம் காட்டியதிலிருந்து, வரைந்த ஓவியனின்

திறமை, பிரமிக்க வைத்தது. பேசும் ஓவியம். இது போல உணர்வு பூர்வமான ஓவியத்தை வேறெங்கும் காணயியலாது எனும் ஆச்சர்யத்தில் நான் ஸ்தம்பித்து இருக்க, ''அது தான் லியோனைட்'' என அவ்வோவியத்தைச் சுட்டிக் காட்டி டேவரெனர் சொன்னது, என்னை இன்னும் அதிகபட்ச பிரமிப்பில் தூக்கிப் போட்டது. ''தனித்துவ குணாதிசயம் தென்படுகிறது...! இல்லையா...?''

''ஆம்...!'' என்றேன் நான், கண்களை ஓவியத்திலிருந்து எடுக்காமல். என்ன அடைமொழி சொல்லி, பிரதிபலித்த ஓவியக் குள்ளனின்... மன்னிக்க... குள்ளரின் குணாதிசயத்தை உயர்த்திக் காட்டுவது என விளங்கவில்லை.

தோட்டத்தில் நடந்து வரும்போது, எடித் டி ஹெறவிலேண்ட், லியோனைடின் மரணத்தால் வீடு எந்த அளவு வெறிச்சோடி உள்ளது தெரியுமா எனக் கேட்டதன் நிஜம் உறைத்தது. சில நொடிகளில் தன் ஓவியத்தாலேயே இப்படி என்னைக் கட்டிப் போட்டு விட்ட வித்தியாசமான மனிதர், உயிரோடு இருந்த போது தன்னை சந்தித்த அத்தனை பேரையுமன்றோ கட்டி வைத்திருந்திருப்பார்...! அவரற்ற அவர் வீடு, அர்த்தமற்றது தான்.

''அதோ அது, அவரின் முதல் மனைவி...'' என்று, இரு ஜன்னல்களுக்கு இடைப்பட்ட சுவர்ப் பகுதியில் மையமாய் தொங்கிய ஒரு படத்தைக் காட்டினார் டேவரெனர். அது சுமாரான ஓர் ஓவியனால் தான் வரையப்பட்டிருக்க வேண்டும். அழகியாய் காட்டப்பட்டிருந்தாலும் கொஞ்சமும் உயிரோட்டமற்ற படம். மிக நீளமான முகமாயும் அதில் ஒரு குரோதமும் தெரிந்தன. மிகைப் படுத்தப்பட்டிருக்குமோ.. தெரியவில்லை. விண்விண்ணென்று ஈர்த்த லியோனைடுக்கு சற்றும் பொருந்தாத பெண்ணாய்ப்பட்டது எனக்கு.

அப்போது அங்கு வந்த தலைமை போலீஸ் லாம்ப், டேவரெனருக்கு அழுத்தமாய் ஒரு சல்யூட் அடித்து விட்டு, ''எல்லா வேலையாட்களிடமும் பேசிப்பார்த்து விட்டேன், முதன்மை இன்ஸ்பெக்டர். ம்ம்...! தேறியது நேரம் தான். வேறொன்றுமில்லை...!'' என்று, விடைபெற மறு சல்யூட் அடித்தான். டேவரெனர், அவன் சொன்னதையும் சல்யூட்டுகளையும் தலையசைத்து ஆமோதித்தார். அவன், அறையின் மூலையிலிருந்த ஓர் இருக்கைக்குச் சென்றமர்ந்து, தலைமை இன்ஸ்பெக்டரைத் தொந்தரவு செய்யக் கூடாது எனும் தொனியில் தான் எடுத்து வந்திருந்த குறிப்புகளோடு ஐக்கியமானான்.

இவ்வறையின் வலப்புற அறையிலிருந்து, லியோனைடின் மூன்றாம் மனைவி ப்ரெண்டா வெளிப்பட்டாள். அவள் மிக விலையுயர்ந்த கறுப்பு நிற அங்கி அணிந்திருந்தாள். கழுத்தின் மேல் பகுதியிலிருந்து உடல் முழுக்க மறைத்து அது தொங்கியது. மெதுவாக, சுறுசுறுப்பற்ற பாவனையில் நடந்து வந்தாள். கொஞ்சம் அழகு தான். நீண்ட ப்ரவுன் நிற தலைமுடிக்கு முக்கியத்துவம் தந்து அலங்கரித்திருந்தாள். இந்த ப்ரவுன் பின்னணிக்குக் கறுப்பு உடை அவளுக்குப் பொருந்திற்று. முகப் பவுடர், உதட்டு அலங்காரம், வாசனை திரவியம் என எல்லாம் பூசி, சில ஜொலிக்கும் நகைகளோடு சிறப்பான ஒப்பனை செய்திருந்தாள். கைகளின் விரல்களை யெல்லாம், முத்து பவளம் போன்ற விலையுயர்ந்த கற்களினாலான மோதிரங்கள் பளபளக்கச் செய்தன. ஏதோ நகைக் கடை பொம்மையைப் போல இருந்தாலும், கண்களிலும் இமைகளிலும் முகத்திலும் தெரிந்த வீக்கமும் சிகப்பும், தொடர்ச்சியாய் அவள் அழுதிருந்ததைச் சொல்லின. இவை எல்லாவற்றையும் மீறி, அவளிடம் இன்னொன்றையும், கனக்கச்சிதமாய் எங்களின் போலீஸ் கண்களால் கவனிக்க முடிந்தது. அவள் முழுவதுமாக பயந்துக் கொண்டிருந்தாள். எதன் பொருட்டு...?

''வணக்கம் திருமதி லியோனைட்'' என்ற டேவரெனர், ''மறுபடியும் உங்களைத் தொந்தரவு செய்ய வேண்டியுள்ளது'' என்ற போது, ''தவிர்க்க முடியாதது'' என்றாள் ப்ரெண்டா.

''உங்களுக்குத் தெரியுமில்லையா, திருமதி லியோனைட்ஸ், அவசியமானால் உங்கள் சட்ட ஆலோசகரையும் தாராளமாக நீங்கள் அருகிலிருக்கச் செய்யலாம். அதற்கு அனுமதியுண்டு.''

சட்டென்று, ''எனக்கு சட்ட ஆலோசகர் கைட்ஸ்கில்'லைப் பிடிக்கவில்லை. அவர் வேண்டாம்'' என்றார். ப்ரெண்டா முழு சட்ட முக்கியத்துவத்தை உணர்ந்தார் போல தோன்றவில்லை.

''போகட்டும். உங்களுக்கு உகந்த ஆலோசகரை வைத்துக் கொள்ளலாம். அது நல்லது.''

''எதற்கு எனக்கு? சட்ட ஆலோசகர்களைப் பிடிக்கவில்லை இன்ஸ்பெக்டர். இயன்றவரைக் குழப்புகிறார்கள்...!''

சிறு சிரிப்பு டேவரெனருக்குள் உதித்தது. ''உங்கள் விருப்பம்...! எனில், நாம் பேச ஆரம்பிக்கலாமா...?''

தூரத்திலமர்ந்திருந்த தலைமை போலீஸ் லாம்ப், தன் பென்சில் முனையை நாக்குத் தடவி தயாரானார். இன்ஸ்பெக்டரைப் பார்த்து

அமர்ந்திருந்த ப்ரெண்டா, ''ஏதாவது கண்டுபிடித்தீர்களா...?'' என்றாள். அப்போது அவள் விரல்கள், படபடப்போடு, தன்னிச்சையாக, உடுத்தியிருந்த அங்கியின் ஒரு நுனியை சுருட்டுவதும் விடுவதுமாக இருப்பதைக் கவனித்தேன்.

''இப்போதைக்கு, உங்கள் கணவர், எஸரின் எனும் விஷம் கொடுக்கப்பட்டு இறந்துள்ளார் எனும் அளவுக்குத் தான் திட்டவட்டமாகக் கூற முடியும்...''

''அவர் கண் மருந்தே அவரைக் கொன்றுள்ளதா...?''

''நீங்கள் கடைசியாய் ஊசியினை லியோனைடுக்குப் போட்டபோது, பாட்டிலிலிருந்து உறிஞ்சிப்பட்டது, இன்சுலீ னுக்கு மாறாக எஸரின் என்பது, திட்டவட்டமாய் தெரிகிறது.''

''ஆனால் பாட்டிலில் இப்படி ஒரு மாற்றம் நடந்திருப்பது, எனக்குத் தெரியாதே....! இது போல செய்ய எனக்குத் தேவையே யில்லையே...! நிஜமாய் எனக்குத் தெரியாது இன்ஸ்பெக்டர்...!''

''உங்களுக்குத் தெரியாது எனில், யாரோ தான் திட்டம் போட்டு, இன்சுலீன் இருந்த பாட்டிலில், கண் மருந்தினை மாற்றியிருக் கிறார்கள்.''

''என்ன ஒரு கொடுமை...!''

''ஆமாம்... கொடுமையே...!'' என்ற இன்ஸ்பெக்டரை, ''யாராவது திட்டமிட்டு இப்படி செய்ததாய் உங்களுக்கு சந்தேகம் வருகிறதா...? அல்லது தெரியாமல் ஒரு விபத்தாய் நிகழ்ந்திருக் குமா...?'' என்றாள் ப்ரெண்டா.

''இது வரை ஏதும் வழி தென்படவில்லை திருமதி லியோ னைட்ஸ். இருட்டுக்குள் தான் நான் நின்றுக் கொண்டிருக்கிறேன்...!''

''யாராவது வேலையாள் தான் செய்திருக்க வேண்டும். நன்றி கெட்ட பணியாட்கள்.''

டேவரெனர் மவுனமாயிருந்தார்.

''நிச்சயமாக, யாராவது வேலையாள் தான்...! வேறு யாராவது துணிந்திருப்பார்கள் என தோன்றவில்லை...!''

''நிச்சயமாகவா பேசுகிறீர்கள்...? யோசித்து ப்ரெண்டா...! போலீஸ் விசாரணையில் எந்த பணியாட்களும் சிக்கவில்லை....! சந்தேகப்படும்படி வேறு யாராவது...? உங்களது தனிப்பட்ட குடும்பத்துடன் மனக்கசப்பு, சண்டை, சச்சரவு, விரோதம் - இப்படி எதுவுமே, எந்தத் தருணத்திலும் இருந்ததேயில்லையா...?!''

ஒரு சிறு அகந்தையுடன் டேவரெனரை முறைத்து விட்டு, ''எனக்கு அப்படி எதுவும் தோன்றவேயில்லை'' என்றாள் அவள்.

''நீங்கள் அன்று மதியம் ஏதோ சினிமாவுக்கு சென்று வந்ததாய் சொல்லியிருந்தீர்கள்...''

''ஆமாம். திரும்பும் போது மணி ஆறரை. அது தான் அவருக்கு ஊசி போடும் நேரம். நான் நா..ன்.. தா..ன்.. ஊசி போட்டேன். போட்டதும், அ..வ...ர்... வினோதமான நிலைக்குப் போனார். அப்படியே வீழ்ந்தார். நான் சுக்கு நூறாகிப் போனேன். ரோஜரைத் தேடி ஓடினேன். இவை எல்லாவற்றையும் தான் ஏற்கெனவே சொல்லித் தொலைத்து விட்டேனே....! மீண்டும் மீண்டும் அந்த நினைவுகளுக்குள் நான் செல்லத்தான் வேண்டுமா...? ம்...? திருப்பித் திருப்பி ஏன்...? எனக்கு நடுங்குகிறது'' என ஒரு மன நோயாளியைப் போல வீறிட்டார் ப்ரெண்டா.

''சரி, சரி. மன்னிக்க. விடுவோம். இப்போது நான் லாரன்ஸைப் பார்த்துப் பேச முடியுமா..?''

''லாரன்ஸ்...? எதற்காக? இந்த வழக்கு பற்றி அவருக்கு ஒன்றுமே தெரியாது.''

''எப்படிச் சொல்லுகிறீர்கள்...?'' என்ற டேவரெனரின் கேள்விக்கு பதிலில்லாது மவுனமானார் ப்ரெண்டா. இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார்: ''எல்லோரிடமும் பேசியதைத் தான் நான் அவரிடமும் பேச உள்ளேன்.''

மீண்டும் டேவரெனரை முறைத்தார் ப்ரெண்டா, ஒரு வகை சந்தேகத்துடன்...!

''படிக்குமறையில் ஆஸ்டஸுக்கு லத்தீன் பாடம் நடத்திக் கொண்டிருக்கிறார்....! வகுப்பினிடையே அவர் இங்கே வர வேண்டுமா...?

''வேண்டாம்'' என்றார் டேவரெனர். எனக்கும் போலீஸ் அதிகாரிக்கும் அதிர்ச்சி எழ, ப்ரெண்டா சற்றே அடங்க, ஆனால் அதற்குள், ''நாம் அங்குப் போவோம்'' என விருட்டென அவர் எழுந்து கிளம்பியது முத்தாய்ப்பு. நானும் லாம்ப்'பும் அவரைப் பின் தொடரும்போது, ''ஒரு புயலை அவள் மீது தூவி விட்டீர்கள் இன்ஸ்பெக்டர்...'' என்ற லாம்ப்'பின் பாராட்டுதலுக்கு செவி சாய்க்காது, விமான வேகத்தில் படிகளையும் பின் எதிர்ப்பட்ட சிறு தாழ்வாரத்தையும் கடந்து, மாடியில் தோட்டத்தை நோக்கியிருந்த ஓர் அறையின் வாயிலை அடைந்தார் டேவரெனர்.

அந்த அறையில், முப்பது வயது மதிக்கத்தக்க ஒரு வெள்ளை இளைஞனும், பதினாறு வயதில் திளைத்த ஒரு கறுப்பு வாலிபனும் இருந்தனர். நாங்கள் உள்ளே நுழைவதை இருவரும் கவனித்தனர். அந்த கறுப்பு வாலிபன் – சோஃபியாவின் தம்பி – ஆஸ்டஸ் எங்களை வெறுமனே பார்த்தான். லாரன்ஸ் ப்ரௌன், மனக்கிலேசம் மிக்க ஒரு துன்பப் பார்வையை இன்ஸ்பெக்டர் டேவரெனர் மீது பதித்தார்...! பார்வையை எடுக்கவேயில்லை...! ஓர் ஆளைக் கண்டதும் இப்படி மூர்ச்சைடைத்து பயம் கொள்ளும் ஆடவனை நான் இது வரை பார்த்ததேயில்லை. எழுந்தார். பின் ஏனோ உடனே அமர்ந்தார்! குளிர் கண்டவன் போல் நடுநடுங்க, ''ஓ...! வாங்க, இன்..ஸ்பெ..க்டர்..'' என்றார். புலியல்ல பூனையென லாரன்ஸை சோஃபியா வர்ணித்தது தான் எத்தனை சுத்தம்...!

''வணக்கம்'' என்ற டேவரெனர், சுருக்கமாய் பேசிக் கொள்ள முடிவெடுத்துள்ளதாய் பட்டது. ''உங்களுடன் சில வார்த்தைகள்...?''

''ஓ....நிச்சயமாய்...! என் பாக்கியம்..!'' என தேவையற்ற முகஸ்துதி தந்தார்.

''நான் வெளியே போயிருக்கவா இன்ஸ்பெக்டர்'' என்ற ஆஸ்டஸின் குரல் ஆணுக்கும் சிறுவனுக்கும் இடைப்பட்டக் குரலமைப்போடு இருந்தது. இதற்கு டேவரெனர் பதில் தருமுன், ''நா...ம்... பிறகு படிப்பைத் தொட..ரலாம்...'' என்று தட்டுத் தடுமாறிப் பேசி அனுப்பி வைத்தார் லாரென்ஸ்! ஆஸ்டஸ் தனக்கும் நடப்பவற்றிற்கும் ஒட்டுதலில்லை என்பது போல், ஒரு சாரணனின் இறுக்கத்தோடு நடந்து கதவைத் திறந்தான். அப்போது என்னைப் பார்த்து, தன் கழுத்துக்கு குறுக்கே ஆள்காட்டி விரலை வைத்து அறுப்பது போல் அசைத்து, பின் ஓர் அசட்டு இளிப்பைக் காட்டிவிட்டு வெளியேறினான். கதவு பட்டென்று அறையப்பட்டது!

''திரு லாரன்ஸ்...! எல்லோரிடமும் போலவே துவங்க வேண்டியுள்ளது...! லியோனைட் எஸரின் தந்துக் கொல்லப்பட்டு விட்டார் என்பது தீர்மானமாகி விட்டது.''

''நா...ன்.. அஅ... அதாவது, லியோனைட் விஷம் வைத்தாக் கொல்லப் பட்டுள்ளார்...? நான் எதிர்பார்த்தேன்...'' – லாரன்ஸ் என்னப் பேசுகிறோம் என உணர்ந்து தான் பேசுகிறாரா என்றே எனக்கு சந்தேகம் வந்து விட்டது.

''ஆமாம்...'' சுருங்க முடித்தார் டேவரெனர். ''இன்சுலினை மாற்றி யாரோ எஸரினை வைத்துள்ளனர். யாரது...?''

''என்னால் நம்ப முடியவேயில்லை... கொடுமை, கொடுமை...!''

''விவரணைக் கேட்கவில்லை திரு லாரன்ஸ்...! யாரது...? கொலை நோக்குடன் உள்ளேயே இருந்தது யார்...? அந்த நோக்கம் என்ன...?''

''ஒருவரும் கிடையாது... நிச்சயமாய்....!'' - லாரன்ஸின் குரல் ஒரு வேகத்தில் உயர்ந்தது.

''உங்கள் சட்ட ஆலோசகர் இப்போது இருக்க விருப்ப மில்லையா...?''

''எனக்கு அப்படி ஒருத்தர் இல்லை... தேவையுமில்லை. நீங்கள் கேள்வி கேட்கிறீர்கள். அதற்கு நான் தெரிந்த அனைத்தையும் வைத்து பதில் சொல்கிறேன். எதையும் மறைக்கவில்லை. எதையும் !'' என்று அறைந்தாற் போல் முடித்தார்.

''நீங்கள் இப்போது விசாரணையில் பேசுவதெல்லாம் வாக்கு மூலம் போல பதிவு செய்யப்படுகிறதென்பது நீங்கள் அறிந்தது தானே...?''

''நான் வெகுளி...! சத்தியப் பிரமாணம் செய்கிறேன் இன்ஸ்பெக்டர்...! இவ்விஷயத்தில், நான் வெகுளி...!''

''ஓ...! வெகுளி வெகுளி என நீங்கள் அரற்றுமளவுக்கு, நான் வேறு மாதிரி உங்களைக் குறிப்பிடவேயில்லையே'' - சில நொடிகள் இடைவெளி தந்து, அந்த இடைவெளியில் லாரன்ஸ் கண்களை நேருக்கு நேர் ஊடுருவிய டேவரெனர், ''திருமதி வியோனைட், அவரை விட பற்பல வருடங்கள் இளையவள்... இல்லையா...?'' என்று கேட்டு அவரை மூர்ச்சையாக்குமளவுக்குப் போனார்.

''நா...ன்... அப்படித்தான் நினைக்... அதாவது... ஆமாம்... ஆமாம்...!''

''இது, அவரை மிகத் தனிமையாய் உணரச் செய்திருக்கும்...! எப்பொழுதுமில்லாவிட்டாலும், எப்பொழுதாவது...!''

இதற்கு லாரன்ஸ் பதில் தரவில்லை. உலர்ந்திருந்த தன் உதடுகளின் மீது நாக்கினை ஓட்டி விட்டார்.

''அவள் ஒத்த வயதில் இங்கு ஒரு புது துணை கிடைத்தால் அது அவருக்கு ஒப்புதலாகவும் உகந்ததாகவும் தானே இருந் திருக்கும்...?''

''இல்..லை...! இருந்...திருக்...காது...! அதாவது இன்ஸ்... பெக்டர்.. எனக்குத் தெரியாது...''

''எனக்கென்னவோ, வெகு இயற்கையாய் உங்களிருவருக்கும் இடையே ஓர் ஈர்ப்பு உண்டாகியிருக்கும் என்றே தோன்றுகிறது.''

லாரென்ஸ் கடுமையாய் மறுத்தார். ''அப்படி எதுவும் கிடையாது. இல்லை. உங்கள் நினைவுக்குள் இருப்பது எனக்கொன்றும் விளங்காமலில்லை...! ஆனால், நிச்சயமாய் அவ்வாறு ஏதுமில்லை. திருமதி லியோனைட்ஸ் என்னிடம் எப்போதும் கனிவோடும் கருணையோடும் நடந்துக் கொண்டுள்ளார். அதற்காக அவர் மீது மரியாதையை – மிக உயர்ந்த மரியாதையை - நான் செலுத்தி வருகிறேன். இதனைக் கடந்து எந்த நாற்றமும் கிடையாது. நீங்கள் நினைப்பது மிக அபாண்டமான நம்ப முடியாத பழி. அபாண்டம். சண்டையிடுவது - கொலை செய்வது - இதெல்லாம் என் அகராதிக்குள் நுழைய இயலாதவை. நான் மிகவும் உணர்ச்சி வயப்படுபவன். வீணை தந்திப் போல...! ரொம்ப அழுத்தினால் அறுந்து விடுவேன்...! கொலை என்று நினைப்பதால் கூட நான் நடுங்குவேன் என்றும் ஓர் உயிரைக் கொல்வதை, மத ரீதியாய், நான் எத்தனை வெறுப்பவன் - எதிர்ப்பவன் என்பதையும், கடைசியாய் விசாரணை நடத்திய அதிகாரிகள் நன்றாகவே புரிந்துக் கொண்டனர். ஆஸ்டஸுக்கும் ஜோஸஃபைனுக்கும், மிகச் சிறப்பான போதனை தந்திருக்கிறேன். திரு லியோனைட்ஸ், திருமதி லியோனைட்ஸ், எடித்... என இவர்கள் மூவரும் என்னிடம் கனிவாய்தான் நடந்துக் கொண்டுள்ளனர். எல்லோரும்....! ஆனால் இப்பொழுது இப்படி ஒரு துரதிர்ஷ்ட சம்பவம் நடந்து விட, நீங்கள் *தான்* கொலைகாரனோ என என்னை சந்தேகப்படுகிறீர்கள்...! கொலைகாரன்...! கொலை காரன்...!''

டேவரெனர், லாரன்ஸை, உன்னிப்பாக, அவர் மனோ நிலையை மதிப்பிடும் நோக்கத்தில் பார்த்தபடி இருந்தார். பின், ''நான் அப்படி சொல்லவேயில்லை திரு லாரன்ஸ்... நீங்கள் தான் உங்களுக்கு அப்படி ஒரு முத்திரையைக் குத்திக் கொள்கிறீர்கள்.''

''சொல்ல வேண்டாம்....! நினைக்கிறீர்கள்...! எனக்குத் தெரியும் இன்ஸ்பெக்டர்...! உங்களைப் போன்றோரின் கருத்தால், எல்லோரும் என்னை அப்படியே நினைக்கிறார்கள்...! அக்கோணத்திலேயே பார்க்கிறார்கள்! உங்களோடு என்னால் இனி பேச முடியாது. எனக்கு உடல்நலமில்லை...!'' - மளமளவென எழுந்து, வேகவேகமாய் இவ்வறையை விட்டு வெளியேறி விட்டார் லாரன்ஸ்.

டேவரெனர் மெதுவாய் என் பக்கம் திரும்பி, ''சொல் சார்ல்ஸ்.... இவரைப் பற்றி என்ன நினைக்கிறாய்...?''

''தொட்டாற் சிணுங்கி பார்த்திருக்கிறேன். ஆனால் இது தொடாமலே சிணுங்கி...! பயந்தாங்கொள்ளி வேறு....!''

''இவருடன் பழகும் யாரும் சொல்லி விடலாம் இதை...! நான் கேட்டது வேறு. இவரால் கொலை செய்யயியலுமா...?!''

அப்போது உடனே இடைநுழைந்த லாம்ப், ''என்னைக் கேட்டீர்களானால், நிச்சயம் அந்த அசாத்திய தைரியம் இந்த மனிதனுக்கு கிடையவே கிடையாது எனத் தான் சொல்வேன்....! காய் நறுக்கும் கத்தியைக் காட்டுங்கள்.. நடுங்குவார்...!''

பொலக்'கென சிரித்த டேவரெனர், ''அது சரி லாம்ப்....! ஓர் உருட்டுக் கட்டையை எடுத்து ஒருவன் தலையில் அடித்தோ, அல்லது, துப்பாக்கி தூக்கி குண்டு பாய்ச்சியோ வேண்டுமானால் கொல்ல அஞ்சலாம்...! லியோனைட் வழக்கில் வெறும் சிறு பாட்டில்களின் இட மாற்ற விளையாட்டுத் தானே நிகழ்ந்துள்ளது....! ஒரு கிழவன் வலியேதுமின்றி அன்றோ விண்ணுலகம் அனுப்பப்பட்டுள்ளான்...!'' என்றார்.

''தீராத கொடிய வியாதியால் துடிப்பவனை வேறு வழியின்றி கொல்வது போல....!'' என்று சிறப்பான எடுத்துக்காட்டு கூறிய லாம்ப், ''வலியற்ற கொலை தந்து, பிறகு, சில காலம் பொறுத்து, எல்லோரும் கிழவனாரின் மரணத்தை மறந்த பிறகு, பல்லாயிரம் கோடிகளுக்கு சொந்தக்காரியான பெண்ணை மணந்துக் கொள்ள எண்ணமிருந்திருக்கலாமே....?!'' என்று கேட்டார்.

''ஓ லாம்ப்...! இதெல்லாம் எண்ணங்கள்...! நீளும் கற்பனைகள்...! நான் கடுமையாய் இருப்பது போல காட்டிக் கொண்டு தான் லாரன்ஸை அச்சுறுத்தினேன். ஆனால் அது எதையும் சாதித்து விடவில்லை! அவர், உண்மையாகவே இவ்வழக்கில் தொடர்பற்ற வெகுளியானவராக இருந்தாலும் இப்படித்தான் அலறியிருப்பார்....!'' என்ற டேவரெனர், பொதுவாய், ''இவராயிருக்குமா...? இல்லை, ப்ரெண்டா...? ஏன் அந்த எஸரின் நிரப்பப்பட்ட இன்சுலீன் பாட்டில் தூக்கியெறியப்படாமல் அங்கேயே ஒரு தடயமாய் போடப் பட்டது...?'' என்று காற்றில் பேசியவர், தலையை இடவலமாய் சில உலுக்குகள் உலுக்கிக் கொண்டு, ''நடந்தது, இப்போது இங்கு நடந்துக் கொண்டிருப்பது, எதைப் பற்றியுமா வேலைக்காரர்களிடம் உங்களால் அறிய முடியவில்லை...?'' என்று லாம்ப்'பைக் கேட்டார்.

''அங்கு வேண்டாமென்று தான் சொல்லவில்லை....! இப்போது சொல்கிறேன்....! ப்ரெண்டா வீட்டு வேலைக்காரி, இருவருக்கும் இடையே ஓர் ஈர்ப்பு இருப்பதாய் தான் சொல்கிறாள்...''

''எதன் அடிப்படையில்...?''

''அவளைப் பொறுத்தமட்டில் சமையற்கட்டின் அடிப்படையில்....!''

''அதாவது...?''

''அதாவது, குடுவையில் கொண்டு வந்து காபியை லாரன்ஸின் கோப்பைக்குள் ஊற்றும் ஒவ்வொரு முறையும் அவர்கள் பரிமாறிக் கொள்ளும் பார்வையின் ஆழத்தை வைத்து....!''

''பிரமாதம்...! இது, சட்டத்தின் பிடியில், பல நிலைகளை அள்ளித் தரும்...! வேறு வகையான கிசுகிசுக்கள்....?''

''வேறு யாரும் அப்படி பார்த்ததாய் நான் கேள்விப்பட வில்லை....!''

''பந்தயம் கட்டுகிறேன். பார்த்திருப்பர்....! இதை மீறியும் ஏதேனும் நடந்திருப்பின் அதையும் பார்த்திருப்பவர்...! சரி, என் கோணத்தில் விசாரித்து விட்டேன். இது இன்னும் ஆழம் போய் தோண்ட வேண்டிய விஷயமாய்ப் படுகிறது....!'' என்ற டேவரெனர் என்னைப் பார்த்து சிரித்தார். ''கிளம்பு. ப்ரெண்டாவிடம் மீண்டும் போ. பேசு. அந்த உரையாடல் மூலம் நீ அவளைப் பற்றி உணர்வது எனக்கு வேண்டும்...'' என்றார் என்னைப் பார்த்து.

''டேவரெனர்...! இது அதிகம்...! நான் வந்தது சோஃபியாவுடன் இளைப்பாற...!''

''சார்ல்ஸ்..'' என்றார் கறாராக.

நான் அரை மனதுடன், ஆனாலும் ஓர் ஈர்ப்பு நிறைந்த அக்கறையுடன் கிளம்பினேன்.

# 9

**நா**ங்கள் ப்ரெண்டா அறையை விட்டுக் கிளம்பும்போது இருந்த இடத்திலேயேத்தான் அவர் அமர்ந்திருந்தார். நிமிர்ந்து, கலக்கமற்ற கூர்மையான பார்வை பார்த்தபடி, நான் முழுவதுமாக அறையுள் நுழைந்து நிறையுமுன், ''இன்ஸ்பெக்டர் டேவரெனர் எங்கே...? அவரும் வருகிறாரா...?'' - என்றார்.

''இப்போதைக்கு இல்லை''

''பிறகு நீ ஏன் வந்தாய்...? முதலில் சொல்.... நீ யார்...?!''

கடைசியில், காலையிலிருந்து எந்தக் கேள்வி கேட்கப்பட்டு என்னை தர்மசங்கடமான நிலைக்குத் தள்ளி விடுமோ என நான் பயந்துக் கொண்டிருந்தேனோ, அக்கேள்வி கேட்கப்பட்டே விட்டது...! டேவரெனர் இப்போது என் கைகளில் இல்லையே....!

நான், இக்கேள்விக்குத் தேவையான அளவு உண்மையை, பதிலாக்கினேன். ''நான் போலீஸ் உத்தியோகத்தோடு தொடர்புடையவன்... இக்குடும்பத்தின் நண்பனும் கூட....!''

''குடும்பம்..! எது...? இதுவா...! மிருகங்கள்...! மிருகக் கூடாரமிது...! இக்குடும்பத்தினர் அனைவரையும் நான் வெறுக்கிறேன்...! போ...! போய் உன் இன்ஸ்பெக்டரிடம் சொல்லிக் கொள்....! இங்கு ஒருத்தரைக் கூட நான் விரும்பவில்லை...! அனைவரையும் வெறுக்கின்றேன்...!''

அவள் பேசிவிட்டுக் கண்களையெல்லாம் விலக்கிக் கொள்ளாமல் என்ன செய்வாய் எனும் ரீதியில் என்னைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள். பற்கள் கோபத்தில் நறநறத்துக் கொண்டிருந்தன. அவள் பயத்திலும், கோபத்திலும், உள்ளூர வன்மத்திலும் புகைந்துக் கொண்டிருந்தாள்.

''அவர்கள் என்னிடம் எப்போதுமே முரட்டு மிருகங்களாய்த் தான் நடந்துக் கொண்டிருக்கின்றார்கள். எப்போதுமே. முதலிலிருந்தே. இந்த வீட்டுக்குள் நான் காலடி எடுத்து வைத்தக் கணத்திலிருந்தே.

நான் ஏன் அவர்களுடைய அருமை தகப்பனாரை மணக்கக் கூடாது....! இதில் *இவர்கள்* அத்தனை பேருக்கும் என்ன பாதகம்....! லாரி லாரியாக ஒவ்வொருவருக்கும் பணம் உள்ளது....! அவ்வளவு கொடுத்திருக்கிறார் *அவர்*...! முட்டாள்கள்...! சுயமாய் சம்பாதிக்க புத்தியற்றவர்கள்....! இந்த உண்மை விசாரணையின் போது உங்களுக்கும்தான் தெரிய வந்திருக்குமே....! பின் ஏன் முழிக்கி றீர்கள்....!''

நிறுத்தவில்லை... அவர் தொடர்ந்துக் கொண்டேயிருந்தார்:

''ஏன்...? ஓர் ஆள், வயதாகிப் போன ஒரே காரணத்திற்காக மணமுடிக்கக் கூடாதா என்ன....! அவர் வயதானவரே கிடையாது....! அவரைப் பொறுத்தமட்டில், அவர் வாழ்க்கை முறையைப் பொறுத்தமட்டில், அவர் மனத்தினைப் பொறுத்த மட்டில், அவர் கிழவனாரேக் கிடையாது...! அவரை நான் *விரும்பியிருக்கிறேன்*...! என்னை அவராகவே பாவித்து, எல்லையற்ற வண்ணம் விரும்பி யிருக்கிறேன்....! *விரும்புகிறேன்*....!'' - மேலும் மோதலாமா எனும், பார்வையைப் பார்த்தார். நான், ''ஓஹோ... ஓஹோ...'' என்று அவர் சொன்னவற்றைக் கிரகித்துக் கொண்டேன்.

''நீ நம்பவில்லை என எண்ணுகிறேன்....! ஆனால் இதுவே உண்மை....! எனக்கு ஆண்களைக் கண்டாலே பிடிக்காது... வெறுப்பு...! ஆனாலும் - எனக்கென ஒரு வீடு, அதில் என்னை எப்போதுமே கிளர்ச்சியடைய வைக்கவும், தடபுடலாய் உணர வைக்கவும், புகழ்ந்துத் தள்ளவும் ஒரு ஜீவன் - என எதிர்பார்ப்புகள் இருந்தன. இது மட்டுமே என் தணியாத தாகம்....! என் கணவர், என் தேடலுக்கான அப்பழுக்கற்ற பதிலாய் வாய்த்தார்...! லியோனைட் என்னைக் குளிர்விக்கும் வார்த்தைகளைத் தான் பேசுவார். வார்த்தைக்கு வார்த்தை ஹாஸ்யம்...! இதில் மகா கெட்டிக்காரர் அவர்....! இவை எப்பொழுதும் என்னை உச்சாணிக் கொம்பில் நிறுத்தும்! அவரற்ற ஒரு நொடிப் பொழுதுகூட சூன்யம் என்றானேன்....! பேச்சு சுவாரஸ்யத்தின் மூலம் மட்டுமே அவரைச் சுற்றியிருந்த இந்த வெட்டி உறவுகள் அத்தனையையும் தன் காலடியில் வைத்திருக்கும் வித்தையைக் கற்று வைத்திருந்த மகா புத்திசாலி! அவர் மரணம் ஒரு துர்பாக்கியம். இது சம்பவித்ததில் எனக்குக் கிஞ்சித்தும் நிம்மதி கிடையாது....!''

தான் அமர்ந்திருந்த சோஃபாவில் தன்னை இன்னும் வசதியாக்கிக் கொண்டார். ப்ரெண்டாவின் உதடுகள் சற்றே அகலமானதாக

இருந்தன; அவை, வலப்புறமாய் சுழிந்து, இப்போது என்னைப் பார்த்து சந்தேகப் புன்னகையைக் காட்டின.

''நான், லியோனைட் கைகளில், பாதுகாப்பாக, முழு சந்தோஷத்தோடு இங்கு வாழ்ந்துள்ளேன். நான் கேள்விப்படும் அத்தனை நவநாகரீக உடை உள்ள கடைகளுக்கும் செல்வேன். நகை கடைகள் - அழகு சாதனக் கடைகள் - பொம்மைக் கடைகள் - ஓவியக் கடைகள் - நல்ல மரச் சாமான் விற்கும் கடைகள் - எதையும் விட்டு வைக்க மாட்டேன். வேண்டிய பணம் தந்து அனுப்பி வைப்பார். மற்றவர்களைப் போலவேத் தான் நானும் நல்ல முறையில் குடும்பம் நடத்தி வந்தேன்'' என்ற ப்ரெண்டா, கைகளை நெட்டி முறித்து விட்டுக் கொண்டு தொடர்ந்தார்: ''ஆனால் நான் மட்டும் தான் லியோனைடைக் கொலை செய்ய வல்லவள்... ஏனென்றால், நான் அவர் மனைவி. இளையாள். அதுவும் எப்படி...! அறுபது வயது வித்தியாசமுள்ள இளையாள். இந்த உப்பு சப்பற்றக் காரணத்தால்...! இல்லையா....?!'' - என்று நெஞ்சு ஆதங்கத்தைக் கொட்டித் தீர்த்து விட்ட தொனியில் சற்று அமைதி கண்டார்.

அப்போது நெட்டி முறித்ததால் அகண்டிருந்த அவள் விரல்களைப் பார்த்தேன். நகம் விரித்த பூனையின் கூரிய விரல்கள் போலிருந்தன, அவை! இறுக்கமான தன் மன எண்ணங்களை என்னிடம் கொட்டுவது போலத் தான் பட்டது...! இருந்தாலும், சந்தோஷ ஊளையிடும் நாயின் ஒலி ஏற்படுத்தி, அவருக்குள் சிரித்துக் கொண்டுத்தானிருந்தார்! எனக்கு சற்றே பயம் தோன்றியது.

அவர் கைகளில் நீண்டு கூராக்கப்பட்டிருந்த நகங்களின் ஆபத்தினை உணர்ந்து, ''ஒரு வயதானவரின் தாதியாகவும் நீங்கள் இருந்திருக்கிற சூழலில் இத்தனை நீண்ட கூரிய நகங்கள் உங்களுக்கு அபாயமானதாய் தோன்றவில்லையா...?'' என்றேன்.

''ஓ... இவையா...? பெரிதாகவும், கூரானதாகவும் நகங்கள் வளர்ப்பதில் அலாதி பிரியம் எனக்கு. இதோ இது போல....'' - நகங்களை விரித்து, என் பக்கம் திருப்பி, இடவலமாய் ஆட்டி ஆட்டி - ''நகச்சாயம் பூசி பளபளக்க வைப்பதில் எனக்குக் கொள்ளை ஆசை...! இதற்கு லியோனைட்ஸ் என்றும் தடை விதித்ததில்லை'' என்றவர், என் பக்கம் சாய்ந்து, ''நாங்கள் சந்தித்தது பற்றி நீங்கள் அறிவது அவசியம்....! அது உதவும்...!'' என்று இதற்கு என்னிட மிருந்து பதிலேதும் எதிர்பாராது, தொடர்ந்தார்:

''நான் பணியாற்றியது, ஒரு சிறு உணவகம். வந்திருந்தார். முட்டைப் பொடிமாசு கேட்டார். நான் தயார் செய்து பரிமாறும்போது, கண்கள் கலங்கியிருந்தேன். மன வேதனை. இதனை கவனித்து விட்டு அவரருகிலிருந்த நாற்காலியை இன்னும் தன்னருகில் இழுத்துப் போட்டு அதில் உட்கார் என்றார். அலறி விட்டேன். உணவகம் வருவோரிடம் சரிக்குச் சரியெல்லாம் உட்காரக் கூடாது. உதை விழும். வற்புறுத்தவே, உட்கார்ந்தால் என்ன நடக்கும் என்று எடுத்துக் கூறினேன். அப்படியேதும் நிகழாது என்றும் அவர் தான் அவ்வுணவகத்தின் முதலாளி என்றும் சொன்னார். நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்தேன். அவர் உணவகம் நுழைந்ததிலிருந்து, உடல் விகிதாச்சாரமே அற்ற குள்ளன் என்று தான் எண்ணினேன்...! ஆனால் அருகிலிருந்து பார்க்கும் போது, அந்தக் கனிவான கண்களிலும், எதிரிலுள்ளவராகவே மாறிப் போக்கும் அவரின் முக பாவத்திலும், பெரும் கவர்ச்சி மிளிர்ந்தது. கவர்ச்சியென்றா சொன்னேன்...? தவறு, தவறு....! ஈர்ப்பு...! ஈர்ப்பு தான் சரியான வார்த்தை...! ஈர்ப்புப் பொங்கியது....!'' - என அவர்களின் முதல் சந்திப்பினை ஆர்வம் பொங்கப் பொங்க விவரித்த வண்ணமிருந்தார் : ''இப்படி ஒரு கனிவைத்தான் எதிர் நோக்கி பலகாலம் காத்திருந்தேன். அன்று தான் பலன் கிட்டியது. தவறோ சரியோ என்றெல்லாம் யோசிக்கவில்லை...! என் வாழ்க்கை அனுபவத்தைக் கொட்டித் தீர்த்தேன்...!'', என்ற ப்ரெண்டா சட்டென்று ஆர்வம் குன்ற, ''இந்த வீட்டிலுள்ளோரிட மிருந்து, நான் எந்த நிலையில் அந்த ஓட்டலில் அவரைச் சந்தித்தேன் என்ற கதையை, கட்டுக் கதையை, விசாரணை எனும் பேரில் நீங்கள் சேகரித்திருப்பீர்களே....!'', என்று கேட்டார். விட்டுப் போயிருந்த கோபமும் கிண்டலும் அவருக்குள் கொஞ்சம் கொஞ்சமாக புகுந்தன. இதற்கு நான், அப்படி எதும் விசாரணைத் தகவல்கள் இல்லை என்றதும், ''கேட்டுப் பாருங்கள்....! அங்கு மிக மோசமான வாழ்க்கையை நான் நடத்தியதாக கதைக் கட்டி விடுவார்கள்....!'' என்று சொல்லி விட்டு, மறுபடியும், வியோனைடுடனான முதல் சந்திப்பின் விவரிப்பில் ஆர்வம் மேலோங்க மூழ்கினார்.

''ஆனால், அப்படி எந்த விதமான தகாத வாழ்க்கையும் நான் அங்கு வாழவில்லை. நான் மிகச் சிறப்பாகவும் குடும்பப் பாங்குடனும் தான் வளர்க்கப்பட்டேன். துணிகளில் ஊசி நூல் கொண்டு வரையப்படும் ஓவியக் கலை சம்பந்தப்பட்ட பெரிய

கடையே தொழில். பல ஆண் சகவாசங்களோடு அலையும் வகையல்ல நான். ஆனால் டெர்ரி வித்தியாசமானவன். அல்லது வித்தியாசமானவனாய் எனக்குத் தோன்றினான்'' என்று சொன்னவர், கடைசியில் அழுத்திச் சொன்னதை நான் அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது போல ஐந்து நொடிகள் இடைவெளி தந்து தொடர்ந்தார்: ''அவன் ஜரீஷ் என்றும் பல வெளிநாடுகளுக்குப் போய் வருவதாகவும் குறிப்பிட்டான். கடிதம் அது இது என்றெல்லாம் அவன் ஏதும் என்னிடம் வைத்துக் கொள்ளவில்லை. புத்திசாலி. நான் தான் முட்டாள் - தானாக மாட்டிக் கொள்ளும் சில பேதைப் பெண்களைப் போல....!'' என்ற ப்ரெண்டாவின் குரல், வெளிப்பகட்டைக் கண்டு விழுந்தத் துடிப்பிலிருந்தது.

''பட்டதெல்லாம் சரியாகிப் போகும் என்று லியோனைட் உதிர்த்த ஒரு வார்த்தையில் மீண்டது என் சொர்க்கம். தானும் தனிமையில் இருப்பதைக் குறிப்பிட்டார். நாமிருவரும் இக்கணமே மணமுடித்துக் கொள்வோம் என்றார். எத்தனை பெரிய மனிதர்...! கோடீஸ்வரர்....! கும்பல் கும்பலாக கடைகளையும், இரவு விடுதிகளையும், உணவகங்களையும் வைத்து நடத்தும் உரிமையாளர்...! என்னைப் பெண்ணாகக் கேட்கிறார்....! கனவு தானா....! கற்பனை தேவதை கதையா...!'' என்று திளைத்தார் ப்ரெண்டா. ''மறு தினமே இருவரும் அங்கிருந்த சிறு சர்ச்'சில் திருமணம் செய்துக் கொண்டோம். அன்னியோன்யம் வளர வெளிநாடு சென்றோம்....!'' - என்று ஏதோ யாராலும் பெற முடியாத வெற்றியை சாதித்த தொனியில் சிரித்தார், அதே, வலப்புற சுழிப்படங்கிய வினைப்புன்னகை!

''அவருக்கு எந்தக் கட்டத்திலும் சிறப்பான மனைவியாக இருக்க வேண்டும் எனும் சபதத்தின் பேரில் தான் கை பிடித்தேன். அப்படியே தான் அவர் இறுதி மூச்சு வரை இருந்தேன். அவருக்கு விருப்பமான உணவு வகைகளைப் படைத்து நிரப்பினேன். அவரை மயங்க வைக்கும் உடைகளைத் தான் உடுத்தினேன். அவரைத் திருப்திப் படுத்தும் எதுவாயினும் - அது நிலவிலிருந்தாலும் பிடித்து வந்து - நிறைவேற்றினேன். சந்தோஷமாயிருந்தார். என்ன இருந்தாலும், அவரின் பெரிய இக்குடும்பத்திலிருந்து நாங்கள் வெளியேற மட்டும் முடியவில்லை. எல்லோருக்கும் லியோனைடைப் பார்க்க வேண்டும்...! அவரின் அணைப்பிலேயே இருக்க வேண்டும்....! அவரின் பாக்கெட்டில் உட்கார்ந்து காலம் ஓட்ட வேண்டும்...! ம்...!

சோம்பேறிக் கழுதைகள் ...! அந்தக் கிழ ஹெவிலேண்ட்....! நாங்கள் கை கோர்த்தவுடனேயே அவளைத் துரத்தியிருக்க வேண்டும். இவரிடம் சொல்லியும் பார்த்தேன். அவள் இங்கு பல வருடமா யிருப்பதாகவும், இது அவள் வீடாகி விட்டதென்றும் தட்டிக் கழித்து விட்டார். ஆனால் நிஜக் காரணம் அதுவல்ல. உண்மையில், எல்லா உறவும் பெரியவரைச் சுற்றியிருக்க வேண்டுமென்பது தான் அவரின் அபிலாஷை. அவர் காலடியில் எல்லாரும் இருப்பதில், அல்லது இருப்பது போல் பாசாங்கு பண்ணுவதில் கூட, அவருக்குத் திருப்தி தான்...! அத்தனை பேரும் என்னிடம் மட்டும் மிருகத்தனமாய்த் தான் நடந்துக் கொண்டிருக்கிறார்கள்....! இதனை அவர் பொருட் படுத்தியதேயில்லை...! ரோஜருக்கு - அவனைப் பார்த்து விட்டீர்கள், இல்லையா...?! - அவனுக்கு என்னைக் கட்டோடு பிடிக்காது. எப்போதும் என்னை வெறுப்பான். பொறாமை. பணப் பேராசை. இப்போது எல்லோரும் நான் கொலை செய்ததாய் பாசாங்கு செய்கின்றனர். திசை திருப்புகின்றனர். நான் செய்யவில்லை. ஆம்...! என் அருமை உயிரை நான் கொலை செய்யவில்லை...!'' என்ற ப்ரெண்டா, அதீதமாய் என்னை நெருங்கி, ''நம்புங்கள்....! நான் என் லியோனைடைக் கொல்லவில்லை....!'' என அன்பு தழுதழுக்க முடித்தார்.

எனக்கு ப்ரெண்டாவைப் பார்க்க பரிதாபமாயிருந்தது. அவமதிப் பும் வெறுப்பும் நிறைந்த வார்த்தைகளால் ப்ரெண்டாவை அறிமுகம் செய்து, அவரே கொலையாளி என விழுந்து விழுந்து அவசரப்பட்ட குடும்பத்தினரின் போக்கு, மனிதாபிமானம் மிக்கதாய் படவில்லை. ப்ரெண்டா இங்கு தனித் தீவு. பாதுகாப்பாற்றவர். எனவே வீழ்த்தப்படுகிறார்.

மறுபடியும் தன் பேச்சு ரயிலை இயக்கினார்: ''நான் கொலையாளி. இதை மறந்து விட்டார்களேயானால், லாரன்சைப் பிடித்துக் கொள்வார்கள்....! அவர் கொலையாளி...!''

''லாரன்ஸ் பற்றி...?''

''லாரன்ஸின் நிலைமை பார்த்து மிக வேதனைப்படுகிறேன். அவர் ரொம்ப சாது. வலுவுக்கு மட்டுமல்ல, வந்த சண்டையை கூட அவரால் எதிர்க் கொள்ளயியலாது. அவர் கோழை என்பதால் அல்ல. அவர் மிக உணர்ச்சிவயப்படுபவர்... அதனால்...! இந்த குணாதிசயத்தை விட்டு வெளியே அவர் வர, அவ்வப்போது அவருக்கு புத்துணர்ச்சி தருவது போல பேசி, சந்தோஷப்பட வைப்பேன். இவ்வளவு

சாதுவானவர். பேய் போன்ற அந்த இரு குழந்தைகளுக்கு பாடம் சொல்லித் தர வேண்டும். சிரமப்படுவார். ஆஸ்டஸ் எப்போதும் அவரை வம்புக்கிழுப்பான்! ஜோஸஃபைன்... ஊஃப்ப்ப்... பெண்ணா அது...! ஜோஸஃபைனைப் பார்த்தாயா....? அவள் எப்படிப்பட்டவள் என தெரியுமா...?''

இதுவரை அவளைப் பார்க்காததால், அவளின் குணாதிசயம் தெரியாது என்றேன்.

''மூளை குழம்பிய பெண்ணோ என சில சமயம் நினைப்பேன். பிறரை நோட்டமிடுவதில் அசிங்கமான வழி வகைகள் கற்று வைத்துள்ளாள். ஒளிந்திருந்து பார்ப்பது, ஒட்டுக் கேட்பது....! சே சே....!'' என்று ஆரம்பித்தவரை லாரன்ஸ் யார், அவன் பூர்வீகம் என்ன என்று கேட்டு விடுபட்ட உரையாடலுக்குத் தாவினேன். ஜோஸஃபைன் இப்போது முக்கியமாய் எனக்குத் தேவைப்பட வில்லை.

இக்கேள்விகளை ஒதுக்கித் தள்ளினார் ப்ரெண்டா. ''அவர் இவ்வழக்கோடும் வீட்டோடும் துளியும் சம்பந்தப்படாதவர். அப்படிப்பட்ட ஒருவருக்கெதிராய் ஏன் வழக்கு ஜோடிக்க வேண்டும்...?'' - இத்தனை நேரம் சற்று அமைதியாய் போய்க் கொண்டிருந்த ப்ரெண்டாவின் குரல், லாரன்ஸ் பற்றி ஆரம்பித்ததும் கோபங்கொண்டது.

''அடிக்கடி நீங்கள் உங்கள் சுயக் கட்டுப்பாட்டை இழந்து விடுகின்றீர்கள்...! கவனித்தீர்களா....! ஏனப்படி..? ஏதேனும் மனக் கோளாறா...?''

''வாயை மூடு....! யாரைப் பார்த்து என்ன கேள்விக் கேட்கிறாய்....! முதலில் கிளம்பு. போ. அவர்களனைவரும் லாரன்ஸ் தான் கொலையாளி என வழக்கை மூடப் பார்க்கிறார்கள்; அல்லது நான் செய்தேன் என...! இல்லையா..? காரணம் போலீஸ் அவர்கள் பக்கம் உள்ளது. என் பக்கம் யார் உள்ளார்கள்...? பதில் சொல்...! ஏன் போசமலிருக்கிறாய்...! நிர்க்கதியான பெண் அபாண்டமாய் பழி போடப்படும்போது குமுற மாட்டாளா...? ம்...? அப்படி ஒரு பெண் குமுறினால், அவள் மனக் கோளாறுள்ளவளா...? கடித்துக் குதறாமல் விட்டேனே, அது உன் அதிர்ஷ்டம்...'' - என்று பார்வையையும் முகத்தையும் என்னிடமிருந்து விலக்கி வேறு திசையில் திருப்பிக் கொண்டார். டேவரெனர் போல் வலிக்காமல் கேட்க என்னால் முடியவில்லை என உணர்ந்தேன். கொஞ்சம் அதிகமாய், முதிர்ச்சியற்றுப் பேசி விட்டதாய் பட்டது.

''மன்னிக்கவும் ப்ரெண்டா. வழக்கு பற்றி அதிகம் யோசித்து நீங்கள் நிம்மதியிழக்கத் தேவையில்லை. உண்மை வெளி வரும்.''

''அவர்களில் ஒருவர் ஏன் கொன்றிருக்க கூடாது...? இல்லை, வெளியிலிருந்து யாரேனும் செயல்படுத்தியிருக்கக் கூடாதா...? இல்லை, குவிந்துக் கிடக்கும் வேலைக்காரர்களில் ஒருவன்...?''

''அவர்களனைவரிடத்தும் கொலை புரிந்திருக்கலாம் என சந்தேகிக்க எந்த நோக்கமும் தென்படவில்லையே....!''

''ஓ...! நோக்கம்...? என்னிடத்திலும் அல்லது லாரன்ஸிடத்திலும் என்ன நோக்கத்தைக் கண்டு கிழித்தீர்கள்....?''

''சொல்ல கடினமாயிருந்தாலும் வேறு வழியில்லை. உங்களுக்கும் லாரன்ஸுக்கும் காதல் தொடர்பு உள்ளதாயும் இருவரும் கல்யாணம் செய்துக் கொள்ள உத்தேசிருப்பதாயும் அனைவராலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றது. இதுவே உங்களிருவரின் மேல் எங்களை உற்று நோக்க வைக்கும் நோக்கம், ப்ரெண்டா...!''

உடனே நெட்டுக் குத்தலாய் நிமிர்ந்து உட்கார்ந்தார். அடித்து விடுவாள் போல தோன்றிற்று! ''அது ஒரு தந்திரத்தனமான பேச்சு. உண்மையேயல்ல. எங்களிருவருக்குமிடையே, ஒரு முறை... ஒரே ஒரு முறை கூட அந்தக் கோணத்தில் சந்திப்போ பேச்சு வார்த்தையோ நிகழ்ந்தது கிடையாது. அவரின் பயந்த சுபாவத்தின் மீதான பரிவின் காரணமாக அவரை உற்சாகமூட்ட முயன்றிருக்கிறேன். அவ்வளவே. மிக நல்ல நண்பர்களாய் உள்ளோம். தவறா...? உன்னால் என்னை நம்ப முடியவில்லை...?''

நம்பினேன். ப்ரெண்டாவும் லாரன்ஸும், இவர் குறிப்பிட்டது போல, நல்ல நண்பர்களே என நம்பினேன். இருந்தாலும், லாரன்ஸின் குழந்தை போன்ற பயந்த சுபாவமும், அதனால் தோன்றும் வெகுளித் தன்மையும், வெளியில் பரிவாகவும், ப்ரெண்டா அறியாமலேயே அவருக்குள் காதலாகவும் வேரூன்றியிருக்கும் எனவும் நம்பினேன்! ஒரே வயதல்லவா...! இந்த எண்ணத்தோடு ப்ரெண்டாவிடம் விடைபெற்றுக் கொண்டு, சோஃபியாவைத் தேடி கீழ் தளம் வந்தேன்.

வந்ததோ, சோஃபியாவுடன் காதல் பரிமாற...! இருப்பதோ ப்ரெண்டாவிடம்...! விதி...!

கீழ்த்தளம் வந்து வரவேற்பறையுள் நுழையும் போது ஏற்பட்ட ஓசை கேட்டு, அறையின் எதிர்க் கோடியில் பக்கவாட்டிலிருந்த சமையற்கட்டிலிருந்து தலை நீட்டி சோஃபியா ''ஹாய்...'' என்றாள். ''இங்கு சமையலில் உதவிக் கொண்டிருக்கிறேன்...''

சமையலறைக்குள்ளேயே சென்றிருப்பேன். அதற்குள் வெளியே வந்து, சமையலறை கதவை எத்தி மூடி, என் உள்ளங்கை பற்றி, காலியாயிருந்த வரவேற்பறைக்குள் என்னை செலுத்தினாள். ''சொல்... ப்ரெண்டாவைப் பார்த்தாயா...? அவளைப் பற்றி என்ன கிரகித்தாய்...?''

''அவளுக்காக ரொம்ப வருத்தப்படுகிறேன், சோஃபி.''

''ஓ..'' - வெறுப்பும் பொறாமையும் காட்டி என்னைப் பார்த்தாள். ''உன்னையும் தன்னகப்படுத்தி விட்டாளா...?''

இது என்னை எரிச்சலாக்கியது. ''என்னால் அவளின் பக்கத்தை பாகுபாடின்றி படிக்க முடிந்தது. பலவித முடிவுகளில் இருக்கும் உன்னாலோ, உன்னைச் சார்ந்தவர்களாலோ அது முடியாது....''

''அவளின் எந்தப் பக்கம்...? ம்...?'' என்று குரலை சற்று வேற்றுமையாக்கிப் பேச ஆரம்பித்தாள்.

''உண்மையாய் சொல் சோஃபியா....! உங்கள் குடும்பத்தில் யாராவது அவளிடம் அன்பாய் இருந்ததுண்டா...? அவள் இங்கு வந்த நாள் முதல், பக்கத்து வீட்டு பிரஜையிடம் காட்டும் அன்பையாவது காட்டியதுண்டா...?''

''இல்லை... அவளுக்குப் பரிவு காட்டியதில்லை தான்....!''

''அதனால் தான் சொன்னேன் உங்களால் அவள் பக்கத்து வாதத்தை உணர முடியாதென்று....!''

''அதை விடு...! ஏன் பரிவு காட்ட வேண்டும்....?''

''இதென்ன கேள்வி சோஃபியா...?! ஒரு கிருத்துவனுக்கே உரிய போதனைப்படி மற்றொரு ஜீவனிடத்தில் காட்டப்பட வேண்டிய குறைந்தபட்ச அன்பைக் கூடவா காட்டியிருக்கக் கூடாது...?''

''ஓஹோ...! எத்தனை பெரிய மத ரீதியிலான நிலையெடுக்கிறாய் சார்ல்ஸ்....! ப்ரெண்டா, அவளின் திறமை முழுதையும் உன்னிடம் காட்டியிருக்க வேண்டும்....!''

''ஏனிந்தக் காட்டம்....? உனக்கென்ன ஆயிற்று...? காலை வந்ததிலிருந்து இப்போது தான் முதல் முதலாய் உன்னுடன் தனிமை யில் உள்ளேன்....! சொல்லக் கூடாததை சொல்லி விட்டது போல் ஏன் சீறுகிறாய்....?''

''நானும் உண்மையைத் தான் சொல்லுகிறேன். பழி போட வில்லை. ஓ கே! ப்ரெண்டா பக்கத்து நியாயத்தை, அல்லது அநியாயத்தைப் பார்த்து விட்டு, அதை என்னிடம் மீண்டும்

விளக்குகிறாய், ஏதோ அவளுடைய வக்கீல் போல....! இருக்கட்டும். இனி என் பக்கத்து நியாயத்தைப் பார்....''

''ஏன், நீ இப்போது சொல்லப் போவது மட்டும் உன் பக்கத்து அநியாயமாக இருக்கக் கூடாதா என்ன...?''

அவள் நான் சீண்டிக் காட்டியதைப் பொருட்படுத்தியதாய் காட்டிக் கொள்ளவில்லை. பேசினாள்: ''எனக்கு அவள் தாத்தாவைக் கைபிடித்த கீழ்த்தரமான வழி பிடிக்கவில்லை. தன்னைப் பற்றி தானே ஒரு கண்ணீர் கதை தீட்டிக் கொண்டு, காத்திருந்து, சமயம் பார்த்து, அதை வயதான பணக்காரரிடம் நடித்து ஜெயித்து, அந்த பலத்தில் அவரை மணக்கும் இரண்டாந்தர வாழ்க்கை...! காரண காரியம் கூறாமல் இவ்வகை ஈனப் பிறவிகளை ஒதுக்கித்தள்ள எனக்கு சர்வ உரிமை உண்டு....! ஏன்., எங்களுக்கு சர்வ உரிமை உண்டு...! அவள் இவ்வீட்டுக்குள் நுழைந்த வழி புரிந்தால் - அந்த உண்மை உறைத்தால் - நீயும் அவளை விரும்ப மாட்டாய்...''

''ப்ரெண்டா, பெரியவரிடம் சொன்ன அவளின் கதை, கற்பனைக் கதையா...?''

''ஒன்று தெரியுமா... அவளுக்குக் குழந்தை ஒன்று இருப்பதாயும் சொல்லியிருக்கிறாள்....! விவரம் எனக்குத் தெரியாது. ஆனால் நம்பத் தோன்றுகிறது''

''இவர் கூறிய தன் பரிதாபக் கதையால் தான் உன் தாத்தா கவரப் பட்டார் என்கிறாயா...?''

''ஓ...! தாத்தாவா.....? இவளின் கண்ணீர்க் கதையை நம்பியிருப்பாரா...?!!'' - என ஆச்சரியப்பட்டு கிடையவே கிடையாது என சிரித்தாள். ''தாத்தா ஒரு பலம். மாபெரும் பலம். யாராலும் மடக்கிப் போட முடியாது. அவர் கண்ணாமூச்சியாட ஒரு பிச்சைக்கார நிலையிலான ஆதரவற்ற பெண் தேவைப் பட்டது. தேடலிலிருந்தார். பிரெண்டாவைப் பார்த்தார். தன் திட்டத்தை அழகாய் செயலாக்கி னார். தாத்தாவைப் பொறுத்த மட்டில், இத்திருமணமும், அவர் துணிவாய் திறந்து வெற்றி கண்ட பல அலுவலகங்களைப் போன்ற ஒன்று....! அவ்வளவே!''

இப்படி பிறந்த சோஃபியாவின் பதிலை எதுகையாக்கி, மோனையாய் ஒரு கேள்வி வைத்தேன்: ''லாரன்ஸை ஆசிரியனாக நியமித்தும் அவரின் வெற்றி தானோ....?!''

இக்கிண்டலுக்கு அவள் கோபமானாள்.

''நிச்சயமாக'' என்று அடித்துச் சொல்லித் தொடர்ந்தாள் : ''அவரின் குறிக்கோளை நோக்கும் போது, லாரன்ஸின் நியமனம் ஒரு வெற்றியே! ப்ரெண்டாவை சந்தோஷமாகவும், கேலி கிண்டல் நிறைந்த நட்புறவோடும் வைத்திருக்க, வேண்டிய பிரயத்தனப்பட்டார் தாத்தா. இதில், வாங்கித் தந்த நகைகளும் விலையுயர் ஜவுளிகளும் அவருக்குப் போதுமானதாய் தோன்றாமல் போயிருக்கலாம். அவள் வாழ்வில், இளமையான குதூகால ஆர்ப்பாட்டங்களில் வெற்றிடம் உள்ளதாய் உணர்ந்திருக்கலாம். குற்றவுணர்ச்சி எனச் சொல்ல வரவில்லை.... அதெல்லாம் தாத்தாவைத் தாக்காது....! ஓர் எண்ணம் இருந்திருக்கலாம் எனும் வகையில் சொல்கிறேன்....! லாரன்ஸைப் போன்ற சாதுவான *அப்பிராணி* தான் சரி என அவர் கணித்திருக்க லாம்....! அப்பிராணியாயில்லாத ஆளாயின், ஒன்று இவளின் ஆரவார குணத்துக்குப் பணியாமல் போய் விடலாம்....! அல்லது இவளோடு போய் விடலாம்...! ஆக, சிக்கலற்ற இளந்துணையாய் லாரன்ஸ் போன்ற மரக்கட்டையை விட வேறு யார் அமைய முடியும்...?! ஆத்மார்த்தமான அதே சமயம் நத்தை போல் கூட்டுக்குள்ளேயே வாழும் லாரன்ஸின் இளமை அருகாமை மட்டும் தானே, அதே வயதுடைய வேறு யாரிடமாவது வெளியில் நிஜத் தொடர்பு வைத்துக் கொள்வதிலிருந்து ப்ரெண்டாவைத் தடுக்கும்! இப்போது சொல்... லாரன்ஸின் நியமனம் ஒரு வெற்றி தானே....! இப்படியெல்லாம் சிந்தித்துத் தான் லாரன்ஸைக் கொண்டு வந்திருப்பார் என நான் சொல்ல வரவில்லை....! ஆனால் தாத்தா ஒரு வயதான பிசாசு.....! தெரியுமா...?''

''தெரியாது. ஆனாலும் இருக்கலாம்'' என்றேன் நான்.

''ஒரு வேளை இது கொலை வரை கொண்டு சென்று விடும் என அவர் உணர்ந்திருக்க மாட்டார்....!'' என்று சொன்ன அதே அதீத கோப நிலையிலேயே தொடர்ந்தாள் : ''இந்த ஒரே காரணத்தால் தான் இக்கொலையில் ப்ரெண்டா சம்பந்தப்பட்டிருக்க நியாயமில்லை என்று நான் நம்புகிறேன். தாத்தாவை ப்ரெண்டாவோ, அல்லது அந்த அப்பிராணியோ, அல்லது இருவருமோ கொன்று விட திட்டமிட்டி ருப்பின், அது சர்வ நிச்சயமாய் தாத்தாவுக்கு எப்பொழுதாவது விளங்கியிருக்கும். தாத்தா ஒரு மோப்ப நாய். யெஸ்...! நிச்சயம் தனக்குத் தானே அவர் குழி தோண்டிக் கொண்டிருக்கவே மாட்டார். நிச்சயமாய்...! நிச்சயமாய்...! எனவே, என்னைப் பொறுத்தவரை,

ப்ரெண்டா ப்ரெண்டா என, நீயும் உங்கள் குழுவும் அலைந்து திரிந்து இப்போது வந்து நிற்குமிடம்.... ஒரு குட்டிச் சுவர்....!''

''ப்ரெண்டா பயப்படுகிறார் சோஃபியா. எங்களைக் கண்டதும் அதிர்கிறார். காரணமில்லாமலா அப்படி நடுங்குவார்...!''

''ஒப்புக் கொள்கிறேன். அலறத்தான் செய்கிறாள். அதனால் என்ன? எதற்கும் அலறுவது அவள் இயல்பு....! அந்த லாரன்ஸ்....! அவனைப் பார்....! ஹிஸ்டீரியா பிடித்தவன் போல பயப்படு கிறான்...! பதுங்குகிறான்....! அதிர்கிறான்....! கொஞ்சம் ஆழமாய் விசாரித்தால் கத்துகிறான்....! பிறகு ஓடியே விடுகிறான்....! அது தான் அவன்....! மீறிக் கேட்டால் அவன் பரம சாது.... அதனால் தான் என்று இந்த மகாராணி பூசி மெழுகுகிறாள்....!''

''மிகச் சரி....! எங்களிடம், மிக மிக அறுவெறுப்பூட்டுமளவு தான் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொண்டார் லாரன்ஸ்...! புது மனிதர்கள்.... அதுவும் விசாரணைக்கு வந்திருக்கும் போலீஸ் அதிகாரிகள் எனும் குறைந்தபட்ச விவரணை கூட இல்லாமல், இனி அவரை இந்தப் பக்கம் கண்டாலே நாங்கள் அந்தப் பக்கம் விலகிப் போகுமளவு நடந்துக் கொண்டு விட்டார்....! இது போன்ற ஆடவனிடம் ப்ரெண்டா என்னக் கவர்ச்சியைத் தான் கண்டிருப்பார் என்றே புரியவில்லை....!''

''லாரன்ஸிடம் எதிர்ப்பாலைக் கவ்வி இழுக்கும் அம்சங்கள் உள்ளன சார்ல்ஸ்...! அவை உன் கண்களக்கு விளங்கவில்லை...?''

''பார்ப்போரின் பலவீனம் அது...!'' என்றேன், சற்று சந்தேகத் தொனி மேலோங்க....!

''குத்தலா...? ஏனோ, இந்த ஆண்கள் - டார்ஜான் போல மார்பும் தோளும் திரண்டு வளர்ந்து, அவை பார்ப்போருக்குப் புடைத்துத் தெரியும்படி உடையணிந்து, ராட்சஸனாய் உலவும் ஆடவர் மட்டுமே, பெண்களுக்குக் காமத்துப் பால் - என தப்பர்த்தம் செய்து வைத்துள்ளனர்....! லாரன்ஸுக்கு பெண்களை ஈர்க்கும் அம்சம் இருக்கிறது....! அது உன் கண்களுக்கு இந்த நொடியில் விளங்காது....! ப்ரெண்டா தன் கொக்கியை உன் மேல் போட்டு இழுத்து வென்று விட்டாளல்லவா...! அதனால்...!''

''அர்த்தமற்றுப் பேசாதே....'' - என் ரத்தக் கொதிப்புக் கூடிற்று. ''தொடர்ந்து சில நொடிகள் பார்க்கும் அழகு கூட ப்ரெண்டா விடம் இல்லை....! அப்படி ஒன்றும்.. ... ...''

''உன்னை வசியமாக்கி மயக்கிப்போட, கிறங்கி, அவள் ஆசை காட்டவில்லையோ...?'' என இடை மறித்து அவளே அபத்தக் கேள்வியொன்றைப் பொருத்தி முடித்துக் கொண்டாள். ''அவளுக்காக உன்னை இரக்கப்பட வைத்து விட்டாளல்லவா...! எத்தனை பெரிய வெற்றி இது...! அவள் அழகற்றவள் தான்...! புத்திசாலியும் இல்லை தான்...! நீ சொல்வதை ஒப்புக் கொள்கிறேன்...! ஆனால், இருபதோ, எண்பதோ.... எத்தனை வயதானாலும், ஆண்களை வசியம் செய்யக் கற்றவள்....! அப்படியே கைகளில் போட்டுக் கொண்டு பின் குழப்பமுண்டாக்க வல்லவள்....! இவை அவளின் ஒப்புயர்வற்ற திறமைகள்....! இவற்றை உன்னிடமும் நிறைவேற்றிக் கொண்டுள் ளாள்....! உன்னை ஈர்த்தாயிற்று.... இதோ, நம் இருவருக்குமிடையே, மனத்தளவில் குழப்பமும் ஏற்படுத்தியாயிற்று....!''

''சோஃபியா...'' - அதிர்ச்சியில் கதறியே விட்டேன். ''என்ன பைத்தியக்கார சிந்தனை உனக்கு....!''

''அப்படித்தான் தெரியும்...! இப்போது பைத்தியமாகத் தான் தோன்றும்...! ஐந்து வருடங்களாய் உன்னை என்னகப்படுத்தி யிருந்தேன்....! ஐந்தே நிமிடத்தில் கவிழ்த்து விட்டாளே....!''

சோஃபியா மளமளவென்று அடுப்பறை நோக்கிப் புறப்பட்டாள்.

''நான் வந்து ஏதேனும் உதவுகிறேன் சோஃபியா...''

''தேவையில்லை. நீ இங்கேயே இரு'' என்று அவள் சென்று விட்டாள்.

அப்படியே அங்கிருந்த ஒரு பரந்த குஷன் நாற்காலியில் விழுந்து என்னைப் புதைத்துக் கொண்டேன். தனிமை. அதன் அமைதி. இவை, என்னை பலவித சிந்தனைகளுக்குள் நுழைத்தன.

மாடியில் ப்ரெண்டாவுடன் பேசும்போது, அவருடைய உணர்வுபூர்வமான பங்களிப்பில், அவர் பக்க நியாங்களை அறிய முடிந்தது. இங்கு, இதோ இப்பொழுது, சோஃபியாவின் மன ஓட்டங்களைப் பிடிக்க முடிந்தது. எல்லோரும் ப்ரெண்டாவையே குற்றவாளி ஆக்கி சிலாகிப்பதால், லியோனைட் குடும்ப அங்கத்தினர் அனைவரது எண்ணமும் இவையே என்று கூட சொல்லலாம்! லியோனைடை மயக்கி இக்குடும்பத்துள் தவறான வழியில் நுழைந்த கைகாரி எனும் கருத்துக் கொண்டு, ஒட்டு மொத்தமாக அனைவரும், ப்ரெண்டாவை, வேற்று மனுஷியாக கரிக்கின்றனர். அவர்கள் உரிமை இது, போகட்டும்.

ஆயினும் ப்ரெண்டா எனும் பெண்ணின் உள்ளே - நானுணர்ந்த, ஆனால் இவர்கள் உணராத - தான் அனைவராலும் வெறுக்கப் படுவதைத் தாளாமல் துடித்த மனமும் இருக்கிறது. இந்த வீட்டில் உள்ள அனைவருமே தங்கத் தட்டைக் கையிலேந்தியே பிறந்தவர்கள். படாடோப வாழ்வினை நடத்தியவர்கள். எல்லாம் லியோனைட் எனும் மில்லினியரின் பண பலம் தந்த அரவணைப்பு. எனவே பணத்தின் அருமை விளங்காது. ஆனால் ப்ரெண்டா அப்படியல்ல. பரம ஏழை. அவரது இளம் பிராயத்தில், பணமும் பொருளும் பாதுகாப்பும் குடும்பமும் ஆகிய அனைத்தும், ஏங்கி ஏங்கி வேண்டிய பொருட்களாகவே இருந்துள்ளன. இது போல ஏழைமையில் வாழும் கோடானு கோடி பேரின் மனதில் உள்ள வழக்கமான ஏக்கம் போன்றதல்ல ப்ரெண்டாவினுடையது....! இது ஒரு காட்டுத் தீ போல வளர்ந்துக் கொண்டேயிருந்த அபிலாஷை....! எதிரேபாராமல் லியோனைட் திருமணம் பற்றி முன்மொழிய, வயது வித்தியாசத்தைத் தாரை வார்த்து, தன் கனவுலகத்தை நிஜத்தில் அடைந்துள்ளார். இது ப்ரெண்டாவின் உரிமை...! அவ்வளவே ....! இது புரியாமல், ப்ரெண்டா விஷயத்தில், அனைவரும் அரை வேக்காடாய் குற்றங்கூறி உலவுவது தவறாய் பட்டது.

ஆனால் அவரிடம் பேசும்போது, அவரின் உணர்வுபூர்வ உரையாடலில் சிக்குண்டதால் அதீதமாய் தென்பட்டதே - அவர் மீது ஒரு பரிதாபம், பச்சாதாபம் - அவை, அதே வேகத்துடன் என்னுள் இப்பொழுதும் இருக்கின்றனவா என்று சோதனையிட்டுப் பார்த்தால், இல்லாதது போல இருந்தது...! ஒருவர் மீது ஏற்பட்ட ஒரு கருத்து... காலத்துக்கு ஏற்ப வீரியம் குறைகின்றது. மனம் அக்கருத்தினை ஏற்றுக் கொண்ட கோணமும் மாறுகின்றது....! மனக் கண்ணின் மாறுபட்டக் கோணங்கள். ஆனால் உண்மையான கோணம் எது.....?!

உடம்பு இற்று வந்தது. நேற்று இரவு வெகு நேரம் வாதம் நடந்ததாலும், இன்று காலை வெகு சீக்கிரமாய் டேவரெனருடன் கிளம்பி இங்கு வந்து விட்டதாலும், தூக்கமே இல்லை. காலையி லிருந்து அறை விட்டு அறை, தளம் விட்டும் தளம் என நடந்தவாறே இருந்ததால் குதிகால்களிரண்டிலும் ஊசி வைத்துத் துளைப்பது போலிருந்தது. இங்கு கதகதப்பான இவ்வறையில், பூ மணங்கள் மனம் தழுவ, குஷன் நாற்காலியில் உட்கார்ந்திருந்த என்னுடல் தானாய் அகண்டு சாய்ந்துக் கொள்ள, உடலிலிருந்து ஆவி பிரிவது போல கண்கள் அயர்ந்து துடிக்க, எந்த நொடியில் என்று தெரிய வில்லை....

தூங்கிப் போனேன்....!

## 10

தூங்கிப் போய்விட்டோம் என்றே நம்ப முடியாத நிலையில், மெல்ல மெல்ல விழித்தேன். அரைத்தூக்கம், மயக்கம் போல் இன்னமும் கண்களிலிருந்தது! அத்தனை களைப்பு! அப்போது ஏதோ பூவின் நறுமணம் என் மூக்கைத் துளைத்த வண்ணமிருந்தது. அம்மயக்கப் பார்வையில், சரியான வட்டத்தில் ஒரு வெள்ளை உருண்டை என் முன் அந்தரத்தில் மிதப்பது புரிந்தது. நொடிகள் பிடித்தன... இப்படியாக, ஓரிரு அடிகள் தள்ளி, என் மிக அருகில் மிதப்பது போல தோன்றுவது ஒரு மனித முகமென்று உணர...! இந்த உணர்தல் நிகழ்ந்தக் கணத்திலே மிச்சமிருந்த அரைத் தூக்கமும் சட்டென்று உதிர்ந்தது. அருகில் யாரோ இருக்கிறார்கள் என்ற புரிதலால் அல்ல...! பூசணி போல ஊதிய முகமும் - உதிர்ந்துப் போன காரணத்தால் மை கொண்டு செயற்கையாய் வரையப்பட்ட புருவமும் - தலை மயிரே இல்லாத போதும், அங்குமிங்கும் பரவி உள் தலை தெரியும்படி இருந்த சொற்ப முடியும் - அதனை அள்ளி, அழுந்த வாரி, சிறிதாய் பின்னப்பட்ட கூந்தலும் கொண்டு - இவற்றால் அவலட்சணமாய் விளங்கிய முகத்திற்கு மேலும் லட்சண பேதம் தந்த மிகப் பெரிய கண்களால் - என்னைத் துளைத்து விடுவது போல பார்த்துக் கொண்டிருந்த அந்த மானுடம் என்னுள் ஏற்படுத்திய பய துணுக்குறலால், சட்டென்று தூக்கம் விடுபட்டு முழு பிரக்ஞை பெற்றேன். சாய்ந்திருந்த நான் நிமிர்ந்து அமர்ந்து பார்த்தபோதுதான், வெறும் தலை மட்டும் தொங்கவில்லை.... அத்தலை, மிக மிக ஒல்லியான ஒரு தேகத்தில் ஒட்டிக் கொண்டு தான் உள்ளது என்பதும் தெளிவாயிற்று! என்னை ரொம்ப வேண்டப்பட்டவனைப் பார்ப்பது போல பார்த்தன அக்கண்கள்.

''வணக்கம்'' என்றேன் நான். இதற்கு பதில் வணக்கம் சொல்லி விட்டு, தன்னை ஜோஸஃபைன் என்று அறிமுகப்படுத்திக் கொண்டது, அந்த ஒல்லி உருவம்.

இது எனக்கு இவ்வுவருவத்தைப் பார்த்த போதே தெரிந்து போயிற்று. சோஃபியாவின் தங்கை, பெயர் ஜோஸஃபைன், வயது பதினான்கு என்றும், இவள் அழகற்று ஒல்லியாய் விகிதாச்சார மில்லாது வளர்ந்துள்ளவள் என்றும், இறந்த தனது தாத்தாவின் மீது அதிகம் பற்றில்லாதவள் என்றும் நான் ஏற்கெனவே துப்பறிந்து வைத்திருந்ததால், தூக்கத்தைக் கலைத்து முன் நிற்பது ஜோஸஃபைனே என விளங்குவதில் சிரமமேற்படவில்லை!

''நீ தான் சோஃபியாவைக் கவர்ந்தவனா...?''

மிகச் சரியாய் சொல்லிவிட்ட இவள் திறமையை மதித்து ஆம் என தலையசைத்தேன். என்னை ஒருமையில் அழைத்ததை சட்டை செய்யத் தோன்றவில்லை. ஏனென்றால், அவள் குரலில், விசாரணை யின்போது பெரும் போலீஸ்காரரின் அணுகுமுறையில் ஒட்டியிருக் கும் கண்டிப்பும் கறாரும் தொனித்தன.

''ஆனால் நீ அவளைப் பார்க்க தனியாய் வரவில்லை, இல்லையா? முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனருடன் காதலியைப் பார்க்க வந்துள்ளாய்! நல்ல தமாஷ்! ஏன் தனியாய் வரவில்லை...?''

''அவர் என் நல்ல நண்பர்...''

''அவரா...? உன்னை எனக்குப் பிடித்திருக்கிறது. ஆனால், அவரை எனக்குப் பிடிக்கவேயில்லை. அவரிருக்கும் போதோ இல்லை அவரிடமோ நான் விஷயங்களைச் சொல்லவே மாட்டேன்....''

''விஷயங்கள்...? எது சம்பந்தமான விஷயங்கள்...?''

''எனக்குத் தெரிந்த விஷயங்கள்....! எனக்கு நிறைய விஷயங்கள் தெரியும், தெரியுமா...! விஷயங்களை அறிந்துக் கொள்வதில் எனக்கு அலாதி ஆசை உண்டு.''

எனக்கருகில் பக்கவாட்டில் தன்னை வருமாறு அமைத்துக் கொண்டு நாற்காலியின் கைப்பிடியில் அமர்ந்து, என் முகத்தில், கண் மூக்கு நெற்றி வாய் இவற்றைத் தவிர, எதையோ ஆழத் தேடுவதைப் போல ஊடுருவினாள். சற்று லஜ்ஜையாயிற்று.

''தாத்தா கொலை செய்யப்பட்டுள்ளார். தெரியுமா?'' - கேட்டாள்.

''ம்...'' என்று அவள் பக்கமாய் திரும்பி என் கோணத்தை மாற்றி அமர்ந்தபடி, ''தெரியும்...'' என்றேன்.

''விஷம் வைத்து. எ-ஸ-ரி-ன் கொடுத்து'' - என்றாள் விட்டத்தைப் பார்த்தபடி, ஒவ்வோர் எழுத்தாய், ஆழமாய், மர்மக் குரலில் உச்சரித்தபடி! ''கொலை நிகழ்ந்தாயிற்று. இனி அழுது என்ன பயன்? எனக்கும் ஆஸ்டஸுக்கும் யாரது என்று அறிந்துக் கொள்வதில்

கூர்மை மிகுந்துள்ளது. அதிலும் எனக்கு மிக அதிகமாய்....! ஒன்று தெரியுமா...! எனக்கு துப்பறியும் கதைகள் என்றால் அத்துணை பிரியம். ஏகமாய் படித்துத் தள்ளுவேன். மனத்திலும் நிறுத்திக் கொள்வேன். அக்கதைகளில் வரும் தொப்பி கறுப்புக் கண்ணாடி அணிந்த டிடெக்டிவ்' வாக இப்போது நான்...! நான் துப்புகளை சேகரிக்கத் துவங்கியுள்ளேன்.....!''

ஜோஸஃபைன், ஈவிரக்கமின்றி காட்டிக் கொடுத்து விடும் பிசாசு என்று கணித்தேன். பிசாசு....! தகவல்கள் தந்து உதவ... எங்களுக்குத் தேவைப்படும் பிசாசு....!

''முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனருடன் வந்தவரும் போலீஸ் தானே....! துப்பறியும் கதைகளில், சாதாரண உடையில் துப்புத் தேடி அலையும் போலீஸாரை அவர் அணிந்திருக்கும் போலீஸ் ஷூவை வைத்துக் கண்டறியலாம் என வரும்...! ஆனால் இவரோ வெறும் தோல் காலணி அணிந்துள்ளார்...! தன்னை அடையாளம் கண்டுவிடக் கூடாது எனும் தற்காப்புக்காகவா....?!''

''இருக்காது. இந்தக் காலத்து முறையாயிருக்கும்....!'' என நான் என் அபிப்ராயத்தைக் கூற, தனக்கே உரிய பாணியில் இதனை பின்வருமாறு அர்த்தப்படுத்திக் கொண்டாள் அவள் : ''ஆமாமாம்...! மாற்றங்கள்....! மாற்றங்கள்...! மாற்றம் இல்லாது உலகா....! இங்கும் கூட... இந்த வீட்டிலும் கூட இப்போது விதவிதமாக மாற்றங்கள் நிகழப் போவதாய் கண்டு பிடித்துள்ளேன், தெரியுமா....!'' என்றாள். சொக்குப் பொடி வைத்து வைத்துப் பேசும் போக்கு. ஒவ்வொரு முறை வாக்கியத்தை முடிக்கும் போதும் எதிராளியின் வயிற்றில் புளியைக் கரைத்தாள். ''ஆமாம் சார்ல்ஸ்....! உனக்குத் தெரியாது.. நீ வெளியிலிருந்து எப்போதாவது திடுமென வந்து துப்புத் துலக்கும் ஆள். நான் இங்கேயே துப்புத் தேடுபவள்...! இருபத்து நாலு மணிநேரமும்....! என்னிடமிருந்து தப்ப இயலாது....!'' என்ற ஜோஸஃபைனின் மிரட்டல் தொனிப் பேச்சு சற்று பயமுறுத்துவ தாகவே தொடர்ந்தது: ''நாங்கள் இங்கிருந்து புறப்பட்டு லண்டன் போய் வாழப் போகிறோம். அம்மாவின் பல நாள் ஆசை இது. ரொம்ப சந்தோஷப்படுகிறாள். அப்பாவும் தன் உயிர் புத்தகங்கள் சகிதமாக இவ்வீட்டுக்கு விடை தர தயாராகி விட்டார். தன் அன்புத் தந்தையின் வீட்டை விட்டு, இத்தனை நாட்கள் மூச்சு காற்றுத் தந்த வீட்டை விட்டு விலக, பாவம், அவருக்கு மிக கஷ்டமாயுள்ளது. ஆனால் அம்மாவின் முன்னால் முடியுமா....! இப்போது இந்த ஜெஸபெல்'

லில் வேறு ஏகமாய் நஷ்டப்பட்டு விட்டார். எனவே, நீ குறிப்பிட்டாயே மாற்றம், அது அவருக்குத் தேவைப்படுகிறது...! இந்த குளறுபடியான வீட்டிலிருந்து அவருக்கு விடுதலை அவசியமாய் போய் விட்டது''

நானா சொன்னேன், உலக மாற்றத்தின் தத்துவம் பற்றி...! எதிராளியின் உரையாடலிலேயே குளிர்காயும் திறமை...! இந்த அழகற்ற சிறுமியிடம் மிக மிக ஜாக்கிரதையாய் பேச வேண்டும் என்பது விளங்கியது. புதிதாய் கேள்விப்பட்ட ஜெஸபெல் என் புருவத்தை உயர்த்தி நிறுத்திற்று. ''ஜெஸபெல்....?'' - கேட்டேன்.

''ஆமாம்... நீ அதைப் பார்க்கவில்லை...?''

''ஓ...! அது நாடகமா...? பார்க்கவில்லை....! வெளி நாடு போயிருந்தேன்...!''

''அது சரியாய் போகவில்லை. வந்த ஜோர் தெரியாமல் கொட்டகைகளிலிருந்து தூக்கியெறியப்பட்டது. படு தோல்வி. ஜெஸபெல் பாத்திரத்துக்கு அம்மா ஏற்றவரே கிடையாது... என்ன சொல்கிறீர்கள்...?''

மகதா பற்றி என் கருத்தை மீட்டிப் பார்த்தேன். பைபளில் வரும் ஜெஸபெல் பாத்திரமாக மகதாவை ஜீரணிக்க முடியாது என்று விளங்கும் போது, இந்தச் சிறுமிக்கு உள்ள முதிர்ச்சி கூடவா இல்லாமல் பாத்திரம் அமைத்திருப்பார்கள் என ஒரு பக்கம் தோன்றினாலும், இணையாக, இவ்வாறு நாமறியாத பல - பொருந்தும் மற்றும் பொருந்தாத பாத்திரங்கள் - இங்கிருப்போர் ஒவ்வொருவரின் உள்ளேயும் புதைந்துக் கிடக்குமோ என தோன்றி, உள்ளுக்குள் ஓர் ஒளி மின்னலை ஏற்றிற்று. எல்லோருக்கும் பல பாத்திர அரிதாரங்கள் பூசித் துப்புத் தேட வேண்டும் என உள்ளம் ஊர்ஜிதம் செய்துக் கொண்டது. ஜோஸஃபைனை மரியாதையாய் நோக்கி, ''அப்பாத்திரத்திற்கு உன் தாய் பொருந்தியிருக்க மாட்டாள் என்றே தோன்றுகிறது...'' என்றேன்.

''தோன்றுகிறது என்ன தோன்றுகிறது...! பொருந்தவில்லை. தாத்தா, அம்மா நடித்தால் தோல்வி, அதுவும் படு தோல்வி நிச்சயம் என்றார். இது போன்ற வெறும் சரித்திர புராண நாடகங்களுக்கு, தான் பணம் தரவே முடியாது என மறுத்து விட்டார். பெட்டி நிரம்பாது, ஜாக்கிரதை என ஸ்திரமாய் எச்சரித்தார். அம்மாவைப் பற்றி சொல்லவும் வேண்டுமோ....! தாத்தா மறுத்தார் என்ற ஒரே காரணத்திற்காக இந்நாடகத்தையும் பாத்திரத்தையும் ஏற்று நடத்தியே

தீருவேன் என்று செய்தார். இந்தப் பிடிவாதம் எனக்கு சற்றும் பிடிக்கவில்லை. ஆனால், அதுதான் அம்மா...! பைபிளில் உள்ள மாதிரியும் எடுத்துத் தொலைக்கவில்லை. பைபிளில் வரும் தந்திரக்காரியாய், நாடகத்தில் ஜெஸபெல்லைக் காட்டவில்லை. ஏதோ சீர்த்திருத்தம் செய்வதாய் கருதி அவளை ஒரு பாதிரி போல சித்தரித்தாள். ரசிகர்கள் கல்லெறிந்தனர்....! காலகாலமாய் நரியாய் பார்க்கப்பட்ட ஒரு பாத்திரத்தைப் போய் பாதிரியாய் தூக்கி வைத்தால் எடுபடுமா...? ஜன்னல் வழியே ஜெஸபெல் தூக்கியெறியப்பட்டு நாய்கள் குதறுவதாய் உள்ளது நிஜ முடிவு. இம்முடிவை மட்டும் மாற்றாமல் அப்படியே வைத்தார். ஆனால் எந்த நாய்களும் வந்து அவளைக் கடிப்பதாய் காட்டவில்லை. இந்தப் பரிதாப முடிவை, ஒழுங்காய் நாய்களை மேடையில் ஏற்றி உணர்ச்சிகரமாய் காட்டியிருந்தால், நாடகம் கொஞ்சமாவது பிழைத்திருக்கும். நாய்களை மேடைக்குக் கொண்டு வர முடியாதாம்...! ஏன் முடியாது...? இதுபோல ஏதாவது கவர்ச்சிகரமாய் செய்யாது வெற்றி எப்படி கிட்டும்...?'' என பைபிளின் சரித்திர சாரத்தை கை விடாது பேசியவள், ''போய் தொலையட்டும்....! தோற்றது தோற்றது தான்....! பேசியா மீளப் போகின்றது....! இருந்தாலும் ஒன்று தெரியுமா...? உண்மைக் கதையில், ஜெஸபெல்லின் உள்ளங்கையைத் தவிர மற்ற அத்தனை பகுதிகளையும் நாய்கள் தின்று தீர்த்து விடுமாம்...'' என்று சொன்னாள். எனக்குக் குமட்டியது. என்ன சிறுமியிவள்....? உடல் மட்டுமின்றி மனமும் அவலட்சணம் தானோ....! ''சார்லஸ்.... நாய்கள் ஏன் உள்ளங்கையை மட்டும் விட்டு வைத்தன தெரியுமா...?'' என மீண்டும் அந்த நாராச காட்சியிலேயே உலவியவளின் பேச்சை, ''விட்டு விடு... எனக்குக் காரணம் தெரியவில்லை....'' என்று சொல்லி திசை திருப்ப முயன்றாலும், ''ஏனென்றால், நாய்கள், தங்கள் தீனியை மிக மிக நுணுக்கமாய் தேர்ந்தெடுத்துத்தான் சாப்பிடுமாம். வேறு எந்த மாமிசம் அருகிலிருந்தாலும் தொடவே தொடாதாம். படித்திருக் கிறேன். அதனால் தான். ஆனால் நம் நாய்கள் சும்மா எதை தந்தாலும் சாப்பிட்டுத் தள்ளி விடும்....!'' என்று அர்த்தமற்ற ஒரு சிரிப்பு சிரித்தாள்.

மூளை தடுமாறிய சிறுமியாகவும் தெரியவில்லை. ஆனால் அப்படித்தானோ என மனதுள் ஓர் எண்ணமும் ஊறியது!

''பாவம் அம்மா... நாடகம் குறித்து வெளியான விமர்சனங்கள், நாடகத்தின் அனைத்து அம்சங்களையும் துவைக்கும் கல்லில் போட்டு

அடித்து அடித்துக் கிழித்தன! அம்மாவைப் போய் ஒருவர் குறை சொல்வதா....! முடியுமா...! முடிந்தது...! வீட்டில் வேண்டுமென்றால் முடியாமல் போகலாம்...! ஆனால் பத்திரிகையில்...?! நாள் முழுக்க அழுதாள். சாப்பிடவில்லை. கண் மூக்கு கன்னம் எல்லாம் வீங்கிப் போயின. ஓரிரு நாட்கள் தொடர்ச்சியாய் வாய் விட்டு அழுதபடியே இருந்தாள்.''

''உனக்கு நாடகங்கள் மிகவும் பிடிக்கும் என தோன்றுகிறது ஜோஸஃபைன்....! மிக அழகாக ஏற்ற இறக்கம் தந்து பேசுகிறாய்....!'' என்ற என் இக்கேள்விக்கு விடை கிட்டவில்லை. அவள், துப்புத் துலக்குவதிலேயே, அது குறித்த பேச்சுக்களிலேயே, அது சம்பந்தமான அவளது கோணங்களை முன் வைப்பதிலேயே முழு மூச்சாயிருந்தாள்.

''தாத்தா உடலைப் பிரேதப் பரிசோதனை செய்துள்ளனர்'' என்றாள். இச்சிறு வயதில், பிரேதம், கொலை என்று பேசுவதில் இவளுக்குத் துளியும் பயமில்லாதது ஆச்சரியமாயிருந்தது. தொடர்ந்தாள்: ''எதனால் இறந்தார் என்று கண்டறிய....! இல்லையா...?! இறந்தது, A P M என்பதால், என்கின்றனர். இது உன்னைக் குழப்பவில்லை...? என்னைக் குழப்புகின்றது....! P M என்றால் ப்ரைம் மினிஸ்டர் எனலாம்....! மதியத்தைக் குறிக்க வைத்துக் கொள்ளலாம்....!'' - புத்தி கூர்மையோடு சிந்தித்து விளக்கினாள்.

''உன் தாத்தா இறந்ததால் மிக வருந்தினாயா...?''

''இல்லை. அவரை எனக்கு ரொம்பப் பிடிக்காது. ஏதோ அந்தக் குள்ளன் மிக அழகன் போல எண்ணி, என் தோற்றத்தை விமர்சித்து என் ஆசையில் மண் போட்டவர் அவர்....!''

''என்ன ஆசை அது...?'' - ஆவல் மேலோங்க கேட்டேன்.

''பாலே நடனம் கற்க வேண்டுமென்ற அதீத ஆசை அது....! அம்மா உடனடியாய் சம்மதித்தார். அப்பாவின் எண்ணம் தெரியவில்லை. ஆனால், அம்மா ஒப்புக் கொண்டதால், அவரும் மறு பேச்சு பேசாமல் ஒப்புக் கொண்டு விட்டார். தடுத்தது இந்தக் கிழம் தான்...! அழகற்ற இவள் ஆடுவது எடுபடாது... பணத்தை விரயம் செய்ய வேண்டாம் என்று தடுத்தே விட்டார்....!'' - குறிப்பிடும் போதே அவள் முகம் முழுதும் விவரிக்கயியலா வன்மம் கூடியது. நாற்காலியின் கைப் பிடியில் அமர்ந்திருந்தவள் அப்படியே தரையை உடைப்பது போல் எத்தினாள், தன் உணர்வுகளை ஸ்தாபிக்கும் நோக்கில்.....!

பிறகு உடனேயே தன் சுய நிலைக்குள் நுழைந்து, ''உனக்கு இந்த வீட்டைப் பிடித்திருக்கிறதா...?'' என கேட்டாள்.

''தெரியவில்லை....!''

''ப்ரெண்டா தொடர்ந்து வசிக்க விரும்பா விட்டால், இது கூடிய சீக்கிரமே விற்கப்பட்டு விடும் என தோன்றுகிறது. மேலும் ரோஜர் பெரியப்பாவும் க்ளெம்சி பெரியம்மாவும், திட்டமிட்டபடி, இப்போது ஊரை விட்டுப் போகப் போவதில்லை போல.....!''

தூக்கிவாரிப் போடும் தகவல்களைத் தந்தபடி பேசித் தள்ளுவதே இவளின் குணமாய் பட்டது. ஆனால் ஒவ்வொரு தகவலும் சர்வ நிஜமாய் வேறு இருப்பது வியப்பு....! இதோ பாருங்கள்....! ரோஜரும் க்ளெம்சியும் ஊரை விட்டுப் போக திட்டமிட்டுள்ளது - அது இப்போதே நிகழலாம் எனும் உண்மை - இவ்வுண்மையை அவர்களிருவரும் மறைத்து வைத்து நடமாடும் சூசகம் - என எத்தனை தகவல்களை, ஓரிரு வரிகளில் இந்த சின்னப் பிசாசு அள்ளி வீசுகிறது என்பதை....! ''இருவரும் ஊரை விட்டுக் கிளம்ப உள்ளார்களா...?'' - சிறு ஈடுபாடு தொனிக்கக் கேட்டேன்.

''யெஸ்...! வரும் செவ்வாய்க் கிழமை கிளம்புகிறார்கள்! எங்கோ! வெளிநாட்டுக்கு! விமானம் மூலம் பயணம்! பயணத்திற்காக இரு லேசான பெட்டிகளையும் வாங்கியுள்ளார்கள்!''

''அவர்கள் கிளம்பப் போவது பற்றி கேள்விப்படவில்லையே....!''

''ஒருவருக்கும் தெரியாது....'' என்ற ஜோஸஃபைன், ரகசியக் குரலில், ''இது ஒரு ரகசியப் பிரயாணம். அவர்கள் நிச்சயித்திருக்கும் இடத்தில் போய் இறங்கும் வரை ஒருவரிடமும் சொல்லப் போவதில்லை. தாத்தாவின் படத்திற்கு பின்னால், வெளியே துருத்திக் கொண்டு தெரியும்படி ஒரு தாளை வைத்து விட்டுப் பறக்கப் போகிறார்கள். அதன் மூலமாயத் தான் அவர்கள் ஒட்டுமொத்தமாக போய்விட்ட தகவல் தெரிய வரும்.''

''உ...ன...உன..உனக்கு எப்படி இந்த வி...ஷ...யம்.. விஷயம் தெரியும்...? எதற்காக... என்ன கா..ர... காரண... காரணத்திற்காக இப்படி ஓட வேண்டும்...?'' - நடப்பது கனவா நிஜமா எனும் பரிதவிப்பில், என் வயதில் பாதி கூட இல்லாத சிறுமியிடம் போய், தட்டுத் தடுமாறிக் கேட்டேன்.

என்னைக் கண்களால் எடை போட்டுப் பார்ப்பது போல் பார்த்தாள். ''கொஞ்சமாய் தெரியும். லண்டனிலுள்ள ரோஜரின் அலுவலகம் தான், அவர் குடும்பமே தலைமறைவாவது போல் ஓடக் காரணம் என என் மோப்ப மூளை சொல்கிறது! மேலும் ஒரு

சந்தேகம்....! ஆனால் நிச்சயமாய் தெரியவில்லை....! ஏதோ வஞ்சக வலையுள் அவரிருப்பதாய் உணர்கிறேன். அந்த வலை அவர் பின்னியதா...? வேறு யாராவது பின்னியதா...? அப்படி ஒரு வலை இருக்கிறதா...? இல்லை வெறும் சந்தேகம்தானா...? இதெல்லாம் விளங்கவில்லை.''

''இவ்வளவு தீவிரமாய் நீ பேச ஆதாரம்...?''

''நான் படித்த கதைகள் தான் ! சொல்லாமல் கொள்ளாமல் ஓட இரு காரணங்கள் தான் சொல்லப்பட்டுள்ளன. ஒன்று பண முடை....'' என்று நிறுத்தி இன்னொன்றை நான் சொல்ல வேண்டும் என இடைவெளி தந்தாள். நான் யோசிக்க, ஒரு சிறு வெற்றிப் புன்னகையை உதிர்த்து, ''இன்னொன்று பணத்தைச் சுருட்ட!'' என முடித்தாள். என் முகத்தின் மிக அருகில் வந்து நீண்ட பெருமூச்சு ஒன்றை ஊதினாள். இந்த சிறு பிள்ளைத்தனமான செயலை எதிர்த்து என்னால் ஏதும் சொல்ல முடியவில்லை. போலீஸால் இயலாத பல ரகசியங்களைப் பிட்டு பிட்டு அல்லவா வைக்கிறாள்....! கையாலாகாத இந்நிலையில் போய் இவளை எப்படி வைய.....?!

''இன்னும் கேள் சார்ல்ஸ்.....! நீங்களெல்லாம் வெறும் விசாரணையைத் தான் செய்கிறீர்கள். அது, ஒவ்வொருவரின் குணாதிசயத்தைத் தான் தரும். அதை வைத்துக் கொண்டு ஒன்றே ஒன்று செய்யலாம்...'' என இரு நொடி மவுனம் செய்து பின், ''நாக்கை வழிக்கலாம்...'' என பழித்து ஆக்ரோஷமாய் சிரித்தாள். விளங்காத புதிராய் பட்டாள் அவள். ''கடந்த சில நாட்களாக அல்லது வாரங்களாக அல்லது, குறைந்தபட்சம், கொலை நிகழ்ந்த கால கட்டத்தை ஒட்டிய நாட்களிலாவது இந்த வீட்டில் என்னென்ன வெல்லாம் நடந்தன என்று தேடுகிறீர்களா....? கிடையாது! மாட்டீர்கள்! அதுதான் நீங்கள்.....! போலீஸ்!'' - என்று, மேலும், தன் தனிப்பட்ட உளவு சாதித்துள்ளதை ஸ்தாபித்தாள்.

இதற்கு, ''இப்போது தானே ஆரம்பித்துள்ளோம்.... போகப் போகப் பார்... எல்லா விஷயங்களையும் கறந்துத் தள்ளி விடுவோம்....'' என நான் பதில் தந்தது சரியான வாய்ப் பந்தலே!

''பார்க்கத் தானே போகிறேன்....!'' என சவால் விடும் பாங்கில் ஆரம்பித்துத் தொடர்ந்தாள்: ''தாத்தா விஷம் வைத்துக் கொலை செய்யப்பட்ட தினத்தன்று, என்றுமில்லாமல், ரோஜர் பெரியப்பா, தாத்தாவின் அறையில் வெகு நேரமிருந்தார். அறைக் கதவு உள் பக்கம் தாளிடப்பட்டிருந்தது. இருவரும் பேசினர்....! பேசினர்...! பேசிக்

கொண்டேயிருந்தனர்....! ரோஜர் பெரியப்பா மிக உணர்ச்சி வசப்பட்டிருந்தார். தான் எப்போதும் தாத்தாவுக்கு உதவிக்கரம் நீட்டியதேயில்லை எனத் துடித்தார். தாத்தாவின் மட்டு மரியாதை எல்லாம், தட்டுத் தடுமாறி பூமியில் விழும்படித் தான், தான் பல முறை நடந்துக் கொண்டுள்ளதாய் குற்றவுணர்வில் பேசிக் கொண்டேயிருந்தார். காசு பணம் காரணமாக இல்லை. தாத்தாவின் நம்பிக்கைக்கு தான் பாத்திரமானவரே அல்ல என உணர்ச்சி வயப்பட்டார். தாத்தா, பெரியப்பா மீது கொண்டிருந்த நம்பிக்கை இழக்கும்படி, உபயோகமில்லாமல், பலமுறை தான் இருந்துள்ளதாய் சொல்லிச் சொல்லியே மருகித் தள்ளினார். ஆதரவற்ற, பிடிப்பற்ற, துணையற்ற - இதெல்லாவற்றையும் விட, தப்பிப்பற்ற என்று சொல்லலாம் - அப்படிப்பட்ட ஒரு நிலையில் புழுவாய் துடித்துக் கொண்டிருந்தார் பெரியப்பா.''

எதிரேயிருப்பது அனுபவமற்ற சிறுமியா, அல்லது ஞான திருஷ்டி நிறைந்த தேவதையா எனும் கலவையான ஆச்சரியத்தில் அவளைப் பார்த்தேன். ''ஜோஸஃபைன்... நீ சொல்லும் ஒவ்வொன்றும் மலைப்பாயிருக்கிறது! இருந்தாலும், பூட்டிய கதவுகளின் பின் நின்று உள்ளே நடப்பதைக் கவனிப்பது அநாகரீகம் என உன்னிடம் ஒருவரும் சொல்லவில்லையா....! இச்சிறு வயதில் இப்படிப்பட்ட குணம் வளர்க்கலாமா...?''

என் கருத்தை ஸ்திரமாய் மறுத்துத் தலையசைத்து, ''சொன்னார்கள். ஆனால் உண்மைக்குப் புறம்பாய் சில விஷயங்கள் உங்களுக்குப் பின்னால் நிழலாய் நடக்கும்போது, அதனை தடுக்க, உண்மையை வெளிச்சத்துக்குக் கொண்டுவர, ஒட்டுக் கேட்கத்தான் வேண்டும்....! அது தர்மம்....! தொழில் தர்மம்....! உளவு தர்மம்...! நீ செய்யவில்லை...? டேவரெனர் செய்யவில்லை...?'' என்று என் வாயை அவள் அடைத்த விதம், அவளை சிறுமி நிலையிலிருந்து மிக உயர்த்தி வைத்தது. எங்களுக்கு மிக முக்கிய உதவிக்கரம், ஜோஸஃபைன்!

மறுப் பேச்சுப் பேச இயலாமல் என்னைப் பேச்சாலடித்து விட்டு, தன் மேலான புத்திசாலித்தனப் பேச்சைத் தொடர்ந்தாள்:

''என்ன, பதிலையே காணோம்! ஒட்டுக் கேட்கும் தர்மத்தை நான் செய்யவில்லையென்றால், போலீஸ் செய்யப் போகிறது. அதுவும் எப்படி.... ஆளில்லாதபோது! ஆளில்லாத அறைக்குள் நுழைந்து, மேஜையைத் திறந்து, இருக்கும் கடிதாசுகளையெல்லாம் படித்து,

அவரின் தனிப்பட்ட ரகசியங்களை அறிந்து....! என்ன பிரயோஜனம் இவற்றால்...? பார்க்க வேண்டிய-கேட்க வேண்டிய தருணத்தை நழுவ விட்டு இது போல அறையைத் துடைத்து சுத்தம் செய்ய உதவுவதில் என்ன விளங்கி விடப் போகின்றது சார்ல்ஸ்....?''

கேட்டுவிட்டுத் தொடர்ந்தாள்:

''எனக்கும் ஆஸ்டஸுக்கும் ஏகமாய் விஷயங்கள் தெரியும். எனக்கு ரொம்ப அதிகமாகவே....! ஆனால் நான் மட்டும், அறியும் விஷயங்களை அவனிடம் சொல்வதில்லை. ஏன் தெரியுமா...? அவனைப் பொறுத்தமட்டில் பெண்களால் துப்பறிய இயலாது. எத்தனை முட்டாள் தனமான கூற்று. இதோ... ஒரு பெண்ணால் முடியும் என நான் நிரூபித்துக் காட்டத்தான் போகிறேன்'' - ஆக்ரோஷமாய் தொடர்ந்தாள்: ''நான் உளவாடிய அத்தனையையும், ஒன்று விடாமல், ஒரு நோட்டு புத்தகத்தில் பதிவு செய்து வைக்கத் தான் போகின்றேன். நிச்சயமாய் ஒரு நாள், எல்லாப் பக்கமும் தவறான பாதைகளில் ஓடி ஓடி ஓய்ந்து, எந்தப் பக்கமும் இனி போக முடியாமல், மூச்சு முட்ட, ஒரு மூலையில் முட்டிக் கொண்டு போலீஸ் நிற்கத் தான் போகின்றது....! நிச்சயம், நிச்சயம்....! அப்போது நான் சிம்மாசனத் தில் அமர்வேன்....! யார் கொலையை செய்தது என்று சர்வ நிஜமாய் முன் வைப்பேன்....!'' - முழு தன்னம்பிக்கையோடு சபதம் போல முடித்து, அமர்ந்திருந்த நாற்காலியின் கைப்பிடியிலிருந்து எழுந்து, என் எதிரேயிருந்த மற்றொரு நாற்காலியில் புதைந்தாள்.

எனக்கு அப்பாடா என்றாயிற்று. என் மிக அருகாமையிலிருந்து ஜோஸஃபைன் நகர்ந்ததே பெரிய விடுதலையாய் இருந்தது.

''நீ சொல்வதை வைத்துப் பார்த்தால் யார் லியோனைடைக் கொன்றது என்பது உனக்கு தெரியும் போலுள்ளது....!''

''ம்... இருக்கலாம். சில முடிவுகள் என்னுள் உள்ளன. ஆனால் இன்னும் சில பிடிப்புகள் தேவை'' - என்று நிறுத்திவிட்டுத் தொடர்ந் தாள்: ''முதன்மை இன்ஸ்பெக்டர், ப்ரெண்டா தான் கொன்றுள்ளார் என மட்டுமே எண்ணுகிறார்... இல்லையா...? அல்லது, ப்ரெண்டா வும் லாரன்ஸும் காதலிப்பதால் இருவரும் சேர்ந்தே கொன்றிருக் கலாம் என எண்ணுகிறார்....!''

''ஆமாம்... இருப்பினும் உன் சிறு வயதுக்கு மீறி, இரண்டு பேரை இணைத்துப் பேசுவதெல்லாம் தவறம்மா...''

''ஏன்...? என் வயது பதினாலு! விவரம் புரியாதா என்ன! இருவரும் காதலிக்கிறார்கள் சார்ல்ஸ்....''

''அது அப்பபடிப்பட்ட உறவா என எடை போடும் பருவத்தில் நீ இல்லை....'' - என அவள் கருத்தை நான் நிராகரித்ததும், கலகலவென சிரித்தாள். இடிச் சிரிப்பு. பக்கத்து அறையிலிருந்து யாராவது வந்து விடலாம் எனப்பட்டது. அப்படி ஒரு சிரிப்போசையெழுந்தது. ''முடியும். அவர்களிருவரும் காதல் கடிதங்களைப் பரிமாறிக் கொள்ளும்போது, இருவரிடையேயும் உள்ள ஈர்ப்பு அன்பா காதலா என்று, சற்றே வளர்ந்தப் பெண்ணால் பிரித்தறிய முடியாதா என்ன....?'' என்ற அவள் கேள்விக்கு என் நீண்ட மவுனமே விடையாயிற்று!

''ஜோஸஃபைன்! என்ன சொல்கிறாய்! இருவருக்கும் காதல் கடிதப் பரிமாற்றம் நிகழ்ந்ததா...? அது உனக்கெப்படித் தெரியும்!''

''அவற்றை நான் படித்துள்ளேன்... அதனால்!!'' என்றாளே பார்க்கலாம்... நான் நிலை குலைந்துப் போனேன். இப்படி ஓர் ஆபத்தான பெண்ணை முதலில் கொல்லாமல் அத்தனை பேரும் இத்தனை நாட்கள் விட்டு வைத்தது தான் ஆச்சரியம்! ''அத்தனையும் முதிர்ச்சியற்ற நொய் நொய் கடிதங்கள். பயந்து பயந்து, நேரடியாய் காதலைக் குறிக்காதக் கடிதங்கள். கதைகளில் தான் எத்தனை கவிதை நயம் மிகும் காதல் கடிதங்கள் இடம் பெறுகின்றன. அதில் ஒன்றையாவது நகலெடுத்து எழுதக் கூடாது....! பாடாவதிகள்! இந்த லாரன்ஸ் முதலில் பட்டாளத்தில் இருந்தாராம். இவரின் பயக் குணத்தைக் கண்டு ஒரே வாரத்தில் விரட்டியடித்துள்ளனர். இப்போது கூட... தாழ்வாய் ஒரு விமானம் பறந்து ஓசையெழுப்பட்டும்....! அவ்வளவு தான்...! காதுகளைப் பொத்திக் கொண்டு கண்களை இறுக்கமாய் மூடிக் கொண்டு, அப்படியே குத்த வைத்துக் உட்கார்ந்துக் கொண்டு... தூ...'' என்று உமிழ்ந்தே விட்டாள் ஜோஸஃபைன். ''இப்படி எதற்கெடுத்தாலும் லாரன்ஸ் பயப்படுவதைப் பார்க்கும் போதெல்லாம் நானும் ஆஸ்டஸும் அவரை உண்டு இல்லை என ஆக்கி விடுவோம்....!''

சிரிப்பு வந்தது. லேசாய் சிரித்து, அடுத்து இது சம்பந்தமாய் பேச்சை வளர்த்து விஷயம் கிரகிக்க நான் முன்னேறும் போது, வாசலில், வேகமாய் வருவதற்குண்டான ஓசையெழுப்பியபடி, படகு போன்ற ஒரு கார் வந்து நின்றது. அந்த நொடியில் ஜோஸஃபைன் பாய்ந்து ஓடி, ஜன்னல் கண்ணாடியில் தன் மோப்ப மூக்கினை அழுத்தி எட்டிப் பார்த்தாள்.

''யார் வந்திருப்பது'' என்றேன் நான். ஜன்னலிலிருந்து பார்வையைத் திருப்பாது, ''கைட்ஸ்கில்... தாத்தாவின் வக்கீல்'' என்றவள் என் பக்கம் திரும்பி, கைகளை நெஞ்சுக்குக் குறுக்காய் கட்டி சுவரில் சாய்ந்து, லியோனைட் கொலை சம்பந்தமான துப்பறிதலில், புது அத்தியாயம், இதோ, சில நிமிடங்களில் ஆரம்பமாகப் போகிறது என்பதை, அழுத்தமான ஒரு புன்னகை யோடு, பின்வரும் வார்த்தைகளில் விளக்கினாள்: ''தாத்தா கடைசியாய் எழுதி வைத்த உயில் பற்றிப் பேச வந்திருக்கிறார்.''

திரு கைட்ஸ்கில் - லியோனைடின் வக்கீல் - உயில் சம்பந்தமாய் விவாதிக்க வந்திருப்பதை அறிவித்து விட்டு அவ்வறையை விட்டு புத்துணர்வு பெற்றவளாய் ஓடினாள் ஜோஸஃபைன். நிச்சயம் அவள் துப்பறியும் பணியைத் தொடரத்தான்....! அந்தக் கணத்தில் மகதா அறைக்குள் வந்தார். வந்தவர் சோபாவில் அமர்ந்திருந்த நான் சற்றும் எதிர்பாராத விதமாய் என் உள்ளங்கைகளைப் பிடித்துத் தூக்கித் தன் கைகளுக்குள் அடக்கிக் கொண்டார். ''சார்ல்ஸ்...'' என்று ஓசையின்றி, தழுதழுக்க அழைத்து, ''இறைவனுக்கு நன்றி. நல்ல வேளையாய் நீ இன்னும் இங்கு இருக்கின்றாய். இப்போது உன் போன்ற நல்ல ஆண் துணை எனக்குத் தேவைப்படுகின்றது'' என்றார்.

பிறகு என் கைகளை விட்டுவிட்டு, எதிரேயிருந்த நாற்காலியை, நானமர்ந்திருந்த சோபாவை நேரெதிராய் பார்க்கும்படி இல்லாமல் வேறு கோணத்தில் திருப்பி வைத்து விட்டு, அருகிலிருந்த ஒரு மேஜை நோக்கி சென்றார். அதன் மேலிருந்து பேப்பர் - அட்டை இவைகளால் தயாரிக்கப்பட்டு வர்ணமடிக்கப்பட்டிருந்த ஒரு சிறு பெட்டியைத் திறந்து மூடியபடி நின்றுக் கொண்டிருக்க ஆரம்பித்தார்.

அப்போது அறைக்குள் எட்டிப் பார்த்தபடி வாசலுக்குச் சென்ற சோஃபியா, செல்லும் போதே, கண்டிப்பான சிறு குரலில், ''கைட்ஸ்கில்!'' என்று தன் தாயாரை எச்சரித்தாள். ''தெரியும் தெரியும்...'' என்று ஒப்புக் கொண்டார் மகதா.

சில நொடிகள் நழுவின. சற்றே முதிர்ந்த ஒருவரோடு சோஃபியா உள்ளே நுழைய, தான் கையாண்டுக் கொண்டிருந்த பெட்டியை விட்டு விட்டு நுழைந்தவரை எதிர்கொள்ள முன் வந்தார் மகதா.

''வணக்கம் திருமதி பிலிப்! மேலே சென்று கொண்டிருக் கிறேன். உயில் குறித்து ஏதோ கருத்து வேற்றுமை இருப்பதாய் கேள்விப்பட்டேன். அப்படி எதுவும் இருக்க வாய்ப்பில்லை. உயில்

என்னிடம் இருப்பதாய் கருதி பிலிப் தான் எனக்குக் கடிதம் போட்டிருந்தார். ஆனால், உயில், லியோனைட்'டின் பீரோவி லிருப்பதாய், அவர் மூலமாகவே நான் அறிவுறுத்தப்பட்டேன். இது பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது போல.....!''

''ஓ... அந்த கைகாரியின் உயில் சம்பந்தமாகவா....?!'' - மகதா தன் கண்களை விந்தையாய் விரித்துக் காட்டினார். ''எனக்குத் தெரியாது தான். ஏன்... அந்த நயவஞ்சகக் காரியே அந்த உயிலை சிதைத்திருக்கக் கூடாதா என்ன...?''

''நோ திருமதி பிலிப்...'' - கோபம் ஏற தன் சுட்டு விரலை மகதா நோக்கி நீட்டிய கைட்ஸ்கில், ''மிருகத் தனமான வசைகள் வேண்டாம். நான் கோர்ட்டில் அவ்வார்த்தைகளைப் பதிவு செய்தால் உங்கள் நிலைமை மிக மோசமாகி விடும். உயிலை, உங்கள் மாமனார் எங்கு வைத்துள்ளார் - அல்லது வைத்திருப்பார் - என்ற சிறு கேள்வி தான் இப்பொழுது. இதற்கான வாக்குவாதம் தவிர வேறு எது நிகழினும் அவற்றை நான் நிச்சயம் பதிவு செய்வேன். இவ்வீட்டில் எல்லோரும் ஆட ஆரம்பித்து விட்டீர்கள்....''

''உயிலை அவர் உங்களுக்கு... சத்தியமாக உங்களுக்குத் தான் அனுப்பினார். எல்லோர் முன்னிலையிலும் கையொப்பமிட்ட பிறகு உங்களுக்குத் தான் உயில் அனுப்பப்பட்டுள்ளது. மாமனார் அப்படித் தான் சொன்னார்.''

''போலீஸ், லியோனைடின் தனிப்பட்ட சட்ட தஸ்தாவேஜுக் களைப் பரிசோதித்துக் கொண்டிருப்பதாய் கேள்விப்பட்டேன். முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனரைப் பார்த்து விட்டு மீண்டும் உங்களை சந்திக்கிறேன்'' - என்று சொல்லி விட்டு சற்று அவசரகதியில் வெளியேறினார் கைட்ஸ்கில்.

''கண்ணே....'' - படபடவென அதிர்ந்து அழுதார் மகதா. ''உயிலை அவள் *எரித்திருப்பாள்*. எனக்குத் தோன்றுகிறது. எனக்குத் தோன்றினால், அது சரி தான்....!''

''மூளையற்றுப் பேசாதே அம்மா! வாயை மூடு! போலீஸ் கேட்டால் நீ சொன்ன இந்த வார்த்தைகளுக்கு ஓராயிரம் அர்த்தங் களைக் கற்பிக்கும். இப்படிப்பட்ட படுமுட்டாள் தனமான செயல்களையெல்லாம், அதுவும் இப்பொழுது போன்ற இக்கட்டான நிலையில், ப்ரெண்டா செய்யவே மாட்டாள்'' - என்று மகதாவை அடக்கினாள் சோஃபியா.

''இல்லை கண்ணே....! பார்...! உயிலே இல்லையென்று வைத்துக் கொள்...! சரியா...! நிலைமை என்னவாகும்? அத்தனை சொத்தும் மனைவியான அவளுக்கே போய் விடுமில்லையா? ஒரு குண்டுமணி கூட நமக்கு மிஞ்சாது இல்லையா? அது தானே சட்டம்? அதனால் தான் சொல்லுகிறேன்.... ... ...'' - என்று ஆர்ப்பரிக்க ஆரம்பித்த மகதாவை, ''ஷ்ஷ்ஷ்ஷ்.. கைட்ஸ்கில் மீண்டும் வருகிறார்'' என்று சோஃபியாவின் பய வார்த்தைகள் அடக்கின.

கைட்ஸ்கில் மறுபடியும் வந்தார். அவருடன் டேவரெனரும், தொடர்ந்து பிலிப்பும் வந்தனர். கைட்ஸ்கில் காலந்தாழ்த்தாமல் ஆரம்பித்தார் : ''மறைந்த வியோனைட்ஸ், வங்கி லாக்கரில் தான் உயிலை வைத்ததாக, பிலிப் மூலம் அறிகிறேன்.''

டேவரெனர் திட்டவட்டமாய் மறுத்துத் தலையசைத்து, ''கிடையவே கிடையாது. நான் வங்கி மேலதிகாரிகளிடம் பேசியாயிற்று. வியோனைடின் எந்த தனிப்பட்ட தஸ்தாவேஜுக்களும் அங்கில்லை. சில கடன் பத்திரப் பாதுகாப்பு ஆவணங்கள் மட்டுமே அங்குள்ளன'' என்றார்.

அதற்குள் அங்கு வந்திருந்த ரோஜர், எடித், சோஃபியா ஆகியோரைப் பார்த்து, ''தயவுசெய்து யாராவது போன் செய்து, அந்த வங்கியிலிருந்து இது சம்பந்தமாய் பேச ஓர் அதிகாரியை வரச் சொல்லுங்களேன்'' என்றார் பிலிப்.

ரோஜர் மறுத்தார். ''முட்டாள்தனம்'' என அடித்துச் சொன்னார். ''நம் முன் தான் அப்பா உயிலில் கையொப்பமிட்டார். உடனேயே, கையெழுத்திட்ட அந்த உயிலை, மறுநாளே வக்கீலுக்கு அனுப்பப் போவதாய்த் தான் சொன்னாரே ஒழிய வங்கியில் போட்டுப் பூட்டப் போவதாய் சொல்லவில்லை.''

கைட்ஸ்கில் இடைமறித்தார் : ''அது சென்ற வருடம் நவம்பர் 24. உயில் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என அறிவுறுத்தியிருந்தாரோ, அதன்படியே உயிலை எழுதி, வியோனைடின் ஒப்புதலுக்கு அனுப்பியிருந்தேன். அது தேவையான திருத்தங்கள் செய்யப்பட வேண்டிய உயிலின் நகல். எந்த திருத்தமும் இன்றி நகலை ஏற்றுக் கொண்டார் வியோனைட். இப்படியான தன் கருத்தைக் குறிப்பிட்டு உயிலின் நகலையும் எனக்கு அனுப்பியிருந்தார். நான், ஓரிரு நாட்களில், இறுதியான - உண்மையான - உயிலைத் தயார் செய்து அவர் கையொப்பத்திற்காக அனுப்பி வைத்தேன். ஒரு வாரமாகியும் அவரும் சாட்சிகளும் கையொப்பமிட்ட இறுதி உயில்

எனக்கு வரவில்லை. எனவே அவரைத் தொடர்பு கொண்டு ஏதேனும் மாற்றம் வேண்டி நிறுத்தி வைத்துள்ளாரா என கேட்டேன். அப்படி ஒன்றும் இல்லை. உயிலில் முழு திருப்தி என்றார். மேலும் - கையொப்பமிட்டு விட்டு வங்கிக்கு அனுப்பிவிடப் போவதாகவும் நான் இனி இது பற்றி சிந்திக்க வேண்டாம் என்றும் கூறினார்.''

''ரொம்பச் சரி'' என்றார் ரோஜர், சற்றே ஆசுவாசமானவராய். ''சென்ற வருட நவம்பரின் இறுதி என்பது சரிதான். என்ன சொல்கிறாய் பிலிப்....? அப்போது தான் நம் அனைவரையும் அழைத்து, உயிலை, உரக்க நமக்கு படித்துக் காண்பித்தார்....''

டேவரெனர் பிலிப் நோக்கித் திரும்பினார். ''என்ன பிலிப்...? ரோஜரின் நினைவுகளோடு உங்கள் ஞாபகமும் ஒத்துப் போகின்றதா....?''

''ஆமாம்...'' என்றார் பிலிப். மகதா, சோஃபியா என அங்கிருந்த அனைத்து குடும்ப அங்கத்தினரும் ஒப்புக் கொண்டனர்.

''உயிலின் சாராம்சம் என்ன...?'' என்று கேட்டார் டேவரெனர்.

இங்கு தான் கொலையாளி பதுங்கியிருக்கிறான். இருந்தும் சற்றும் அதிராமல், கோபப்படாமல், துரிதம் காட்டாமல், விஷயங்களை மட்டும் கிரகிக்கும் ஓர் இயந்திரமாய் டேவரெனர் செயல்படுவது எனக்கு பிரமிப்பாயிருந்தது. இந்த அணுகு முறையால் தான் இங்குள்ள அனைவரையும் ஒரு பயக் கட்டுக்குள் அவரால் வைக்க முடிகின்றது!

என் பிரமிப்புக்கு இடையில், முதன்மை இன்ஸ்பெக்டரின் கேள்விக்கு, சட்ட அறிவு கொண்டு கோவையாய் பதில் தர கைட்ஸ்கில் வாய் திறக்குமுன், ரோஜர் அவசர கதியில் பேச ஆரம்பித்து விட்டார்: ''அது ஓர் அழகிய உயில். யாரும் மறுப்புக் கூற இயலாத முதிர்ச்சியான உயிலும் கூட. இறந்து போன இரு பிள்ளைகளின் (எலக்ட்ரா, ஜாய்ஸ்) பங்கும் அப்பாவிடமே வந்து விட்டன. ஜாய்ஸுக்கு ஒரு மகன் உண்டு. ஆனால் போர் முனையில் அவன் இறந்து விட்டதால், அப்பங்கு, அவன் தந்தைக்கு சென்று, மீண்டும் அப்பாவிடமே வந்து விட்டது. பிலிப், நான், எங்கள் குழந்தைகள் மட்டுமே பங்குதாரர்கள். இதனை புரியும்படி விளக்கினார் அப்பா. ஐம்பதாயிரம் பவுண்டுகளை எடித் சித்திக்கு எழுதினார். ப்ரெண்டாவுக்கு ஒரு லட்சம் பவுண்டு பணம், இந்த வீடு ஆகியவை. மீதி இருந்த சொத்தினை மூன்றாய் வகுந்தார். ஒன்று என் குடும்பத்துக்கு. இன்னொன்று பிலிப் குடும்பத்துக்கு. மூன்றாவது பகுதியை மேலும் மூன்றாய் வகுந்து சோஃபியா, ஆஸ்டஸ், ஜோஸஃபைன் ஆகிய பேரப்

பிள்ளைகளுக்கு விட்டு வைத்தார். இதில் ஆஸ்டஸ், ஜோஸஃபைன் ஆகியோரின் பங்கினை, அவர்கள் வயதுக்கு வந்த பிறகே ஆளலாம், என்றும் குறிப்பிட்டார். இத்தகவல்கள் சரி என்று நம்புகிறேன். என்ன திரு கைட்ஸ்கில்...?''

''நான் வரைந்து தந்த உயிலின் ஒட்டுமொத்த சாராம்சம் இது'' என்று நிறுத்திக் கொண்டார் கைட்ஸ்கில். உயில் பற்றி சரியாய் விளக்க தான் அனுமதிக்கப்படாததன் கடுமையை உள் வைத்துப் பேசினார். இருந்தும், எதற்கும் அவசரப்படும் ரோஜர் நிறுத்தவில்லை. ''அப்பா எங்களுக்காக நிறுத்தி நிதானமாய் படித்தார். ஏதேனும் மாற்றம் தேவை என விரும்புகிறீர்களா என்றும் கேட்டார். யாருக்கும் மாற்றம் தேவைப்படவில்லை.''

''ப்ரெண்டா மட்டும் ஒரு விளக்கம் தந்தாள்'' என்று ரோஜரின் கூற்றைத் திருத்தினார் எடித். ''ஆமாமாம்...'' - என்று, ப்ரெண்டா பெயரைக் கேட்டதும், முட்டி மோதி குற்றம் கூறும் தொனியில் புகுந்துக் கொண்ட மகதா, ''அவளின் ப்ரிய புருஷரான லியோனைட், தனது மரணம் பற்றி தானே பேசுவதை அவளால் தாளவே முடியவில்லை என நீலிக் கண்ணீர் விட்டாள். அவரே போய் விட்டால் பிறகு அந்தப் பணம் எல்லாம் எம்மாத்திரம் என்று வேறு ஒரு போடு போட்டுப் பார்த்தாள்....'' என்று சொல்லி முகம் சுளிக்க, கூடியிருந்த அத்தனை லியோனைட் குடும்பத்தினரும், மகதாவின் பாவனையை ஆமோதித்து சின்னஞ்சிறு கேலி சிரிப்புக்குள் புகுந்து வந்தனர்.

''அப்படி செய்தது'', என்று மகதாவின் விவரிப்புக்கு உதவிய எடித், ''ஒரு சம்பிரதாயமான மறுப்புத் தான்...! இப்படி எதையாவது செய்து கூட்டத்தைக் கவர்வது அவளுடைய கலை....! கை வந்த கலை....!'', என்று சொன்னார்.

துளியும் பயமோ தாட்சண்யமோ மரியாதையோ அற்ற பேச்சு. எடித்தும் மகதாவும் எந்த அளவுக்கு ப்ரெண்டாவைக் கண்மூடித் தனமாய் வெறுக்கின்றனர் என்பது புரிந்தது. ப்ரெண்டா தனிக்கட்சி; ப்ரெண்டா தவிர்த்த ஏனையோர் மற்றொரு தனிக்கட்சி. இவ்விரு கட்சிகளுக்குள்ளும் குரூர விரோதம் நீடிப்பதால் தான், லியோனைட் மரணம் குறித்த விளம்பரத்தைக் கூட, இவர்கள் தனித்தனியாய் பத்திரிகையில் விளம்பரப் படுத்தியுள்ளனர்; ஒரு வீட்டுக்குள் கொலை வெறியையும் தூக்கிச் சாப்பிடும் விரோதம்! குரூரம்!

''அவர் உயிலின் வாக்கியங்களைப் படித்து முடிந்ததும் பிறகு நடந்தது என்ன...?'' என்று கேட்டார் டேவரெனர்.

''பிறகு, அதில் கையொப்பமிட்டார்'' என்றார் ரோஜர்.

டேவரெனர் ரோஜரை தீர்க்கமாய் பார்த்து, ''அது தான் எப்படி நிகழ்ந்தது...? ஒரு காட்சி விவரிப்பு எனக்குத் தேவை'' என்றார்.

ரோஜர், நீ பேசேன் என்பது போன்ற வேண்டுகோளைக் கண்களால் க்ளெம்சிக்கு விடுத்தார். க்ளெம்சி அதனை ஆமோதித்து பதில் பேச ஆரம்பிக்க, அதனை அனுமதித்து அத்தனை பேரும் நின்றனர்.

''அங்கு நடந்தை ஒரு சினிமா போல காட்சியாக்கி சொல்லச் சொல்கிறார்களா இன்ஸ்பெக்டர்...?''

''தயவு கூர்ந்து, திருமதி ரோஜர்....!''

''பிறகு என் மாமனார் உயிலைத் தன் மேஜையில் வைத்தார். எங்களில் ஒருவரை – ரோஜர் என்று நினைக்கிறேன் - காவலாளியை அழைக்கும் மணியினை ஒலிக்கச் சொன்னார். மணியடிக்கப்பட்டது. பணியாள் ஜான்ஸன் உள்ளே வந்து சல்யூட் அடித்து பவ்யமாய் நிற்க, மற்றொரு சமையல்காரனான ஜெனட் வால்மரையும் கூப்பிட்டு வரும்படி பணித்தார். சில நொடிகள் நழுவின. யாரும் பேசவில்லை. இரண்டு, வேலையாட்களும் வந்தனர். இந்த இருவர் முன்னிலையில் தனது கையொப்பத்தை உயிலில் பதித்துவிட்டு, உடனேயே தள்ளி நின்றப் பணியாட்கள் இருவரையும் அருகில் அழைத்து அவர்களின் கையொப்பத்தையும், சாட்சி கையொப்பங்களாக, தனது கையொப்பத்துக்குக் கீழே போடச் செய்தார்.''

''ரொம்பச் சரியான முறை'' என்று பாராட்டினார் கைட்ஸ்கில். ''அது தான் லியோனைட்! எதையும் சட்டபூர்வமாக மிகச் சரியாக செய்யும் அழகு! உரிமையாளர் கையொப்பமிடும் அதே இடத்திலும் அதே நேரத்திலும் தான் சாட்சி கையொப்பங்களும் பதிவு செய்யப்பட வேண்டும் என்பது சட்ட விதி.''

''ம்.. பிறகு?'' என்றார் டேவரெனர்.

''என் மாமனார் இரு பணியாளர்களுக்கும் நன்றி கூறி வெளியே அனுப்பினார். கையொப்பங்கள் இடப்பட்ட உயிலை எடுத்து பெரிய உறை ஒன்றுள் போட்டு மறுநாள் அதனை கைட்ஸ்கில்லுக்கு அனுப்பப் போவதாய் கூறினார்.''

அந்த அறையுள் டேவரெனர் நடுவில் நின்றுக் கொண்டிருக்க ஏனையோர் அவரை ஒரு முழு வட்டமாய் சூழ்ந்து நின்று கொண்டிருந்தனர். அந்த அத்தனை பேரையும் பார்த்து விழிகளை சுழற்றியபடி, ''அங்கு நடந்ததன் முழுமையான சரியான விவரம்

இவ்வளவுதான் என எல்லோரும் ஒப்புக் கொள்கிறீர்கள் இல்லையா...?'' என்று அழுத்தமாய் கேட்டார் டேவரெனர்.

ஒப்புக் கொள்வதாய் அனைவரிடமிருந்தும் முணுமுணுப்புக் கலந்த வார்த்தைகள் வந்தன. டேவரெனர் தொடர்ந்தார்.

''உயில் மேஜையிலிருந்ததாய் சொன்னீர்கள். அந்த மேஜைக்கு எவ்வளவு அருகில் நீங்களெல்லோரும் இருந்தீர்கள்?''

''அருகிலில்லை. ஆறு ஏழு அடி இடைவெளிக்குப் பிறகே நாங்களிருந்தோம்''

''திரு லியோனைட் உயிலினைப் படிக்கும்போது அமர்ந் திருந்தாரா...?''

''ஆமாம்''

''உயிலைப் படித்து முடித்த பிறகு, கையொப்பம் இடும் முன், எழுந்து நின்றாரா? அல்லது அவ்விடத்தை விட்டு எங்காவது சென்று வந்தாரா?''

''இல்லை.''

''வேலையாட்கள் கையொப்பமிடும் போது உயிலின் பகுதிகளை அவர்கள் படித்திருக்கும் வாய்ப்பு ஏதாவது....?''

''இதுவும் இல்லை'' என்ற க்ளெம்சி, ''உயிலின் மேல் பகுதி, அதாவது சாராம்சம் இருந்த பகுதியில், ஒரு வெற்று வெள்ளைத் தாளை வைத்து மறைத்த பிறகு தான் வேலையாட்களைக் கையொப்பமிட அருகிலழைத்தார்'' என்று சொன்ன கருத்துக்கு, ''உயிலின் சாராம்சத்துக்கும் வேலையாட்களுக்கும் துளியும் சம்பந்த மில்லை'' என பலம் சேர்த்தார் பிலிப்.

''ஓஹோ...'' என்று பிலிப்பைப் பார்த்த டேவரெனர், ''எனக்கு அப்படி தோன்றவில்லை'' என வார்த்தைகளை ஓர் சவுக்குச் சொடுக்காய் கொடுத்தார். அந்த வேகத்தோடே தன் பையிலிருந்து பெரிய உறை ஒன்றினை எடுத்து வக்கீலிடம் நீட்டினார். அவரும் பெற்றுக் கொண்டார். ''பிரித்து பாருங்கள் கைட்ஸ்கில். அது என்ன என்று எனக்குச் சொல்லுங்கள்.''

அந்த உறையுள் மடித்து வைக்கப்பட்டிருந்த ஓர் ஆவணத்தை வெளியே எடுத்தார் வக்கீல். பிரித்தார். அதன் ஓரிரு வரிகளைப் படித்ததுமே அவருக்குள் ஒரு மின்சார ஆச்சரியம் உருவானது. கண்களை அகட்டிக் கொண்டே போனார்! மளமளவென இருந்த அத்தனை பக்கங்களையும் புரட்டிப் புரட்டிப் பார்த்தார். விழிகள், புரட்டப் புரட்டத், தாள்களுக்குள் இங்குமங்கும் துளாவின. ''இது...

இது...'' என்று ஆச்சரிய வார்த்தைகளுக்குள் போராடிய கைட்ஸ்கில், ''இது மகா ஆச்சரியம். விளங்கவில்லை. மர்மம். எங்கிருந்தது இன்ஸ்பெக்டர் இது...?''

''லியோனைடின் மற்ற ஆவணங்களோடு....! பாதுகாப்புப் பெட்டியில்....!''

''என்ன.. என்ன அது...?'' - மர்மம் என்று கைட்ஸ்கில் சொன்னது தாளாது அலைபாய்ந்தார் ரோஜர். ''என்ன கூத்து நடக்கிறது இங்கு...?'' என்று வேறு அவசரப்பட்டார்.

''இது தான் உங்கள் தந்தை கையொப்பமிடுவதற்காக நான் தயார் செய்த உயில்....! ஆனால்... ஆனால்... எனக்கு ஒன்று தான் சுத்தமாய் விளங்கவில்லை. அரை மணி நேரத்துக்கும் மேல், அன்று என்ன நடந்தது என நீங்களனைவரும் ஒன்று கூடி சினிமா போல விவரித்த பின்னும் - இதில் லியோனைடின் கையொப்பம் இல்லை....!''

''என்ன.. என்ன...?'' எனும் கேள்வி அறையின் அனைத்து சுவர்களிலும் மோதி நின்றது. ''அது நீங்கள் முதலில் தயார் செய்த நகலாயிருக்கப் போகிறது. நன்றாய் பாருங்கள்.....!'' என்றார் ரோஜர், அவருக்கே உரிய அவசரத்தோடு!

''நிச்சயமாய் இல்லை....'' என்றார் வக்கீல். ''நகலை லியோனைட் எனக்கு அனுப்பி விட்டார். பிறகு நிஜ உயிலை... அதாவது, இதோ, இந்த...'' என கையிலிருந்த உயிலை ஆள் காட்டி விரலால் குத்திக் காட்டிப் பேசினார்: ''இந்த உயிலைத் தயார் செய்தேன். அவரின் கையொப்பத்துக்கும் அனுப்பி வைத்தேன். உங்களனைவரின் சாட்சியத்தின்படி, உயில், கையொப்பமாகியுள்ளது. சாட்சிகளும் தங்கள் கையொப்பங்களைப் பதித்துள்ளனர். இருப்பினும் இதோ .... கையொப்பங்கள் இல்லை....!''

''இது சாத்தியமே கிடையாது...! நடந்திருக்கவே இயலாது...!'' - என, இது வரை நான் கண்டிராத அளவுக்கு, முதன் முறையாக உணர்ச்சிவயப்பட்டு குரலெழுப்பினார் பிலிப். அறையிலிருந்த ஒவ்வொருவரும் முகத்தில் ஓங்கி அறைந்தாற் போன்று மூர்ச்சையாகி நின்றனர், டேவரெனர் தவிர! ''உங்கள் தகப்பனாரின் கண் பார்வை எந்த அளவு நம்பகத் தன்மை வாய்ந்தது...?'' என்று தன் உளவுப் பணியில் தொடர்ந்து பயணித்தார் முதன்மை இன்ஸ்பெக்டர்.

''கண் பார்வை மந்தம் தான். படிக்க எழுத என்று ஒரு தடிமனான மூக்குக் கண்ணாடி உபயோகப்படுத்துவார்'' என்றார் ரோஜர்.

''அதனைப் பயன்படுத்தினால் சரியாகத் தெரியுமா...?''

''ஆமாம் என்று தான் நினைக்கிறோம்...'' என்று, யாரேனும் ஆட்சேபிக்கிறார்களா என ஒரு முறை சுற்றும் முற்றும் பார்த்து விட்டு, ''கண்ணாடி போட்டுக் கொண்டு விட்டால் தாள்களைப் படிப்பதில் சிரமமில்லை எனத் தான் சொல்லியிருக்கிறார்'' என்றார் ரோஜர்.

''உயில் கையொப்பமான நேரத்தில் கண்ணாடி அணிந்திருந் தாரா....?''

''அணிந்திருந்தார்! கையொப்பமிட்டு முடியும் வரை, முழுவதும், மூக்குக் கண்ணாடியை அணிந்த வண்ணம் தானிருந்தார். என்ன சரிதானே?'' என்று மற்றவர்களைப் பார்க்க, ''சரியே!'' என பச்சைக் கொடி காட்டினார் க்ளெம்சி.

''நிச்சயப்படுத்தி சொல்லுங்கள்....! உயில் லியோனைடால் கையொப்பமாகும் வரை, ஒருவரும் மேஜையருகே - அதாவது உயிலைத் தொடவோ பார்க்கவோ கூடிய அருகாமை தூரம் வரை - செல்லவில்லை, இல்லையா...?'' - என்ற டேவரெனரை வியப்பும் மரியாதையும் கலந்து பார்த்தேன். கேள்வி தேவையானதோ, தேவையற்றதோ அது இரண்டாம்பட்சம். ஆனால் முக்கியத்தவம் வாய்ந்தது என்பது போல எத்தனை பயமுறுத்தும் வார்த்தைகளை இட்டு நிரப்பி சட்சட்டென்று கேட்கிறார்!

''அந்தக் காட்சியைப் பேசாமல் வீடியோ படம் எடுத்து வைத்திருக்கலாம்....! அப்போது தான் இது போன்ற கேள்விகளுக்கு பதில் தர முடியும்...'' என்ற மகதாவின் விவஸ்தையற்ற பதிலுக்கு, அத்தனை பேரும் அவளை எரிப்பது போல பார்த்தனர். அவளருகி லிருந்து சோஃபியா, மகதாவின் கையை நாசூக்காக பிடித்துக் கிள்ளி வாயடைத்து நில் என உணர்த்தினாள். பின், ''ஒருவர் கூட மேஜையை நெருங்கவில்லை என்பது நிஜம். எல்லாம் முடிந்து உறையுள் போடும் வரை தாத்தா அமர்ந்தேயிருந்தார்'' என்றாள் சோஃபியா.

''இதோ.... இப்போது இருக்கும் இதே நிலையில்.... அதாவது, அறையின் நடுவில் தான் மேஜையிருந்ததா, அல்லது, அதோ அங்குள்ள ஏதாவது ஒரு ஜன்னலருகிலோ, கதவருகிலோ இருந்ததா....?''

''இதே இடத்தில் தானிருந்தது.''

''இந்த உண்மை உயிலை எடுத்து விட்டு மாற்று உயில் வைக்கப்பட்டிருக்குமா எனும் சாத்தியக் கூறுகளை ஆராய்கிறேன். அதனால்தான் இத்தனைக் கேள்விகள். உயில் மாற்றப்பட்டுள் ளதே...!'' என்ற டேவரெனரின் தனி ஆவர்த்தனத்துக்கு பதில் யாரும்

தரவில்லை. ''தான் வாய்விட்டு படித்த உயிலில் கையொப்ப மிடுவதாய்த் தான், திரு லியோனைட் நம்பியிருக்கிறார்'' என்றவர், ஆனால் நிகழ்ந்திருப்பது வேறு என்பதை சொல்லாமல் விட்டு வைத்தார்!

''கையொப்பங்கள் அழிக்கப்பட்டிருக்குமா'' என்ற ரோஜருக்கு, ''இல்லை ரோஜர். அழித்தற்கான அடையாளமின்றி இயலாது. வேண்டுமென்றால் வேறொரு சாத்தியக் கூறு தென்படுகிறது. இதோ, இந்த உயில் இருக்கிறது பாருங்கள், இது, லியோனைட் கையொப்பம் வேண்டி, கைட்ஸ்கில்'லால் அனுப்பப்பட்ட உயிலாய் இருக்காது....!'' என்றார் டேவரெனர்.

உடனேயே, தாமதமின்றி, ''உங்கள் ஐயப்பாட்டுக்கு எதிராய்....'' என்று துவங்கிய கைட்ஸ்கில், ''என் உயிர் மீது சத்தியமிட்டுச் சொல்வேன்.... இது தான் நான் தயார் செய்த உண்மை உயில்....!'' என்றார். ''இதோ... உயிலின் இடது மூலையில் ஒரு சிறு மடிப்பு....! தெரிகிறதா....! உற்று நோக்கினால், ஓர் ஆகாய விமானம் போல நினைக்க வைக்கும்....! இந்த மடிப்பினை, நான் அனுப்பிய உண்மை உயிலில் கவனித்தேன். எதேச்சையாகத் தான். ஆனால் அது இப்போது நினைவுக்கு வருகிறது....!'' என முடித்தார்.

உணர்ச்சியற்ற முகத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''அதிசயமான சூழல்கள்! என் அனுபவத்தில் கண்டிராத சூழல்கள்!'' என்று கைட்ஸ்கில் சொல்ல, ''ஒன்றும் அதிசயமில்லை. என்ன, ஏதேனும் மாய மந்திரமா நிகழ்ந்திருக்க முடியும்! கையெழுத் தாகும்போது நாங்களெல்லோரும் இருந்தோம். இந்தப் புது உயிலெல்லாம் சாத்தியமேயில்லை. திடுதிப்பென்று எதுவும் இப்படி நடக்க இயலாது...'' என மறுத்தார் ரோஜர்.

அப்போது எடித் இருமினார். பின், ''நடந்திருக்கிறது. அது நடந்திருக்காது, நடந்திருக்காது என மூச்சுக் காற்றை விரயமாகக் வேண்டாம்...'' என போடு போட்டார்! ''இப்போது நிலை என்ன? அடுத்தது என்ன செய்வது? இவை தான் தேவை.''

விசாரணைக் கேள்விகளிடையே, பொதுக் கருத்துக்கு அடித்தளம் உருவாவதை நுகர்ந்த கைட்ஸ்கில், உஷாரான வக்கீலானார்! ''இப்போது வழக்கு நிற்கும் நிலையினை மிக ஜாக்கிரதையாக பரீட்சிக்க வேண்டும்....'' என பிடிப்பற்ற, பட்டும் படாத பதில் தந்தார். ''இந்த ஆவணம்'', என கையிலிருந்து உயிலைக் குறிப்பிட்டு,

''இது முந்தைய பல ஆவணங்களையும் தஸ்தாவேஜுக்களையும் கிளறும்! சட்ட ரீதியாய் நினைவில் கொள்ள வேண்டிய விஷயமிது! நல்ல நினைவோடு, சரியான உயில் என நினைத்து லியோனைட் ஓர் உயிலில் கையொப்பமிட்டதைப் பார்த்த சாட்சிகள்... இதோ...'' என்று இருந்த அத்தனை குடும்பத்தினரையும் சுட்டிக் காட்டி ''பற்பல...!'' என்றார். லியோனைட் கையெழுத்திட்டது உண்மை உயிலல்ல என்பதை கவனமாக குறிப்பிட்டார்! ''ம்...! சட்டப் பிரச்னை எழும்...!''

கைக்கடிகாரத்தைப் பார்த்த டேவரெனர், ''ஓ...! மதியம் கடக்கப் போகின்றது. உங்களனைவரையும் மதிய உணவிலிருந்து பிடித்து வைத்துள்ளேன். மன்னிக்கவும்'' என்று மிக அழகாக இந்த உரையாடல் போதும் என்பதை உணர்த்தினார்.

''எங்களுடன் மதிய சாப்பாட்டினை முடித்துக் கொள்ளக் கூடாதா, முதன்மை இன்ஸ்பெக்டர்....?'' என அமைதியாய் அழைத்தார் பிலிப்.

''நன்றி பிலிப். சற்று நேரத்தில், ஸ்வின்லீ டீனில், டாக்டர் க்ரே-ஐ சந்திக்க வேண்டியுள்ளது. நேரம் கடத்த வாய்ப்பில்லை. போகும் வழியில் எதையாவது அள்ளிப் போட்டுக் கொள்கிறேன்...''

''கைட்ஸ்கில்...? நீங்கள்...?''

''நன்றி நன்றி...! டேவரெனருடனேயே செல்ல வேண்டிய நிர்ப்பந்தம். அவரிடம் சில விஷயங்களை உடனடியாய் கேட்க வேண்டியுள்ளது. ரகசியம். விட்டால் மனிதரைப் பிடிக்க முடியாது....!'' என நழுவினார் வக்கீல்.

இருவரும் கிளம்ப, எல்லோரும் வழியனுப்பினர். நான் சோஃபியா பக்கம் விரைந்தேன். முணுமுணுத்தேன்: ''இருக்கட்டுமா, கிளம்பட்டுமா...?''

''போ...'' என்றாள் சோஃபியா. அப்படியே அறைந்து விடலாம் என வந்தது. போடி எனும் வேகத்தில் புறப்பட்டு, வெளி வாசல் சென்றிருந்த இரு அதிகாரிகளுடனும் இணைந்துக் கொண்டேன். அப்போது பக்கவாட்டில், திறந்திருந்த ஒரு கதவினைப் பிடித்துக் கொண்டு, உள்ளும் வெளியுமாக ஆடிக் கொண்டிருந்த ஜோஸஃபை னைக் கவனித்தேன். என்னைப் பார்த்து விஷமமாக சிரித்தாள். எது குறித்தோ மிகவும் குதூகலமடைந்துள்ளதாய் புரிந்தது. எது குறித்து...? அவளை நெருங்கி நின்றேன். அப்போது என்னிடம், ''முட்டாள் போலீஸ்'' என்று சொல்லி, அதே விஷமச் சிரிப்புச் சிரித்தாள்.

வெளியே வந்த சோஃபியா, ''இங்கு என்ன வேலை உனக்கு ஜோஸஃபைன்...?'' என மிரட்டினாள்.

''சமையல் காரிக்கு ஒத்தாசை செய்துக் கொண்டிருந்தேன்''

''இங்கேயா...? வராண்டாவிலா...? சமையல்கட்டு எங்குள் ளது...? நீ எங்கு நின்று கொண்டு சமையலுக்கு உதவுவதாய் சொல்கிறாய்...? என்ன...? உள்ளே நடந்த அனைத்தையும், வழக்கம் போல், ஒன்று விடாமல், ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாயா...?''

ஜோஸஃபைன் அவளைப் பார்த்து கோண வாய் காட்டிவிட்டு, என்னைப் பார்த்தாள். 'வா...! கூடவே வா...! எல்லாவற்றையும், எல்லா உளவுகளையும், எல்லா துப்புகளையும், கொலை சம்பந்தப்பட்ட எல்லா உண்மைகளையும் சொல்கிறேன்...! வா..! ம்.. வா..! இந்த போலீஸ் வேண்டாம்...! வா..! வா...!' என்று அழைப்பது போல இருந்தது.

அழகற்ற அச்சிறுமியின் அந்தக் கண் காந்தத்தில், வசியமாக்கப் பட்டவன் போல் என் நிலை இழந்து நின்றேன், நான்.

# 11

தன் உயிரை வாங்கிய விசாரணைகள், கடைசியில், வழக்கினை, ஓரங்குலம் கூட நகரவிடாதுத் தான் நிறுத்தியுள்ளன என்று அப்பாவிடம் சொல்லி ஆதங்கப்பட்டுக் கொண்டிருந்தார் டேவரெனர். இடம்: துணைக் கமிஷனரின் அலுவலக அறை.

''துவங்கிய இடத்திலேயே இருக்கிறேன்...'' என்றார் டேவரெனர். ''ஒருத்தர் விடவில்லை. எல்லோரையும் திருப்பித் திருப்பிப் போட்டேன். உள்ளும் வெளியுமாக பிய்த்துப் போட்டேன். கடைசியில் மிஞ்சியது என்ன? நத்திங். கொலைக்கான வலுவான இலக்கு - இதனை ஒருவரிடமும் காணயியலவில்லை. விசாரணை யின்போது ஒருவருமே சூடாகவில்லை; என்னோடு வாதாடவில்லை; மறைத்துப் பேச எத்தனிக்கவில்லை....! விசாரணையின் போதிருக்கும் பொது அதிர்வு மட்டுமே எல்லோரிடமும் தென் பட்டது....! ஒருவரிடம் அதிகமாய், இன்னொருவரிடம் கம்மியாய்....! அவ்வளவே...! டம்ளரிலிருந்து லாரன்ஸுக்கான காபியைக் கோப்பைக்குள் ப்ரெண்டா ஊற்றும்போது, இருவரும் காதல் பார்வையைப் பரிமாறிக் கொண்டார்கள் எனும் தீவிர உண்மை தான் புலப்பட்டது....! வேறொன்றும் புலனாகவில்லை...!''

நேரத்திற்கேற்ற இந்த நகைச்சுவைக்கு நாங்கள் மூவரும் மனம் விட்டு சிரித்தோம். நிலைமையின் இறுக்கம் மட்டுப்பட்டது.

''டேவரெனர்...! இந்த நிலையையும் மீறி, ஒரு படி ஏறி, என்னால் உங்களுக்கு உதவ முடியும்...'' என்றேன் நான்.

''நிச்சயமாகவா...? ஒரு படி முன்னேற்றமா...? சொல் சார்ல்ஸ்....! உன்னை தனியாக போய் பேசிப்பார்க்கச் சொன்னேனே....! அப்போது ஏதாவது கிட்டியதா....?'' - பரபரப்பதைக் காட்டிக் கொள்ளாமல் பரபரத்தார் டேவரெனர்.

இன்னும் வசதியாக அமர்ந்துக் கொண்டேன். சிகரெட் ஒன்றினைப் பற்ற வைத்துக் கொண்டேன். அவர்களும் ஆளுக்கொரு

சிகரெட்டைக் கொளுத்திக் கொண்டு தத்தம் இருக்கையில் வசதியாய் சாய்ந்து தாராளமாய் அமர்ந்துக் கொண்டனர். ''வரும் செவ்வாயன்று ரோஜர் குடும்பம் இவ்வூரை விட்டே போகின்றது....!'' என்று நான் சொன்ன கணத்தில், இருக்கைகளில் புதைந்து அமர்ந்திருந்த இருவரும், அதன் நுனிக்கே வந்து விழுவது போல, ''என்ன.... என்ன...! கொலை வழக்கு நடக்கும் போது நாட்டை விட்டே ஓடுவதா...? என்ன நடக்கிறது....? நீ என்ன சொல்கிறாய்...?'' என உண்மையாகவே பரபரத்தனர்.

''ஆமாம்...! லியோனைட் இறந்த அன்று, அவருக்கும் ரோஜருக்கும், சூடான வாக்குவாதங்கள் நடந்திருக்கின்றன. ரோஜரிடம் ஏதோ தவறு நடந்திருக்கிறது என்பதை, அந்த ஓல்ட் மேன் லியோனைட் கண்டறிந்துள்ளார். அப்போது ரோஜர், தான் குற்றம் சாட்டப்பட வேண்டியவன் தான் என்பதை உணர்ந்து ஒப்புக் கொண்டிக்கிறார்.''

டேவரெனர் முகம் மருண்டது. ''எந்த மூலையிலிருந்து நீ இத்தகவல்களைச் சுரண்டினாய்...?'' - அவர் அதிகாரமாய் கேட்டார்.

''இத்தகவல்கள் வேலைக்காரர்களிடமிருந்து கிடைத்திருக்கும் பட்சத்தில் ... ... ....''

''... ... .... கிடைத்திருக்கும் பட்சத்தில், படிப்பறிவற்ற அவர்களின் அபிப்ராயத்தில், கிசுகிசுக்களின் அடிப்படையில் வளரவல்ல அவர்களது அபிப்ராயத்தில், ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டியது அவசியம் என்று எனக்குத் தெரியும்...'' என்றேன். டேவரெனர் அமுங்கினார்.

''பின் எங்கிருந்து...? நீ மேலும் தகவல்கள் தருவதற்கு முன் இது எனக்குத் தெரிய வேண்டும்...'' என்று ஓர் அத்தியாவசிய ஆணையாய் சொன்னார் டேவரெனர். அப்பாவும் டேவரெனரின் இத்தேவையை ஏற்றுக் கொண்டது போல் அமைதி காத்தார்.

ஒரு வேளை ஜோஸஃபைன் என்று நான் சொல்லப் போக, போலீஸ் கூட்டம் நாளை அந்தச் சிறுமியைப் போய் வட்டமிட்டு விசாரணை எனும் பேரில் துளைத்தெடுத்தால், அந்த அமுதசுரபியிலிருந்து விஷயங்கள் வருவது தடைப்பட்டுப் போகுமே எனும் குழப்பத்தில் நான் பதில் கூற தயங்கினேன். அவள் வேறு, போலீஸிடமோ, போலீஸ் சம்பந்தப்பட்டவரிடமோ, தான் எந்தத் தகவலையும் தரப் போவதேயில்லை என்று வேறு ஸ்திரமாய் உள்ளாள். நான் சொல்லப் போய் தான் போலீஸ் வந்தது என தெரிந்தால்,

அவ்வளவுதான்... என்னுடன் பேசுவதையே முழுக்க நிறுத்திக் கொள்வாள். விஷயத்தை விட - தகவலை விட - அது எங்கிருந்து வந்தது என்பதில் போய் இவர்கள் இப்படி தீவிரம் காட்டுவார்கள் என ஊகித்திருந்து, எதையும் இப்பொழுது சொல்லியிருக்கக் கூடாது என என்னை நானே திட்டிக் கொண்டி ருக்கும் போது, ''யார்... அந்தக் குட்டிப் பெண் ஜோஸஃபைன் சொன்னாளா...?'' என்று, டேவரெனர், அப்படியே என்னை மலையுச்சியிலிருந்து ஒரு தள்ளுத் தள்ளினாரே பார்க்கலாம்....! நான் கண்ணகல விக்கித்து, இழுத்த சிகரெட் புகையை தட்டுத் தடுமாறி இருமி வெளியேற்றியபடி, இதனால் கண்களில் நீர் மல்க, ''டேவரெனர்....?'' என்று அதிர்ந்து அழைத்தேன். ''ஆமாம்...! ஜோஸஃபைன் தான் சொன்னாள்...! அது எப்படி உங்களுக்கு...? நம்ப முடியவில்லை டேவரெனர்....!'' என்று கதறி விட்டேன்!

''அந்தக் குழந்தை, வீட்டில் நடக்கும் அத்தனை சம்பவங் களையும் புத்திக் கூர்மையுடன் ஆராய்கிறாள்...! கவனித்திருக் கிறேன்...! என் விசாரணையில் விட்டுப் போன அவள் சட்டென்று ஞாபகத்துக்கு வந்தாள்'' என்ற டேவரெனரின் கூற்றுக்கு, ''இது குழந்தைகளின் சராசரியான வாடிக்கையான குணம்...!'' என்ற அப்பாவின் மேலோட்டமான கருத்தை ஒதுக்கினார் இன்ஸ்பெக்டர். ''சின்னஞ்சிறு வயதிலேயே சில குழந்தைகள் பாடுகின்றன....! பாண்டித்யம் மிகுந்து வாத்தியங்கள் வாசிக்கின்றன...! இல்லையா...! அது போல், இக் குழந்தை துப்பறியும் கலையின் மிக உயர்ந்த உச்சியை, இச்சிறு வயதிலேயே எட்டிப் பிடித்து விட்டதாய் தோன்று கின்றது...! குழந்தை மேதை...! அவளைக் காப்பாற்றி வைக்க வேண்டும்'' - என்றார் டேவரெனர்.

''ஓ...!'' என்று ஆமோதித்த அப்பா, ''நம்பத் தகுந்த குழந்தை எனில், வழக்கின் கோணத்தையே அன்றோ அவளின் இத்தகவல் மாற்றுகின்றது...?!'' என்றார்.

உண்மை தான். ஜோஸஃபைன் சொன்னது போல, ரோஜர், லண்டனுக்கு, தனது ஓட்டல் அலுவலகங்களின் நிமித்தமாகப் பறந்து தலைமறைவாவதென்றால், அவர், தவறுதலாகவோ - அல்லது வஞ்சகமாகவோ - அலுவலக உடைமைகளை அல்லது பணத்தினை அல்லது சொத்துக்களை அல்லது பங்கினைக் கையாண்டு விட்டது வெளிச்சமாகின்றது! 'அசோசியேட்டட் கேட்டரிங்' எனும் பேருக்குக்

கீழ் இயங்கும் அத்தனை உணவகங்களும், வியர்வை சிந்தி உழைத்த லியோனைடின் மாபெரும் வெற்றி. அவற்றில் கள்ளத்தனமாய் குளறுபடி நடந்துள்ளது, ஒரு வேளை லியோனைடுக்குத் தெரிய வந்திருப்பின், அவர் நிச்சயம் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார். ரோஜரைக் கூப்பிட்டு தாட்சணியமின்றி விசாரித்திருப்பார். அதனால் தான் கொலை சம்பவித்த தினத்தன்று மணிக்கணக்காய் இருவருக்கும் வாதங்கள் நிகழ்ந்துள்ளன. அப்பொழுது தன்னிலை இழந்து கோப உச்சத்திற்கு ரோஜர் தள்ளப்பட்டிருப்பார். கோடிக் கணக்கான பணக் கையாடல் இல்லையா...! ஏது தப்பிப்பு...? உள்ள ஒரே வழி, கிழவரின் மூச்சை வலிக்காது நிறுத்தி விட்டு, விஷயம் பூதமாய் கிளம்பும் முன் எங்காவது ஓடி விடுவது...! இதை ரோஜர் செய்திருக்கலாம். இது தான் நடந்துள்ளதெனில், தானேத் தன்னை வலிய ஒரு கொலைக் குற்றத்தில் திணித்துக் கொண்டு விட்டார், ரோஜர்...!

''அசோசியேட்டட் கேட்டரிங் விழுந்தால் அது ஒரு பேரிழப்பாக இருக்கும். மில்லியன் கணக்கில் பண முதலீடு கொண்டு, பல பெரிய கிளைகளை உள்ளடக்கிய ஸ்தாபனம்'' என குறிப்பிட்ட அதிகாரிகள் இருவரும், கணமும் தாமதமின்றி அந்நிர்வாகத்தின் மீது உளவினையும் விசாரணையையும் தொடங்க வேண்டியது அவசரம் என முடிவெடுத்தனர்.

''அந்நிறுவனம் மீதான வாக்குவாதம் தான் இருவருக்கும் இடையே நிகழ்ந்ததா என தெரியாது. அது உண்மையாயின், வழக்கின் பாதைக்கு வெளிச்சம் கிடைத்து விடும்'', என்ற டேவரெனர், ''அப்பா, பிள்ளையை ஆதாரபூர்வமாக விசாரிக்கிறார். ரோஜர் உடைந்து போய் ஒப்புக் கொள்கிறார். ப்ரெண்டா அப்போது தியேட்டரில் படம் பார்க்கப் போயிருக்கிறாள். கையும் களவுமாக மாட்டிக் கொண்ட ரோஜர் தப்பித்தாக வேண்டும். லியோனைட்'டிட மிருந்து எழுந்து கழிவறை செல்வது போல் நகர்ந்து, செல்லும்போது இன்சுலீன் பாட்டிலையும் எடுத்துக் கொண்டு சென்று, அதனைக் காலியாக்கி அதீத சக்தி கொண்ட எஸரினை உள்ளே நிரப்பி, திட்டத்தை செயல்படுத்தியிருக்க வேண்டும். அல்லது க்ளெம்சி நிறைவேற்றியிருக்கலாம். அவளுடைய தைரியமும் அமைதியும் எதனையும் நிறைவேற்றும். ரோஜர், தன் சிகரெட் பைப்'பை அங்கு வைத்து விட்டு வந்ததாகவும், தான் அதை எடுக்க லியோனைட்

அறைக்குள் சென்றதாகவும், ஏற்கெனவே வாய்ப் பந்தல் கட்டியிருக்கிறாள் அவள். ஒரு வேளை, தான் லியோனைட் அறைக்கு சென்று வந்த உண்மை தெரிய வந்தாலும், அதற்கான காரணமாக இது இருக்கட்டும் என்று அவள் முன் கூட்டியே சொல்லியிருக்கலாம்.''

டேவரெனரின் கருத்துக்கு ஒப்புதலாய் தலையசைத்தேன். ''பக்கத்தில் இடி விழுந்தாலும் அதிராது மெல்லத் திரும்பி பார்க்கும் க்ளெம்சியின் குணாதிசயமும், ரோஜர் மீது அவள் வைத்திருக்கும் ஆழமான நேசமும், அவளைத் தான் முன் நிறுத்துகின்றன! ஆணின் தப்பிப்பற்ற குரோதம் தடாலடியாய் தானிருக்குமே அன்றி, சத்தமில்லாமல் விஷம் வைத்துக் கொல்லுமளவுக்கு தணிந்திருக்காது என்று எண்ணுகிறேன். விஷம் வைத்து தீர்ப்பதெல்லாம், அக்கம் பக்கம் பார்த்துப் பார்த்து நிறைவேற்றும் பெண் தனமாய் உள்ளது.''

''இல்லை சார்ல்ஸ்...! விஷ பாட்டில் மூலம் வெற்றி கண்ட பல ஆண்களைப் பட்டியலிட முடியும்...!'' என்றார் அப்பா, என் கருத்து சாரமற்ற ஒன்று என்பது போல...!

டேவரெனர், ''என் விசாரணைப் பார்வையில், க்ளெம்சிக்கு ரோஜர் ஒரு குழந்தை. அவரைப் பொத்திப் பொத்தித் தான் காக்கிறாள். அவருக்கு எத்திசையிலும் தப்ப இயலாத உயிர் அபாயம் நேர்வதை அவளால் ஏற்றுக் கொள்ளயிலாது. அப்போது என்ன வேண்டுமானாலும் செய்யத் தயங்கவே மாட்டாள்...'' என்ற போது, சோஃபியா, 'ரோஜருக்கு ஏதாவது என்றால் மட்டும், அவருக்காக , அவர் பாதுகாப்புக்காக, தன் நிலைதடுமாறி எதையும் நிறைவேற்றித் தள்ளும் குணம் உடையவள், க்ளெம்சி' என்று, என்னிடம் தன் பயம் பற்றி விவரித்தபோது சொன்னது நினைவுக்கு வந்தது. என் முகம் பிரகாசமடைந்தது.

''உனக்குள் என்ன சிந்தனை?'' என்றார், இதைக் கவனித்த அப்பா. ஆனால் நான் பதிலளிக்கவில்லை.

மறுநாள் மதியம் வரும்படி அப்பா எனக்கு ஆணை பிறப்பித்திருந்தார். அது போல நான் அவரறை அடைந்தபோது, அங்கு இன்ஸ்பெக்டர் டேவரெனரும் அழைக்கப்பட்டிருந்தது புரிந்தது. இன்ஸ்பெக்டர், வழக்கமான மன அமைதியோடும் ஆனால் கொஞ்சம் எதிர்பார்ப்போடுமிருந்தார். வழக்கில் ஏற்பட்டுள்ள சில முன்னேற்றங்கள் அவருக்குள் தெம்பேற்றியிருக்க வேண்டும்.

''அசோசியேட்டட் கேட்டரிங் மூழ்குகின்றது...!'' என்று ஆரம்பித்தார் அப்பா.

''எந்த நொடியில் வேண்டுமானாலும் திவாலாகும் நிலை...!'' எனத் தொடர்ந்தார் டேவரெனர்.

''நேற்றிரவு பங்குச் சந்தை நிலவரப்படி அந்நிறுவன பங்கு களனைத்தும் பாதாளத்துக்குச் சரிந்து விட்டன. இன்று காலையில் சில பங்குகள் உயிர்ப்பித்துள்ளது போல தெரிகின்றது'' என்று, நான் இவ்வழக்கின் முன்னேற்றங்களோடு பயணிப்பதை உணர்த்தினேன்.

''நம் மதிப்பிற்குரிய பெரிய மனிதரை மிக ஜாக்கிரதையாகக் கையாள வேண்டும்'' என்ற டேவரெனர், எங்களின் முழு கவனமும் அவர் சொல்லப் போவதில் இருக்க வேண்டும் என்பதை உணர்த்தும் வகையில் சற்று ரகசியமாக தொடர்ந்தார் : ''நேரடி விசாரணைகளை தற்சமயம் ஒத்தி வைப்போம். நம் கேள்விகள் புயல் போல் விழுந்து எவ்வித திடுக்கிடலையும் அவருக்குள் தோற்றுவிக்கக் கூடாது...! இது அவசியம்! இந்த இருபத்து நாலு மணி நேரத்திற்குள் சில நம்பகமான தனியார் உளவுத் துறை மூலம் எனக்கு சேதிகள் கிடைத்துள்ளன. அசோசியேட்டட் கேட்டரிங் மூழ்கப் போவதை யாராலும் தடுக்க முடியாது. அதன் பணம் சம்பந்தமான வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியாமல் மீள இயலாத நஷ்டத்தில் விழுந்து தத்தளிக்கின்றது. பல வருடங்களாக மெல்ல மெல்ல வளர்ந்த தவறான கம்பெனி நிர்வாகமே இந்த எரிமலை வெடிப்புக்குக் காரணம் என்பது முடிவு.''

''ரோஜரின் தவறான நிர்வாகத்தாலா...?'' - அப்பா.

''நிச்சயமாக. நிறுவனத்தின் அத்தனை நிர்வாகமும் அவரிடம் தானிருந்தது.''

''ஆக கொஞ்சம் கொஞ்சமாக பணச் சுருட்டல்.. ... ...'' என்று அப்பா, ரோஜர் தன் வாழ்க்கைக்காக வேண்டி நிர்வாகப் பணத்தினை சுருட்டியிருக்கலாம் எனும் கோணத்தில் கருத்துத் தெரிவிக்க முயலும் போது, ''இல்லை, இல்லை...'' என்று, அப்படிப்பட்ட கருத்து வேண்டாம் என்பது போல் அவசரமாய் மறுத்தார் டேவரெனர். ''நான் அப்படி எடைபோடவில்லை. ஏனென்றால், அவர் அப்படிப்பட்டவர் அல்ல. நிலைமையின் தீவிரம் கருதி அவரைக் கொலையாளி என்று வேண்டுமானால் சுட்டிக் காட்டலாமே தவிர, திருடன் என்று சொல்லக் கூடாது! ஒரு வார்த்தையில் விளக்க வேண்டுமாயின், ரோஜர் ஒரு முட்டாள். எங்கு உணவகக் கிளை துவங்கினால் ஊற்றிக்

கொள்ளுமோ, அங்கு கிளை துவங்கியிருக்கிறார். விளைவு, நஷ்டம். எங்கு துவங்கினால் கொள்ளை லாபம் ஈட்டியிருக்கலாமோ அங்கு யோசித்திருக்கிறார். இதன் விளைவும் நஷ்டமே! ஒரு முக்கியமான பணியை யாருக்கு ஒதுக்கியேயிருக்கக் கூடாதோ, அவருக்குப் பணித்திருக்கிறார். பாவம்...! எடுப்பார் கைப்பிள்ளை! எல்லோரையும் நம்பி விடும் சுபாவம். தவறான நபர்களையே நம்பும்படி ஆகியிருப்பது துரதிர்ஷ்டம். ஒவ்வொரு தடவையும், ஒவ்வொரு தருணத்திலும் தப்புத் தப்பாய்த் தான் முனைந்திருக்கிறார். நிர்வாகத் தோல்விக்கு இவை தான் காரணம்.''

''இது போன்ற பிரகஸ்பதிகள் இருக்கத்தான் செய்கிறார்கள்'' என்றார் அப்பா. ''முட்டாள் என்றும் முத்திரை குத்தி விட இயலாது! தொழிலாளர் திறமையைத் தவறாக கணித்து வேலையை ஒதுக்குபவர்கள். அவ்வளவுதான்! கெட்ட நேரங்களில் மட்டும் விழித்துக் கொள்ளும் சாபம்...!''

''அப்படிப்பட்ட மனிதர்கள் இவ்வளவு பெரிய - சங்கிலித் தொடர் போல பல உணவகங்கள் கொண்ட நிறுவனத்திலிருந்து ஒதுங்கியிருக்க வேண்டும்'' என்றார் டேவரெனர் கண்டிப்பாய். ''தன்னைப் பற்றி தானறியாதவன் கதி இது தான்...!''

சிறிய புன்முறுவலினூடே, ''ரோஜரா சொந்த நிர்வாகமெல்லாம் ஆரம்பித்திருக்கப் போகிறார்....! லியோனைடின் மகனானதால் ஏற்பட்ட விபத்து இது....!'' என்றார் அப்பா.

''லியோனைட் ரோஜரிடம் உணவகச் சங்கிலியான அசோசியேட்டட் கேட்டரிங்'கை ஒப்படைத்த போது, தங்கச் சுரங்கமாயிருந்தது அது. லாபம் லாபம் லாபம் தான். வேறில்லை. அத்தனையும் குள்ளரின் ஒப்புயர்வற்ற உழைப்பின் பலன். இவரிடம் கொடுக்காமல் பேசாமல் விட்டிருந்தால்கூட அந்நிறுவனம் வாழ்ந்திருக்கும்.''

''எந்த நிறுவனமும் தானாய் நகராது டேவரெனர். ஒவ்வொரு நாளும் தீவிர முடிவுகள் எடுக்கப்பட வேண்டும் - ஒரு பணியாளை இங்கு வேலையிலிருந்து தூக்க வேண்டியிருக்கும் - அங்கு ஒரு புது நியமனம் செய்ய வேண்டியிருக்கும் - நிர்வாகக் கொள்கை சம்பந்தமாய் சந்திப்புகள் - இப்படி பல! உங்கள் தகவல்கள் படி, இப்படி ஒவ்வொன்றிலும் சாமர்த்தியமற்று ரோஜர் தோற்றிருக்கிறார்'' என்றார் அப்பா.

''ரொம்பச் சரி. ரோஜர் கொஞ்சம் விசுவாசமானவர். அப்படி இருக்கலாம் தவறில்லை. ஆனால், ஒரு முதலாளி ஸ்தானத்தி

லுள்ளபோது அதனை வெளிக்காட்டிக் கொள்ளக் கூடாது. இவர் செய்தார்! முரட்டு ஆசாமிகள் சிலரை தன்னோடே வைத்துக் கொண்டு திரிந்தார். இவ்வளவு பெரிய நிறுவனத்தின் முதலாளியான நான் மட்டுமே முரடனாயிருக்க வேண்டும் அன்றி, மற்றவரில்லை என உணர்த்தத் தவறி விட்டார். ஒரு வேளை, தன் சற்றே பயந்த சுபாவத்திற்கு கவசமாகவோ அல்லது பல வருடங்கள் பணியாற்றி விட்டார்கள் என்ற காரணத்திற்காகவோ கூட அந்த முரடர்களை வேலையில் தொடர விட்டிருக்கலாம். ஆனால் இதுவே ரோஜர் செய்த பெருந்தவறாய் உருவெடுத்து அந்நிர்வாகத்தையே, இதோ, கவிழ்த்து விட்டது.''

''இன்னும் சொஞ்சம் விளக்க முடியுமா டேவரெனர்...?'' - அப்பா, டேவரெனர் சொன்ன வார்த்தைகளுக்கான காரணம் அறிய விழைந்தார்.

''அந்த அனைவரும் முரடர்கள் மட்டுமல்ல. முட்டாள்கள். நிர்வாகத் திறனற்ற ஒட்டுண்ணிகள். முகஸ்துதி செய்து செய்தே ரோஜரை மகிழ்வித்து வாழ்ந்தவர்கள்.''

''ஓ.. புரிகிறது...! இதற்கெல்லாம் மட்டுப்படாலாமோ...! புகழுரையை நம்பியிருக்கிறார்.''

''ஆமாம்...! அதனால் தான் ரோஜரை அடி முட்டாள் என குறிப்பிட்டேன்'' என்று, ரோஜரை முட்டாள் என சற்று முன் இவர் குறிப்பிட்டதைத் திருத்திய அப்பாவை மடக்கினார் டேவரெனர்! ''இது மட்டுமல்ல... நடவடிக்கைக்கு ஒத்தே வராத வித்தை களையெல்லாம் தன் தொழிலில் முயன்று பார்த்திருக்கிறார் ரோஜர். தோல்வி நிச்சயம் என்பது மட்டுமல்ல.. பல லட்ச டாலர் உள்ளுக்கிழுக்கும் உப்பு சப்பற்ற முயற்சிகளை நடைமுறைப்படுத்தி நஷ்டமீட்டும் அளவுக்கா அவர் ஸ்மரணை அற்றுக் கிடந்தார் என்று கூட கோபம் உண்டாகின்றது....!''

''எதிலும் சட்ட விரோதமோ, அடிதடியோ, விபரீதங்களோ இருந்ததில்லை அல்லவா...?'' - அப்பா குறி வைத்துக் கேட்டார்.

''இல்லை... அற்றுப் போன நிர்வாகத் திறனன்றி வேறில்லை...''

''பிறகு ஏனிந்தக் கொலை? இக் குரூர முடிவுக்கென்ன அவசரம்?'' என்றேன் நான். இவ்வளவு நேரம் நிகழ்ந்த வர்ணனையில் ரோஜர் மீது எனக்குப் பரிதாபம் மிகுந்ததால் இப்படி கேட்டேன்.

''ரோஜர் சாமர்த்தியமில்லாதவன் தான். அவன் குணாதிசயமது. ஆனால் வஞ்சகனல்ல. அயோக்கியனல்ல'' என்று என் பக்கம் முகம் திருப்பி பதிலளிக்க ஆரம்பித்த டேவரெனர், ''எப்படியிருந்தாலும், முடிவு, ஏறக்குறைய ஒன்று தான். நிர்வாக இழப்பு மற்றும் முதலீட்டில் பெரு நஷ்டம். அத்தனை உணவகங்களின் கதவுகளையும் நிரந்தரமாய் இழுத்து மூடுவதிலிருந்து மீட்க ஒரே ஒரு வழி தான் உள்ளது சார்ல்ஸ்...! நஷ்டப்பட்ட அத்தனை பணத்தையும் யாராவது தந்து உதவுவது...! அதுவும், இதோ, இந்த புதனுக்குள்....! இது ஒன்று தான் வழி....!'' என்று விளக்க, ''அந்த மாபெரும் தொகையை அடைவது, அதுவும் ஓரிரு தினங்களுக்குள் அடைவதென்பது, தன் அப்பாவின் உயிலிலிருந்து பிரித்து வாங்கினால் மட்டுமே சாத்தியம் என ரோஜர் முடிவெடுத்திருக்கலாம்'' என்றேன் நான்.

என் முதுகைத் தட்டித் தந்து ''ரொம்பச் சரி'' என்றார் டேவரெனர்.

''ஆனால் உயிலில் உள்ள இவருக்கான பங்கு, ஏற்பட்டிருக்கும் நஷ்டத்திற்கு ஈடாகுமா...?'' என்று சமயம் பார்த்துக் கேட்டார் அப்பா.

''இருக்காது. நஷ்டம் மிக அதிகம். இருந்தாலும், மூங்காமல் எழுந்து விடலாமே. இன்னும் கொஞ்சம் தொகையை உறவினரிட மிருந்து கடனாக பெற்றுக் கொண்டால் போகிறது என்று எண்ணி யிருக்கலாம். எல்லாம் ஒன்று தான், கமிஷனர்...! அனைத்தும் லியோனைடின் பணம் தானே...!''

''சரி....! இப்படிப் பார்த்தால் என்ன? ஏன் ரோஜர் நேரடியாக லியோனைடிடம் சென்று, நிலைமையை விளக்கி, உதவிக் கேட்டிருக்கக் கூடாது...?!'' - இது அப்பா.

''இதனை அவர் செய்திருக்கக் கூடும்... இந்த சம்பாஷனையைத் தான் அந்தக் குழந்தைக் கேட்டு சண்டை என சொல்லியிருக்க வேண்டும்...'' என்றார் டேவரெனர். எத்தனை முதிர்ச்சியான சிந்தனை. கிடைத்த தகவலில் உண்மை அறியும் அழகு. டேவரெனரின் கையைப் பிடித்துக் குலுக்கியே விட்டேன். அவர் கையை விடுவித்துக் கொண்டு, அதிகம் சட்டை செய்யாமல் தொடர்ந்தார்: ''லியோனைட் தாத்தா, சர்வ நிச்சயமாய் நிராகரித் திருப்பார். ரோஜரின் திறமையற்ற நிர்வாகம் புரிந்ததும், கடினப்பட்டு உழைத்த பணத்தை, :'றுபடியும் ரோஜர் தலையில் கட்ட அவர் முனைந்திருக்கவே மாட்டார். நிர்வாகத்தில் லியோனைட் அத்தனை கறார்....!''

டேவரெனரின் இக் கருத்து எனக்கு மிகச் சரியாய் பட்டது. மகதா எத்தனை கேட்டும் அவரின் ஒரு புது நாடகத்திற்கு பணம் தர லியோனைட் சண்டித்தனம் செய்த செய்தி நினைவுக்கு வந்தது. நிச்சயம் நாடகம் தோல்வியடையும் என்று சொல்லியும் கேளாமல் பணம் பெற்று அரங்கேற்றிய அந்த நாடகம் பெற்ற தோல்வி பிரசித்தம். குடும்பத்தில் அன்பான ஆளாக வளைய வந்திருந்தாலும், லியோனைட், நிர்வாகம் மற்றும் அலுவலகங்களில் லாபம் மட்டுமே குறியாய் கொண்டு கடுமையாகத் தானிருந்திருக்கிறார். ஆகவே ஆசோசியேட்டட் கேட்டரிங் பல லட்ச பவுண்டு நஷ்டத்தை எட்டிய பிறகா அவர் உதவ முன் வந்திருப்பார்! சந்தேகமே! தன் தந்தை மண்டையைப் போடுவதைத் தவிர வேறு எது ரோஜரைப் பணமுடையிலிருந்துக் காக்கயியலும்...!

முதல் முறையாக லியோனைட் கொலைக்கான அழுத்தமான ஆதாரமென்று... குறிக்கோள் ஒன்று.. இலக்கு ஒன்று... எங்கள் மூவருக்கும் தென்பட்டது. முகங்கள் சற்றே மலர்ந்தன.

அப்போது அப்பா, ஏதோ நினைவு வந்தவராய் சட்டென்று தன் கைக் கடிகாரத்தைப் பார்த்து, ''ஓ... நேரம் நெருங்கி விட்டது'' என்றபடி எங்களைப் பார்த்தார்: ''நான் அவரை இப்போது இங்கு வரச் சொல்லியிருக்கிறேன்...'' - என்றார். யாரை என்று நானும் இன்ஸ்பெக்டரும் எதிர்பார்ப்பின்றி கேட்ட கேள்விக்கு ரோஜரை என்று அப்பாவிடமிருந்து வந்த பதில், அம்பு போல் பாய்ந்தது.

''என்னப்பா இது...? என் மேடையில் நடனமாட வருகிறாயா என கொசுவைக் கேட்டதாம், சிலந்தி!'' - என்று முணு முணுத்தேன் நான். டேவரெனர் அதிர்ந்து போயிருந்தார்.

எங்களின் அதிர்ச்சியினை ஒரு தூசு போல தள்ளி விட்டு, ''அவர் மீதான நம் ஐயங்கள் ஆரம்பத்திலேயே விளம்பரப் படாமல் ஆரம்பிக்க வேண்டும்...! ரோஜரை மெதுமெதுவாக விசாரணையில் மடக்க வேண்டும்...! ஓ கே! டேவரெனர்...! ஜாக்கிரதை....!'' என்றார் அப்பா. தன் அதிர்ச்சியை உடனடியாய் விலக்கி, துணை கமிஷனரின் ஆணையை மறுக்காமல் ஏற்றார் இன்ஸ்பெக்டர். நானும்.

மேடை தயாராயிருந்தது, நாயகனை எதிர்பார்த்து!

**ரோ**ஜரின் வருகைக்காக நாங்கள் காத்திருக்க, விசாரணையின் உரையாடல்களை எழுத சுருக்கெழுத்தாளர் வரவழைக்கப்பட்டார். அழைப்பு மணி இப்பொழுது ஒலித்தது. ரோஜர் தான்!

வழக்கம்போல, அருவெறுப்பூட்டும் ஒரு வித பரபரப்போடும் எதிர்பார்ப்போடும் நுழைந்தார் ரோஜர். இவற்றால், நாற்காலியில் உட்காருவதில் கூட தடுமாறினார். நுனியில் தான் அமர்ந்தார். உள்ளங்கைகளை ஒன்றுக்குள் ஒன்றை மாற்றி மாற்றிப் புகுத்திப் பிசைந்துக் கொண்டிருந்தார். எனக்கு உணவு கண்ட நாய் காட்டும் பரபரப்புத் தான் ஒப்பீடாய் தோன்றிற்று! எஸரினை இன்சுலீன் பாட்டிலுக்குள் மாற்றும் பணியை, இப்படிப் பரவலாடும் ரோஜர் செய்திருக்கவே இயலாது என நிச்சயமாய் முடிவெடுத்தேன். இவர் உடலின் செல்களெல்லாம், பரபரப்பாலும் அவசரத்தாலும் மட்டுமே ஆக்கப்பட்டுள்ளன. அவற்றில் நிதானம் கிஞ்சித்தும் கிடையாது. எனவே, மருந்தினை மாற்றும் போது, ஒன்று பாட்டிலைப் போட்டு உடைத்திருப்பார்; இல்லை, தரையெங்கும் சிந்தி, மாற்றியதற்கான அடையாளம் ஏற்படுத்திருப்பார்; இவ்விரண்டும் இல்லையென்றால், ஏதோவொரு வகையில், முட்டாள் தனமாய் காரியத்தை சொதப்பி யெடுத்திருப்பார். ஆக, கொலையை நிகழ்த்தியிருப்பது, எதற்கும் அதிராத க்ளெம்சியாய்த்தானிருந்திருக்க வேண்டும்...! ரோஜர், களமமைத்துத் தந்த கர்த்தா...!

வார்த்தைகள் நிதானமற்று அவரிடமிருந்து வந்து விழுந்தன :

''என்னை ஏன் பார்க்க வேண்டும் என அவசரமாய் அழைத் தீர்கள்? ஏதேனும் ஸ்திரமான துப்பு கிடைத்துள்ளதா? ஓ, சார்ல்ஸ்....! உங்களைக் கவனிக்கவில்லை. நீங்களும் உடனிருப்பதில் சந்தோஷம்! என் அப்பாவின் துர்மரணத்துக்கான காரணகர்த்தா கிடைத்து விட்டானா....?''

எத்தனை... எத்தனை வெகுளித் தனம் இது, என தோன்றினாலும், எல்லா கொலைகாரர்களும் மிக நல்லவர்களாகத் தான் தங்களைக் காட்டி வந்திருக்கிறார்கள் எனும் பொது உண்மையும் உறைத்தது! ரோஜரை மிட்டாய் கேட்டு அல்லாடும் குழந்தையாய் பாவித்துப் பார்த்தேன். ஆமாம்...! வழக்கு இப்போதே முடிந்து விடாதா எனும் அல்லாடல் தான் அவர் செயலின் ஒவ்வோர் அங்குலத்திலும் நிரம்பியுள்ளது. இச் சிந்தனையில் அவருக்கு ஒரு வணக்கமும் வைத்தேன்!

''உங்களை நான் வரச் சொன்னது...'' என்று அப்பா நேரடியாய் விசாரணைக்குள் நுழைந்தார். ''புதிதாய் தகவல் தர அல்ல திரு ரோஜர்!'' - அலுங்காமல் குலுங்காமல், நிதானமாய் - சரளமாக, கூடவே வன்மையான வாக்கியங்களைக் கோர்த்து ஆரம்பித்தார்.

ஆனால் எத்தனை தான் கெடுபிடி காட்டி துவங்கினாலும் ஒன்றையும் சட்டை செய்யாமல் ஒதுக்கித் தள்ளினார் ரோஜர். அவரின் அபரிமித அதிர்விலேயே நடுங்கிக் கொண்டிருந்தார். இதை கவனித்துக் கொண்டிருந்த டேவரெனரின் முகத்தில் தவழ்ந்த வெறுப்பும் கிண்டலும் கலந்த புன்முறுவலை ரசித்தேன். *'தாங்கள் தான் உத்தம சீலர்கள் என்று காட்டிக் கொள்வதில் அப்படி ஒரு அவசரம், இந்தப் பயல்களுக்கு....!'* என்ற பரிகாசம் அவர் மூளையில் இருப்பதையும் என்னால் கணிக்க முடிந்தது!

அப்பா தொடர்ந்தார்: ''சில விவரங்களை உங்களிடமிருந்து மேலும் பெறத் தான் வரச்சொன்னோம். விவரங்கள்...! அதாவது, உங்களிடம் அன்று முழு விசாரணை நிகழ்த்தப்பட்ட போது நீங்கள் மறைத்த விவரங்கள்...!''

இதைக் கேட்ட நொடிப் பொழுதில் ரோஜரிடமிருந்த அதிர்வு மறைந்தது. பயம் தொற்றிக் கொண்டது. கண்கள் மருண்டன.

''மறைத்தவை...?! எனக்குத் தெரிந்த எல்லா விவரங்களையும் தான் நான் அன்று முழுவதுமாக சொல்லி விட்டேனே....!''

டேவரெனரின் பரிகாசப் புன்னகை இப்போது கொஞ்சம் நீண்டது!

''இல்லை என எண்ணுகிறேன், மிஸ்டர் ரோஜர்...'' - அப்பா குரலில் கொஞ்சம் கடுமை வந்தது. ''லியோனைட் கொலையுண்ட மத்தியானம், அவரோடு நீங்கள் பேசியிருக்கிறீர்கள்....!''

''ஆமாமாம்! பேசினேன்! அவரோடு தேநீரும் பருகினேன்! இதில் என்ன மறைக்க! இதைத் தான் சொல்லி விட்டேனே!''

''அதை சொன்னீர்கள். ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் நடந்த உரையாடலின் சாராம்சத்தை அப்படியே மறைத்துள்ளீர்கள்.''

''நாங்கள் வெறுமனே எப்பொழுதும் போல் பேசிக் கொண்டிருந்தோம்.''

''எப்பொழுதும் போல்...?''

''ஆ..மா..ம்...! எப்..பொழு..தும்.. போல்..'' - கலவரமானார் ரோஜர். அப்பா ரோஜரின் அந்தக் கலவரத்தையே அவரை மடக்கி இழுக்கும் கருவியாக்கினார்.

''எதைப் பற்றிப் பேசினீர்கள்...?''

''தினசரி நடவடிக்கைகள், வீடு, சோஃபியா...'' என்று ரோஜர் நிஜம் போல் அறிவிக்கும் போது டேவரெனரின் தாடைப் பற்கள் எழுந்து எழுந்து அமுங்கின. கோபம், பற்களைக் கடிக்கின்றார்.

அப்பா, இவரிடம் பேச்சை வளர்க்கப் பிரியப்படாமல், ''அசோசியேட்டட் கேட்டரிங் பற்றி...? இந்நிறுவனம் பற்றி பேச்சு சென்றதா...?'' என்று ரோஜரை வரவழைத்த விஷயத்துக்குள் நுழைத்தே விட்டார்.

சில சமயங்களில் - ஒரு வேளை அதிகம் படிக்கும் துப்பறியும் கதைகளின் தாக்கத்தினாலும், சிறு பிள்ளைகளுக்கே உரிய விளையாட்டுக் கற்பனை திறனாலும், ஜோஸஃபைன் சரடு விடுகிறாளோ - என்று அவள் சொன்ன கருத்துக்களின் மீது நான் நிதானித்ததுண்டு. அச்சிறுமி பற்றிய இவ்வகை சந்தேகம் வீண் என்று, இதோ இப்போது, அப்பா கேட்ட கடைசி கேள்வியில் வீழ்ந்த ரோஜரின் முகத்தைப் பார்த்தும் தெளிவாயிற்று. அவர் முக உணர்வு மாறியது. அடுத்து என்ன என்பது போன்ற எதிர்பார்ப்பிலிருந்து, மாட்டிக் கொண்டு விட்டோமோ எனும் ஆதரவற்ற நிலைக்கு முகம் மாறியது.

''கடவுளே...'' - என்றவர், நாற்காலியில் அப்படியே சாய்ந்து விட்டார். மளமளவென முகம் வியர்த்தது. கைகளுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டார்.

''விசாரணையின் போது எங்களிடம் நீங்கள் உண்மையாய் நடக்கவில்லை என ஒப்புக் கொள்கிறீர்கள் இல்லையா...?''

''உங்களுக்கு எப்படி தெரிய வந்தது! யாருக்கும் தெரிந்திருக்காது என்றல்லவா இருந்தேன்...! பூட்டிய அறை அது! யாரறிந்திருக்க முடியும்?''

''இது போன்ற ரகசிய உரையாடல்களை அறியும் பல வழிகள் அறிந்தவர்கள் நாங்கள், மிஸ்டர் ரோஜர்...'' - ஓர் அதிகார இடைவெளி தந்து, ''இனியாவது எந்த உண்மையையும் மறைக்காமல் தந்து விட வேண்டும் என்பது உங்களுக்குப் புரிந்திருக்கும்...!'' என்றார்.

''நி..நி..நிச்சயமாய். மறைக்க மாட்டேன். கேளுங்கள். என்ன தகவல்கள் வேண்டும்...?''

''அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனம் திவாலாகும் நிலையிலுள்ளது என்பது உண்மையா?''

''ஆமாம். இதை தவிர்க்கயிலாது. நிறுவனம் இன்றோ நாளையோ மூழ்கப் போகின்றது. இந்த சேதி அறியாமலேயே அப்பா இறந்திருக்கக் கூடாதா...! வெட்கப்படுகிறேன்! வேதனைப்படுகிறேன்! அப்பா...!''

''கைது வரை போகும் வாய்ப்புள்ளதா?''

''இல்லை. கௌரவமாய் நிறுவன சொத்துக்கள் முடக்கப்படும். என் சொத்துக்கள் அத்தனையையும் விற்கும் பட்சத்தில் - இதை உடனடியாய் செய்யத்தான் போகிறேன்! - கடன் தந்தவர்களுக்கு ஒரு பவுண்டுக்கு இருபது ஷில்லிங் எனும் அளவில் தந்து விட முடியும். பணத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அப்பா...! அவரைப் பற்றித்தான்...! நிறுவனத்தை முடக்கிப் போட்டு, இதோ, நான் அவருக்கிழைத்திருக்கும் அவமதிப்பை எண்ணித் தான் துடிக்கிறேன்! என்னை நம்பினார்! அப்படி நம்பினார்! அவர் உழைப்பின் மாபெரும் வெற்றியான இந்நிறுவனத்தை, அவரின் மற்ற எந்த நிறுவனங் களையும் விட, அப்பா நெஞ்சார நேசித்த செல்லக் குழந்தையான இந்த சங்கிலி உணவகங்களை, எனக்கே என்று ஆக்கினார். சாசனம்... சாசனம் எழுதித் தந்தார்! எக்காலத்திலும் நிறுவன நடவடிக்கைகளில் மூக்கை நுழைத்ததில்லை. அத்தனை நம்பிக்கை, பாழாய்ப் போன என் மேல்...! என்ன செய்கிறேன், நிறுவனத்தை எப்படி கொண்டு செல்கிறேன், என ஒரு முறை... ஒரே ஒரு முறை கூட கேட்டதில்லை. நம்பினார். நான் நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டேன்.. நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டேன்...!'' - குலுங்கிக் குலுங்கி அழுதார்.

அப்பா, ரோஜரின் உணர்ச்சியைப் பொருட்படுத்தாது, ''சட்ட ரீதியாய் கைது போன்ற நடவடிக்கைகளை எதிர் கொள்ளும் வாய்ப்பு இல்லை என்கிறீர்கள். பிறகு ஏன், உங்கள் குடும்பம் மட்டும், அவசர அவசரமாக ஊரை விட்டே ஓட வேண்டும்..? அதுவும் உங்கள் வீட்டிலுள்ளோரிடம் கூட சொல்லிக் கொள்ளாமல்....!''

சிந்திக்கக் கூட அவகாசம் தராமல் வந்து விழுந்த புயல் போன்ற அடுத்த இக்கேள்வி, ரோஜரிடம் அழுகையை நிறுத்தியது. அதிர்ச்சியைக் கொடுத்தது...!

''இதுவுமா தெரியும்...''

''ஆமாம், திரு ரோஜர்...!''

''இது தெரியும் உங்களுக்கு...!'' என்று வேகமாய் இருக்கையின் நுனிக்கு வந்தவர், ''வெடிக்கவுள்ள எரிமலை சேதியுடன் அவர் முகத்தில் போய் நான் எப்படி விழிப்பேன் என்பது மட்டும் தெரியவில்லை, இல்லையா...?'' என்றார், நிராதரவாய். ''நான் அப்பாவோடு பேசிக் கொண்டிருந்த தகவலை வைத்து, ஏதோ பணம் பிடுங்கத் தான் நான் அவரோடு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்

ததாயும், எனக்குப் புதுப் பாதை அமைத்துத் தரும்படி அவரிடம் கெஞ்சியதாயும் நீங்கள் சந்தேகிக்கலாம். அது உங்கள் உரிமை... போலீஸ் உரிமை...! அப்படி ஒரு சந்தேகம் வேண்டாம். அப்பா - என் மீது அலாதி ப்ரியம் வைத்திருந்தார். இந்நிலையில் பணம் தந்து மீட்கக் கூட அவர் விரும்பியிருக்கலாம். ஆனால் நான் மறுத்திருப்பேன். சுத்தமாக. மறுபடியும் பணம் பெற்று இன்னொரு பிரளயத்தை உண்டு பண்ண எனக்கு உத்தேசமில்லை. நான் வீண். எனக்கு திறமை யில்லை. நான் என் அப்பா மாதிரி அஷ்டாவதானி இல்லை. எனக்கும் இது தெரியும். இருப்பினும், இந்நிறுவனத்தில் வெல்ல, பல முறை முயன்று போராடியிருக்கிறேன். ம்ம்...! உபயோகமில்லை. ஏனென்றால் நான் வீண்.'' - இப்படி ரோஜர் தன்னைத் தானே விளம்பரப்படுத்திக் கொள்வதைக் கேட்கக் கேட்க எனக்கு அவர் மீது பரிதாபம் மிகுந்தது. தொடர்ந்தார்:

''நான் ஒரு துக்ககரமான சூழலில் பல வருடங்களாய் வாழ்ந்து வருகிறேன். அது - மன உளைச்சல்...! கடவுளுக்குத் தெரியும் நான் பட்ட மன உளைச்சல்கள். நிஜத் தூக்கமே அற்று விட்டது. வெறும் பயத் தூக்கம் தான். நிறுவனம் எனும் பல மாடிக் கப்பலில் ஓட்டை விழுந்து அது மூழ்குவது புரிந்தது. ஆயினும் அப்பாவை இச்செய்தி நெருங்கக் கூடாது என்பதில் கறாராயிருந்தேன். அவர் என் மீது வைத்திருந்த அன்பு, நம்பிக்கை கருதி, இது தான் நான் செய்த பெரும் தவறு. இல்லையில்லை... குற்றம்! ஆரம்பத்திலேயே அசோசியேட் டட் கேட்டரிங் நிறுவனத்தைக் கை கழுவியிருந்தால், அருமை அப்பாவுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்த தீராப் பழி என்னை அடைந்திருக்காது. பண்ணவில்லை. இதோ.... அசோசியேட்டட் கேட்டரிங் எனும் ராட்சஸக் கப்பல், தன் உயரம் முழுதும் கடலுக்குள் புதைய மூழ்கியே விட்டது...'' என்ற ரோஜர், முகத்தைக் கைகளுக்குள் புதைத்துக் கொண்டார். அழவில்லை. குலுங்கவில்லை. என்ன செய்கிறார் என்றும் விளங்கவில்லை. நாங்கள் மூன்று பேரும் குறுக்கிடவுமில்லை. சில நிமிடங்கள் கரைய, ''க்ளெம்சி மட்டும் என் நிலையை, குறிப்பாய் என் மனதைத், தெளிவாய் புரிந்துக் கொண்டாள்'' என்று முகத்தைப் புதைத்தபடி பேசிய ரோஜர், பின் நிமிர்ந்து, கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டார். தொடர்ந்தார்:

''என் திட்டத்துக்கு ஒப்புக் கொண்டாள். யாருக்கும் சொல்ல வேண்டாம். ஓடி விடுவோம். பிறகு, நிறுவனம் நொறுங்கிய சேதி சூறாவளியாய் பறக்கட்டும். அப்போது அப்பாவுக்குக் கிடைக்கும் படி

ஒரு கடிதம் எழுதுவேன். அதில் எல்லாவற்றையும் - தப்புத் தப்பாய் நிர்வகித்து இந்நிலையை ஏற்படுத்தியதை - நான் என் குடும்பத்தோடு வெளியேற்றப்பட வேண்டியவன் என்பதை - மன்னிக்கயியலா நம்பிக்கை துரோகம் இழைத்ததை - எல்லாவற்றையும் கொட்டி, கடைசியில், ஒரே ஒரு வார்த்தை... என்னை மன்னித்தேன் என ஒரே ஒரு வார்த்தையை அப்பா மனசார சொல்லி விட்டால், நான் எங்கிருந்தாலும் வாழ்ந்து விடுவேன் என்று மன்றாடி வேண்டி யிருப்பேன். அதைப் படித்து முடிக்கும்போது என் குடும்பம் பறந்திருக்கும். இது, எனக்கு நானே, நிரந்தரமாய் என் அப்பாவை விட்டுப் பிரிந்து போகும்படி விதித்துக் கொண்ட தண்டனை. இது தான் நான் செய்த முடிவு. அவரிடம் உதவி வேண்டியோ அல்லது பணம் வேண்டியோ நான் அவரை அன்று சந்திக்கவேயில்லை. எங்காவது போய் விட வேண்டும். ஏழையாக, அமைதியாக, பரோபகாரியாக வாழ வேண்டும். காயோ கனியோ வளர்த்து அன்றாடம் வாழ பணம் பண்ணியிருந்தால் போதும். க்ளெம்சி...! அவள் நிச்சயம் மறுக்க மாட்டாள். நான் தான் அவள். அந்த அளவு அற்புதமானவள்...!''

ரோஜரின் இந்த தன்னிலை விளக்கத்தை ஒரு வாக்குமூலம் எனும் அளவில் மட்டும் நோக்கி, ''ஓஹோ... அப்படியா...?'' என்றார் அப்பா. பிறகு, ''சரி... இந்த மாதிரித் தான் பேச வேண்டும் என உங்களுக்குள் இருந்த திட்டத்தை, திடீரென மாற்றிக் கொள்ளும்படி எது தூண்டியது....?'' என்றார்.

''திட்டமா...? மாற்றமா...? நான் அப்பாவிடம் பேசியதாய் சொன்னது உண்மை கமிஷனர் சார்...! பொய்யில்லை, திட்டமு மில்லை...! என் மனச் சாட்சி அது...! இதில் போய் என்ன மாற்றம் செய்தேன் என்கிறீர்கள்...?''

''உங்கள் அப்பாவிடம் போய் பண உதவி... அதுவும் வீழ்ந்து போய்விட்ட பல லட்சம் பவுண்டு நிறுவனத்தை மீட்க என பெருந்தொகையைக் கேட்க... எது தூண்டியது...?''

ரோஜர் விழித்தார். ''நான் ஒன்றும் பணம் கேட்கவில்லை சார்.''

''இப்போதாவது உண்மை பேசுங்கள் ரோஜர்''

''தப்புத் தப்பாய் தகவல் சேகரித்துள்ளீர்கள். நான் அவரை சந்திக்கப் போகவில்லை. இந்த என் குறிக்கோளைப் புரிந்துக் கொள்ளுங்கள். அவர் தான் என்னை அழைத்தார். வீட்டுக்குள்ளேயே இருக்கும் நிலையிலும் எப்படியோ விஷயம் அவர் காதுகளை

எட்டியிருந்தது. யாரோ சொல்லியிருக்கிறார்கள், அல்லது, அசோசியோட்டட் கேட்டரிங் பற்றி பரவத் துவங்கிய வதந்தி, அவரையும் தீண்டியிருக்க வேண்டும். தன் சம்பந்தமான விஷயங்களை எப்படியேனும் அடைந்து விடுவார் அப்பா. நேரடியாகப் போட்டு உடைக்காமல், வியூகம் அமைத்து, அப்படியே நெருங்கினார். பிறகு, நான் என்ன செய்ய...! வேறு வழியில்லை, நொறுங்கிப் போனேன்...! எல்லாவற்றையும் சொன்னேன். கதறிக் கதறி அழுதேன். பணத்துக்காக அல்ல...! என் மீது அவர் வைத்திருந்த நம்பிக்கை சுக்கு நூறாகும் வண்ணம், சமுதாயத்தில் அவரைத் தலை குனிய வைத்ததற்காக கூனிக் குறுகி சிதைந்துப் போனேன்...!''

துக்கம் நெஞ்சடைக்க, ரோஜரின் மூச்சு சீரின்றி இழுத்தது. எச்சில் விழுங்கி சீராக்க முயன்றார்.

''என் அருமை அப்பா...'' அழுகையினூடே தழுதழுத்தார். ''எந்த அளவுக்கு அவர் என்னை சீராட்டிக் கொண்டேயிருந்தார் என்பது நீங்கள் கற்பனை செய்து கூட அளக்க முடியாது. கடிந்து கொண்டதே கிடையாது. இந்த நிலையிலும் என்னை நிந்திக்கவில்லை. கனிவு தான், கருணை தான்! இதுதான்... இந்த நம்பிக்கைதான் என்னைக் கொன்றது. மறுபடியும் உதவி என்று எந்த முகத்தோடு போவேன்...?'' என்றார். மிகவும் உணர்ச்சிகரமான ரோஜர், ஒரு வித குற்றவுணர்ச்சியில் ஆழமாய் பாதிக்கப்பட்டிருப்பது விளங்கிற்று. எனவே, எவ்வித உதவியும் வேண்டாமென்ற முடிவோடு அவர் இருந்ததில் வியப்பொன்றுமில்லை.

''கடுகளவு கூட உதவி பெறாமல், சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டே ஓடிப் போய் எங்காவது தலைமறைவாய் வாழ....'' என்றவர், 'ம்..' என்று விரக்தியாய் புன்முறுவி, ''வாழ்வா... அல்ல அல்ல, வாட.... பிறகு, அப்படியே மறைய, என்று முடிவு செய்தேன். அப்பாவோ, வீழ்ச்சியிலிருந்து மீட்டு மறுபடியும் நிறுவனத்தை வளர்ச்சிப் பாதையில் செலுத்த முடியும் என்று வற்புறுத்தினார். வியாபாரத்தில் இன்றியமையாத நஷ்டங்களை, லாபம் ஏற்பட்ட போது இருந்த மனோ நிலையோடு உள் வாங்கிக் கொள்ள வேண்டும் என்றார்''

டேவரெனர் கூர்மையாய் கேட்டார் : ''லியோனைட் பண ரீதியாக உங்களுக்கு உதவ முன் வந்தார் என்று நீங்கள் சொல்வதை அப்படியே நாங்கள் நம்ப வேண்டும் என்று நினைக்கிறீர்களா....?''

''ஆமாம். சந்தேகமில்லாமல் கேளுங்கள் இன்ஸ்பெக்டர். நான் விஷயங்களை மறைத்தேன். மறுக்கவில்லை. மாற்றவில்லை. அப்பா, நிறுவனத்தின் பங்குதாரர்களுக்கு அவ்வப்போது அறிவுரைகள் கூறி கடிதப் பரிமாற்றம் செய்துக் கொண்டுதானிருந் திருக்கிறார்''. இரு அதிகாரிகளின் முகத்தில் வியாபித்திருந்த நம்பகத்தன்மை அற்ற பாவத்தை உதறித் தள்ளி தொடர்ந்தார் ரோஜர்: ''இதோ, இவை அவ்வகை கடிதங்கள் தான். சமீபத்தில் எழுதப் பட்டவை. தபாலில் அனுப்பியிருக்க வேண்டும். இருந்த குழப்பத்திலும் அதிர்ச்சியிலும் விட்டு விட்டேன்.''

தன்னிடமிருந்த பையுள் வேக வேகமாக தேடினார். பின் மடித்து கசங்கியிருந்த ஓர் உறையை எடுத்தார். கொஞ்சம் நெருங்கி நோட்டம் விட்டேன். தபால் தலை ஒட்டப்பட்டு 'க்ரெட்டொரக்ஸ் மற்றும் ஹான்பர்ரி நிறுவனத்துக்கு' என விலாசம் எழுதப்பட்டிருந்தது. ''என்னை நம்பாவிடில், படித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்...'' என்று நீட்டினார்.

அப்பா உறையைப் பிரித்தார். டேவரெனர் எழுந்து அப்பாவின் அருகில் போய் நின்றுக் கொண்டு தானும் படித்தார். நான் அப்பொழுது அந்த ஆவணத்தைப் படிக்காவிட்டாலும், பிறகு படித்து சாராம்சமறிந்தேன். சில முதலீடுகளை, எப்படியாவது, உடனடியாக பணமாக்கி விடும்படி, க்ரெட்டொரக்ஸ் மற்றும் ஹான்பர்ரி பங்கு நிறுவனத்துக்கு, லியோனைட் மூலம் உத்தரவாகியிருந்தது. மேலும் அசோசியேட்டட் கேட்டரிங் பற்றி முக்கியமாக பேச பங்கு நிறுவனத்தின் பொறுப்புள்ள அதிகாரி ஒருவர், மறுநாளே வந்து லியோனைடைப் பார்க்க வேண்டும் என்றும் பணிக்கப்பட்டிருந்தது. அதிலிருந்த மேலும் சில ஆலோசனைகள் புத்திசாலித்தனமாய் எனக்குப்படவில்லை, ஆனாலும், இந்தக் கடிதத்தின் ஒட்டு மொத்த நோக்கம் புலனாயிற்று. லியோனைட், தன் உயிரான அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனத்தை, மீண்டும் எழுப்பி ஓட வைக்கப் பிரயத்தனப்பட்டுள்ளார்!

''இதனை உங்களிடமிருந்து பெற்றுள்ளதற்கான ரசீது தருகிறோம்'' என்ற டேவரெனர், அக்கடிதத்தைப் பத்திரப்படுத்திக் கொண்டார்.

ரசீதினைப் பெற்றுக் கொண்டு எழுந்த ரோஜர், ''முடிந்ததா..? நடந்த சம்பவங்களில் என் நிலையை உணர முடிந்ததா...?'' எனக் கேட்டார்.

இக்கேள்வியும் இதற்கு பதிலும் தேவையற்றவை என்பது போல முக்கியத்துவம் தராது, ''இக்கடிதத்தை லியோனைட் தந்ததும், பெற்றுக் கொண்டு அறையை விட்டு வெளியேறியிருக்கிறீர்கள். இல்லையா? அடுத்த என்ன செய்தீர்கள்?'' என்றார் டேவரெனர்.

எழுந்த ரோஜர் அமர்ந்து, ''வீட்டின் என் பகுதிக்கு விரைந்தேன். என் மனைவி அப்போது தான் வந்திருந்தாள். நடந்தவற்றை அவளிடம் சொன்னேன். சொல்லும் போதே, பல லட்சம் பெறுமான நிறுவனத்தை மூழ்கடித்து நிற்கும் என் மீது துளியும் கோபம் கொள்ளாது உதவிக்கரம் நீட்டிய அப்பாவை எண்ண எண்ண இன்னும் இன்னும் பூரிப்பு கூடியது. என்ன பயன்? அப்பூரிப்பினை என் மீது அவர் காட்ட வழி வகையின்றி நம்பிக்கை துரோகியாகவன்றோ நின்று கொண்டிருந்தேன்...!''

''பிறகு உங்கள் அப்பா துரிதமாக உடல் நலமிழந்தார்.''

''ஆமாம். துரிதமாக. உடனேயே.''

''உடனேயே என்றால்...? எவ்வளவு நேரம் கழித்து...?''

''ம்...'' - யோசித்தார். ''அரை மணியிலிருந்து, ஒரு மணி நேரத்துக்குள். ப்ரெண்டா ஓடி வந்தாள். அலறியிருந்தாள். அப்பா நினைவு தப்பிப் போய்க் கொண்டிருப்பதாய் அழுதாள். அவளோடு சேர்ந்து அப்பாவின் அறைக்கு விரைந்தேன். இவை எல்லாவற்றையும் ஏற்கெனவே உங்களிடம் சொல்லியிருக்கிறேனே...!''

''உங்கள் அப்பாவோடு நீண்ட நேரம் பேசிச் கொண்டிருந்த போது, அவர் அறைக்குள் இருக்கும் கழிவறைக்கு நீங்கள் சென்றீர்களா...?''

''இல்லை என நினைக்கிறேன்...! ம்..!'' என சிந்தித்து சில நொடிகளை நழுவவிட்டு, ''ம்ம்...'' என ஸ்திரமாய் மறுத்த ரோஜர், ''செல்லவில்லை. நிச்சயமாக'' என்றார். ''ஏன் இக் கேள்வி..? நான் இதில் ஈடுபட்டிருக்க மாட்டேன் என நீங்கள் இன்னும் என்னை...'' - என்று தன்னிலை விளக்கமாய் தொடர்ந்த ரோஜரின் வேண்டாத வாதத்தில் விளைந்த கோப வெறுப்பை, பற்களைக் கடித்து தணித்த துணை கமிஷனர், மேலும் அவரைத் தொடர விடாது, ''நன்றி ரோஜர்...'' என்று முடித்தார். ''உதவிகரமாய் இருந்தீர்கள்...'' என்றவர், ''ஆனால் இதையெல்லாம் அப்பொழுதே ஒளிவு மறைவின்றி நீங்கள் சொல்லியிருக்க வேண்டும்...!'' என்று ஓர் அடி அடித்தார்!

ரோஜர் வெளியேற அறைக் கதவு மூடிக் கொண்டது. மூவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ள, ஒரு வகை ஊகத்தோடு, ''இக்கடிதம் போலியாக இருக்கும்'' என்றார் டேவரெனர்.

''இருக்கலாம்'' என்று இடைமறித்த அப்பா தொடர்ந்தார் : ''ஆனால் எனக்கு அப்படி தோன்றவில்லை. எனக்கென்னவோ, நிலைமையை, உள்ளபடி அப்படியே ஏற்றுக் கொள்வது தான் சிறந்ததாய் படுகின்றது. லியோனைட் தன் அருமை மகனை இந்த இக்கட்டிலிருந்து காப்பாற்ற நினைத்துள்ளார். அவர் உயிருடன் இருந்திருந்தால் தனது இந்த ஆசையை மிக அழகாக நிறைவேற்றி யிருப்பார். அவர் இறந்த நிலையில் ரோஜரால் நிச்சயம் இயலாது. அதுவும், கையெழுத்தாகாத உயிலை வைத்துக் கொண்டு, தன் பிதுரார்ஜித சொத்தில் எந்த அளவினை ரோஜரால் மீட்க முடியும் என்பது, பல சிக்கல்கள் நிறைந்த சட்டக் கேள்வி. பணம் கிடைப்பதில் தாமதங்கள், தடைகள்! இப்போதைக்கு ரோஜரின் நிறுவனம் மூழ்கப் போவது உறுதி. டேவரெனர்...! லியோனைடைத் தீர்த்துக்கட்ட ரோஜருக்கும் க்ளெம்சிக்கும் அத்தியாவசிய இலக்கு இருந்திருக்க வாய்ப்பில்லை. மாறாக...'' - என்று நிறுத்தினார் துணை கமிஷனர். நிறுத்தி நிதானமாக, சீரிய யோசனையோடு மீண்டு, ''மாறாக...'' என்றார்.

''என்ன நினைக்கிறீர்கள் சார்...'' என்ற டேவரெனருக்கு, மெலிதான குரலில், ஏதோ எண்ணம் தூண்டப்பட்டவராய் சொன்னார்: ''லியோனைட் இன்னும் இருபத்து நாலே மணி நேரம் வாழ்ந்திருந்தாரென்றால், ரோஜரின் படு மோசமான நிலைமை சீராகியிருக்கும். ரோஜர் மீண்டிருப்பார். அந்த இருபத்தி நாலு மணி நேரத்தை வாழ, லியோனைடுக்கு அவகாசம் இல்லாமல் செய்யப் பட்டு விட்டது. அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனம் தரைமட்டமாகும் தருணத்தில், அவசர அவசரமாக, திடுமென, ஏதோ நாடகத்தில் வரும் காட்சி போல, அதை மீட்க விடாது லியோனைட் கொல்லப்பட்டிருக்கிறார்.''

''உங்களின் கோணத்தைப் பார்த்தால், அந்த வீட்டிலேயே, யாரோ ஒருவர், ரோஜர் வெடித்துச் சிதறும் நாளுக்காக காத்திருந்தது போல தோன்றுகிறது...! ரோஜருக்கு, அவர் பங்குப் பணமோ, அல்லது லியோனைட் கொடுத்து உதவும் பணமோ போய் சேர்ந்து, அவர் மீண்டு விடக் கூடாது என எதிர்த்து நின்றதாய் படுகிறது...! அப்படித் தானே நினைக்கிறீர்கள்....!''

அப்பா விட்டு விட்டார். தொடரவில்லை. ஏன் என விளங்கவில்லை. ''இப்போது உயிலின் நிலை என்ன?'' என்று புதிய பேச்சினைத் தொடங்கினார். ''மறைந்த லியோனைடின் பணம்

அத்தனையும் யாரைப் போய்ச் சேரும்?''

திடுமென அப்பா பேச்சை மாற்றியதில் டேவரெனர் எரிச்சலாகி யிருக்க வேண்டும்...! அப்பாவை சற்றே கோபமாக பார்த்து விட்டு, துணை கமிஷனரன்றோ கேள்வி கேட்டுள்ளார்....! எனவே பதில் தர ஆரம்பித்தார்: ''வக்கில்கலைளப் பற்றி நீங்கள் அறியாததா...? நேரான பதிலினை அவர்களிடமிருந்து பெறவே முடியாது. அதிலும் கையொப்பமாகாத வெற்றுத் தாள் உயிலினை வைத்துக் கொண்டு என்ன செய்ய! இந்த உயிலுக்கு முன் ஓர் உயில் தயார் செய்திருக் கிறார், லியோனைட். தனது இரண்டாவது திருமணத்தின் போது. இந்த உயில் இல்லாது போன காரணத்தினால், அந்த பழைய உயில் உயிர் பெறும் என்று தான் எண்ணியிருந்தேன். ஆனால் அதுவும் அவ்வளவு சுலபமல்ல என்றே தோன்றுகின்றது. புது உயில் பிறந்ததுமே பழைய உயில் காலவதியாகி விட்டதாம். புது உயில் கையெழுத்தானதுக் குண்டான சாட்சிகளும் இருப்பதால், அதையும் அழிக்க முடியாது. ஒரு வேளை உயிலேதும் எழுதியிராத பட்சத்தில், அத்தனையும் அவரது விதவை மனைவிக்கே!''

''ஓ..! உயில் மறையும் பட்சத்தில், அதிகபட்ச லாபம் அடைந்து திளைப்பது ப்ரெண்டா தான்...?''

''ஆமாம். ஏதோ தில்லுமுல்லு நடந்து, தற்சமயம் கையெழுத் தாகாத உயில் மட்டுமே இருந்தாலும், இப்போதுள்ள நிலையில், அத்தனையும் ப்ரெண்டாவுக்குத் தான்! ஆனால் எத்தனை புத்திசாலித் தனமாக உயிலைக் கையெழுத்தாகாமல் மீட்டுள்ளனர்...! இதை நினைக்கும் போது தான் பற்றிக் கொண்டு வருகின்றது'', என்ற வரிகளுடன் விடைபெற்றுச் சென்றார் இன்ஸ்பெக்டர் டேவரெனர்.

எனக்கு ஏதும் தில்லுமுல்லு எல்லாம் நடந்திருக்கும் என்று தோன்றவேயில்லை. டேவரெனர் தவறாக பார்க்கிறார். அத்தனை பேரின் முன்னிலையில், சாட்சிகள் கையொப்பமிட நிகழ்ந்துள்ள சடங்கின் கதாநாயகனானன உயில், லியோனைடால் கையொப்ப மாகியுள்ளது என்பதே என் நம்பிக்கை. கையொப்பமாகவில்லை எனும் முட்டாள் தனமான கோணத்திலேயே பயணித்தால், தவறான திசையில் தவறான இடத்திற்கேப் போய், இந்த வழக்கினைக் கை நழுவ விட்டு விடுவோம் என்று பட்டது எனக்கு.

# 12

டேவரெனர் வெளியேறியதும் துணைக் கமிஷனரிடம் கேட்டேன்: ''அப்பா... கொலையாளிகளின் குணாதிசயம்தான் என்ன....?!''

''மகனே...'' என்று நாடகப் பாணியில் என்னை ஆச்சரியமாய் பார்த்து அழைத்தவர், ''அடுப்பிலிட்ட தோசைக் கல்லாய் கருகும் என் மூளைக்கு, உன்னுடைய இந்தக் கேள்வி, சிறப்பான ஆறுதலடா..'' என்றார். சிறு வயதிலிருந்தே தாயில்லாமல் அப்பாவின் அரவணைப்பில் மட்டுமே நான் வளர்ந்துள்ளதால், அந்த வலி தெரியாமலிருக்க, அப்பா, எனக்கு அப்பாவாயிருந்ததை விட, நண்பனாயிருந்து ஆளாக்கியது தான் அதிகம்! இந்த நட்புறவால் நாங்களிருவரும் ஒருவரை ஒருவர் மிக நன்றாக புரிந்துக் கொண்டுள்ள வர்கள் ஆகையால் என் மூளைக்குள் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்று துல்லியமாய் அறிந்திருப்பார் அப்பா. நான் முக்கியத்துவம் தந்துத் தான் இப்படி ஓர் அந்தரத்தில் ஊசலாடும் கேள்வியைக் கேட்டுள்ளேன் என்பதையும் உணர்ந்திருப்பார். இதற்கான பதிலை ஓரிரு வரிகளில் தரயியலாது. கோவையாய் விளக்கிப் புரிய வைக்க வேண்டும். நாற்காலியில் அப்படியே சாய்ந்து அமர்ந்துக் கொண்டவர், கைகளிரண்டையும் பின்னித் தலைக்கு மேல் இழுத்து, நெட்டி முறித்தார். ''ஊவ்...'' என்று ஒரு பெரும் சோம்பல் கொட்டாவி விடுத்து, ''உன் ஒரு வரி கேள்விக்கான பதில் பத்திப் பத்தியாக செல்லவல்லது! இருப்பினும் அந்த நெடிய விளக்கம் உனக்கு இப்போது அவசியம்! முக்கியம்!'' என்று என் கேள்விக்கு, ''ம்கும்...'' என தன் தொண்டையைச் செருமி பதில் தர ஆரம்பித்தார்: ''கொலை களின் துப்பறியும் பணி, தொழில்ரீதியாக நம்மை வந்து அடையும் போது, கொலையாளிகள் ஒவ்வொருவனும் மிக மிக புத்திசாலிகள் என்ற நிதர்சனத்தை உணர்ந்து வழக்கை ஆரம்பிக்க வேண்டும்.''

''விளங்கவில்லை அப்பா! மெத்த படித்திருப்பார்கள் என்கிறீர்களா...?''

''தவறு சார்ல்ஸ். படிப்பறிவேயில்லாத சாமானியன் கொலை செய்வதில்லையா என்ன! அப்படி அர்த்தப்படுத்தாதே. கொலை என்று ஒன்று - எதிர்பாராமல், தன்நிலை இழந்த வேகத்தில், கண நேரத்தில் நடந்து விட்டாலும் சரி, அல்லது, திட்டமிட்டே அரங்கேறி யிருந்தாலும் சரி - அதனை முழுவதுமாக மறைத்து, தான் தான் உலகிலேயே முதல் வெகுளி என அனைவருக்கும் உணர்த்த, கொலையாளி மிகச் சிறப்பாக திட்டமிட்டு முன்னேறுவான். இத்தகுதியைத் தான் புத்திசாலி என்றேன்.''

''ஓ...!''

''கொலைகளை வெளியிலிருந்து பார்த்தால் கொலையாளியைப் பிடிக்கவே முடியாது சார்ல்ஸ்! உள்ளே செல்ல வேண்டும். உள்ளே... உள்ளே'' என்று ரகசியக் குரலில், அழுத்தமாய், இதைத் தவிர மாற்று இல்லை என்பது போல் ஆணித்தரமாய் சொன்னார்: ''உள்ளே போய் பார்க்க வேண்டும். சீக்கிரம் சிக்குவான்.''

நிஜம் தான். மிக ஆச்சரியமான கொலை வழக்குகளை, அப்பாவின் அலுவலகம் மூலமாகவும், அப்பா வட்டத்துக்குள் அடங்கும் துப்பறியும் அதிகாரிகளின் விவாதங்களிலிருந்தும் அறியும் போது, இவனாயிருக்குமோ அவனாயிருக்குமோ என, ஓர் ஆர்வ உந்துதலின் பேரில், எனக்கு நானே கணக்குப் பண்ணியதுண்டு! பிறகு என் கணக்குக்குள் அடங்கிய எவனுமில்லாமல், வானத்திலிருந்து 'தொபீர்' என ஒருவன் முளைத்துக் கொலையாளி என நிரூபிக்கப் படுவான். ஆம்.....! அது போன்ற ஆச்சரியமான கொலை வழக்குகளை, நான் 'வெளியிலிருந்து', ஜன்னல் வழியாக தெருவில் போகும் ஊர்வலத்தைப் பார்ப்போமே, அது போல் மட்டுமே பார்த்திருக்கிறேன்! இதில் என்ன புலனாகிவிடப் போகின்றது! தெருவிறங்கி ஊர்வலத்துக்குள் கலந்தால் தானே, அந்த ஊர்வலத்தின் காரணகர்த்தா தெரிய வரும்! தனது ஓரிரு வரி பிரசங்கத்தில் என்னை இந்த அளவு சிந்திக்க வைத்து உணரச் செய்த அப்பாவை கண்ணகலப் பார்த்தேன். பிரமிப்பு!

''நான் ஒரு போலீஸ் அதிகாரி எனும் அளவில், விசாரணையின் அடிப்படையில் மட்டுமே விவரிப்பேன். துப்பறியும் கோணத்தில் இராது. ஆகவே உன் சீரிய கேள்விக்கு பதில் தர நான் சரியானவனா என்று புரியவில்லை. எங்கள் இலாகாவுக்கு இரு அனுபவம் வாய்ந்த

மன நல நிபுணர்கள் உதவுகிறார்கள். உன் கேள்வியை வெட்டி கிண்டிக் கிளறி மூடிய வித்தகர்கள் அவர்கள். அல்லது இன்ஸ்பெக்டர் டேவரேனர். அதிமேதாவி. இவர்கள் தான் பதிலளிக்க சரியானவர்கள். ஒரு வேளை, என் அனுபவம் வாயிலாக, கொலையாளி என்று என்னுள் வரையறுக்கப்பட்டிருக்கும் விளக்கம் பற்றி விளாவாரியாக நீ கேட்க விரும்பினால், தாராளமாய் சொல்கிறேன்'' என்ற துணை கமிஷனர், என் கேள்விக்கான அஸ்திவாரம் என்ன என்பது போல நிறுத்தினார்.

''நன்றி அப்பா. ஒரு கேள்வி வரும்போது அதற்கு சரியான பதில் போய் சேர வேண்டும் என்ற உங்கள் எண்ணத்துக்கு தலை வணங்குகிறேன்'' என்றபோது லேசாய் சிரித்துக் கொண்டவர், 'சொல்... உன் எதிர்பார்ப்பு என்ன?' என்பது போல் கண்களால் கனிவாய் கேட்டார். நான் எழுந்து போய், அப்பாவின் முதிர்ந்த அணுகுமுறைக்கு, உணர்வுபூர்வமாக அவர் நெற்றியில் முத்த மொன்று வைத்து விட்டு, ''உங்கள் அனுபவத்தால் விளைந்துள்ள நிலைப்பாட்டைத் தான் அறிய விரும்பினேனே ஒழிய, வேறில்லை'' என்றேன். வந்து என்னிருக்கையில் மீண்டும் அமர்ந்துக் கொண்டேன்.

மேஜையில், தன் வலக்கைக் கட்டை விரலைப் பதித்து, அழகாய் ஓர் அரை வட்டம் போட்டு, அதைப் பார்த்துக் கொண்டே ''கொலையாளியின் குணாதிசயம் என்ன....? ம்...! அவன் எப்படிப்பட்டவன்...? ம்...!'' - என்று தனக்குத் தானே கேட்டு, இதழ் பிரியாது சிரித்துக் கொண்டவர், ''பல கொலைகாரர்கள்...'' என்று சொல்லி, சிறு இடைவெளி தந்து, ''பல கொலைகாரர்கள், ரொம்பவும் நல்ல பயல்களாகத் தான் வளைய வந்துள்ளார்கள். ரொம்ப நல்லவர்கள்'' என்று, நிமிர்ந்து என்னைப் பார்த்தார், இதழ் விரியாத சிரிப்பு மாறாமல்!

ஒன்றும் விளங்கவில்லை.

பிறகு தீர்மானமாய், ''ஏய் துணை கமிஷனர்...! நீ சொல்வது சரி தான்...! அத்தனை கொலைகாரர்களும் மிக நல்லவர்கள் தான்...! மிக ந-ல்-ல-வ-ர்-க-ள்..!'' என சிறு கிண்டல் தொனிக்கச் சொன்னவர், தொடர்ந்தார்: ''நாம் தினமும் சந்திக்கும் சாமானியர்களைப் போலத்தான் கொலைகாரர்களும்! என்னைப்போல், உன்னைப் போல், இதோ இப்போது வெளியேறினாரே ரோஜர், அவரைப் போல்! அத்தனை பேரும் நல்லவர்கள் தான்! கொலை - ஒரு தேர்ச்சியற்ற, திறமையற்ற, சிந்தனையற்ற குற்றம், கண்ணா! நான் குறிப்பிடுவது, நீ

அறியத் துடிக்கும் தனி நபர் செய்யும் கொலை பற்றியது தானேயன்றி, கொள்ளைக் கூட்டங்களும் தீவிரவாதக் கும்பல்களும் நடத்தும் கை தேர்ந்த கொலை பற்றியன்று. எதிர்பாராத ஒரு தருணத்தில், கட்டுக்கடங்காத உணர்ச்சிக் கொந்தளப்பில், எப்படி நிகழ்ந்தது என்று ஞாபகப்படுத்தவே முடியாதபடி நிகழும் விபத்து போலத் தான், கொலைகள் நிகழ்ந்து விடுகின்றன என்பது பொதுக் கருத்து. ஒரு பெண்ணுக்காகவோ, ஓர் ஆணுக்காகவோ, பொருளுக்காகவோ, இறுக்கமான ஒரு நரகச் சூழலிலிருந்து தப்பிக்கவோ.... கொலை வடிகாலாகி விடுகின்றது. அதனால் தான் சொன்னேன் - சிந்தனை யற்ற குற்றம் என்று! உணர்ச்சிக் கொந்தளிப்பில் நம் செயலுக்கு செலுத்தப்பட வேண்டிய 'வேகத் தடை' அறுந்துப் போய்விடும் அவலம்! சார்ல்ஸ்...! குழந்தை, தான் அடைய வேண்டியதை அடைய முன்னேறும் போது கவனித்திருக்கிறாயா! உன்னை அடித்து, குத்தி, கடித்து, கிழித்து, கொஞ்சமும் பச்சாதாபமின்றி... கவனி, சார்ல்ஸ்.... கொஞ்சமும் பச்சாதாபமின்றி, தான் அடைய வேண்டிய தாகத்தைத் தீர்த்துக் கொண்டு விடும். குழந்தை செயலாயிருப்பதாய் நாம் ரசித்து இன்புறுகிறோம். ஆனால்... குறிக்கோளைக் கவனி. பச்சாதாப மில்லாத அணுகு முறை. நான் கையாண்ட ஒரு வழக்கு நினைவுக்கு வருகின்றது. மூன்று வயது நிரம்பிய குழந்தை. அதற்கு ஒரு சகோதரக் குழந்தை பிறக்க, எல்லோரும் அந்தப் புதுப் பச்சிளங் குழந்தையையே எடுத்துக் கொஞ்சி சீராட்டி விளையாடி மகிழ்கின்றனர். தன் சுதந்திரம் பறி போனதை, தன்னோடு எல்லோரும் வந்து விளையாடுவது முற்றிலுமாக தடைபட்டுப் போனதை, அந்த மூன்று வயது குழந்தை யால் சகிக்க முடியவில்லை. என்ன செய்தது தெரியுமா சார்ல்ஸ்...? யாரும் இல்லாத போது, அந்த கைக் குழந்தையைத் தொட்டிலிலிருந்து தூக்கி நீருக்குள் அமுக்கிக் கொன்று விட்டது. செய்வது குற்ற மென்றோ, கொலையென்றோ, தண்டனை கிடைக்குமென்றோ அதற்கு தெரியுமா? தெரியாதல்லவா? பாவம், குழந்தை! பிறகு, தான் செய்தது தவறு என்று அந்தக் குழந்தைக்கும் தெரிய வந்திருக்கும். குட்டிப் பாப்பா இனி திரும்ப வராது என்பதும் புரிந்திருக்கும். முதிர்ச்சியின்மை சார்ல்ஸ். அறம் தவறிய முதிர்ச்சியின்மை! கண்ணா...! ஒவ்வொரு கொலையும் இதே மனோநிலையில் தான் நிகழ்கின்றன. இது உலகப் பொது விதி. என் அனுபவத்தில் இருந்து ஸ்திரமாய் சொல்கிறேன்... கொலை முடிந்த மறு நிமிடமே, 'அய்யோ... கொன்று விட்டேனே...' என்று, கைகளைப் பிசைந்து,

இந்த பூமி உருண்டையை விட்டு எங்காவது ஓடி விடலாமோ எனும் ரீதியில் தான் கொலையாளி பதறுகிறான். ஆனால் கொலையை நிகழ்த்தும்போது, அவன் நிலை இதற்கு எதிர்: கொலை - பாவம் தான், ஆனால் கத்தியைக் கையிலெடுத்து நிற்கும் அவனுடைய குரூர மனோ நிலைக்கு முன் பாவமில்லை.... இதுதான் அவன் நிலை; அவனுக்கு, அந்தக் கணத்தில் கொலை அவசியம்; எதிராளியின் இறப்பே விடுதலை; அதற்கு கொலை தான் ஒரே வழி; சாகட்டும், அவனுக்கு வேண்டும் - என்பது அவன் தீர்ப்பு.''

அவரின் தொடர்ச்சியான விளக்கத்தால் எனக்குள் ஏற்பட்ட உத்வேகம் தணியுமுன் வரிசையாய் சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்து விட வேண்டும் என்று வெறியாயிருந்தேன். ஆகவே மூச்சு விடக் கூட அவருக்கு இடைவெளி தராது, ''யாரோ ஒருவர், வெகு நாட்களாக முதியவரை வெறுத்து மனத்துக்குள் கறுவிக் கொண்டேயிருந்ததால், இக்கொலை நிகழ்ந்திருக்கலாம் என நீங்கள் நினைத்ததுண்டா...?'' என்று கேட்டேன்.

''வெறும் வெறுப்பு..? ம்ம்..! சாத்தியமில்லை என்றே எனக்குப் படுகின்றது. விளக்குகிறேன்'' என என்னை ஆர்வமாய் பார்த்து தொடர்ந்தார்: ''வெறுப்பு என்பதே கொஞ்சம் அதிக பட்சமாய் பிடிக்காமல் போவது. இது, பெரும்பாலானோரில் இருக்கும் ஒருவித உணர்வு, சிரிப்பு அழுகை போல. இவ்வகை வெறுப்பினை விட்டு விடலாம். இவ்வெறுப்புக் கொலையெல்லாம் செய்யத் தூண்டாது. எனவே பாதகமில்லை. அதீதப் பிரியம் அல்லது அதீத இழப்பினால் வரும் பொறாமையால் எற்படும் வெறுப்பு இன்னொரு வகை. நான் சொன்ன குழந்தைக் கொலையையே எடுத்துக் கொள். பச்சிளங் குழந்தையை, அந்த மூன்று வயது குழந்தைக்கும் போதுமெனும் அளவுக்குப் பிடித்திருக்கும் தான். கொள்ளைப் பிரியமும் இருந்திருக்கும். இவற்றில் சந்தேகமே வேண்டாம். ஆனால் பொறாமை வென்று, கொலை வரை கொண்டு சென்று விட்டதே. கவனித்தாயா! ஆகவே வெறுப்பவர்களை விட, பிரியமானவர்கள் தான் அதிகம் கொல்லப்படுகின்றனர்! நாம் அதிகம் நேசிப்போர் செய்யும் ஏதாவது ஒன்று தான், நம் வாழ்க்கையே போய் விட்டதாய் கருத வைத்து நம்மை சுக்குநூறாக்கும். அந்த வெறி கொலையில் நிற்கும்'' என்றவர், ஓரிரு நொடிகள் என் முகத்தை ஆழப் படித்தார். ''என்ன சார்ல்ஸ்... உன் கேள்விக்கான பதில் இன்னும் கிடைக்க வில்லை என நான் ஊகிக்கிறேன். உனக்குத் தேவை, ஓர் அழகான

வீட்டிலிருந்தோ, நண்பர் கூட்டத்திலிருந்தோ, அலுவலகத்திலிருந்தோ, இவன் தான் கொலை செய்தவன் என பொறுக்கி எடுக்க ஒரு விதி. ஒரு சமன்பாடு. ஓர் ஒப்புக்கொள்ளப்பட்ட வழி. இல்லையா...?''

''ஆமாம். அதுவே தானப்பா! வேண்டிய மட்டும் விசாரணை நிகழ்த்தியாயிற்று. எதுவும் புலனாகவில்லை. உங்களின் ஐம்பதாண்டுகளுக்கும் மேலான அனுபவத்திலிருந்து, இருபது பேர் கொலைக் குற்றம் சாட்டப்பட்டிருந்தால், அந்த இருபதிலிருந்து, கழுகு பாம்பைக் கொத்துவது போல் கொலையாளியை இனம் காணும் ஒரு சுலபமான வழி சொல்லயியலாதா...?''

''அப்படி ஒரு பொது விதி உள்ளதா...!'' - தனக்குத் தானே பிரமிப்பாய் கேட்டுக் கொண்டார். ''இருக்காது சார்ல்ஸ். அப்படி இருப்பதாய் ஓர் உதாரணம் வேண்டுமென்றால் கொலைக்குப் பிறகு அந்தக் கொலைக்காரன் அடிக்கும் வீண் டம்பத்தினைத் தான் சொல்லுவேன்''

''வீண் டம்பம்...?''

''ஆமாம். தலைக்கனம் பிடித்த அணுகுமுறை தான் பத்தில் ஒன்பது கொலைகாரர்களை நமக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுவது! பிடிபட்டு விடுவோமோ என்று அவனது அடி மனதினில் தீரவே தீராத பயம் தலை விரித்து ஆடிக் கொண்டிருக்கும். ஆயினும் மிகவும் பகட்டாகவும், கர்வமாகவும், நாலு பேர் கூடியிருக்கும்போது தன்னைத் தானே பெருமையாகவும் - மொத்தத்தில் வீண் டம்பப் பேர்வழியாகத் தான் அவன் உலவுவான். வேறு வழி கிடையாது. இத்தகைய தற்பெருமை தான் அவனது கவசம் என்பது, பாவம், அவன் நம்பிக்கை. இக்கவசத்தால், தான் பிடிபடவே மாட்டோம் என்பது அவன் எதிர்பார்ப்பு. இது என் அனுபவத்தில் நான் கண்ட உண்மை. மணி மகுடமாய் இன்னொரு கொலைகார குணாதிசயமும் உண்டு சார்லஸ்...'' என்ற துணை கமிஷனர் ஸ்திரமாய் குறிப்பிட்டார்: ''கொலையாளி பேச விரும்புவான்.''

''பேசவா? யாருடன்?''

''யாருடனாவது...!''

''எதைப்பற்றி...?''

''எதைப்பற்றியாவது....!''

''அப்பா...!'' - நான் சிணுங்கினேன்.

''ஆமாம் சார்ல்ஸ்...! ஆறுவது சினம்...! குரோதம், அந்தக் கொலை வெறி, அவன் மனதை விட்டு அகன்றதும் - இது கொலை

நடந்த உடனேயே எற்பட்டு விடும் - கொலை செய்த உண்மை நெஞ்சை அரிக்க ஆரம்பிக்கும். மனம் கிடந்து திண்டாடும். எதிலும் ஒட்டாது. தனிமையாய் ஆகி விடும். ஒரு சிறு நம்பிக்கை துரோகமே நம் மனச்சாட்சியை என்ன பாடு படுத்துகின்றது...! கொலை! இன்னோர் உயிரை எடுக்க நாம் யார் எனும் தர்மம் உறைக்கும் போது, செய்த தவற்றை யாரிடமாவது சொல்லி அழ மனம் அரற்றும். இது முடியுமா...? முடியவே முடியாது. காரணம் உயிராசை! இந்நிலையில், அதாவது கொலையைத் தான் தான் செய்தது என்ற உண்மையை வெளிச் சொல்ல முடியாத நிலையில், அந்தக் கொலை பற்றியே பேச ஆரம்பித்து விடுவான். இது அவனுக்கு கொஞ்சம் ஆறுதல் கொடுக்கும்! சிம்பிள் உளவியல்! கொலை பற்றி விவாதிப்பது, இப்படி நடந்திருக்குமோ அப்படி நடந்திருக்குமோ என பிரசங்கம் செய்வது, அவரோடு முன் விரோதம் வைத்திருந்த இன்னார் தான் செய்திருக்க வேண்டும் என போட்டுப் பார்ப்பது என்று, அந்தக் கொலையையே வாழ்க்கையாக்கிக் கொள்வான்.''

''ஒரு கொலை நடந்துள்ளது எனக் கேள்விப்பட்டால் எல்லோரும் தான் விவாதிப்பார்கள்...!''

''எப்போது...? அந்த சேதி வெளியான அன்று...! அன்று மட்டும்...! இல்லையா...? பார்க்கும் எல்லோரிடமும், தினந்தோறும் பேசித்தள்ள மாட்டார்கள்...! ஒப்புக் கொள்கிறாயா...?''

''ஓ...!'' என்ற என் ஆச்சரியத்துக்கு ''ம்.. ... ...'' என்று விஷமமாய் ராகம் மீட்டித் தொடர்ந்தார்.

''உன் நிலையில் நான் துப்புத் துலக்கப் போயிருந்தால், இப்படிப்பட்டவரைத் தான் தேடிக் கொண்டிருப்பேன். மனதில் எழுதிக் கொள் சார்ல்ஸ். கொலையாளி பேச விரும்புவான்...! கொலைப் பற்றி மட்டுமே...!''

''ஆனால் நான் விசாரணை செய்து மட்டுமே கொலையாளியை அறிய வேண்டும் என்றல்லவா எண்ணியிருக்கிறேன்....!''

''எப்படி...? விசாரணையின் போது, 'நான் தான் கொலையாளி... இதோ இப்படித் தான் கொன்றேன்' எனச் சொல்வான் என்று எதிர்பார்த்தா...?!''

கிண்டல். நான் சிரித்துத் தலை குனிந்துக் கொண்டேன்.

''எனவே, நீ மீண்டும் அந்த வீட்டுக்கு... கொலையாளி உலவிக் கொண்டிருக்கும் அந்தக் குரூர வீட்டுக்குப் போ. அவர்களுடன் கல. அவர்களுள் ஒருவனாகி விடு. சோஃபியாவின் மனம் கவர்ந்தவன்

என்பதால் இது எளிதும் கூட. உன்னோடு அவர்கள் ஒவ்வொருவரும் வந்து பேச வேண்டும். அப்படி ஒரு நம்பிக்கையை ஏற்படுத்து. சொல்வது சுலபம். அப்படி ஒன்றும் இது லகுவான வேலையில்லை தான். ஆயினும், குற்றவுணர்வு உள்ளவர்களோ, இல்லை, குற்றமற்ற வெகுளித் தானோ, யாராயிருந்தாலும், பழக இனிமையான புது மனித ஈர்ப்பில்,தங்கள் ஒவ்வொருவருக்குள்ளும், சந்தேகம் காரணமாக பேச முடியாது வைத்திருக்கும் உள் மன பாரங்களை, உன்னுடன் பேசி இறக்கி வைக்க நிச்சயம் வருவார்கள். அந்த உரையாடல்களை, சோஃபியாவுடன் நிகழ்த்தவுள்ள பேச்சு வார்த்தைகள் உட்பட அனைத்தையும், நீ விருப்பு வெறுப்பின்றி கிரகித்தாக வேண்டும். எங்காவது பொறி கிளம்பும்..'' என்று, இதுவரை மிதமாய் பேசிச் சென்றவர், ''பொறி கிளம்ப வேண்டும்...'' என்று சற்று கடுமையாய் குறிப்பிட்டுத் தொடர்ந்தார்:

''கொலையாளி, கொலை பற்றி மட்டுமே, தருணம் பார்க்காமல் எப்படியாவது பேசத் துடிப்பான் என்பது, எத்தனை தூரம் உளவியல் உண்மையோ, அந்த அளவு, கொலை சம்பந்தமான உண்மையை மறைக்க முடிவு செய்தவர்கள் நம்மை *முழுதுமாக ஒதுக்குவார்கள்* என்பதும் உண்மை! நம்முடன் பேசவே மாட்டார்கள்! இன்னொன்று தெரியுமா...? தெரிந்தாற் போல தவறான தகவல் தருபவர்களோ, அல்லது தவறான தகவல் தந்து நம்மை திசை திருப்பப் பார்ப்பவர்களோ, தொடர்ந்து கோவையாய் ஐந்து நிமிடம் கூட பேச முடியாது, தடுமாறுவர். அவர்கள் வார்த்தைகள் வழுக்கிப் போய் நிற்கும். நாம் பேசாமல் அவர்களை மட்டும் பேச விட்டுப் கவனித்தால், சம்பாஷணையை முடிக்கத் தெரியாது திடுதிப்பென்று நிறுத்தி அல்லாடுவர்.''

''அப்படியா...? மூன்று வகை பாத்திரங்கள்'' என மனதில் நிறுத்திக் கொண்டேன் நான்.

''ரொம்பச் சரி...'' என ஆமோதித்த அப்பா, ''போ சார்ல்ஸ்....! குடும்பத்தாரைப் பேச விடு. அவர்களை, நான் குறிப்பிட்ட மூன்று வகைகளுக்குள் அடக்கு. பின் அந்தப் பொறியைத் தேடு! உரையாடலின் போது, கொலையாளி யார் என்று காட்டிக் கொடுக்க, ஒரே நொடியில் கிளம்பும் அந்தப் பொறியைப் பிடித்து வா..!''

இப்போது சோஃபியா விளக்கமாய் குறிப்பிட்ட குரூரத்தனம் - வீட்டிலுள்ளோர் ஒவ்வொருக்குள்ளும் புதைந்துக் கிடப்பதாய்

சோஃபியா சொன்ன குரூரக் குணம் பற்றி - விரிவாய் சொன்னேன். உன்னிப்பாய் கவனித்தார். பிறகு, ''உன் காதலிக்கு ஏதோ வாசம், கொலையாளி யார் என்பது பற்றிய வாசம் கிடைத்துள்ளது சார்ல்ஸ். இல்லையென்றால் தன் ரத்தங்களையே அவள் இத்தனை விரிவாக சந்தேகிக்க அவசியமிருக்காது. இதை ஏன் முன்னமேயே எங்களுக்கு நீ சொல்லவில்லை? மிக உயர்ந்த வாக்குமூலம் இது சார்ல்ஸ். அதுவும் அந்த வீட்டின் முக்கிய ஆளிடமிருந்தே வந்துள்ளது. இதை நீ சொல்லாமல் வைத்தது குற்றம்.''

நான் பேசவில்லை. முக்கியத்துவம் அறியாமலிருந்து விட்டதை ஒப்புக் கொண்டேன்.

''சரி. காலம் தாழவில்லை. கவனி. இது பரம்பரை சம்பந்தப் பட்டது'' என்ற துணை கமிஷனரின் புதுக் கோணத்தில், நான் விக்கித்து விழித்தேன். விளக்கினார்:

''பரம்பரை பரம்பரையாக சந்ததியினரிடையே இறங்கி வரும் குணாதிசய தகவல்கள் கொண்டு புலன் விசாரணை செய்வது, மிகப் பலனளிக்கும் என்பது உளவுத் துறையின் நம்பிக்கை'' என்று, என் கேள்விக்கு, வித்தியாசமான புதுக் கோணத்தில் மேலும் ஒரு புதிய விளக்கம் தர விழைந்தவர், ''குடும்பம் எனும் கவசத்தில் பிளவில்லாமலிருக்காது சார்ல்ஸ்'' என்று ஆரம்பித்தார்.

''இதையேத் தான் அவளும் சொன்னாள். இருக்கட்டுமே...! அது கொலை வரை கொண்டு செல்லுமா...!''

''இந்தக் கேள்வி கொலை வழக்குக்கு உதவாது சார்ல்ஸ். சோஃபியாவின் பார்வை தான் சரி. லியோனைடின் முதல் தாரத்தை எடுத்துக் கொள். குற்றமற்ற நேர்மையான வழி வந்தவள். சரியா. அதனால் தான், இறந்த முதல் தாரத்தின் சகோதரி, விதிவசத்தால் லியோனைடுக்கு இரண்டாம் தாரமானாலும், படுக்கையைப் பகிர்ந்துக் கொள்ளவில்லை. உன்னிப்பாய் கவனி. குழந்தைகளைக் காக்கத் தான் வந்தேனேயன்றி, உன்னுடன் சல்லாபிக்க அல்ல என்று அவள் ஒதுங்கியே இருந்து விட்டாள். விவஸ்தை மிகு பரம்பரை. ஆனால் லியோனைட் அப்படியல்ல. அவரும் வீம்புக்கு குற்றம் செய்தவரல்ல. ஆனால் வாழ - வெல்ல - சட்டத்தை மடக்கி வாழ்ந்தவர். கருணை மிகுந்தவர் தான்; ஆனாலும் நேர்மையானவர் என அழைக்க முடியாது. இரு வேறு தனித்துவ குணங்கள். இந்த இரு குணங்களும் இறங்கியுள்ள வாரிசைப் பிடி. மிக உதவும், சார்ல்ஸ்....! ஒரு குணத்தோடு வாழலாம். இரு வேறு குணங்களோடு வாழ

முடியாது. முடியவே முடியாது. குழப்பும். சாதாரண சமயங்களில் இவ்விரு குணங்களின் கலப்பு, வீரியம் காட்டாவிட்டாலும், துக்ககரமான சமயங்களில், நம் மூளையை முடமாக்கி, செய்வது தவறா சரியான என சிந்திக்க விடாமல், நம்மை வென்று விடும். இது மரபணு உண்மை. உளவுக்கு உதவும் விளக்கு.'' என்றார்.

''மரபணு விவாதம் நெடியது. சிக்கலானது. அதை விவாதித்தால் மண்டை காய்ந்துப் போவாய். இப்போதைக்கு புலனாய்வதில் உள்ள அதன் முக்கியத்துவம் மட்டும் உனக்கு விளங்கினால் போதும். கண்ணா....! போ! அங்கு போ! *எல்லோரையும் உன்னோடு நம்பிக்கையோடு பேச விடு!* ஓர் ஊரில் குழுமிக் கிடப்போரின் குணாதிசயம் ஒரு வீட்டில் உள்ளதால், உண்மை தெரிந்தாக வேண்டும் என்பதில் சோஃபியா கொண்டுள்ள சிரத்தை ரொம்பச் சரி. அவளுக்கும், அந்த வீட்டில் சம்பந்தம் வைத்துக் கொள்ளும் உனக்கும், அந்தக் குரூர வீடு அமைதியானதே என ஊர்ஜிதமானால் தான், திருமண வாழ்வு பொலிவு பெற்று நிம்மதி ஆகும் எனும் அவளின் பிடிப்பும் சரி. சார்ல்ஸ். வேறு வழியேயில்லை. நீ உண்மை அறிய வேண்டும்.''

துப்புறிதலை புதுப்புதுக் கோணத்தில் விளக்கியமைக்காக அவருக்கு நன்றி தெரிவித்து நான் கிளம்பும்போது, சொல்ல வேண்டும் என்று தேக்கி வைத்தவராய், மிக முக்கியத்துவம் தந்து சொன்னார்: ''அந்தக் குழந்தையிடம் கொஞ்சம் ஜாக்கிரதை தேவை.''

''ஜோஸஃபைன்...? நான் தீவிர புலன் விசாரணைத் துறை சார்ந்தவன் என அவளுக்குத் தெரிந்து விடக் கூடாதா...?''

''இல்லை. நான் அப்படிச் சொல்லவில்லை. அவளைக் கவனமாகப் பார்த்துக் கொள் என்றேன். அவளுக்கு எதுவும் நேர்ந்து விடக் கூடாது சார்ல்ஸ்!''

நான் கொஞ்சம் பயமாய் பார்த்தேன்.

''இரக்கமற்ற கொலைகாரன் அந்த வீட்டில் உலவிக் கொண்டிருப்பது நிஜம். அந்த சின்னப் பிள்ளை ஜோஸஃபைன், எப்படியோ அங்கு நடைபெறும் திரைமறைவு நிகழ்வுகளில் பலவற்றை அறிந்து வைத்திருக்கிறாள்.''

''ஆமாம் அப்பா. அவளுக்கு ரோஜரின் ஒவ்வொரு நகர்த்தலும் தெரிந்திருக்கிறது. அவன் பணம் அனைத்தையும் சுரண்டியிருப்பான் என்று கூட அவள் ஸ்திரமாய் சொல்கிறாள். லியோனைடுக்கும்

ரோஜருக்கும் கொலை நிகழ்ந்த அன்று இடம்பெற்ற பேச்சு வார்த்தை குறித்த அவள் தகவலும் சந்தேகத்துக்கிடமின்றி சரியாய் உள்ளது.''

''ஆமாமாம்...! கள்ளங்கபடமற்ற குழந்தை சாட்சியம் தான், சட்டம் போற்றும் அப்பழுக்கற்ற சாட்சியம். பல வழக்குகளில், வெகுளியான குழந்தை தரும் சாட்சியங்களை நான் பரிசோதிக்காது ஏற்றுள்ளேன்! நினைவிருக்கட்டும் சார்ல்ஸ்...! அது சொல்பவற்றை அப்படி அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும். கூண்டில் ஏற்றிக் கேள்வி கேட்டால், தெரிந்ததையும் குழந்தையால் சொல்ல இயலாது. மிரண்டு விடும். கேள்விகள் அதற்கு பிடிக்காது. விசாரணை போல் கேட்டால், மாற்றி ஏதேனும் பதிலாய் தரும்; அல்லது முட்டாளாய் விழிக்கும்; அல்லது தெரியாது என்று விட்டு நம் பதிலுக்கு நில்லாது ஓடி விடும். குழந்தையின் இயல்பு! தனக்குத் தெரியும் என முன் வரும் ஒரு குழந்தையிடமிருந்து, நயமாய் மேலே பேசிப் பேசி, விஷயங்களைப் பிடுங்கி விடலாம். ஜோஸஃபைன், புதியவனான உன்னிடம் இதைத்தான் செய்துக் கொண்டிருக்கிறாள். அவள் வழியை மறிக்காதே. விட்டு விடு. கேள்வியே கேட்காதே. அப்போது தான், பார்த்தாயா, எனக்கு எவ்வளவு விஷயங்கள் தெரிகின்றன என்று கொட்டிக் கொண்டே இருப்பாள். பொறுக்கிக் கொள். உனக்கு ஒன்றுமே தெரியாது என்று மட்டும் தான் நீ அவளிடம் காட்டிக் கொள்ள வேண்டும். அக்குழந்தையை எப்போதும் உன்னிடம் மாட்டி வைக்கக் கூடிய தூண்டில் இது. விளங்கிற்றா....?''

நான் மீண்டும் நன்றி தெரிவித்துக் கொண்டு கிளம்பும் போது, கண்டிப்பாய், உஷார் படுத்தி, அபாயம் நிறைந்த குரலில் அப்பா சொன்னார்: ''ஜோஸஃபைனைப் பத்திரப்படுத்து. ஒன்று தெரியுமா...? ஜோஸஃபைனுக்குக் கொலையின் தீவிரம் அறியாத வயது. எனவே தன் மிக மிக நெருங்கிய, விருப்பமான, ஏன் உயிரான ஒருவரின் பாதுகாப்புக் கருதி, அவருக்கு, அடிக்கடி வீட்டில் நிகழும் செய்திகளைத் தருவதற்காக, அவரைக் காப்பாற்றுவதற்காக, அவள் அதீத விஷயங்களை சேகரித்த வண்ணமிருக்கலாம். இது நிஜமெனில், அப்படி செய்தி யாருக்குத் தரப்படுகிறது என நீ அறிய வேண்டும். ஜோஸஃபைனை வேறு கோணத்தில் பார்க்க வைக்கும் முக்கியமான விஷயமிது. சிறுமி, நடக்கும் விபரீதமறியாது பாசமிகுதியால் இவ்வாறு செயல் பட்டாலும், அந்த உதவி பெறுபவரை மோப்பம் பிடித்து விட்டால் போதும்...! பிரளய ரகசியம் வெளிப்பட்டு விடும்!''

மிரண்டுப் போனேன். வீட்டில் நடக்கும் நிகழ்வுகளை, துப்பறியும் கதைகள் ஏற்படுத்திய ஆழமான தாக்கத்தால் தான் ஜோஸஃபைன் துளாவிக் கொண்டிருக்கிறாள் என மட்டுமே நான் உணர்ந்திருந்தேன். துணை கமிஷனர் மேற்குறிப்பிட்ட காரணத்திற்காக அச்சிறுமி இயங்கிக் கொண்டிருக்கிறாள் என்றால், அது எவ்வளவு விபரீதம்...!

என் முகம், என்னுள்ளே ஓடும் அதிர்வினைக் காட்டியிருக்க வேண்டும்....! ''சார்ல்ஸ்... கொலை வழக்கு விசாரணையின் போது, ஒவ்வொருவரின் நடவடிக்கைக்கும் பல அர்த்தங்கள் கற்பிக்கலாம். அத்தனை அர்த்தங்களையும், ஒரே கோணத்திலில்லாமல் மேலும் மேலும் பலப்பலக் கோணங்களில் கண்காணித்தபடி இருப்பவன் தான் சிறப்பான உளவாளி. அவனால் தான் கொலை வழக்கினை வெற்றியடையச் செய்ய முடியும்.'', என்று விரிவுரையாற்றி முடித்த அப்பா, ''ஏன் பேயறைந்தாற் போல உள்ளாய்...?! கொலையாளியின் குணாதிசயம் என்ன என்று உனது கேள்விக்கு பூரண விடை கிடைத்ததா....?!'' என்று கேலி தொனிக்கக் கேட்டார்!

''இப்பொழுது இங்கு தான் ஒரு கொலை விழப் போகின்றது....!'' என்றேன் நான் விளையாட்டாய், துப்பறிதலில் உள்ள புதுப்புது அத்தியாயங்களும் ஆழங்களும் தீர்க்கமாய் விளங்கப் பெற்றவனாய்....!

# 13

அப்பா, குரூர வீடு என பட்டம் சூட்டிய, நானும் இப்போது ஏறக்குறைய அப்படியே ஒப்புக் கொண்டுள்ள, சோஃபியாவின் வீட்டுக்கு, அங்கேயே சில நாட்கள் தங்கி உளவறி என்ற அப்பாவின் ஆணையை நிறைவேற்றக் கிளம்பினேன். டேவரெனரிடம், ஜோஸஃபைன் - ரோஜர் பற்றி சொன்ன அத்தனையையும் சொல்லியிருந்த நான், ப்ரெண்டா வுக்கும் லாரன்ஸுக்கும் இடையே காதல் கடிதங்கள் பரிமாறப்பட்டுள்ளதாய் அவள் சொன்னதை மட்டும் சொல்லியிருக்கவில்லை. இதனால் ஒரு குற்றவுணர்வு மனதுள் மேலோங்கி நிற்கத்தான் பயணமானேன்.

ப்ரெண்டா லாரன்ஸ் உறவு, கோடு தாண்டாத, கற்பனைக் காமத்தின் வடிகாலாயிருக்கும் என எனக்குள் நானே ஒரு சமாதானத்தில் இருந்தாலும், அதனை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள சந்தர்ப்பம் அமையவில்லை. ஏனோ தெரியவில்லை. ப்ரெண்டாவுக்கு எதிராக சாட்சிகளை அடுக்கிப்பார்க்க அனுமதியாது, இனம்புரியாத ஓர் எதிர்ப்பு எனக்குள் இருந்துக் கொண்டே தானிருக்கின்றது. பல காலமாய் இவ்வீட்டில் வசித்து வரும் அனைத்து அங்கத்தினர்களும் ஓரணியாய் கூடி ப்ரெண்டாளக்கு எதிராய் கொடி தூக்கி நிற்க, அதனால் இவ்வீட்டில் அவளுக்கு விளைந்துள்ள ஆதரவற்ற நிலை என்னைப் பாதித்துள்ளது. ஒரு வேளை அப்படி ஏதேனும் ரசமான கடிதங்கள் உண்மையிலேயே இருப்பின் அவற்றை அந்த டேவரெனரும் அவருடைய பூதக்கண்ணாடியும் கண்டுபிடித்துக் கொள்ளட்டும் என்ற பச்சாதாபம் தான் மேலோங்குகின்றது. அனைவராலும் வெறுக்கப் பட்டுள்ள ஒரு பெண்ணின் மீதுள்ள கொலைப் பழிக்கு, ஒரு சாட்சியைத் தரும் கருவியாய் நானிருக்க எனக்கு ஒப்பவில்லை. என்னிடம், தனக்கும் லாரன்ஸுக்கும் எவ்வித தகாத உறவும் இல்லையென்று தன் தலையில் அடித்துக் கொண்டு வேறு சத்தியம் செய்துள்ளாள். ஒரு பெண் தன் கற்பில் பொய் சொல்வாள் என்பது

நிகழ்வியலா ஒன்று. எனவே, ப்ரெண்டாவின் சத்தியம் தான் என்னுள் மனப்பூர்வமாய் இறங்கியுள்ளதேயன்றி, அந்த அழகற்ற குட்டிச் சாத்தானின் கருத்தல்ல.

இப்படி ஒரு பக்கம் என் மனதில் ஓடிக் கொண்டிருந்தாலும், ஜோஸஃபைன், தன் வீட்டுப் பக்கமே வந்தது கிடையாது என்று ஒரு முறை என்னிடம் சொல்லியிருந்த ப்ரெண்டாவின் கூற்றினை என் மனம் ஏற்றுக் கொள்ளாமல், எலிப் பொந்துக்குள்ளும் புகுந்து விஷயம் திரட்டவல்ல ஜோஸஃபைன் நிச்சயம் ப்ரெண்டா பகுதிக்குள் கண்களைப் திணித்துக் தானிருந்திருப்பாள் என்றே நம்பிற்று.

நான் சோஃபியாவுக்கு இன்று காலையில் போன் செய்து, மீண்டும் அங்கு வந்து தங்க விரும்புகிறேன் என்ற என் விருப்பத்தை தெரிவித்தேன்.

''வா சார்ல்ஸ். நல்வரவு'' என்றாள்.

''நிலைமை அங்கு எப்படி உள்ளது சோஃபியா....!'' என்று கேட்டேன்.

''இதற்கு என்ன பதில் சொல்வது? விளங்கவில்லை சார்ல்ஸ்....! துப்பறிகிறோம் என்று வீட்டைக் குடைந்துக் கொண்டேயிருக் கிறார்கள். சில சமயங்களில், எதைத் தேடுகிறோம் எனத் தெரிந்து தான் தேடுகிறார்களா என்று எனக்குப் புதிராய் தோன்றுகிறது....! என்ன இலக்கில் திரும்பித் திரும்பித் தேடுகிறார்கள்...?''

''எனக்குத் தெரியவில்லை.''

''நாங்களனைவரும் அதிர்ந்துள்ளோம். எவ்வளவு விரைவில் வர முடியுமோ வா. பயந்து பயந்து உள்ள இந்த வீட்டாரைத் தவிர்த்து வேறு யாருடனேனும் என்னத்தையாவது பேசித் தொலைக்கா விட்டால் பைத்தியமாகி விடுவேன்.''

நேராய் வருவதாய் சொல்லிப் புறப்பட்டு வந்துக் கொண்டி ருக்கும்போது தான், ப்ரெண்டா மீதான இரு வேறு கோணங்கள் கொண்ட மேற்குறிப்பிட்ட சிந்தனை!

வாடகைக் காரினை வீட்டின் முன் கதவு வரை ஓசையோடு ஓட்டி வந்து நிறுத்தும் வரை ஒருவரையும் கண்களில் படவில்லை. காசு கொடுத்து டாக்சியினை அனுப்பி விட்டு நிலை வாசலருகே தயங்கி நின்றேன். உள்ளே நுழைவதா இல்லை அழைப்பு மணியினை அடிப்பதா என்பதில் சிறு தயக்கம். கதவு திறந்து தானிருந்தது.

முடிவெடுக்காமல் தயங்கி நின்றுக் கொண்டிருக்கையில் என் பின்னாலிருந்து சிறு ஓசை எழுந்ததைக் கேட்டேன். கூர்மையாய்

திரும்பினேன். ஜோஸஃபைன். விரிந்துக் கொண்டு வீட்டைச் சுற்றி நீண்ட வராண்டாவின் ஆரம்பத்தில் நின்றிருந்த அவள் முகத்தின் ஏறத்தாழ அனைத்துப் பகுதிகளையும் அவள் கடித்துக் கொண்டிருந்த மிகப் பெரிய ஆப்பிள் பழம் வியாபித்திருந்தது. நான் அவள் பக்கமாய் முழுவதும் திரும்பியதும் அவள் பின் பக்கம் திரும்பிக் கொண்டு நகர ஆரம்பித்தாள்.

''ஹாய் ஜோஸஃபைன்....! நான்...!'' - என்ற என் அறிமுகத் துக்கு பதில் தராமல் வராண்டா வழியே ஓடி மறைந்தாள். எனக்கு என்னவோ போலாகிவிட்டது. என் மேல் என்ன கோபம்? நான் இவ்வீட்டில் தங்கி துப்புத் தேட வந்திருப்பதில் ஜோஸஃபைன் தரவல்ல உதவி மீதான நம்பிக்கை பெருவாரியாக உள்ளதால் அவள் கோபத்தைத் தணிக்க வேண்டியது எனக்கு அவசியமாய் பட்டது. தாமதியாமல் அவள் ஓடிய பாதையைப் பின்பற்றி ஓடினேன்.

வீட்டின் பின்புறத்தை ஆக்கிரமித்திருந்த பரந்த காலி பிரதேசத்தில் மரம் செடி கொடிகளுடே, ஓர் அழகிய குட்டை ஒன்றும் வடிவமைக் கப்பட்டிருந்தது. அதில் கொள்ளை கொள்ளும் பல வண்ண நிறங்களில் மூன்று அடிக்கும் மேல் வளர்ந்து பருத்திருந்த தங்க மீன்கள் பல வளர்க்கப்படுகின்றன. இக்குட்டையின் இருகரைகளையும் இணைக்கும் படி, மரத்தாலான சிறு பாலமொன்றும் உண்டு. ஓடி வந்த வேகத்தில் அந்தப் பாலத்திலமர்ந்து, கால்களை நீருக்குள் விட்டு இப்படியும் அப்படியும் அலசியபடி ஆப்பிளை ருசித்துக் கொண்டிருந்தாள் ஜோஸஃபைன். அரவம் கேட்டு நிமிர்ந்தவள், நம்பிக்கையற்ற ஒரு வருத்தப் பார்வையை என் மீது வீசினாள். நா எழாத பிணைக்கைதியாக நின்றேன் நான். பார்ப்போரைப் பேசாமல் கொள்ளாமல் நாலடி தூரத்திலேயே வாயடைத்து நிற்க வைக்கும் அதிகார தோரணையை வரமாக பெற்றவளிவள்.

''நான் மீண்டும் வந்துள்ளேன், ஜோஸஃபைன்...'' - இறுக்கம் தாளாமல் பேச்சை ஆரம்பித்தேன். அர்த்தமற்ற துவக்கம் தான். இருந்தாலும் அவளுடைய அமைதியையும், கண்கொட்டாமல் கோபமாய் தங்க மீன்களை வெறித்துக் கொண்டிருந்த பார்வை யையும், கொஞ்சம் தளர வைத்த துவக்கமாய் அமைந்ததில் சற்று திருப்தி.

சாணக்கிய தந்திரம் மிகுந்தவளாய் வாய் திறக்காமல் ஓடையைப் பார்த்த வண்ணமேயிருந்தாள்.

''சுவை மிகு ஆப்பிளா அது....?'' - விடவில்லை நான்.

இப்போது பதில் தர மனமிரங்கினாள்! ''மாவு ஆப்பிள்....!'' - என்று நீந்திக் கொண்டிருந்த தங்க மீன் கூட்டத்துக்கு ஒரு வார்த்தையினாலான பதில் தந்தாள். என்னைப் பார்க்கவில்லை!

''சே சே...! எனக்கு மாவு மாவாய் வாய்க்குள் குழையும் ஆப்பிள்களே பிடிக்காது.''

''யாருக்குத்தான் பிடிக்கும்....!'' என அலட்சியமான மறு பதில்.

''உன்னைக் கண்டதும் ஆசை ஆசையாய் நான் ஹாய் சொன்ன போது நீ பதிலுக்கு வரவேற்றிருந்தால் மகிழ்ந்திருப்பேன். இப்போது கூட என்னிடம் நீ முகம் தந்து பதில் தராதது வேதனை தருகிறது.''

''உன்னை நான் நம்பினேன். அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாய் நீ நீடித்திருந்தால் நானும் தான் ஏகமாய் மகிழ்ந்திருப்பேன்'' என்று துணுக்குற வைத்தவள், ''உன்னை எனக்குப் பிடிக்கவில்லை'' என்றாள் நிர்தாட்சண்யமாய்.

''ஏன்...?''

தான் சுமத்தவிருக்கும் கண்டனம் நல்ல தீர்க்கமாய் என்னை அடைய வேண்டும் என்பதற்காக கடித்துக் கொண்டிருந்த ஆப்பிளை வாயிலிருந்து எடுத்து விட்டுச் சொன்னாள் : ''நீ அந்தப் போலீஸ் சட்டைக்குள் போய் புகுந்துக் கொண்டு விட்டாய். அதற்காகவா என்னிடம் விஷயங்களைக் கிரகித்தாய். போய் விடு. உன்னை நம்புவதற்கில்லை.''

''ஓ...'' என்று ஓர் ஆச்சரிய அட்சரம் தந்தேன். நான் போலீஸ் காரர்களிடம் விவாதித்ததைக் கூட இந்த அழகற்ற சிறுமியின் முகத்திற்கு மேலும் அவலட்சணம் கூட்டும் அந்த குண்டு மூக்கு மோப்பம் பிடித்து விட்ட அதிர்ச்சியிலிருந்து, நான் என்னை மீட்டுக் கொண்டு, ஒரு சப்பைக்கட்டு வார்த்தை சொல்லி தப்பிக்கத்தான், ஒரு சிறு இடைவெளியாக, இந்த ஓ... பிரயோகம்! ''நான் எதையும் சொல்லவில்லை ஜோ! நீ எதைக் குறிப்பிடுகிறாய்...?''

''....... ரோஜர் பற்றி...''

''ஹஹ்ஹா...'' என சிரிப்பது போல் காட்டிக் கொண்டேன். நான் இவ்விஷயத்தைச் சொன்னது ஒன்றும் தவறல்ல என்று உணர்த்துவது போன்ற சிரிப்பு. உடனடியாக என்னைப் பற்றி இவள் மனத்தில் முளைத்திருக்கும் சந்தேகத்தை எப்படியாவது களைந்தெறிய வேண்டும். இதுவே என் பிராதான இலக்காயிற்று. ''விடு கண்ணு....''

என்று மிக நம்பிக்கையானவனாய் சொன்னேன். ''பரவாயில்லை. என்னிடம் மட்டும் நீ சொன்ன இவ்விஷயம் வெளியேறி விட்டது என்பதைத் தவிர இதில் தவறொன்றும் கிடையாதம்மா. போலீஸார், ரோஜர் பணம் எடுப்பதற்காக தவறு செய்திருக்க மாட்டான் எனும் நம்பிக்கையிலிருப்பதால், நான் சொன்னது ஒன்றும் பெரிய மாற்றம் ஏற்படுத்தி விடாது. ப்ரெண்டா காதல் கடிதம் பற்றி சொன்னாய். இன்னும் பல சொன்னாய். அதைப்பற்றி எல்லாமா சொன்னேன். மூச்....! என்னை என்ன உன்னிடம் விஷயம் வாங்கி போலீஸுக்குப் போட்டுத் தரும் ஆளென்றா எண்ணினாய்..'' என்று, ஏதோ இப்படி நிச்சயப்படுத்திச் சொல்வதால் அமைதியாவாள் என்று என்னை நியாயப்படுத்திக் கொண்டேன். ஆனால் அவளோ, அனுபவம் மிக்க உளவாளியாய், நான் செய்தது தவறே எனும் கோணத்திலேயே நின்று, ''எத்தனை பெரிய முட்டாள் தெரியுமா நீ...'' என்றாள். கேட்டுக் கொண்டேன்!

''ரோஜர் கையாடினாரா இல்லையா என்று யாரிங்கு கவலைப் பட்டது? துப்பறியும் வேலையை - நீ இப்போது செய்துள்ளாயே, தகவல் கிடைத்ததும் போலீஸிடம் போய் கொட்டுவது - அந்த ரீதியில் செய்யவே கூடாது. கடைசியில் ஊர்ஜிதமாகும் வரை ஆழமான துப்புகளை யாரிடமும் சொல்லக் கூடாது என உனக்கு உறைக்கவேயில்லையா...?''

''அப்படியா விஷயம்...?'' என அவள் வழிக்கே போனேன். என்ன வேண்டுமானாலும் வசவு பாடட்டும். இவளைக் கை நழுவ விட்டு விடக் கூடாது. ''மன்னித்து விடு ஜோஸஃபைன். நான் உணரவே யில்லை. வருந்துகிறேன்''

''வருந்தத்தான் வேண்டும்....'' - கடிந்துக் கொள்ளும் கட்டளை யாய் குறிப்பிட்டாள்: ''உன்னை நான் நம்பினேன் சார்ல்ஸ்....''

மூன்றாவது முறையாய் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். சற்று சமாதானம் ஆனவளாய் தெரிந்தாள். இன்னொரு கதிப்பினை ஆப்பிளிலிருந்துக் கடித்து சுவைத்தாள்.

''எப்படியும் போலீஸ் எல்லாவற்றையும் அறிந்துத் தொலைக்கும். நீயும் நானும் எதையும் ரகசியமாய் வைக்க முடியாது ஜோ.''

''ரோஜரின் வங்கிக் கணக்குகளெல்லாம் முடக்கப்பட விருப்பதை வைத்து சொல்கிறாயா...?'' என்றாள். வழக்கம் போல் இந்தப் புது செய்தியும் அறியப்பெற்றிருக்கிறாள்! தொடர்ந்தாள் : ''இன்றிரவு கூடி,

அம்மா, அப்பா, ரோஜர் பெரியப்பா, எடித் பாட்டி, எல்லோரும் இந்த இக்கட்டினைப் பற்றி பேச உள்ளார்கள். எடித் பாட்டி, தனக்கு வரவுள்ள அனைத்துப் பணத்தையும், நான் தூக்கி வளர்த்தவனடா நீ என்று பாச வசனம் பேசி, பெரியப்பாவுக்குத் தந்து விடப் போகிறார். அப்பா மாட்டார். 'ரோஜர் ஒரு தப்பிக்கயியலா இக்கட்டில் இருக்கிறானென்றால், தன்னைத் தானே தான் அவன் நொந்துக் கொள்ள வேண்டும்... லட்சக் கணக்கில் பணத்தை அள்ளித் தந்து விட்டால் மட்டும், திருந்தி, நிர்வாகத்தை சரியாக நடத்தி விடப் போகிறானா என்ன...?' என்கிறார் அப்பா. அம்மாவைப் பற்றி சொல்லவே வேண்டாம். தன் நீண்ட கால கனவான, எடித் தாம்ஸன் கதைக்காகத் தான், அப்பாவின் பணம் செலவாக வேண்டும் என்பது அம்மாவின் வாதம். பிடிவாதம். எடித் தாம்ஸன் ஒரு விவஸ்தைக் கெட்டவள். அவள் வாழ்க்கையே எனக்குப் பிடிக்காது. கல்யாண மானவள். ஆனால் கணவனை விட்டு விட்டு இன்னொரு மிக இளைய வனோடு வாழ்கிறாள். பைவாட்டர்ஸ் என்பது அந்த வாலிபனின் பெயர். கப்பலில் அவனுக்கு வேலை. அது சரிப்படவில்லை என நாடகத்துக்கு வந்து இவளோடு கூத்தடிக்கிறான். நாடகமும் அவனுக்கு வராமல் இப்போது வேறு ஏதோ வேலை....!''

ஜோஸஃபைனின் தகவலறியும் வீச்சு மற்றும் அதனை முன் வைக்கும் முழுமை ஆகிய தகுதிகளைக் கவனித்து மானசீகமாய் அப்படியே சாஷ்டாங்கமாய் வணங்கினேன். அதுவும், பலப்பல விஷயங்களை, வளவளவெனப் பேசி வர்ணித்தெல்லாம் இழுக்காமல், ஒரு சிறு குழலுக்குள் அடைக்கப்பட்ட மாத்திரை யாய் அவள் சொன்னது ஈடிணையற்றது.

''அந்த நாடகத்தை எடுத்து அரங்கேற்றி விட வேண்டும். கிடந்து துடிக்கிறாள் அம்மா. ஆனால் அது உப்புசப்பற்று இருப்பது, ஏனோ அம்மாவின் மர மண்டைக்குள் ஏறவே மாட்டேனென்கின்றது. உள்ளங்கைகளை மட்டும் உண்ணாமல் நாய்கள் விட்டு வைத்ததாய் முடிந்ததே, அந்த ஜெஸபெல் நாடகம், அதே போல, இதுவும் மண்ணைக் கவ்வப் போவது நிச்சயம்.''

சகஜமாய் பேச ஆரம்பித்ததாய் தோன்றியது. எனவே, ''ஆங்....! ஜோஸஃபைன்....! கொலை செய்தது யார் என்பது அநேகமாய் உனக்குத் தெரிந்து விட்டதாய் அன்று சொன்னாயல்லவா....!'' என்று நான் வந்த விஷயத்தை பற்றிப் பேச தளமமைத்தேன்.

''ஆமாம்....! என்ன இப்போது?''

''யாரது....?''

கையாலாகதவனய்யா நீ என்பது போல் பார்த்தாள். இகழ்ச்சியாய் ''ம்..'' என்று பழித்துச் சிரித்தாள்.

''யாருக்கும், குறிப்பாய் அந்த இன்ஸ்பெக்டர் டேவரெனரிடம் கூட நான் சொல்ல மாட்டேன் என இறைவன் மீது சத்தியம் செய்து தந்தால் கூட சொல்ல மாட்டாயா....?''

''முதிர்ச்சியற்றவன் நீ சார்ல்ஸ்....! அதற்காகவா நான் தயங்க வேண்டும்? டேவரெனரிடம் இந்த ரகசியத்தை நீ சொல்லி விட்டால் என்ன வாழ்ந்து விடப் போகின்றது. இந்த ரகசியமறிந்த இடத்திலேயே தான் போலீஸ் நிற்கும். முட்டாள் போலீஸ். கையாலாகாத கூட்டம்....'' என்று கோபமானவள், நிறுத்தாமல், என் கேள்விக்கான பதிலைத் தொடர்ந்த வண்ணமிருந்தாள் : ''நான் காட்டும் தயக்கம் உன் கோள் சொல்லும் குணம் கருதியில்லை. இன்னும் சில துருப்புகள் வேண்டும். என் ஊகத்தை ஊர்ஜிதம் செய்துக் கொள்ள அவை முக்கியமானவை. அது வரை சொல்ல இயலாது'', என்றவள் கடித்தது போக மீதமிருந்த ஆப்பிளின் மையப் பாகத்தை குட்டையுள் எறிந்து விட்டு, ''உன்னிடம் சொல்லக் கூடாது சார்ல்ஸ். என்னிடமிருந்து துப்புப் பிடுங்கி நீ கண்டு பிடித்ததாய் போய் மேளம் கொட்டுவாயே அன்றி, உன்னால் வேறென்ன முடியும்...? இல்லையேல் கிடைக்கும் தகவலை வைத்துக் கொண்டு தப்புத் தப்பாய் பரபரப்பாய்....!''

மிக மட்டமான இவ்விமர்சனத்தை ஜீரணித்தேன். ''சரி... நான் தப்புத் தப்பாக அலைவதை நீ கண்டு களிக்கலாமே! அதற்காகவாவது ஒரு வாய்ப்புத் தரக் கூடாதா....?''

சின்னதாய்... மிகச் சின்னதாய் சிரித்தாள். பரிதாபமான ஒரு காட்சியைப் பார்ப்பது போல் என்னைப் பார்த்தாள்! அடுத்த நொடியிலேயே தனது இறுக்கமான மனோநிலைக்குள் புகுந்து, ''நோ. முடியாது'' என்று மறுப்பாய் தலையசைத்துக் கொண்டாள்.

இனியும் கெஞ்சினால், அறைந்து விடுவாள். அப்படிப்பட்டவள். தளம் மாறினேன்: ''அக்கடிதங்கள் பற்றி அன்று அப்படியே பேச்சு நின்று விட்டதே ஜோஸஃபைன்...! உபயோகமாய் நீ எதையும் சொல்லவில்லை....'' என்று உள்ளே அசடு வழிந்துக் கொண்டு வெளியே அதைக் காட்டிக் கொள்ளமால் பேசினேன்.

''எந்தக் கடிதங்கள்...?'' - புருவங்களை நெறித்துக் கேட்டாள்.

''லாரன்ஸூம் ப்ரெண்டாவும் பறிமாறிக் கொண்டதாய் நீ குறிப்பிட்ட அந்தக் காதல் கடிதங்கள்....!''

''அது என் கற்பனை....''

''நம்ப மாட்டேன். அது உண்மைதான்.''

''நம்பு. அது கற்பனை தான். நான் அவ்வப்போது கற்பனைகள் செய்து பார்ப்பேன். இப்படியோ, அப்படியோ என்று....! என்னை அவை குஷிப்படுத்தும்.''

கடுப்பு தலைக்கேற அவளை முறைத்தேன். அவள் பதிலுக்கு முறைத்தாள், பயமேயில்லாமல்!

''இதோ பார் ஜோஸஃபைன். மியூசியத்தில் பணியாற்றும் ஒருவர் எனக்கு மிக நெருக்கம். அவர், பைபிளைக் கரைத்துக் குடித்தவர். அத்துப்படி. அவரிடம் கேட்டு, ஏன் நாய்கள் உள்ளங்கைகளை உண்ணாமல் விட்டு வைத்தன என்ற காரணத்தை, நீ அறியத் துடிக்கும் அந்தக் காரணத்தை சொன்னால், அக்கடிதங்களின் சாராம்சத்தை சொல்வாயா...?''

இப்படி நான் கேட்டு முடித்ததும், குண்டு மணி விழுந்தால் கூட கேட்குமளவு அங்கு நிலவியிருந்த அமைதியைக் கிழித்தெறிந்து, சுற்று வட்டாரத்திலிருந்த ஏதோ ஒரு மரத்தின் காய்ந்த சுள்ளி போன்ற ஒரு கிளை, காலடியில் அகப்பட்டு படபடவென முறியும் ஓசை கேட்டு உடனே அடங்கிற்று. ரொம்பத் தொலைவில்லை. பக்கத்தில் எங்கேயோ தான்! அப்பாவை நான் கடைசியாக பார்த்தபோது அவர் தந்த எச்சரிக்கையான 'ஜோஸஃபைனைப் பத்திரப்படுத்து' என்ற எச்சரிக்கை திடுமென என்னுள் ஒளிர்ந்தது.

அது என்ன என நான் சுதாரித்து அறிய முயலும் முன், அந்த ஓசையைப் பொருட்படுத்தாது இருந்த சிறுமி, ''அப்பொழுதும் சொல்ல மாட்டேன்'' என, நான் கேட்ட கேள்விக்கு பதிலளித்து என் கருத்தைக் கலைத்தாள்.

என்னிடம் சொன்ன தகவல்களை வெளியே சொல்லி விட்டேன் என்று என் மேலே ஜோஸஃபைன் மனத்தாங்கல் கொண்டுள்ளதால், இன்று நான் என்ன குழைந்துப் பேசியும் அவளிடம் நன்மதிப்பைப் பெற்று விடப்போவதில்லை. கூடக்கூடப் பேசினால் தொந்தரவாய் உணர்ந்து வெறுப்பாள். எனவே, ஓரிரு தினம் ஆறப்போட்டால், நானே வலிய வந்துப் பேசியுள்ளதை நினைத்துப் பார்த்தாவது நிச்சயம்

வழிக்கு வந்து விடுவாள் என்ற முடிவில் ''ம்... கிளம்புவோம்...'' என்று எழுந்தேன். ''சோஃபியாவைப் போய் பார்க்க வேண்டும்.''

''நான் இங்கேயே இருக்கிறேன்'' என்று, ஓடையிலிருந்து அந்தரத்துக்குத் துள்ளி மீண்டும் நீருக்கடியில் ஊடுருவிய ஒரு தங்க மீனைப் பார்த்தபடி சொன்னாள்.

''நீ இங்கிருக்க முடியாது. கூடாது. என்னுடன் உள்ளே வருகிறாய்'' - சற்றுக் கண்டிப்பாய் சொன்னேன். அவள் இதற்கு பதிலேதும் பேசாமல், ஏதோ தண்ணீரை இதுவரைப் பார்த்ததே இல்லை என்பது போல ஓடையை வெறித்துக் கொண்டேயிருந்து விட, சற்று பொறுமையிழந்து வெடுக்கென்று அவள் கையைப் பிடித்து இழுத்தேன். ஆச்சர்யம் மிக, எதிர்க்க நினைத்தாள்; கைகளில் அவள் காட்டிய இறுக்கத்தில் இது தெரிந்தது. இருப்பினும் வேண்டா வெறுப்பாய் கைகளை உதறி எழுந்து வீட்டுப் பக்கம் ஓடி விட்டாள்.

இந்த அளவுக்கு அவளை என்னுடன் வந்துத் தான் தீர வேண்டும் என்று நான் வற்புறுத்துவதற்கான காரணத்தை அப்போது நான் அவளிடம் சொல்லியிருக்க முடியாது. என் உள் வேகத்தால் - நானே உணராத ஓர் உள் வேகத்தால் நிகழ்ந்தது அது. அப்படி ஓர் உள் வேகம் ஏன் விளைந்தது என்பதே கூட எனக்கு அத்தருணத்தில் விளங்கவில்லை. ஜோஸஃபைன் வீட்டுக்குள் போகும் வரை தொடர்ந்து வந்து, வாசல் நிலைப்படியில் நான் நின்ற போது தான் விளங்கிற்று; ஏதோ ஒரு மரத்தின் சுள்ளி போன்ற ஒரு கிளை, படபடவென முறிந்து ஏற்படுத்திய ஓசையால் விளைந்த ஓர் உள் வேகம் அது! பயப் படபடப்பு! ஜோஸஃபைன் உயிர் மீதான் பயப் படபடப்பு!

# 14

வாசல் நிலையில் வந்து நின்றபோது விதவிதமான குரல்களின் முணுமுணுப்பு உள்ளேயிருந்து வந்துக் கொண்டிருந்தது. அதனால் எழுந்த தயக்கத்தால் உள்ளே நுழையவில்லை. யாரேனும் வெளியே வந்தால் அவர் மூலம் உள்ளே நுழையலாம் எனும் நினைப்பில் சில நிமிடங்கள் வாராண்டாவிலேயே இப்படியும் அப்படியும் நடந்துக் கொண்டிருந்தேன். முணுமுணுப்பின் வீச்சு அதிகமானதால் ஓர் உந்துதல் எழ, மூடியிருந்தக் கதவினை லேசாய் திறந்து எட்டிப் பார்த்தேன். அறை முழுதும் இருட்டியிருந்தது. ஆனால், அப்போது, எதிரே, வலப்புறக் கோடியில் அமைந்திருந்த சமையற் கட்டின் கதவு திறக்கப்பட்டு ஒரு வெளிச்ச வகிடு விளைந்தது. நன்றாய் பருத்த ஒரு முதிய பெண்மணி வெளிப்பட்டாள். வீட்டின் நிரந்தர சமையற்காரி, நானி. தன் அகண்ட வயிற்றினை சுற்றி வெள்ளைத் துணியைக் கட்டியிருந்தவள், ஏதோ கை வேலையாய் தான் வெளியே வந்தாள். பார்த்த மாத்திரத்தில், 'எல்லாம் சரியாய் தான் நடக்கின்றன.... பயமெதற்கு' என்று நமக்குள் ஓர் நம்பிக்கையை விதைக்கும் தோற்றம் நானிக்கு. இளையோரின் மீது அன்பு செறிந்த பாசமிகு முதியவர் ஒருவர் மட்டுமே தரவல்ல பாதுகாப்பு உணர்வு. என் வயது முப்பத்தைந்து. ஆனால், சிரித்த முகத்தோடு பாசம் ததும்ப வெளியான நானியைப் பார்த்த கணத்தில், நான் நான்கே வயது நிறைந்த சின்னஞ்சிறு பாலகனாய் உருமாறி அவர் கைகளுக்குள் அடைக்கலமானேன்!

நானறிந்து நானியை இது வரை ஒரு முறை பார்த்ததில்லை. இருந்தாலும், அறிமுகமற்ற என்னைப் பார்த்தக் கணத்தில், ''நீங்கள் சார்ல்ஸ் தானே? வாருங்கள், வாருங்கள்! அடுக்களைக்கு வாருங்கள்! நான் டீ போடுவதில் அவ்வளவு கெட்டிக்காரி! ஒரு முறை சாப் பிடுங்கள்! பிறகு என் டீ'க்காக நீங்கள் வந்துக் கொண்டே

யிருப்பீர்கள்!'' என்றார். நான் பற்பல வருடங்கள் பார்த்துப் பழகி அளவளாவிய, நன்கறிந்த பெரியவராய் அக்கணத்தில் ஆனார் நானி!

அது, அழகாய் பராமரிக்கப்பட்ட சமையலறை. நடுவில் போடப் பட்டிருந்த ஒரு சிறு வட்ட மேஜையினருகே அமர்ந்துக் கொண்டேன். ஒரு தட்டில் சில இனிப்பு பிஸ்கெட்டுகளும், நுரையும் ஆவியும் ததும்பிய டீ கோப்பையும் கொண்டு வந்து வைத்தாள் நானி. என் உச்சந்தலையைத் தடவிவிட்டு ''சாப்பிடு ராஜா'' என்றார். நான் நர்சரி பள்ளிக்குள் பாதுகாப்பான ஓர் ஆயாவின் கதகதப்பில் பயமின்றி கிடக்கும் குழந்தையானேன். உளவு, வீட்டிலுள்ள புது மனிதர்கள், அவர்களைச் சுற்றி வேயப்பட்டுள்ள கொலை வழக்கு, என பயமுறுத்தும் எல்லாம், இதோ, டீ கோப்பையிலிருந்து கிளம்பி நொடிக்குள் காணாமல் போகும் ஆவி போலாயின! உலகமே நட்பாகப் பட்டது!

''நீங்கள் வந்ததை அறிந்தால் சோஃபியா துள்ளிக் குதிப்பாள்'' என்றபடி என்னருகே வந்து நின்றுக் கொண்டாள். ''அவள் தேவையில்லாமல் குழம்புகிறாள். அவள் மட்டும் என்று சொல்லக் கூடாது. இங்கு எல்லோரும் ஏன் இப்படி குழப்பத்திலேயே வாழ்கிறார்கள் என விளங்கவில்லை. ஒருவருக்கு ஒருவர் பேசிக் கொள்வது கூட குறைந்து விட்டது.''

நான் நிமிர்ந்து நானியைப் பார்த்து, ''ஜோஸஃபைன் எங்கே? இந்தப் பக்கம் தானே எனக்கு முன்னால் ஓடி வந்தாள்'' என்று கேட்டு தட்டிலிருந்தவற்றைத் தீர்த்து முடித்தேன்.

தனது நாக்கை உள் மடக்கி, ஆடு மாடு மேய்ப்பது போல கிண்டலான ஓசை ஒன்றை எழுப்பி, அவள் கிடக்கிறாள் என்பது போல சிரித்தாள். ''அவள் ஓர் எலி. ஏதாவது கதவிடுக்கில் இருப்பாள்...'' என ஜோ'வை வர்ணித்ததும், அச்சிறுமியை ஓர் எலியாய் கற்பனை பண்ணிப் பார்த்தேன். பொருந்தியது போல இருந்தது. சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது. ''கதவு கதவாய் நின்று ஒட்டுக் கேட்டு எதையோ வான ரகசியத்தைக் கண்டு விட்டது போல ஓர் ஒப்பேறாத நோட்டுப் புத்தகத்தில் குறித்த வண்ணமாய் இருப்பாள். அவள் பள்ளிக்குப் போயிருக்க வேண்டும். அவள் வயது குழந்தைகளோடு கூடி விளையாடி வளர்ந்திருக்க வேண்டும். எடித்'திடம் கூட சொல்லிப் பார்த்தேன். ஒப்புக் கொண்டார். ஆனால், முதலாளி, இந்த எலி வீட்டில் வளர்ந்தால் தான் மிகச் சிறப்பாக வருவாள் என வாதாடி வென்றார்.''

''அவருக்கு ஜோஸஃபைன் மீது ரொம்பப் பிரியம் என உணர்கிறேன்.''

''ஆமாம் சார்ல்ஸ். இங்கிருக்கும் உறவுகள் அத்தனை மீதும், வேலைக்காரர்கள் உட்பட, அவர் அத்தனை பிரியமும், அன்பும் வைத்திருந்தார்'' என சற்றே ஏக்கத்தோடு சொன்னார்.

நான், பிலிப்'புக்குக் கூட, மனித உறவினை இத்தனை செழுமையாய் பேண இயலுமா என ஆச்சரியக் குழப்பமடைந்தேன். இதனை என் முகத்தில் படித்த நானி, ''முதலாளி என்று நான் குறிப்பிட்டது பெரியவரை. திரு லியோனைடை. நீங்கள் நினைப்பது போல அல்ல'' என்றார்.

என் முக பாவம் மூலம் என் மன ஓட்டத்தினை அடைந்த அவருடைய நுணுக்கமான அனுபவத்தைப் பாராட்ட வாய் திறக்கும் போது, பட்டென கதவு திறந்து சோஃபியா உள்ளே வந்தாள்.

''சார்ல்ஸ்....!'' என்று என்னைப் பார்த்து பரவசமானவள். அதை, ''நானிம்மா....! சார்ல்ஸ்...!'' என்று அறிவித்து சற்றே தணித்துக் கொண்டாள்!

''தெரியும் கள்ளி. உன் காதலன் அவர் என்றும் தெரியும்...'' என்ற நானி அவள் தோளைக் குத்திக் காட்டிக் கேலி செய்தாள். சில பாத்திரங்கள், கரண்டிகளை அள்ளிக் கொண்டு அவற்றைக் கழுவ, வெளியே உள்ள முற்றம் நோக்கி நகர்ந்தாள் நானி. சமையலறைக் கதவினை காலால் எத்தி சாத்தியபடி சென்றாள்.

நான் எழுந்துப் போய், சோஃபியாவைச் சுற்றி கை வளையமிட்டு, அவளை என்னோடு இறுக்கிக் கொண்டேன். என் நரம்புகள் முறிக்கேறின.

சோஃபியாவைக் கட்டிக் கொண்டே இறுக்கத்தைத் தளர்த்தாது, ''உயிரின் உயிரே! பார்! உன் உடம்பு நில அதிர்வு காணும் கட்டிடம் போல விறுவிறுவென நடுங்குகிறது! கவனித்தாயா! ஏன்...?'' என்று கேட்டேன்.

அவளும் இன்னும் இறுக்கமாய் என்னை அணைத்துக் கொண்டாள். ''நான் பயந்துள்ளேன் சார்ல்ஸ். விட்டொழி என்றால் மனதுக்கு விளங்கவில்லை. பயந்துக் கொண்டேயிருக்கிறேன் சார்ல்ஸ்.''

''விடு சோஃபி. நடப்பது நடக்கட்டும்'' என்று கொலை சம்பந்தப்பட்ட உரையாடலை முழுதுமாக ஒதுக்கித் தள்ளிய நான்,

''ஐ லவ் யூ டியர். கதைகளில் வரும் இறக்கை முறைத்த ராஜகுமாரனாக மட்டும் நானிருந்தால், உன்னை அப்படியே அள்ளிக் கொண்டு....''

என் இறுக்க ஆண்மைப் பிடியை உதறித் தள்ளி விலகியவள், அப்போதும் அவளைக் கவர்ந்து பறக்க ஒத்துழைக்க மாட்டேன் என்பது போல மறுத்து தலையசைத்தாள். ''நடக்காது சார்ல்ஸ். இந்த நெருக்கடியை நாம் வென்றுக் கடந்தே தீர வேண்டும். அது வரை சல்லாபக் காட்சிகளுக்கு இடமில்லை. இப்போதெல்லாம் ஓர் எண்ணம் என்னை வறுத்தெடுக்கிறது சார்ல்ஸ்....'' என்றவளை, ரசமான காதல் ஸ்பரிஸங்களை இப்படி உதறித் தள்ளி மீண்டும் மீண்டும் கொலைப் பின்னணி பற்றியே பேசுகிறாளே என ஆதங்கமாய் பார்த்து நின்றேன். பேசப் பிடிக்கவில்லை. சொல்வதை சொல்லட்டும் என வெறுமனே நின்றேன். தொடர்ந்தாள்: ''அந்த எண்ணம்....! அந்த உணர்வு...! யாரோ ஒருவர் - இந்த வீட்டிலுள்ள யாரோ ஒருவர் - நான் தினமும் பார்த்துப் பேசி பழகி நம்பும் ஒருவர் - நான் தினந்தோறும் உணவு பகிர்ந்துக் கொள்ளும் ஒருவர் தான் - ஈவிரக்கமற்ற இக்கொலையை செய்துள்ளது என்ற எண்ணமும், விஷத்தை அளந்துத் தரும் திறனும் தைரியமும் உள்ள நபர் உலவும் வீடு இது எனும் எண்ணமும், கம்பளிப் பூச்சியாய் என் மீது ஊறிக் கொண்டேயிருக்கின்றன சார்ல்ஸ். கட்டுப்பாடற்று தினம் தினம் பூதமாய் வளரும் இந்த எண்ணம், என்னுள் வெறுப்பையும், கோபத்தையும், அசூயையும் நிரந்தரமாக்கி வதைக்கின்றன.''

எனக்கு இதற்கு என்ன பதில் தருவது என விளங்கவில்லை. சோஃபியா போல பகுத்தாராயும் திறன் படைத்தவர்களுக்கு, அர்த்த மற்ற நம்பிக்கை வார்த்தைகள் தந்து ஆறுதலளிக்க இயலாதுதான்!

''அது... அது மட்டும் எனக்குத் தெரிந்து விட்டால்... அந்தத் தருணம்... அந்தக் கணம்... யார் அது என்ற திகில் உண்மை உடையும் அந்நொடி....''

''அது தான் உன் வாழ்க்கையின் மிக மோசமான காலாமா யிருக்கும்'' - ஒப்புக் கொண்டேன். ''இந்த பயத்தினூடே இன்னோர் உணர்வும் என்னை வதைக்கின்றது, சார்ல்ஸ்...! இத்தனை வருடங்களாய் இவ்வீட்டிலேயே வளர்ந்து கொழித்து, இப்போது அருமை தாத்தாவைக் கொன்றுள்ள அந்த ரத்தக் கரம் பற்றிய சுவடு... தெரியாமலே போய்விடுமோ என்பதே அது. அப்படி நேரின்,

என்னால் யாரையும் நம்ப முடியாதே சார்ல்ஸ். அப்பாவா! பெரியப்பாவா! அம்மாவா! - எனும் உயிர் பறிக்கும் சந்தேகத்தில் எப்படி வாழ்வது! ஓ காட்....!''

சோஃபியாவின் பயத்தையும் ஒதுக்கித் தள்ள முடியவில்லை. கொலையாளி சுவடு தெரியாமலேயே, வழக்கு நீருக்குள் போட்டக் கல்லாய் அமுங்கிப் போய் விடும் அபாய சாத்தியக் கூறுகளும் அநேகமாய் தென்படத்தான் செய்கின்றன. அப்படியே இந்த வழக்கு பிசுபிசுத்துப் போய்விட்டால், இந்த வீட்டில் நேரக் கூடிய அமைதியின்மையை நினைத்துப் பார்த்தாலே குலை நடுங்கிற்று. இந்த உரையாடல், ஒரு சர்ச்சை குறித்து சோஃபியாவிடம் நான் கேட்க எண்ணியிருந்த கேள்வி ஒன்றை எனக்கு ஞாபகப்படுத்திற்று. ''ஒரு சந்தேகம் சோஃபி...'' என்று பின்வரும் ஐயத்தைக் கேட்டேன் : ''எஸரின் கண் மருந்து பற்றி, இந்த வீட்டில் எத்தனை பேருக்குத் தெரியும். அதாவது, உன் தாத்தாவிடம் அது இருந்தது என்றும், அது விஷத்தன்மை மிக்கது என்றும், கொஞ்சம் அதிகம் உட் கொண்டாலும் அவருடைய உயிருக்கு உலை வைத்து விடும் என்றும், எத்தனை பேருக்குத் தெரியும்?''

''புரிகிறது சார்ல்ஸ். இந்த விவரத்தால் கொலையாளியை நெருங்கி விட முடியுமா என முயற்சிக்கிறாய். உதவாது. எங்கள் எல்லோருக்கும் எஸரினின் தீவிரம் தெரியும்.''

''இருக்கலாம். மேலோட்டமாக. நான் அறிய நினைப்பது ரொம்ப நுணுக்கமாக யார் யாருக்குத் தெரியும் என்று....!''

''எல்லோருக்கும் நீ குறிப்பிடுவது போல நுணுக்கமாகவே தெரியும் சார்ல்ஸ். ஒரு நாள் மதிய உணவு முடிந்த பிறகு குடும்பத்தினர் அனைவரும் தாத்தாவோடு தேநீர் அருந்தக் கூடியிருந்தோம். அவருக்கு அனைத்து மக்களும் அவரைச் சுற்றியே இருக்க வேண்டும். இல்லையென்றால் காபி டீ என்று அறிவித்து இருக்கச் செய்து விடுவார். அப்போது அவர் கண்களில் அரிப்பு கொஞ்சம் வலுவாகி சிவந்தது. ப்ரெண்டா எஸரின் கொண்டு வந்து கண்களில் சில துளிகள் விட்டுச் செல்லும் போது, துணை கமிஷனர் அந்த பாட்டிலை வாங்கிப் பார்த்தார்.''

இப்படி சோஃபியா சொன்னதும் ''என்ன....! என்ன....! அப்பாவா...! அவர் எப்போது இங்கு வந்திருந்தார்...!'' என ஆடியே போனேன் நான்.

சோஃபியா லேசாய் ஆனால் அழகாய் சிரித்தாள். எத்தனை நாட்கள் கடந்து விட்டன இப்படி ஒரு சிரிப்புப் பூவை அவள் பால் முகத்தில் பார்த்து. ''உன் அப்பா இல்லை. எங்கள் வீட்டு துணை கமிஷனரைச் சொன்னேன். ஜோஸஃபைன்'' என்ற நகைச்சுவையால் பல நாட்களாய் நெஞ்சை நெறுக்கி வந்த இறுக்கம் தளர சிரித்தோம். ''எல்லாவற்றைப் பற்றியும் விளக்கம் கேட்டுத் தள்ளும் வழக்கமுள்ள ஜோஸஃபைன், 'பாட்டிலில், ஏன், **கண் மருந்து - அருந்தக் கூடாது** என போட்டிருக்கிறது' என்று கேட்டாள். தாத்தா, தன் பேத்தியாக்கும் புத்திசாலித்தனமாக கேள்வி கேட்கிறது என வானுயர சந்தோஷம் கொண்டு, பேத்தியை அருகிலழைத்து விளக்கலானார். எனக்கு தினந் தோறும் ஊசி தரும் ப்ரெண்டா, தவறுதலாக, ஒரு நாள், இன்சுலினுக்கு பதில் இந்த கண் மருந்தினை - இதன் பெயர் எஸரின் - இந்த மருந்தினை ஏற்றி விட்டாளென்றால், நான் நிரந்தரத் தூக்கத்துக்கு போய் விட வேண்டியது தான் கன்னுக்குட்டி! முகமெல்லாம் நீலம் பாய்ந்து மூச்சே நின்று விடும். வயதான காரணத்தால் என் இதயம் பலவீனமாகி விட்டது குழந்தை! ஆகவே, தாமதிக்காமல் நான் இறந்து விடுவேன் என்றார். ஜோஸஃபைன் மிகப் புதிதாய் ஒரு தகவலறிந்தவளாய் 'ஓஓஓ....' என கண்ணகல ஊளையிட்டாள்'' என்று சகஜமாய் பேசி வந்த சோஃபியா, கூர்மையாய் பின்வரும் தகவலைத் தந்தாள்: ''நாங்கள் அத்தனை பேரும் கேட்டுக் கொண்டிருந்தோம் சார்ல்ஸ். கவனி. ஒருவர் பாக்கியில்லாமல், அத்தனை பேரும்....!''

புரிந்தது. கொலை நடத்தப்பட்டுள்ள முறையிலிருந்து, இவ்விதம் வெற்றிகரமாக நடத்தி முடிக்க ஏதோ சிறப்பான துணிச்சல் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்து என்னுள் இருந்தது. ஆனால், லியோனைட், தன் கொலைக்குத் தானே சாசனம் எழுதித் தந்துள்ள அபாய உண்மை, இப்பொழுது மெல்ல மெல்ல உள்ளே இறங்கிற்று. கொலைகாரன், ஒரு புது உத்திக்கோ, வழிமுறைக்கோ, திட்டத் துக்கோ, தன் மூளையைக் கசக்கிக் கொண்டிருக்கவே வேண்டாம். வஞ்சிக்கப்பட்ட லியோனைடே, சுலபமான ஒரு வழியை ரத்தினக் கம்பளமிட்டு சொல்லித் தந்திருக்கிறார்.

நான் இவ்விஷயத்தில் மேலும் பேச வேறு வழி தெரியாமல் நீண்ட பெருமூச்சு விட்டேன். என்னைப் புரிந்துக் கொண்ட சோஃபியா, ''தாத்தாவே இந்த முறையில் என்னைக் கொன்றுக் கொள்ளுங்கள் என சொல்லியிருப்பது எவ்வளவு கொடூரமில்லை...?'' என்று பரிதாபப்பட்டாள்.

''சோஃபியா....!'' என்று பெருமூச்சிலிருந்து என்னை விடுவித்துக் கொண்டு அழைத்த நான் சன்னமாய் சொன்னேன்: ''எனக்கொன்று இப்போது தோன்றுகின்றது....!''

''ம்...?''

''நீ நினைப்பது சரிதான். ப்ரெண்டா கொலை செய்திருக்க வாய்ப்பில்லை. 'ஒரு வேளை, ப்ரெண்டா, மாற்றி எஸரினைத் தந்து விட்டால்....' என லியோனைட் அத்தனை பேருக்கும் கேட்கும்படிச் சொல்லி விட்டதால், அதே முறையில், அவள் கொன்றிருக்க மாட்டாள் என்பது தர்க்கம். இல்லையா...?''

''தர்க்கமா இல்லையா என்பதெல்லாம் தெரியாது. சில விஷயங்களில் அவள் தகவல் கறக்கயியலா ஊமைக்கொட்டான்.''

என்னால் இக்கருத்தை ஏற்க முடியவில்லை. ''போலீஸின் கிடிக்கிப்பிடி இறுகிக் கொண்டே போகும் போது யாராலும் வாயடைத்து நிற்க முடியாது சோஃபியா'' என்றேன். பிறகு ''ப்ரெண்டாவாயிருக்காது'' என்று பொதுவாய் சொல்லிக் கொண்டேன்.

''சார்ல்ஸ். ப்ரெண்டாவாயிருக்காதா...? இல்லை, ப்ரொண்டா வாயிருக்கக் கூடாதா...?''

இதற்கு நான் என்ன பதில் சொல்வது. வாதம் செய்ய ஆரம்பித்தே னென்றால், பழையபடி, 'உன்னை ப்ரெண்டா வசியப்படுத்தி விட்டாள்... ஐந்து வருடம் உன்னைப் பொத்திப்பொத்தி வைத்தேனே, ஐந்தே நிமிடத்தில் பறித்துக் கொண்டு விட்டாளே....' எனும் ரீதியில் கோபத்தின் கைகளுக்குள் சென்று விடுவாள். மனம் ஒப்பாது, சோஃபியாவைக் குளிர்விக்க ''ஆமாமாம். பேஷாய் அது ப்ரெண்டாவேதான்'' எனச் சொன்னேன். என் மனத்திலிருந்து இல்லா விட்டாலும், வாயிலிருந்து, ஸ்பஷ்டமாய், ப்ரெண்டாவே என்று முதல் முறையாய் நான் மொழிந்ததும், ப்ரெண்டாவாயிருக்காது என நான் ஒதுக்கி ஒதுக்கி வைத்துப் பார்த்த ஒரு பாரபட்சம் விலகியே போய் விட்டது!

ப்ரெண்டா தான் என நான் ஏன் சந்தேககிக்கக் கூடாது? ப்ரெண்டா துணையேதுமில்லாமல் ஒரு புறமும், அவளுக்கெதிராய் ஒருங் கிணைந்து அடுக்கி வைக்கப்பட்டுள்ள லியோனைட் குடும்பத்தாரின் எதிர்ப்பு பலம் மறுபுறமும் இருப்பதால், எனக்கு ப்ரெண்டா மீது விளையும் பரிதாபமா? ஆதரவற்றவரின் மேல், எதிர்க்க த்ராணி யற்றவரின் மேல் வரும் பச்சாதாபமா? இவை தான் அவளை கருணை

கண் கொண்டு என்னைப் பார்க்க வைக்கின்றனவா? ஓ....! இந்த வெறும் பச்சாதாபம் தான் கொலைகாரப் பட்டியலிலிருந்து ப்ரெண்டாவை ஒதுக்கி வைத்தே பார்க்கும்படி என்னை உந்திக் கொண்டேயிருந்திருக்கின்றதா....?! ப்ரெண்டாவை முதல் முறை நான் சந்தித்த போது அவள் நெட்டி முறித்து அகண்ட விரல்கள், நகம் விரித்து பூனையின் கூரிய விரல்களாய் தெரிந்ததும், அப்போது அவள் சந்தோஷ ஊளையிடும் நாயின் ஒலி ஏற்படுத்தி, அவளுக்குள் சிரித்துக் கொண்ட விகாரமும் தோன்றி - இப்படிப்பட்ட பச்சாதாபம் அவர் மேல் அவசியமா என்பது போன்ற, ஒரு புரிதலை என்னுள் ஏற்படுத்தின.

பாத்திரங்களைக் கழுவி எடுத்து வந்தாள் நானி. எங்களிரு வருக்குள்ளும் உருவாகியிருந்த இறுக்கத்தை அவள் உணர்ந்திருப் பாளோ என தோன்றியது. ''கொலை அல்லது கொலை பற்றி. இது தவிர காதலர்களிடையே வேறு பேச்சே கிடையாதா! மறந்துத் தொலையுங்கள். அது தான் சரி. போலீஸிடம் விட்டுக் கை கழுவி விடுங்கள். கொலையாளி யார் என தலை குழம்புவது அவர்கள் பணி. அவர்கள் தலை வலி'' என்று அவள் சலித்துக் கொண்ட போது, ''நானி! அப்படி இருந்து விடத்தான் முடியுமா? கொலையாளி இந்த வீட்டுக்குள்ளேயே நகமும் சதையும் கொண்டு உலவுகிறான் எனும் உண்மையால்....'' என்று ஆரம்பித்தாள் சோஃபியா.

சோஃபியாவை நானி தொடர விடவில்லை. ''முட்டாள் சோஃபியா. நிறுத்து. பேசாதே. அறைந்து விடுவேன். உன்னுடன் இனி பேச எனக்கு பொறுமை கிடையாது. அன்புக் காதலன் ஆசை ஆசையாய் வந்துள்ளான். இப்போதுமா உன் கொலைப் பாட்டு! வீட்டின் நிலை வாசல் எப்போதுமே திறந்து தானே இருக்கின்றது...? ம்...? சொல்லடீ...? எல்லாக் கதவுகளும், யார் வேண்டுமானாலும் வரலாம் போகலாம் எனும்படி திறந்தே தானே கிடக்கின்றன? எப்போதாவது எந்தக் கதவாவது பூட்டப் பட்டதுண்டா? வா வா என திருடர்களை இது அழைத்திருக்காதா?''

''எந்தத் திருடனும் உள்ளே வரவில்லை நானி. ஏதாவது களவு போயுள்ளதா என்ன!'' - பதிலுக்கு இரைந்தாள் சோஃபியா. ''வெளி யிலிருந்து திருடனே வந்தான் என வைத்துக் கொண்டாலும் பாட்டில் மாற்றி பாட்டில் எடுத்து எஸரின் ஊற்றிக் கொலையா செய்திருப் பான்...? உளறாதே....!''

''நான் திருடன் தான் உள்ளே வந்திருப்பான் எனும் கோணத்தில் சொல்லவில்லை. கதவு திறந்திருந்ததால் யார் வேண்டுமானாலும் உள்ளே நுழைந்திருக்கலாம் என்றேன். அவ்வளவே. என்னைக் கேட்டால், நிச்சயம் கம்யூனிஸ்ட் யாரோ தான் உள்ளே வந்துள்ளதாய் தோன்றுகிறது''. தான் சொன்னது தான் சரி எனும் திருப்தி அவள் முகத்தில் படர, பேஷ் பேஷ் என்பது போல தலையை வேறு ஆட்டிக் கொண்டாள்!

''கஷ்டம். வெளியிலிருந்து ஒரு கம்யூனிஸ்ட் வந்து தாத்தாவைக் கொல்ல என்ன தேவையிருக்கிறது...?'' - கோபத்தின் உச்சியில் கேட்டாள் சோஃபியா.

''அமெரிக்காவின் அத்தனை வழக்குகளின் அடியிலும் கம்யூனிஸ்டுகள் தங்கி இயக்குவதாய் தான் சொல்லுகிறார்கள். கம்யூனிஸ்ட் இல்லையெனில், குறித்துக்கொள், அது ஒரு கத்தோலிக்க னாயிருக்க வேண்டும். இரக்கமற்ற கிருத்தவ இனம். கத்தோலிக் கர்கள்.'' இந்த வார்த்தைகளை உதிர்த்து விட்டு வெறுப்பேறியவளாய் அடுக்களையின் உள்ளே எங்கேயோ போய் மறைந்தாள்.

கொலையை பற்றியே பேசி குழம்ப வேண்டாம் என நானி அறிவுறுத்தியதில் உடன்பட்ட நான், கம்யூனிஸ்ட், கத்தோலிக்க இனம் என்றெல்லாம் அலறியதைப் பார்த்து சிரித்தேன். லியோனைட் ஒரு கிருத்துவ ப்ரொட்டஸ்டன்ட் இனம். நானியும் அப்படியே. இன வெறியில் பேசியுள்ளாள்.

''படிப்பறிவற்ற கட்டுப்பட்டி'' என நறநறத்த சோஃபியா, ''ஊஃப்....'' என ஏதோ பித்து ஒன்று பிடித்து விட்டதைப் போல உணர்ந்தாள். ''வா சார்ல்ஸ்... வரவேற்பறை செல்வோம். அங்கு எங்கள் குடும்பத்தினர் எல்லோரும் சேர்ந்து சில முக்கிய, ரகசியமான குடும்ப விஷயங்களைப் பேச ஆரம்பித்துள்ளனர்.''

''அதில் நான் மூக்கை நுழைக்க வேண்டாம் சோஃபியா.''

''நீ இந்தக் குடும்பத்துக்குள் வாழ்க்கைப்படப் போகிறாய். குடும்பத்தினர் அனைவரின் முகமூடிகளும் அவிழும்போது எப்படி உள்ளனர் என அறிந்துக் கொள்வது சிறப்பானது, சார்ல்ஸ்....! எல்லோருக்கும் இப்படி ஒரு வாய்ப்பு கிடைக்காது!''

''என்ன விஷயமாய் பேச உள்ளனர்?''

''ரோஜர் விஷயமாய் தான். ஏற்கெனவே நீ எல்லோரிடமும் தேவையான அறிமுகம் நிகழ்ந்து கலந்துள்ளாய். ரோஜரிடம் நட்பு ஏற்படுத்தியுள்ளாய். அதனால், ரோஜர் தாத்தாவைக் கொன்றிருக்கவே

மாட்டார் என்பது உன் கருத்து. ஏன்? ஏனென்றால் அவர் தாத்தாவைப் பூஜித்தேன் இதயக் கோயிலில் வைத்து ஆராதித்தேன் என்று சொல்லி விட்டார். அதனால்.''

''ஆமாம். எனக்கென்னவோ லியோனைடைக் கொல்ல ரோஜரால் முடிந்திருக்காது என்று தான் நம்புகிறேன். ரோஜருக்காக க்ளெம்சி செய்திருக்கலாம். சாத்தியமுண்டு.''

''ஏனென்றால் நான் க்ளெம்சி ஆழமானவள் எனும் ரீதியில் உன் மண்டைக்குள் ஏற்றி விட்டதால்....! உன் இந்த முடிவும் தப்பு சார்ல்ஸ். ரோஜரின் அத்தனை பணமும் கரைந்தாலும் கூட க்ளெம்சி துளியும் சட்டை பண்ண மாட்டாள். சொல்லப்போனால், ஒரு வழியாய் இந்த நிர்வாகத்திலிருந்து தன் கணவன் விடுவிக்கப்பட்டு விட்டான் என்று பரம திருப்தி தான் அடைவாள். பணம் உட்பட நகை உடை என எந்த ஒரு பொருள் மீதும் கிஞ்சித்தும் ஆசையில்லாத விந்தையானவள் க்ளெம்சி'' என்ற சோஃபியா, அருகிலிருந்த வரவேற்பறையிலிருந்து கிளம்பி எழுந்த கலவையான குரல்களைக் கேட்டு விட்டு, ''கிளம்புவோம் சார்ல்ஸ். இரவில் சந்திப்பதாய் தான் ஏற்பாடு. இருந்தாலும் ஏனோ முன்னதாகவே எல்லோரும் கூடியுள்ளனர்'' என்று நாற்காலியிலிருந்து எழுந்தாள்.

நானும் சோஃபியாவும் நுழைந்ததும் பேசிக் கொண்டிருந்த அனைவரும் சட்டென பேச்சை நிறுத்திவிட்டு, எங்களைக் கூர்ந்து பார்த்தனர்.

எல்லோரும் அங்கிருந்தனர். ஜன்னலினருகே கைப்பிடி வைத்த ஒரு சாய்வு நாற்காலியில், தன் ஆணழகு முகத்தில் எப்போதுமிருக்கும் இறுக்கத்தோடே அமர்ந்திருந்தார் பிலிப். நீதிபதியொருவர் தீர்ப்பு சொல்ல தாயராயிருப்பது போன்ற தோரணை அவரிடமிருந்தது. அருகிலிருந்த ரோஜர் கால்களிரண்டையும் அகல விரித்தபடி, ஏதோ விட்டால் இப்போதே எழுந்து ஓடி விடத் தயாரென்பது போல நாற்காலியின் நுனியில் அமர்ந்திருந்தார். தலைமுடிக்குள் விரல்கள் கொடுத்து கேசத்தைக் குலைத்த வண்ணமிருந்தார். இச்சந்திப்பின் நாயகனானாலும் ஒதுக்கப்பட்டதாயும் ஆனாலும் வாக்குவாதத்திற்கு தயாராயிருப்பதாயும் ஒரு விதக் கலவையான உணர்வுப் போராட்டத்தில் இருந்தார் அவர். அவருக்குப் பின்னால், நடக்கவுள்ள உரிமைப் போராட்டத்துக்கும் தனக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்ற மனத்துடன், மென்மையாய் அமர்ந்திருந்தார் க்ளெம்சி.

கூடியிருக்கும் ஒருவருக்கும் முக்கியத்துவம் தராமல் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த இயற்கைக் காட்சிகள் நிறைந்த படங்களை, புதிதாய் வீட்டுக்கு வரும் ஒருவர் பார்த்து நேரங்கடத்துவது போல ஈடுபாடற்று கவனித்துக் கொண்டிருந்தார் அவர். எடித், நிமிர்ந்து, கம்பீரமாய், திறந்த மனம் கொண்ட உணர்வோடு, தலையணைகள் வைத்து படுக்கை போல செய்யப்பட்டிருந்த ஒரு முதியோர்களுக்கான நாற்காலியில் அமர்ந்திருந்தார். ஒரு கம்பளிச் சட்டையை - பெரிய ஊசி ஒன்றினால் சுறுக் சுறுக்கென குத்தி, இள வயது பெண்மணியின் சக்தியோடு இறுக்கி, வேய்ந்துக் கொண்டிருந்தார். க்ளெம்சி போலவே இவரிடமும் படபடப்பில்லை. ரொம்பவும் விந்தையாய் தோன்றிய வர்கள் மகதாவும் ஆஸ்டஸுும். தேவதை வேடத்துக்குப் போடுவது போன்ற, தலையிலிருந்து நீண்டு கால் வரை பரவி தரை தொடும் பாணியில் ஒரு உடையும் வினோதமான செருப்புகளும் அணிந்து பெரிய சோபாவின் நடுவில் அமர்ந்திருந்த மகதா, தன் இரு கைகளையும் சோபாவின் வலமும் இடமுமாக தூக்கி வைத்துக் கொண்டு ஒரு மகாராணி தோரணையில் வீற்றிருந்தார். கண்களில் இறுமாப்பு. இது மகதாவின் குணமல்ல; தன் மகாராணி வேடத்துக்காக அவள் கொண்டு வந்துள்ள முக பாவம்! ஆஸ்டஸ், தன் அம்மாவின் இந்தக் கோலத்துக்கு துணையாய் அருகில் மௌனமாய் உட்கார வைக்கப்பட்டிருந்ததால், உள்ளுக்குள் வெறுப்பு பொங்கிய கடுகடுப்பில் இறுப்புக் கொள்ளாத நிலையிலிருந்தான்.

''சோஃபியா...'' என அழைத்து, எங்களிருவரின் நுழைவால் விட்டுப் போயிருந்த சம்பாஷணையை பிலிப் தொடங்கினார். ''தவறாய் நினைக்காதே. நாம் இங்கு கூடி நம் குடும்பம் சம்பந்தப் பட்ட தனிப்பட்ட பிரத்யேக விஷயங்களைப் விவாதித்துக் கொண்டிருக்கிறோம்.''

தான் கோர்த்துக் கொண்டிருந்த நூலைப் பாதியில் நிறுத்தி நிமிர்ந்தார் பாட்டி எடித். மன்னிப்புக் கேட்டு விட்டு வெளியே நான் நகர எத்தனித்தேன். பின் வாங்கினேன். சோஃபியா என் கரத்தினைப் பற்றி நிறுத்தினாள். ''சார்ல்ஸுும் நானும் மணமுடிக்கவுள்ளோம். சார்ல்ஸ் நம் குடும்பத்தின் ஒருவர். அவர் இங்கிருக்க வேண்டும்'' என்று முடிவாய் சொன்னாள் சோஃபியா.

''அது தான் சரி. ஏன்...? சார்ல்ஸ் இங்கிருந்தால் என்ன தப்பு....?'' என்று ஸ்பரிங்கிலிருந்து விடுபட்டது போல தன் இருக்கையிலிருந்த எழுந்த ரோஜர் தன் குணாதிசயப்படி பரபரத்தார். ''நான் பல முறை

சொல்லிருக்கிறேன் பிலிப். நாம் பேசப் போகும் விஷயத்தில் எந்த ரகசியமோ பிரத்யேகத்துவமோ கிடையாது. இதுபோல சொல்லிச் சொல்லி போலீஸுக்கு சந்தேகத்தை வளர்த்து விடாதே. அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனம் விழுந்து நொறுங்கப் போவதை நாளையோ நாளை மறுநாளோ உலகே அறியப் போகிறது. பிறகென்ன...?'' என்று சொல்லிவிட்டு என்னை நெருங்கிய ரோஜர், ''எங்கள் வீட்டு பெண்ணின் மனம் கவர்ந்த இளைஞனே.... வா'' என்று மனதார வரவேற்றார். என் தோளில் கர வளையமிட்டு, ''உங்களுக்கு எல்லாம் தெரியும். விசாரணையின் போது முதன்மை இன்ஸ்பெக்டரின் வலக்கரமாய் இருந்தீர்களல்லவா...?'' என்று அன்பு காட்டினார்.

அப்போது தன் மகாராணி பாவனையை மாற்றிக் கொள்ளாமல், ஒரு கட்டளை போல மகதா கேட்டார்: ''சொல் சார்ல்ஸ்! துப்பறிதலில், ஸ்காட்லாண்டு போலீஸ் அத்தனை பிரபல்யம் என்கிறார்களே! அங்கு அதிகாரிகளின் அறைகள் எப்படியிருக்கும்? நாற்காலிகள்? மேஜைகள்? அவையெல்லாம் எப்படி வைக்கப்பட்டிருக்கும்? திரைச்சீலைகள், பூக் கூடைகளெல்லாம் எங்கெங்கு வைக்கப் பட்டிருக்கும்? மேடை அலங்காரம் செய்யப்பட்டுள்ள இந்த இடம், ஸ்காட்லாண்டு அலுவலகம் போலுள்ளதா?''

நிலைகுலைந்து போனவளாய் ''வாயை மூடு'' என்றாள் சோஃபியா. ''உன்னை யார் இங்கு இத்தனை அலங்காரம் செய்யச் சொன்னது? பைத்தியக்காரத்தனமம்மா.''

''எடித் தாம்சனின் கதையில் துப்பறியும் கட்டங்களும் விசாரணை களும் உள்ளன, சோஃபி! அதற்கு ஓர் ஒத்திகையாய் ஏன் இச் சந்திப்பனை ஆக்கிக் கொள்ளக் கூடாது என காலையில் தான் தோன்றியது. மேடை ஏற்பாடு செய்து விட்டேன். கண்ணே! சொல்! எடித் தாம்சனின் கதையை மன நல நாடகமாய் அமைப்போமா! அல்லது மனநல கொலைக் கதையாய் அமைப்போமா! எது பொருந்தும்?''

''உன் வாயில் ஒரு ப்ளாஸ்திரியை ஒட்டு! அது பொருந்தும்! இல்லை, தயவு கூர்ந்து வெளியேறி விடு!'' - இயலாமையின் விளிம்பில் இருந்தாள் சோஃபியா.

''நீ எல்லோருடைய விசாரணைகளின் போதும் இருந்தாயா? ஏன்? ஓ...! உன் அப்பா துணை கமிஷனர் என்பதாலா?'' என விட்டுப் போன ரோஜரின் வசனத்தை இப்படித் தொடர்ந்தார், பிலிப். எத்தனை

நாசூக்கான கிண்டல். நான் இங்கிருப்பது விரும்பப்படவேயில்லை என்பதை நுழைந்த போதிருந்ததை விட இப்போது தீவிரமாய் நான் உணர்ந்து வெளியே திரும்பினாலும், சோஃபியாவின் இறுக்கமான பிடி, பொறுமை பொறுமை என என்னை அறிவுறுத்தியது.

இந்த இரண்டுங்கெட்டான் நிலைமைக்கு ஓர் அழகிய முடிவைத் தந்தார் க்ளெம்சி. அருகிலிருந்த ஒரு நாற்காலியை இழுத்தார். என்னருகில் போட்டார். ''உட்கார் சார்ல்ஸ். உன்னை இக்குடும்பம் வரவேற்கிறது'' என்றார். நன்றியோடு அவரைப் பார்த்து விட்டு ஏற்றுக் கொண்டேன். பின் குடும்பத்தாருக்கு ''நாம் பேச வந்த விஷயத்தைத் துவங்கலாம்'' என்றவர், ''வர வேண்டிய அனைவரும் வந்தாயிற்று'' என அழுத்தமாக அறிவித்தார்.

சிறு தயக்கம் தென்பட்டது. ''என்ன சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லுங்கள். முழுச் சுதந்திரம் உண்டு'' என்று ஊக்குவித்த எடித், ''ஆனால் ஒவ்வொரு வார்த்தையைப் பேசும் போதும் லியோனைட் ஆன்மாவின் ஏக்கத்தை நினைவில் வைத்துப் பேசுங்கள். என்னைப் பொறுத்தவரை, உயில் பற்றி ஆரம்பமாகியுள்ள பிரளய சர்ச்சை நேர் செய்யப்பட வேண்டும். அது நிகழ்ந்து விட்டால், பரம்பரைச் சொத்தின் என் பங்கினை ரோஜரின் முடிவுக்கே விட்டு விடுகின்றேன்'' என்று, தன் நிலையை விளக்கி துவக்கி வைத்தார்.

கேசத்துக்குள்ளிருந்த தன் விரல்களின் பலம் கொண்டு முடிக் கற்றைகளைப் பியத்துக் கொண்டார் ரோஜர். ''வேண்டாம் அம்மா, வேண்டாம்....! பணத்துக்கா நான் ஆசைப்படுகிறேன்! ஓ கடவுளே! என் உணர்வுகளைப் புரிவோரே கிடையாதா'' என கதறினார். தான் லியோனைடின் அன்பைத் தான் மதிப்பவன்; காசையல்ல என்பதை நிலைநாட்ட இந்த அளவுக்கு ரோஜர் தன்னை முறுக்கிக் கொள்ள வேண்டுமா என்பதில் தனிக் கூட்டமே போடலாம்.

இப்போது முன் வந்த பிலிப், ''என் நிலையும் எடித் சித்தியின் நிலை தான். இருந்தாலும் மறுபடியும் பணம் கொடுத்து நிறுவனம் மூழ்கி விடாமலிருக்க வேண்டும். இதற்காக பல சாத்தியக் கூறுகளைப் பேசி முடிவெடுத்து விட வேண்டும்'' என்றார்.

''நோ பிலிப். உனக்குப் புரியவில்லையா? ஒருவரிடமிருந்தும் ஒரு பைசா நான் வாங்கப் போவதில்லை'' என்ற ரோஜரின் கூற்றுக்கு, ''நிச்சயமாய். யாருடைய காசையும் அவர் வேண்ட மாட்டார். அவர் கதறுவது காசுக்காக அல்ல. லியோனைடின் உயிரான ஒரு நிர்வாகத்தை மோசம் செய்ததற்காக. அவரை மனக் கண் கொண்டு

பாருங்கள்'' என்று வக்கீல் வாதம் போல் சாட்டையடியாய் உதவினார் க்ளெம்சி.

''சரி. ஒரு வேளை உடனடியாக உயில் சர்ச்சை சரி செய்யப்பட்டு விட்டால் தன் பங்கு பணமாவது கிடைத்து ரோஜர் தப்பிக்கலா மில்லையா...?'' என்று மகதா, புருவத்தை உயர்த்தி, கண்களை உருட்டி, மகாராணி போல சுற்றும் முற்றும் பார்த்துப் பேச, ''இன்றோ நாளையோ என அத்தனை சுலபமாகவா, பூதமாய் கிளம்பியிருக்கும் உயில் பிரச்னையைத் தீர்க்க முடியும்...?'' என்று விட்டு, சரி தானே என தன் அம்மாவைப் பார்த்துக் கொண்டான் ஆஸ்டஸ். உரையாட லில் விறுவிறுப்புக் கூடக்கூட அவன் துளி ஆசுவாசமாயிருந்தான்.

''உயில் சட்டமெல்லாம் உனக்கொன்றும் விளங்காது ஆஸ்டஸ். பேசாமலிரு'' என்றார் பிலிப். ''அவன் சொல்வது ரொமபச் சரி'' என்று பிலிப்'பை நிராகரித்தார் ரோஜர். ''இப்போதுள்ள நிலைப் பாட்டை சரியாகக் குறிப்பிட்டுள்ளான் சிறுவன். நிர்வாகத்திலும் உயில் பிரச்னையிலும் ஏற்படவுள்ள வெடிப்பை யாராலும் தடுக்க முடியாது. யாராலும்'' என தன்னிலை இழந்து விசும்பினார் ரோஜர். ''இனி பேசுவதற்கு என்ன இருக்கிறது...?''

''ஏனில்லை ரோஜர்? பரம்பரைச் சொத்து சம்பந்தப்பட்ட விஷயமிது. உன் நிர்வாகக் குளறுபடியால் ஏற்பட்டுள்ளது என்பது மறுக்க முடியாதது. மீள்வதற்காக எல்லோரின் பரம்பரைச் சொத்துக்களையும் மையப்படுத்திப் பேசும் போது முக்கியத்துவம் வரத்தானே செய்யும்...? உணவகங்கள் சிதறுண்டதால், அவற்றை மீட்க, அனைத்து சொத்துக்களும், ஒருவருக்கே, அதாவது உனக்கே உதவும் என நாம் எண்ணிப்பார்த்திருக்க வேண்டும்'' - நிர்தாட்சண்ய மாய் பேசி விட்டு இதழ்களை இறுக்கமாய் மூடிக் கொண்டார் பிலிப். பிலிப்'பா இது? சொத்து என வந்ததும் எங்கிருந்து இவருக்குள் வெளியாகிறது, இத்தனை ஆக்ரோஷம்! எல்லோர் முகமூடியும் அவிழும், பார் என சோஃபியா இதைத் தான் குறிப்பிட்டாளா? நான் பிலிப்'பை தீவிரமாய் பார்த்தபடி நின்றிருந்தேன்.

பிலிப்'பின் சொத்தின் மீதான அணுகுமுறையைக் கேட்டதும் மின்சாரம் பாய்ந்தவராய், ''நோ...'' எனக் கத்தினார் ரோஜர். இதனால் எல்லோர் முகங்களிலும் கலவரம் கூட, நிலைமை கொஞ்சம் கட்டுக் கடங்காமல் ஆயிற்று. ''சொத்துக்களை அபகரிக்க வேண்டி திட்டமிட்டு நான் நிர்வாக சீர்கேடு செய்துள்ளதாய் பேசாதே பிலிப்.

அப்பா கொலை செய்யப்பட்டு விட்டார் எனும் உண்மைக்கு முன்னால் இதெல்லாம் ஒரு பொருட்டா? அப்பா செத்து விட்டார். நாம் இங்கு உட்கார்ந்து வெறும் சொத்துச் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறோம். நாம் இப்போது கூடியிருப்பது பிறர் சொத்துக்களை எனக்கு பங்கு போட எனும் நோக்கத்தில் என்றால் நான் கிளம்புகிறேன். குறித்துக் கொள்ளுங்கள். யாருடைய பரம்பரைச் சொத்தின் பங்கும் எனக்கு வேண்டாம்.''

பிலிப் தலையைக் குனிந்துக் கொண்டார். எப்போதும் போன்ற பட்டும் படாத தொனி, அதாவது பிலிப்'பின் முகமூடி, அவர் முகத்தில் மீண்டும் குடி கொண்டது. ''உனக்கு உதவ முயல்கிறோம்.''

''தெரியும் பிலிப், எனக்குத் தெரியும். ஆனால் யாராலும் ஒன்றும் செய்து விட முடியாது. இன்றோ, நாளையோ. அசோசியேட்டட் கேட்டரிங் மாளப் போகின்றது. காத்திருப்போம்.''

''எனினும் உதவ முயல்கிறேன் ரோஜர். என் பங்கின் சில முதலீடுகளை நான் தொட முடியாது. இருந்தாலும் குறிப்பிடும் படியான அளவு பணம் புரட்ட முடியும். மகதா மீதுள்ள சொத்தி லிருந்தும் ஒரு பகுதியை ... ... ...'' என பிலிப் தொடர்வதை ''உங்களால் பணம் எல்லாம் புரட்ட முடியாது பிலிப்'' என்று தடுத்தாள் மகதா, அதே மகாராணி தொனி மாறாமல். ''என் பகுதி பணம் என்ன உள்ளது? என் புது நாடகத் திட்டத்துக்காவது அது பத்துமா? குழந்தைகளின் பங்கில் கை வைப்பது புத்திசாலித்தன மென எண்ணுகிறீர்களா?'' என அவள் குடும்பத்தின் எல்லா பணக் கதவுகளையும் நாசூக்காய் மூடினாள்.

ரோஜர் பணம் வேண்டாம் என தொண்டைக் கிழிய கத்தியும் இந்த உரையாடல்களை எந்த புத்திசாலியும் நிகழ்த்தியிருக்க முடியாது. ''பணம்.. பணம்... பணம்...! வாயை மூடுங்கள். யாரிடமிருந்தும் எதுவும் எனக்கு வேண்டாம்''. - ஆக்ரோஷமானார் ரோஜர். ''நான் கடுமையாய் தோன்றலாம். ஆனால் நடப்பது நடக்கட்டும் எனும் முடிவில் நானிருக்கிறேன். அவரவர் வேலையைப் போய் பாருங்கள்.''

''அதெப்படி முடியும்...?'' - மீண்டும் தன் முகமூடி அவிழ்த்தார் பிலிப். ''இது ஒரு கௌரவப் பிரச்சினை. அப்பாவுடைய. குடும்பத்துடைய. நம்முடைய. ஆம்... நம் எல்லோருடைய கௌரவப் பிரச்சினை.''

தேவையற்ற நீட்டிப்பு.

''கிடையாது. முடங்கப் போவதென்ன குடும்பத் தொழிலா? இல்லையே! என் தொழில். நான் மட்டுமே கவனித்து வந்த தொழில். பின் எப்படி நீங்கள் பாதிக்கப்படுவீர்கள்?'' - தான் தேவையில்லாது குற்றம் சாட்டப்படுவதை தாளாமல் அலை பாய்ந்தார் ரோஜர்.

''அப்படிச் சொல். தோல்வியுற்றது, முழுக்க முழுக்க உன் தொழில்'' என்று விட்டு, அதாவது என்ன பணமுடை வந்தாலும் நீயே தான் எதிர் கொள்ள வேண்டும்.... ஏனெனில் அது உன் தொழில் என்பதை சொல்லாமல் உணர்த்தி விட்டு, மறுபடி அமைதியானர் பிலிப்.

ரோஜர் பணம் வேண்டாமென்று சொல்லிக் கூட, பிலிப் பணம் பற்றி மட்டுமே குறியாய் பேசுவதால் இனி வேறொரு முன்னேற்றமும் இருக்காது என கணித்த எடித், ''இவ்விஷயத்தை வேண்டிய மட்டும் பேசியாயிற்று என நினைக்கிறேன். ரோஜர் சொன்னது போல நடப்பது நடக்கட்டும்'' என்று தனக்கே உரித்தான அதிகார கட்டளையாய் சொன்னார்.

பிலிப் எழுந்திருக்க, அதனைக் கண்ட மகதாவும் ஆஸ்டஸும் எழுந்தனர். ஆஸ்டஸ் விட்டால் போதும் என நொண்டியபடி ஓடியே விட்டான். ரோஜர், பிலிப்'புக்கு கைகொடுத்து விட்டு, ''இந்த இக்கட்டிலும் நீ செங்கல்லாய் இருக்கிறாய் பிலிப். எனினும் நன்றி'' என்று சொல்ல, சகோதரர்கள் விடை பெற்றனர். ரோஜர் ஜோடியைக் கடக்கும் போது, ''குழப்பவாதிகள்'' என முணுமுணுத்தபடி சென்றார் மகதா.

தைத்துக் கொண்டிருந்த ஊசி கம்பளி சகிதமாய் எழுந்திருந்த எடித், என்னை உற்றுப் பார்க்க, ஏதோ என்னுடன் பேச வருகிறார் என்பது புரிந்தது. இதற்கான கனிவு தோய்ந்த வேண்டுகோளை அவர் பார்வையில் அடையாளம் காணவும் முடிந்தது. இருப்பினும், கண நேரத்தில் தன் முடிவினை மாற்றிக் கொண்டு, உன்னிடம் ஒரு கணிப்பைச் சொல்ல நினைத்தேன்.... இப்போது அது இயலவில்லை, என்று பார்வையால் உணர்த்தி விட்டு எல்லோருடனும் கலந்து வெளியேறி விட்டார்.

க்ளெம்சி மட்டும் உடனடியாய் வெளியேறாமல், அதிரவே அதிராது எழுந்து, ஜன்னலில் போய் தோட்டத்தைப் பார்த்தபடி நின்று கொண்டார். நானும் போய், விசாலமான அந்த ஜன்னலினருகே, அவருக்கு அடுத்து நின்று கொண்டேன். கழுத்தைத் திருப்பி என்னைப் பார்த்தார்.

''ஒருவழியாய் பேச்சு வார்த்தை முடிந்தது'' என்றவர், ''சுவர் முழுதும் எங்கு பார்த்தாலும் தொங்கும் படங்களோடு என்ன அறை இது'' என்று இந்த அறையை ரசனை குறைத்து எடை போட்டார்.

''உங்களுக்குப் பிடிக்கவில்லை போல...''

''அது மட்டுமல்ல. அத்தனை படங்களும் ஈரித்துள்ளன. காய்ந்த மலர் வாசம். தூசு. அவற்றால் உண்டாகும் நெடி. மூச்சு விட முடியவில்லை.''

க்ளெம்சி இந்த அறைக்கு வந்ததேயில்லை போலும். நாடக மேடை போல வீட்டுக்குத் தேவையற்று இங்கு மிகுந்துள்ள அலங்காரங்கள் அவருக்கு ஏற்புடையதாயில்லை என்பது விளங்கிற்று.

''இது ஒரு நாடக ஒத்திகை தளம். அப்படித் தான் ஆக்கி யிருக்கிறார்கள். மகதாவுக்காக'' என்று என்னை நேராய் பார்த்த க்ளெம்சி, ''இப்போது நடந்ததே, குடும்ப விவாதங்கள், அவை கூட ஒரு நாடகமாய் உங்களுக்குத் தோன்றவில்லை! மகதாவின் ஏற்பாடு. அவள் குடும்பம் பணம் தராது என்பதை பறைசாற்ற இந்த நாடகம். அவள் உடையைப் பார்த்தீர்களா....!'' என்று களுக்கென சிரித்தார். ''யார் இவர்களை உதவி கேட்டது? உதவி கேட்டு வந்து விடக் கூடாது என்று, இதோ, இப்போது அரங்கேறிய நாடகம் மூலம் ஒரு பெருஞ்சுவரை எழுப்பி விட்டனர். முட்டாள்கள். பேச ஒன்றுமே யில்லை சார்ல்ஸ். எல்லாம் முடிந்து விட்டன. ஏன் இவர்களுக்குப் புரிய மாட்டேன் என்கின்றது....!''

பிலிப் குடும்பத்தின் அணுகுமுறை குறித்து விவரிக்கயியலா விரக்தி அவர் குரலிலிருந்தது. கூடவே ஒரு முழு திருப்தியும் மிளிர்ந்தது. இப்படி ஒரு விநோத உணர்வுக் கலவை அவர் முகத்தினில் வெளிப்பட, அதை நான் புரிந்துக் கொண்டதை உணர்ந்தவர், ''ஆமாம், சார்ல்ஸ்! நாங்களிருவரும் விடுதலை யடைந்து விட்டோம். அதனால் தான் மிக திருப்தியாக அமைதியாக உள்ளேன். இப்போது கவனித்திருப்பீர்களே! வாயைத் திறந்தேனா! மூச்! செத்த பாம்பை அடித்து என்ன லாபம்! இத்தனை நாட்களாக - இல்லையில்லை வருடங்களாக - ஒரு மன நோயாளியாகவே ரோஜர் திரிந்திருக்கிறார் என இப்போதாவது புரிகிறதா! ஆடு மாடு வளர்த்து சிறிய குடும்பமாய் வாழ்ந்து, நாட்கள் ஓட அன்றாடம் ஏதோ ஒரு வரவு வந்தால் போதும் என்பது ரோஜரின் கனவு. பொறுப்புகள் கூடாது. அவற்றை வெற்றி படுத்த அவரால் முடியாது. அது தான் ரோஜர். அவர் அப்படித்தான்; என்ன செய்வது! இருந்தாலும் தன்

அப்பா சொன்னதை சிரம் மேல் கொண்டார். இக்குடும்பத்தில் எல்லோரும் அப்படித்தான். இதில் தான் தவறு நடந்தது'' என்று நிறுத்தி விட்டு ஜன்னல் வழியே அடி வானத்தின் எல்லையை ஊடுருவிப் பார்த்தார். தொடர்ந்தார்:

''குடும்பங்கள் அடங்கிய குடும்பம் இது. இதைக் கொண்டு செலுத்துவதில் தான் தவறு நடந்துள்ளது. கூட்டுக் குடும்பத்தை நான் குறையாகவோ, அல்லது, என் மாமனார் அனைவரின் மீதும் ஆதிக்கம் செலுத்தி சவாரி செய்தார் என்றோ சொல்ல வரவில்லை. அவர் அப்படி செய்யவுமில்லை. பண பலத்தோடு முழுச் சுதந்திரம் தந்திருந்தார். எங்கள் மீது உயிரை வைத்திருந்தார். இதனால், குடும்பத்தினரும் பெரியவர் மீது உருகி உருகியே வாழ்ந்து வந்தனர்.''

''இதில் என்ன தவறு இருக்கிறது?''

''இருக்கிறது திரு சார்ல்ஸ். குழந்தைகள் வளர்ந்த பிறகு, தனியாக அவர்கள் இயங்க வேண்டிய பருவம் வந்த பிறகு, அவர்கள் மனத்திலிருந்து பெற்றவர்கள் *அழிக்கப்பட்டு* விட வேண்டும். இதைக் கேட்க ஜீரணிக்க முடியாமலிருந்தாலும், வளர்ந்த பிள்ளைகளிடமிருந்து நாம் நழுவிவிட வேண்டும்... அவர்கள் நம்மை மறக்கும்படிச் செய்து விட வேண்டும் என்பது அவசியம். பாசம் அழிக்கப்பட்டு விட வேண்டும் என்று அவசியமில்லை. நம் குறுக்கீடுகள் - அது ஆலோசனையாயிருந்தாலும் சரி, ஆட்சேபிப்பாயிருந்தாலும் சரி - அறுக்கப்பட்டு விட வேண்டும். இது தான் சார்ல்ஸ்.... இது தான்... ஆபத்தற்ற முழுச் சுதந்திரம்.''

''மறக்கும்படி பிரிந்து விடுவதா? மூர்க்கத்தனமாயில்லை? இது நல்ல விளைவுக்கு பதிலாய் கெட்ட விளைவை ஏற்படுத்தி விட்டால்...?''

''ஏற்படுத்தாது. இந்த அளவுக்கு லியோனைட், இக் குடும்பத்தின் ஒரே ஓர் அச்சாணியாய் விளங்காமல் இருந்திருந்தால்....'' என க்ளெம்சி ஓரிரு நொடிகள் நிறுத்த, ''மற்றவர்கள், அவரில்லா விட்டால் வாழ்வே இல்லை எனும் அளவுக்குப் போகாமல் ஒவ்வொருவரும் ஓர் அச்சாணியாகியிருப்பார்கள்'' என நான் முடித்துக் கொடுத்ததில் இருவருக்கும் மகிழ்ச்சி. மிகச் சரி என்பது போல் திருப்தியாய் சிரித்தார் க்ளேம்சி.

''ரோஜர் இப்படி அப்பா அப்பா என வசியப்பட்டிருப்பதே மாமனார் பொழிந்த அதீத பாசத்தால் தான். லியோனைடை ரோஜர்

பூஜித்தார். அப்பா என்ன செய்யச் சொன்னாலும் செய்து விட வேண்டும். இது தான் அவரின் ஒரே குறிக்கோள். இந்தப் பாசப் பிணைப்பால் அப்பா எதிர்பார்த்த பிள்ளையாய் வாழ வேண்டிய கட்டாயம் ரோஜருக்கு ஏற்பட்டது. ஆனால் முடியவில்லை. லியோனைடுக்கு மட்டும் என்ன, ரோஜரிடம் அத்தனை உணவகங் களையும் எழுதித் தந்தால் ஊற்றிக் கொள்ளும் எனத் தெரியாமலா இருந்திருக்கும்! இருந்தாலும் செய்தார். அது, தன் பிரியப் பிள்ளையை நல்ல படி வாழ வைக்கிறோம் எனும் அந்த வயதான பெரியவரின் பெருமைக்காகவும் சந்தோஷத்திற்காகவும் நிகழ்த்தப்பட்டது. அப்பாவின் அடியொற்றி வெற்றி காண, பாவம், ரோஜரும் அலாதியாய் உழைக்கத்தான் செய்தார். என்ன பலன்? உழைத்தால் போதுமா? சாதுர்யம் வேண்டாமா? நிறுவனம் நடத்துவதென்றால் சாணக்கியத் தனமில்லாமல் வெறுமனே உழைத்துக் கொண்டேயிருந்தால் மண்ணைத் தானே கவ்வ வேண்டும்? அதுதான் இப்போது நடந்துள்ளது. லியோனைடின் சாணக்கியத்தில் ஒரு சதம் சார்ல்ஸ், ஒரே ஒரு சதம் கூட ரோஜருக்குக் கிடையாது. சொந்தத் தொழிலில் இவர் ஒரு தெண்டம். வீண். இது தான் உண்மை. இந்த நிதர்சனம் அவர் இதயத்தை உடைத்துப் போட்டது. தினம் தினம். நொடிக்கு நொடி. மனநோய் கண்டவர் போல் ஆகி விட்டார். உணவகச் சங்கிலி நாளுக்கு நாள் அதள பாதாளத்துக்கு சென்று நஷ்டமேற்படுத்துவதைப் பார்க்க சகிக்காது ஏதேனும் புதிய உத்தியைக் கையாள்வார். இது நிலைமையை இன்னும் மோசமாக்கித் தரும். வருடா வருடம் நீங்கள் தோற்பதை, சமூகம் வெறித்து வெறித்துப் பார்க்க ஏற்றுக் கொள்வது எத்தனை கொடுமை. உங்கள் ஒருவருக்கும் தெரியாது, ரோஜர், எத்தனை தூரம் உடைந்து நொறுங்கி சின்னாபின்னமாகியிருக்கிறார் என்று! அது எனக்கு மட்டும் தான் தெரியும்...!''

முடித்த க்ளெம்சியின் குரல் தழுதழுத்தது. கணவர் மீதான இரக்கத்தால். என்னை இடைபுகுந்து பேச விடாமல் பின் வருமாறு தொடர்ந்தார்:

''நீங்கள் சந்தேகப்பட்டீர்கள் சார்ல்ஸ். ஏன், போலீஸுக்கு ஆலோசனை கூட தந்தீர்கள். ரோஜர் தான் அவர் தந்தை லியோனைடைக் கொன்றார் என்று! இல்லையா! பணத்துக்காக! அந்த ஆலோசனை எத்தனை அபத்தமானது! கோமாளித்தனமானது...!

''இப்போது ஒப்புக் கொள்கிறேன்.''

''அபத்தத்தின் உச்சமென்பேன். இனி தாங்காது - தோல்வி முழுதுமாக வந்தாகி விட்டது - இந்த நிமிடமோ அடுத்த நிமிடமோ நிறுவனங்கள் திவாலாகப் போகின்றன - எனும் நிலை உறுதியான பிறகு தான், ரோஜர், அமைதியானார். ஆமாம். முழு விடுதலையை அனுபவித்தார். அப்போது அவர் கவலையெல்லாம், அப்பாவுக்குத் தெரிந்து விடக் கூடாதே என்பதிலும், அப்படி தெரிந்து தன்னை ஒரு நம்பிக்கைத் துரோகி என்று அவர் சொல்லிவிடக் கூடாதே என்பதிலும் தான் இருந்ததே தவிர, வேறெதிலும் இல்லை. மற்றபடி அவர் எதிர்பார்ப்பெல்லாம், நாங்கள் புத்தம்புதிதாய் தொடங்கவுள்ள வசந்த வாழ்வை எண்ணியேயிருந்தன.''

''எங்கு போவதாயிருந்தீர்கள்?''

''பார்படோஸுக்கு. என் தூரத்து உறவினன் ஒருவன் அங்கு சமீபத்தில் இறந்து விட்டான். ஒண்டிக்கட்டை. அவனுக்கு நான் அதிகம் உதவியுள்ளேன். அந்த நன்றியை, அவனின் மிகச் சிறிய வீட்டை என் மீது எழுதி வைப்பதன் மூலம் தீர்த்துக் கொண்டுள்ளான். இப்பொழுது நாங்கள் தெருவில் நிற்கும் பரம ஏழை. ஏதோ ஒரு வீடாவது ஆண்டவன் கிருபையில் கிடைத்துள்ளது. கை கால்கள் உள்ளன. எப்படியும் சம்பாதித்து விடுவோம். இந்தக் கூட்டத்திலிருந்து பிரிந்து ஒருவருக்கொருவராய் வாழ்வதிலேயே நாங்கள் பசியாறி விடுவோம்'' - நிம்மதிப் பெருமூச்சு விட்டு தொடர்ந்தார்:

''ரோஜருக்கு என்னைப் பற்றி, நான் ஏழ்மையில் உள்ளது பற்றி நெஞ்சு முட்ட ஆதங்கம். பணம் பணம் என்ற லியோனைடின் கருத்து ஒரு விஷமாய் ரோஜருக்குள் இறங்கியுள்ளது. பணப் பேராசை ரோஜருக்கு இல்லாவிட்டாலும், நான் பணப் போஷாக்கு பெற்று வசதியாய் வாழ வேண்டும் என்ற அர்த்தமற்ற ஆசை உண்டு. என் முதல் கணவனுடனான வாழ்க்கையில் நான் மிக ஏழ்மையில், ஆனால் அதை ஒரு பொருட்டாய் மதிக்காமல் சந்தோஷமாகத் தான் வாழ்ந்தேன். அப்போதெல்லாம் அதைப் பாராட்டி, எத்தனை மனோ திடம் உங்களுக்கு என்றெல்லாம் பேசிய ரோஜர், அதே நிலையில் இவரோடு நான் இருப்பதை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார். அபத்தம். இருந்தாலும் ரோஜர் ஒரு குழந்தை மனம் கொண்ட வெகுளி. இதனாலேயே இவரை நான் நெஞ்சின் அடி வரை இறக்கிக் கொண்டேன்.''

கண்களை மூடிக் கொண்டார் க்ளெம்சி. விதிவசத்தால் இரண்டாவது கணவன். அவரின் உணர்வுகளை என்னால் புரிந்துக்

கொள்ள முடிந்தது. ஆகவே ஏதும் பேசாமல் அமைதியாயிருந்தேன். ஒரு நிமிடமாயிற்று, அவர் மீண்டும் கண் விழிக்க. ''பணம் என் விரோதி சார்ல்ஸ். எனக்குப் பிடிக்காத வஸ்து. பணத்துக்காக நான் என் மாமனாரைக் கொல்ல நியாயமேயில்லை.''

அவர் சொன்னதில் பொதிந்துள்ள உண்மையை ஆழ உணர்ந்தேன். பணத்தால் ஈர்க்கவே படாத சொற்பமான சில உயர் ஜென்மங்களில் ஒருவர் க்ளெம்சி. இருந்தாலும், யாராயிருந்தாலும், பணத்தின் அபரிமித பலத்தால் ஆட்கொள்ளப்படலாம் என தோன்றியது. ஐயத்தை விட்டு வைக்காமல் கேட்டேன்: ''சரியான விதத்தில் செலுத்தப்பட்டால், பணம், சாதனைகள் புரியலாமில்லையா! உங்கள் விஷயத்தில், மிகுதியாய் கிடைக்கும் பணம், உங்கள் உயிரான, அதிக பணம் விழுங்கும் அணு ஆராய்ச்சிக்கு அனுசரணையாய் இருக்குமே.''

தன் ஆய்வு மீது கண்மூடித்தனமான ஆசை நிரம்பியவராயிருப்பார் என எனக்கோர் எண்ணமிருந்தது. அதைத் தகர்க்கும் வண்ணம் பேசினார் அவர்: ''ஆய்வுக்காக கிடைக்கும் அறக் கட்டளை பணமெல்லாம் அதிக உதவி ஏதும் செய்து விடாது, திரு சார்ல்ஸ்! அவை பெரும்பாலும் தவறாகத் தான் பயன்படுகின்றன.''

''விளங்கவில்லை திருமதி ரோஜர். தவறாக என்றால்?''

''சொல்கிறேன். ஆய்வின் மீது அதிக ஈடுபாடும், வீட்டிலும் ஆய்வகத்திலும் சந்தோஷ மன நிலையும், இந்த ஆய்வை முடித்தே தீர வேண்டும் எனும் அக்னிக் குஞ்சும், இருபத்தி நாலு மணி நேரமும் ஆய்வே கதி என உள்ளவர்களுக்கும் வேண்டுமானால் பணம் உதவலாம். நான் அப்படிப்பட்டவளல்ல. மேலும் ஆய்வில் நாம் நினைப்பதெல்லாம் நடந்து விடாது. இப்படியெல்லாம் வேலை செய்யும் என நினைத்து நாம் செலவழித்து செய்யும் இயந்திரங்களும் உபகரணங்களும் ஆய்வுகளும், கடைசியில், நாம் கற்பனைக் கூட செய்திராதபடி, எங்கோ போய் நின்று தொலைக்கும். பண விரயம் தான் மிஞ்சும்!''

''பார்படோஸ் போவதானால், வேலையை விடப் போகிறீர்களா? இப்பொழுது சென்றுக் கொண்டிருக்கிறீர்கள் என நினைக்கிறேன்''

''அங்கிருந்து லண்டன் வந்து பணியாற்றுவதெல்லாம் இயலாதது. ஆனால் தனிமையிலிருப்பது எனக்கு பிடிக்காது. எனவே அங்கு வேறு வேலையில் சேர்ந்து விடுவேன்'' என்றவர், ''ம்... ஏற்பட்டுள்ள குளறுபடியெல்லாம் விரைவில் தீர்ந்து, நாங்கள் கிளம்பினால் தானே

இது பற்றி யோசிக்க வேண்டும்! விரைவில் முடியும் திசையிலா வழக்கு நகர்கிறது! தினம் ஒரு முடிச்சு!''

''க்ளெம்சி...'' என அழைத்த நான், ''யார் இக்கொலையை செய்திருப்பார்கள் என ஊகமேயில்லையா! நீங்களும் ரோஜரும் இல்லை எனும் பட்சத்தில், உங்களின் நிதானமும் புத்தி கூர்மையும் இணைந்த அனுகூலத்தால், நிச்சயம் உங்களுக்குள் ஓர் ஊகம் இருக்கத்தான் வேண்டும்!'' என்று கேட்டேன்.

என்னை மட்டும் புள்ளி வைத்துப் பார்ப்பது போல் பார்த்தார். பதில் சொல்லும்போது இத்தனை நேரமிருந்த சரளம் தடைபட்டிருந்தது. தனக்குத் தேவையற்ற மற்றும் லஜ்ஜை ஏற்படுத்தும் விஷயமிது என்பது போல் பேசினார்: ''ஊகங்கள் தவறு சார்ல்ஸ். அவை முறையற்றவை. ப்ரெண்டாவும் லாரன்ஸூம் தான் இப்போதைக்கு சந்தேகத்துகிடமானவர்கள் என்று வேண்டுமானால் சொல்லலாம்.''

''அவர்கள் செய்திருப்பார்கள் என்று கருதுகிறீர்கள்...?''

தன் தோள்களிரண்டையும் இணையாய் தூக்கி, ஆம் என்றும் சொல்லாமல் இல்லை என்றும் சொல்லாமல் உன் இஷ்டம் என்பது போன்ற கருத்தை வெளிப்படுத்தினார். விடைபெற்று அறையை விட்டு க்ளெம்சி வெளியேறும் போது, உள்ளே நுழைந்த எடித், நேராய் என்னை நெருங்கி, தன் கட்டளைக் குரலில் சொன்னார்: ''உன்னுடன் நான் பேச வேண்டும்.''

என் அப்பா சொன்னது என் நினைவுக்கு வந்தது. 'பேச விடு. உன்னை நாடி, உன் மீது நம்பிக்கை கொண்டு பேச வருவர். பேச விடு. துப்பு துலங்கும்'. ஒரு வேளை, எடித் தான்.. .... ....

''சார்ல்ஸ்...'' என்று ஆரம்பித்த எடித் உரையாடல், என் சிந்தனையை நிறுத்திற்று. ''நான் இப்போது சொல்லப் போவதை வைத்து என்னை தவறாக எண்ணாதே. பிலிப் பற்றி பேச வேண்டும்'' என்றார். நான் கூர்மையானேன். ''பிலிப்'பைப் புரிந்துக் கொள்வது கொஞ்சம் கடினம். மனம் விட்டுப் பேசாத, ஒரு வித ஒதுக்கப் பட்டவனாய் அவன் தோன்றலாம். ஆனால் உண்மையில் அவன் அப்படிப்பட்டவன் அல்ல. அப்படியாகி விட்டான். வேறு வழியில்லாமல் வாய் திறக்காதவனாய் ஆக்கப்பட்டு விட்டான்.''

''அப்படியா? நான் அந்தக் கோணத்தில் நினைத்ததே கிடையாது'' என நான் துவங்க, மேலும் பேச வழி தராமல் எடித் தொடர்ந்தார்:

''சற்று முன் ரோஜர் குறித்து நடந்த சந்திப்பினை எடுத்துக் கொள். அதில் தென்பட்டது போல் பணம் பணம் என்று அலைபவனல்ல, பிலிப். ரொம்ப நல்லவன். உபகாரி. அவனைப் புரிந்துக் கொள்ள வேண்டும்.''

அந்தப் புரிதலை நான் நடத்திக் காட்டுகிறேன் என்று பார்வையால் சொன்னேன்.

''லியோனைடுக்கு அடுத்து இரண்டாவது இடத்திலிருப்பதால் என் மன உண்மையை சொல்லக் கடமைப்பட்டுள்ளேன். பிலிப்'பும் லியோனைடைக் கொண்டாடியவன் தான். அப்பா அப்பா என ஆராதித்தான். லியோனைடின் அன்பு ஆதிக்கம் அப்படிப்பட்டது. அன்பு மழை பொழிந்து பின்னாடியே வர வைத்து விடுவார். ஆனால் ரோஜர் தான் லியோனைடின் தனிப்பட்ட நன்மதிப்பைப் பெற்ற மகனாக, அவரின் பெருமையாக, பெரியவரின் சந்தோஷமாக எழுந்தான். முதல் பிள்ளை என்ற காரணத்தினால் கூட இருக்கலாம். பிலிப் இந்தத் தனிமைப்படுத்தலை உணரத் தொடங்கினான். கொஞ்சம் கொஞ்சமாய் ரோஜர்-லியோனைட் இறுக்கம் வளர, நத்தை கூட்டுக்குள் போவது போல, பிலிப், ஒதுங்கி விட்டான். புத்தகத்திலும், நடந்து முடிந்த வரலாறுகளிலும் - அதாவது தினசரி வாழ்க்கையை நினைவு படுத்தாத உலகுக்குள் தன்னைத் திணித்துக் கொண்டு ஆறுதல் தேடத் துவங்கியவன் பின் அதையே வாழ்க்கையாக்கிக் கொண்டு விட்டான். அவன் இவ்வாறு நடத்தப் பட்டதால், உள ரீதியாக அடி வாங்கியிருக்கிறான் சார்ல்ஸ்'' என்றவர், ''நான் என்ன சொல்ல வருகிறேன் புரிகிறதா...?'' என்று ரகசியமாய், ஒரு வித கலக்கத்தோடு கேட்டார்.

நான் திக்குமுக்காடி இருந்தேன். நா எழவில்லை. தொடர்ந்தார்:

''அடிப்படையில் பண ஆசை துளியுமில்லாத பிலிப், ரோஜர் விஷயத்தில் மட்டும் ஆரம்பம் முதலே வேறு மாதிரி நடந்துக் கொள்வதிலிருந்து ஊகிக்கிறேன் - பிலிப்'புக்கு ரோஜர் மீது அளவு கடந்த பொறாமை இருந்திருக்கிறது. இருக்கிறது. பிலிப்'புக்கே கூட தெரியாமல், ஒரு மனோ வியாதியாய், அவனுக்குள்ளே வளர்ந்துள்ள காட்டுத் தீ இது – பொறாமை. இப்பொழுது ரோஜர் நொடித்துப் போய் விட்டான். அதில் பிலிப் சந்தோஷம் காண்கிறான். ரோஜர் இனி வளரக் கூடாது. நொடித்தே இருக்க வேண்டும். அப்பொழுது தானே பிலிப்'பின் சந்தோஷம் நிலைக்கும். இந்நிலையில் உள்ளான் பிலிப்.

அதனால் தான் பணம் தர மறுத்தே பேசுகிறான். யாரையும் பணம் தந்து உதவவும் விட மாட்டேன் என்கிறான். புரிகிறதா சார்ல்ஸ்?''

வெறும் வெறுப்பல்ல சார்ல்ஸ்....! பொறாமையால் வளர்ந்த வெறுப்பு தான், கொலைக்கான களமைக்கும் என துணை கமிஷனர் குறிப்பிட்டது பொறி தட்டியது. ரோஜரை மறுபடியும் அலுவலகத் துக்கு வரச் சொல்லி விசாரணை நடத்தி முடித்த போது, ரோஜர் வெடித்துச் சிதறும் நாளுக்காக, இந்த வீட்டிலேயே ஒருவர் காத்திருந்ததாக உணர்த்தினாரே அப்பா.... அது பிலிப் தானா...?

''எனில், ரோஜர் தப்புத் தப்பாய் நிர்வகித்து கண்டுள்ள தோல்வியில், பிலிப், மிக சந்தோஷமடைந்துள்ளதாய் சொல் கிறீர்களா!''

''அதே அதே'' என்று அவசர அவசரமாக ஆமோதித்த எடித் ''மிகச் சரியாய் சொன்னீர்கள். ரோஜர் நிர்வாகத்தில் எரிமலை வெடித்ததிலிருந்து பார்க்கிறேன். பிலிப் உதவிக்கரம் நீட்டவே யில்லை. விமர்சித்துக் கொண்டேயிருந்தான். தன் சொந்த ரத்தத்தின் மீதான பிலிப்'பின் இந்த மோசமான குணம் என்னை மிகவும் துயரப்படுத்தியது'' என நிறுத்தினார்.

''துயரப்பட என்ன உள்ளது?'' என்றேன் நான். ''இத்தனை வீழ்ச்சிக்கும் காரணம் ரோஜர் தான். அவர் ஒன்றும் சின்னப் பிள்ளை இல்லை. வளர்ந்த மனிதர். நிர்வாகமும் ஓரிரவில் நொடிக்கவில்லை. வருடக்கணக்காய் இறங்கி இறங்கி இப்போது அதள பாதாளம் கண்டுள்ளது. ஆரம்பத்திலேயே நஷ்டத்தைக் கோடிக் காட்டி விலகாமல் இப்படிச் செய்திருப்பது ரோஜரின் மாபெரும் குற்றம் தான். விமர்சிப்பதில் என்ன தவறுள்ளது?'' என்ற நான், ''தவிர ரோஜருக்கு குழந்தை கிடையாது. உடல் நலம் குன்றியவரும் அல்ல. மறுபடியும் நிறுவனத்தை மீட்டுத் தந்தாலும் குட்டிச் சுவராக்கித் தான் ஓய்வார். இதை அவரே வேறு ஒப்புக் கொள்கிறார். பிறகு எதற்கு குடும்பம் உதவ வேண்டும்? பிலிப்'பின் அணுகுமுறையில் எனக்குத் தவறு தெரியவில்லை திருமதி எடித்.''

''இல்லை. மறுபடியும் நிறுவனத்தை மீட்டுத் தந்தால் - மீட்டுத் தர முடியாத நிலையைக் கடந்து விட்டது என்பது ஒரு புறமிருந்தாலும் - சில நல்ல அறிவாளர்களை அமர்த்தி மறுபடியும் பழைய வெற்றியை ஈட்டி விடலாம். ஆனால் க்ளெம்சி விட மாட்டாள். அவள் ஒரு ஜந்து. மனுஷியல்ல. அவளுக்கு எதுவும் வேண்டாம். பணம். உடை. புகழ்.

எதுவும் வேண்டாம். அவள் ஒரு மரம். இப்படி இருப்பது நாகரீகம் என நினைப்பு. இந்த நினைப்பைப் புகட்டிப் புகட்டியே ரோஜரையும் பிடிப்பற்றவனாக்கி விட்டாள்.''

வெறுப்பின் ஆதிக்கத்தால் எடித்'தின் முகத்தில் கடுகு வெடித்தது. என்னை ஏற இறங்க பார்த்து விட்டுத் தொடர்ந்தார் : ''சோஃபியாவின், சந்தோஷமாக இருந்தாள வேண்டிய இளமைக்கு, இது ஒரு விஷப் பரீட்சை. கவலையிலும் பயத்திலும் இப்படியா அவள் இளமை மங்க வேண்டும். சார்ல்ஸ்....! இக்குடும்பத்தில் நான் என் உயிரைப் பொருத்தியுள்ளேன். எல்லோரையும் அவ்வளவு நேசிக்கிறேன். அன்று ரோஜர், பிலிப். இன்று சோஃபியா, ஜோஸஃபைன், ஆஸ்டஸ். பார்த்துக் கொண்டேயிரு. சோஃபியாவின் குழந்தையையும் வளர்ப்பேன். எல்லாம் என் குழந்தைகள். ஆமாம் இவர்களனைவரையும் நெஞ்சு விம்ம நேசிக்கிறேன்'' என்று சற்றே உணர்ச்சி வசப்பட்டவர், உடனடியாய், ''ஆனால் ஞாபகமிருக் கட்டும்...'' என்று தன் கட்டளை தோரணைக்குள் தாமதிக்காது புகுந்துக் கொண்டு, ''*வெறும் வழிபாடு மட்டும் எப்போதும் ஆபத்தானது*'' என்று சொல்லி விட்டு பட்டென்று திரும்பி என்னிடம் விடை பெறாதே, வெளியேறி விட்டார்.

இறுதியில், வெறும் வழிபாடு மட்டும் எப்போதும் ஆபத்தானது என்ற குறிப்பில் எடித் ஏதோ உணர்த்தினார். அது எனக்கு விளங்கவில்லை. அது என்ன என்று கேட்டு விளக்கிக் கொள்ள விரைந்தேன். அதற்கெல்லாம் அவகாசம் தராது, வெளியேறி விட்டார்.

# 15

"உன் அறை தயார்...." என்றாள் சோஃபியா.

தோட்டத்தில் அருகருகில் நின்றுக் கொண்டிருந் தோம். மாலை முழுதும் முடிந்து இரவு ஜனிக்கும் அந்தி சாயும் தருணம். துளிர்விடத் துவங்கியிருந்த மர இலைகள் காற்றில் படபடத்து ஒலியெழுப்பிய வண்ணமிருந்தன. மிகவும் சன்னமாய் சூரிய ஒளி இருந்ததால், கொஞ்சம் இருண்ட உற்சாகமற்ற சூழலே இருந்தது.

"யாருமில்லாத தனிமை. ஒளியற்ற வெளி. குழம்பியுள்ள என் மனதுக்கு மேலும் நிர்மானுஷ்ய பயத்தை தரும் சூழல்."

இப்படி வருந்திய சோஃபியாவுக்கு ஆறுதல் தர நான் வாயெடுக்கும்போது, பின்புறத் தோட்டத்தின் உள் பகுதியிலிருந்து ஓர் உருவமும், உடனேயே அதன் பின் இன்னோர் உருவமும் வீட்டினுள் நுழைந்தன. எங்களை அவை கவனிக்கவில்லை. பனிப் புகையும் ஒளியற்ற வெளியும் யாரென்று அடையாளம் காண்பதில் சிக்கல் ஏற்படுத்தின. நாங்களிருவருமே கூர்மையாகி கண்களால் துளாவி னோம்.

முதலில் சென்றது ப்ரெண்டா! பனியின் வீச்சுக்கு ஈடு கொடுக்க பெரிய மழை கோட் ஒன்று அணிந்திருந்தாள். அவள் நடையில் ஓசையெழுப்பாமல் விரையும் பூனையின் திறமையும் யாருக்கும் தெரியாமல் ரகசியமாய் நழுவும் போக்கும் இருந்தன. அந்தியின் மங்கலான வெளிச்சத்துள் அதே பய நடையுடன் கரைந்தாள். உள்ளே போனவள் விசாலமான ஜன்னலைக் கடக்கும் போது தீவிரமாய் கவனித்தேன். அவளை முதன் முதலில் சந்தித்து விளாவாரியாய் விசாரணை செய்தபோது உதிர்த்தாளே, பயமற்ற வலப்புற சுழிப் படங்கிய சந்தேக விளைப்புன்னகை, அதே விஷம பாவனையில் போய்க் கொண்டிருந்தாள்.

சில நொடிகளின் நழுவலில் தனக்கே உரித்த நடுக்கத்தோடும் அதிர்வோடும் தன்னை யாரும் பார்த்து விடக் கூடாதே எனும்

பரபரப்பில் சுற்றும் முற்றும் கவனித்தபடி, ப்ரெண்டாவின் அடி தொடர்ந்து மங்கிய ஒளியில் உள்ளே நுழைந்து மறைந்த இரண்டாவது உருவம் - லாரன்ஸ்.

இவ்வாறு ப்ரெண்டாவும் லாரன்ஸும் நடந்து சென்ற போக்கில், இரண்டு பேர் சாதாரணமாய் வெளியே நடந்து சென்று வந்ததாகவோ, இயற்கையை ரசிக்க விஸ்தாரமான தோட்டத்துக்கு நடைசென்று வந்ததாகவோ எடுத்துக் கொள்ளயியலவில்லை. பேய் போல கோட்'டையும் போட்டு மூடிக் கொண்ட இருவரின் நடையிலும் திருட்டுத்தனமும் தடுமாற்றமும் தானிருந்தன.

பின்புற ஓடையினருகே ஜோஸஃபைனுடன் நான் பேசிக் கொண்டிருந்த போது, அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒலித்த, சுள்ளி ஒன்று மிதிபட்ட ஓசையை, ப்ரெண்டா அல்லது லாரன்ஸ் இவர்களின் காலடி ஏற்படுத்தியிருக்குமா எனும் மின்சார மின்னல் என்னுள் எழுந்தது. இருக்கலாம். இந்தப் பழக்கம், இவர்களிரு வருக்கும் எத்தனை நாட்கள் இருக்கிறதோ...? இதனால், தானாகவே எழுந்த ஓர் உந்துதலில், ''ஜோஸஃபைன் எங்கே?'' என கேட்டேன்.

''ஆஸ்டஸுடன் மேலே படித்துக் கொண்டிருக்கலாம்'' என பதில் தந்த சோஃபியா, ''ஆஸ்டஸைப் பற்றி எனக்குக் கவலையாய் உள்ளது சார்ல்ஸ்'' என்றாள்.

''ஏன்?'

''யாருடனும் பேசாமல் ஒரு விதமாய் வாழ்கிறான். போலியோ வந்ததிலிருந்தே மாறி விட்டான். அவன் மூளைக்குள் ஏதோ ஒரு சிந்தனை பல நாட்களாய் ஓடிக் கொண்டிருக்கின்றது. என்ன என்று தெரியவில்லை. சில சமயங்களில் கத்தி கூப்பாடு போட்டு எங்களனைவரையும் வெறுத்துத் தள்ளுகிறான்.''

''சிறு பிராயம். பிடிவாதம். வளர வளர சரியாகி விடும்.''

''எனக்கும் அப்படி தோன்றுவதுண்டு. ஆனால் அவனின் இக்குணாதிசயம் நாளுக்கு நாள் வளர்வதால் கவலை கூடுகிறது.''

''...''

''எல்லாம் அப்பாவும் அம்மாவும் அவனை கவனிக்காததே காரணம். அவர்களிருவரும் அம்மா அப்பாவாக இருக்கவே தகுதியற்றவர்கள்.''

''இதுவே நல்லது சோஃபி. பல பிள்ளைகள், பெற்றோரின் அபரிமித கண்காணிப்பால் தான் எரிச்சலாகின்றனர்.''

''உண்மை தான்'' - தலையசைத்து ஒப்புக் கொண்டாள். ''நான் பள்ளி, கல்லூரி படிப்புகளை வெளிநாட்டில் முடித்தேன். எனவே இவர்களைப் பற்றி அதிகம் அறிந்திருக்கவில்லை. முடித்து விட்டு வீட்டோடு வந்த பிறகு தான் இருவரும் இரு வேறு துருவங்கள் என்பது உறைத்தது. கடந்த கால வரலாற்றில் அடைக்கலம் தேடி வாழும் அப்பா. வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையையும் நாடகக் காட்சி யாக்கிப் பார்க்கும் அம்மா. இன்றைய பகல் சந்திப்பினை எடுத்துக் கொள். தேவையா அது? இருந்தாலும் அம்மா நடத்த வேண்டும் என நினைத்தார். சாதித்தார். அப்படி ஒரு குணம்.''

ஒரே ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தேன். ஒரு கொலைக்காட்சி எப்படி இருக்கும் என்று உணர்வதற்காக, தன்னையே மகதா கொலைகாரியாக்கிக் கொண்டு, லியோனைட் கொலையை ஒரு நாடகமாக நடத்திப் பார்த்திருந்தால்.....!

விளையாட்டுத்தனமான சிந்தனை. ஒதுக்கி வைத்தேன். ஆனாலும் இக்கற்பனை என்னுள் கொஞ்சம் அழுத்தமாகவே இறங்கியது.

''அம்மாவை யாராவது நாள் முழுதும் கவனித்துக் கொண்டே யிருக்க வேண்டும். அவள் என்ன செய்வாள் என்று அவளுக்கே தெரியாது.''

''போதும் சோஃபியா. ஒவ்வொரு குடும்பத்தினராக பேசாதே. இனி குடும்பப் பிரசங்கம் தாளாது.''

''எனக்கும் அப்படி ஒரு நாள் தான் தேவைப்படுகின்றது சார்ல்ஸ்'' - ஆதங்கமாய் சொன்னாள் சோஃபியா. ''ஆனால் அது இப்போது முடியாதே. வெளியூரில் இருக்கும் போதெல்லாம் இக்குடும்பத்தை... மன்னிக்க, இக்கூட்டத்தை மறந்து, எவ்வளவு சந்தோஷமாக இருந்தேன் தெரியுமா!''

''ஓ...! அதனால் தான் நம் ஆரம்பக் கால சந்திப்புகளிலெல்லாம் உன் குடும்பத்தைப் பற்றி நீ பேசியதே இல்லையா?''

''இருக்கலாம். ரொம்ப ரொம்ப நெருக்கமாய்... கவனி சார்ல்ஸ், அன்யோன்யமாய் அல்ல, நெருக்கமாய்... நாங்கள் ஒவ்வொருவரும் வாழ்ந்து விட்டோம். ஒருவர் சட்டைப் பையில் இன்னொருவர் என்று வாழ்ந்தாகி விட்டது. மற்ற குடும்பங்களைப் போல, ஒருவரை ஒருவர் கறுவிக் கொண்டே, சண்டையும் பூசலும் கொண்டு வாழ்ந்ததே இல்லை.''

''அப்படி சச்சரவுகளோடு வாழ்வது ஒரு விஷ வாழ்க்கை.''

''இருக்கலாம். ஆனால் இப்படி ஒருவருக்கொருவர் மேலே விழுந்து வாழ்வதும் கூட விஷ வாழ்க்கையே'' என்றவள் தொடர்ந் தாள்: ''இந்த அனுபவம் தான், என்னை, 'நாங்களெல்லோரும் கூடி ஒரு குரூர வீட்டில் வாழ்கிறோம்' என்று சொல்ல வைத்துள்ளது. உண்மையற்ற காழ்ப்புணர்ச்சி நிரம்பிய வீடு எனும் கோணத்தில் நான் அப்படிச் சொல்லவில்லை. எங்களுக்கு வேண்டிய வாழ்க்கையை சுதந்திரமாக அமைத்துக் கொண்டு, விரும்பிய கலைகளை அறிந்து, சொந்தக் காலில் நிற்க வழிவிடப்படாமல் வளர்ந்திருக்கிறோம். குடும்ப உருண்டையில், சிக்கலாய், நேராய் வளர வழியின்றி இழுப்போர் இழுப்புக் கெல்லாம் நெளிந்து வளைந்து, தொலைந்துப் போய் விட்டோம். தனிமை... ஓய்வு... நம்மோடு நாமே இளைப் பாறல்.... இது வேண்டாமா....! இது ஒரு நொடி கூட வாய்க்காமலேயே உள்ளது. எனவே ஒவ்வொருவருக்குள்ளும் வன்மம், இயலாமை, குரூரம் அடங்கியே இருக்கின்றது. அவ்வப்போது வெடிக்கின்றது. சில சமயம், கொலை வரையில்.....!''

வழி மறித்த சிறு கொடியின் நுனி குழலை எடித் கொடூரமாய் பிய்த்தெறிந்து காலடியில் போட்டு நசுக்கியது, இக்குடும்பத்தாரின் அடி மன நிலையாய் எனக்குத் தெளிவானது.

இப்போது, கதவை படாரென்று சப்தமெழுப்பத் திறந்தபடி ஓட்டமும் நடையுமாய் நுழைந்தார் மகதா. ''ஏனம்மா விளக்குகளைப் போட்டிருக்கக் கூடாது. எத்தனை இருட்டு'' என்றவர் சுவிச்சுகளைப் போட்டு விளக்குகளுக்கு ஒளி தந்தார். எங்களருகில் வந்து உட்காருவதற்குள், நடந்து முடிந்த குடும்பச் சந்திப்பின் அத்தனை நிகழ்வுகளும் வெற்றியே என்பது போல், பின்வருமாறு ஒரு விமர்சனம் தந்து முடித்தார்: ''ரோஜர் தான் கதாநாயகன். அவர் தன் தலைமுடிகளைக் கோதி விட்டுக் கொள்ளும் போதெல்லாம் கொள்ளை அழகாயிருந்தார். திடீரென தன் பங்கு சொத்தினை ரோஜருக்கு விட்டுக் கொடுப்பதாய் எடித் செய்த முடிவு நல்ல திருப்பம். அவர் சபைக்காக சொல்லவில்லை தெரியுமா....! உண்மை யாகவே அறிவித்துள்ளார். பெரிய மனசு. ஆனாலும் முட்டாள் தனமாய் தெரியவில்லை! பிலிப்'புக்கும் தானும் பணம் தந்து உதவலாம் என அவ்வப்போது தோன்றியது. அவரின் முக பாவத்தில் கவனித்தேன். ஆனால் எடித் போல ஒரு தேவை பிலிப்'ப்புக்கு இல்லாததால் மறுத்திருப்பார். எடித்'துக்கு தன் சகோதரி குழந்தை களின் மீது அவ்வளவு பிரியம். தன் வாழ்க்கையையே தியாகம் செய்து

பிறரின் குழந்தைகளுக்காகவே வாழ்ந்து விட்ட எடித் போன்ற ஒரு தாயின் பாத்திரத்தை, என் வாழ்நாளில் ஒரு நாள் செய்தே தீருவேன். ஆஹா....! எத்தனை பெருமை கிடைக்கும்.''

''அத்தனை குழந்தைகளையும் இந்த நிலைக்குக் கொண்டு வருவதில் அவருக்கு எத்தனை சுமைகள் இருந்திருக்கும்'' என்றேன் நான், மகதாவின் விமர்சனத்தை தடுக்கும் இலக்கில்! விட்டால், பிறர் குழந்தைகளை வளர்க்கும் பாத்திரத்திற்கு என்ன உடை உடுத்தலாம், என்ன ஒப்பனை செய்யலாம் என விளாசித் தள்ளி விடுவார். ''அதுவும் லியோனைடைப் பிடிக்காமல் மணம் புரிந்து வந்து, பிடித்தமே யில்லாத ஒரு வாழ்வில், இத்தனை செய்திருக்கிறரென்றால்....'' என்று நான் பேசியதைத் தடுத்து, ''லியோனைடை வெறுத்தாரா? யார் சொன்னது? பெரியவர் மீது தீராத ஆசை வைத்திருந்தவர், எடித்'' என்று திடுக்கிட வைத்தார் மகதா.

''அம்மா... நிறுத்து'' என்றாள் சோஃபியா.

''பேச விடு சோஃபியா. ஆரம்பத்திலிருந்தே அவர் பேசத் துணிவதை நீ மிகவும் தடுக்கிறாய்'' என்றேன் நான்.

''அது தான் சரி. இப்போது என்னை எதிர்த்துப் பேசாதே சோஃபியா. ஏதோ காதல் என்றால் இரு வாட்டசாட்டமான உடல்கள் நிலவொளியில் பின்னிப் பிணைந்துக் கிடப்பது என நீ நினைக்கிறாய்'' என மகதா விளக்க, நான், எடித்'தே தனக்கு லியோனைடைப் பிடிக்கவே பிடிக்காது என வர்ணித்திருந்ததை நினைவு கூர்ந்தேன்.

''இருக்கலாம் திரு சார்ல்ஸ். முதன் முதலில் இந்த வீட்டுக்குள் அடி எடுத்து வைத்த போது அப்படி நினைத்திருக்கலாம். இத்தனை அழகற்றவனையா தன் சகோதரி மணந்திருக்க வேண்டும் எனும் அளவிலான அதீத ஆதங்கம் அது! அவர்களிருவருக்குமிடையே இடையறாது கருத்து வேறுபாடுகளும் அதனால் வெறுப்பும் இருந்து வந்துள்ளது சர்வ நிஜம். இருந்தும் அவரை எடித் விரும்பினார். முறைக்காதே சோஃபியம்மா. நான் என்ன பேசுகிறேன் என உணர்ந்து தான் பேசுகிறேன். குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளத்தான் எடித் வரவழைக்கப்பட்டார். மறைந்த மனைவியின் தங்கை எனும் முறையில் படுக்கைக்கு அழைக்க பெரியவர் இணங்கவில்லை. எடித்'தும் விரும்பவில்லை. அழகழகான குழந்தைகளை வளர்ப்ப திலும், பெரியவரோடு சண்டையிடுவதிலுமே இன்பம் கண்டு வாழ்க்கையைக் கழித்தார் எடித். பெரியவரை எடித் வெறுத்தா ரென்றால், அது ஒரே ஒரு முறை தான். இந்த மினுக்கி ப்ரெண்டாவைப்

பொசுக்கென்று மனைவியாக்கிக் கொண்டு வந்து நிறுத்தியபோது தான். இது எடித்'துக்குக் கொஞ்சம்கூட பிடிக்கவில்லை.''

''நீயும் தான் வெறுத்தாய்.'' - சோஃபியா.

''பின்னே? ஏற்றுக் கொள்ளச் சொல்கிறாயா? குடும்பமே வெறுத்தது. எடித் ஒருபடி மேலே போய் உமிழ்ந்தே விட்டார்.''

''போதுமம்மா. தெரிந்த விஷயத்தை, வேறுவிதமாய் சொல் கிறாய். எடித் குழந்தைகளை அன்போடு வளர்த்ததும் தாத்தாவோடு பிரிந்திருந்ததும் ஊரறிந்த விஷயம். இதற்கு நடுவில் தாத்தாவை விரும்பியபடியே தான் வாழ்ந்தாரென்றெல்லாம் சரடு விடாதே.''

மகதா, சோஃபியாவை, என்னை எத்தனை அழகாய் கடிந்துக் கொள்கிறாள் என் பெண் என்று கனிவான பார்வை பார்த்து விட்டு, இனி வேறு விஷயம் பேசினால் தான் இங்கு இருக்க விடுவார்கள் என முடிவு செய்து அவர் சொன்ன தகவல், எனக்குக் கொஞ்சம் வருத்தம் தந்தது: ''ஜோஸஃபைனை வீட்டிலிருந்து விடுவித்து பள்ளிக்கு அனுப்ப முடிவு செய்து விட்டேன்'', என்று ஒரு புது அத்தியாயத்தைப் பேச ஆரம்பித்தார்: ''ஸ்விட்சர்லாண்டுக்கு. நாளையே இதற்கான பணியைத் துவங்கப் போகிறேன். துரிதமாய் முடித்தே தீருவேன். கொலை கொலை என விசாரணை நடக்கும் வீட்டில் அவள் இருக்கவே கூடாது. அவளுக்கும் பெரியவர் மரணம் பற்றிய சிந்தனையாகவே ஆகி விட்டது. போதாக்குறைக்கு அதைக் கண்டுபிடித்தேன், இதைக் கண்டுபிடித்தேன் என்று எதையெல் லாமோ ஒட்டுக் கேட்டு எழுதியபடியிருக்கிறாள். ஒரு குழந்தை பண்ண வேண்டிய வேலையா" இதெல்லாம்....! அவள் வயதுக் குழந்தைகளின் துணை இப்போது அவளுக்கு அவசியம். ஒரு பள்ளி வாழ்க்கை. நான் இப்படித்தான் நினைத்திருந்தேன். ஆனால்.. .. ...''

''... ... ... ஆனால் தாத்தா அப்படி நினைத்ததே கிடையாது'' என்றாள் மெதுவாய் சோஃபியா. ''அவர் இக்கருத்துக்கு எதிர்.''

''பெரியவர், அவர் கண்ணிமைக்குக் கீழேயே எல்லோரும் வசிக்க வேண்டும் என்றே இருந்தார். எண்பது வயது தாண்டிய எல்லா முதியவர்களும், இவ்வகையில், சுயநலவாதிகளே. ஆனால் குழந்தைகள், குழந்தைகளோடுத் தான் வளர்ந்தாக வேண்டும். ஸ்விட்சர்லாண்டு, ஒரு சொர்க்கபுரி. நல்ல சுத்தம். காற்று. இதமான குளிர். வசந்த சூழ்நிலை. ஆரோக்கிய உணவு! இவ்வார இறுதிக்குள் அவளை மூட்டை கட்டியாக வேண்டும். கட்டி விடுவேன்'' - ஒரு

சபதமாய் முடித்தார். எழுந்து, ஒரு நளின நடை நடந்து அறையின் கதவு வரை சென்று, பின் திரும்பி, சோஃபியாவை நாடகத்தனமாய் பார்த்து சிரித்து சென்றார்.

மகதா சென்ற வழியைப் பார்த்தபடி, ''நல்ல சினிமா பைத்தியம். எங்கும். எதிலும்'' என்ற சோஃபியா, ''அம்மா வெறியாய் முயன்றுக் கொண்டிருக்கிறார். பல தந்திகள் அனுப்பி அவரை இவரைப் பிடித்து, அடுத்த நொடிக்குள் நிறைவேற்றி விடுவார். ஆனாலும் இத்தனை அவசர அவசரமாக ஜோஸஃபைனை இடமாற்றம் செய்ய என்ன தேவையுள்ளது?'' என்றாள் சோஃபியா.

''ஏதாவது ஒரு தருணத்தில் நடத்தியாக வேண்டுமில்லையா. ஜோஸஃபைன் வயது குழந்தைகள் தான் அவளுக்கு இப்போது தேவையான மருந்து. மகதா செய்வது சரிதான்.''

''தாத்தா அப்படி நினைக்கவில்லையே.''

நான் எரிச்சலானேன். ''எண்பது வயதைத் தாண்டிய ஒருவரால் இளைய தலைமுறைக்கு என்ன வேண்டும் என முடிவு காண இயலுமா?''

''நீ சொல்வது பொது விதி. தாத்தா விதிவிலக்கு. வீட்டின் எந்தவொரு பிரச்னைக்கும் நல்ல முடிவு தரும் ஒரே தகுதி நிறைந்த நீதிபதியாய், தன் இறுதி மூச்சுள்ள வரை கொடி கட்டி இருந்தார் தாத்தா.''

''எடித்'தை விடவா?''

''அதெப்படி? எடித்'தின் அணுகுமுறை பொதுநலன் கருதியே இருக்கும். அந்தக் கோணத்தில் அவர் தரும் முடிவுகளும் சிறப்பானவையாகவே தானிருந்தன. எடுத்துக்காட்டாய் ஜோஸஃபைன் பள்ளிப் பிரச்னையை எடுத்துக் கொள். அவள் பள்ளிக்குத் தான் போக வேண்டும் என்பதில் எடித் பிடிவாதமாய் தானிருந்தார். ஆனால் வென்றது தாத்தா தான்'' என்ற சோஃபியா, ''ஜோஸஃபைன் சில அச்சுறுத்தும் பழக்க வழக்கங்களில் தான் வாழ்ந்து வருகிறாள். கதவு கதவாய் ஒட்டுக் கேட்பது. எதையோ அறிந்தாற்போல் ஒரு கண்றாவி நோட்டில் எழுதிக் கொள்வது. துப்பறியும் கதைகளைப் படித்துப் படித்து இப்படி செய்கிறாள் என எண்ணியிருந்தேன். ஆனால் இப்போது நிலைமை மோசமாகிக் கொண்டே போகின்றது.''

இது போன்ற அனர்த்த குணங்களிலிருந்து ஜோஸஃபைனை விடுவிக்கத்தான் மகதா அவசரப்படுகிறாரா? எனக்கு ஐயம்

தோன்றியது. ஜோஸஂஃபைனுக்கு, கொலைக்கு முன் தினங்களில் வீட்டில் நடந்துள்ள அத்தனை நிகழ்வுகளும், ஒவ்வொருவரும் எங்கிருந்தனர் - என்ன செய்துக் கொண்டிருந்தனர் போன்ற ஆழமான விவரங்களும், அதிசயிக்கும்படியாய் தெரிந்துள்ளன. அவளுக்குத் தேவையில்லாத, பயன்படாத, ஏன்... அவள் பிஞ்சு மூளைக்கு ஆபத்தான தகவல்கள் தான் இவை. எனவே ஆரோக்கியமான பள்ளி வாழ்க்கை அவளுக்குள் வசந்தத்தை ஏற்படுத்தும் என்பது நிச்சயம் - தர்மம். ஆயினும், ஜோஸஂஃபைனை உடனடியாக தாமதமின்றி இடமாற்றம் செய்யத் துடிக்கும் மகதாவின் முடிவில் உள்ள எதிர்பாராத அவசரம், வேண்டாத வேகம், துரிதத் துடிப்பு, என்னைக் கொஞ்சம் அச்சுறுத்தியது. பலரது அந்தரங்க சந்திப்புகளை சிறுமி தெரிந்து வைத்திருப்பதால், இந்த இடமாற்றம் திணிக்கப்படு கின்றதா...? இங்கில்லாத பள்ளிகளா! ஸ்விட்சர்லாண்டு பற்பல காத தூரத்திலன்றோ உள்ளது!

# 16

சுரேலென்று கன்னத்தைக் கீறி எரிச்சல் தந்தது பிளேடு. 'எல்லோரும் உன்னுடன் பேசட்டும். நம்பிக்கையோடு பேசவிடு' என்றாரே அப்பா. அது எந்த அளவு நடந்துள்ளது என சுய பரீட்சை செய்துக் கொண்டே முகச்சவரம் செய்ததால் ஏற்பட்ட கன்னத்துக் கீறல்!

எடித் பேசினார். உன்னுடன் பேச வேண்டும் என்று வேண்டி வந்து பேசினார். நல்லது. க்ளெம்சியும் பேசினார் (அல்லது நான் போய் பேசினேனா!). மகதாவும், அவருடைய குடும்பச் சந்திப்பு எனும் ஒளிபரப்பைப் பார்த்த ரசிகன் எனும் அளவில், என்னிடம் பேசினார். இச்சந்திப்புகளிலெல்லாம், இவர்களிடமிருந்து கிடைத்த தகவல்கள் என் துப்பறிதலுக்கு ஒளி கூட்டியுள்ளனவா? துப்பு தரும் ஏதேனும் ஒரு வார்த்தை? உதவக்கூடிய ஒரு வாக்கியம்? தேவையற்ற டம்பமடித்துப் பேசுவர் என்றாரே அப்பா... அப்படி யாராவது?

இவை எதுவும் நடந்ததாய் தோன்றவில்லை!

என்னிடம் எது குறித்தும் பேசவே விரும்பாமல் தீர்மானமாய் இருந்தவர், பிலிப் மட்டுமே. ஒரு வேளை, என்னைக் கண்டாலே ஒதுங்கிப் போகும் பிலிப், அசாதாரணமானவரா? அவர் பெண்ணைத் தான் மணக்க உள்ளேன் என்பதும் புரிந்திருக்க வேண்டும். இருந்தும் ஏதோ நான் இந்த வீட்டிலும், குறிப்பாக நேற்று நடந்த அந்த குடும்பச் சந்திப்பிலும், இல்லாதது போலவே நடந்துக் கொள்கிறார். நேற்று வேண்டுமென்றே என்னை வெறியேற்ற விரும்பினார். அதற்காக என்னிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டு, அது அவன் குணம் என்று நியாயப்படுத்திய எடித், பிறகு வலிய வந்து பிலிப் பற்றியே புதுக் கோணத்தினாலான கருத்தினை என்னிடம் திணித்துச் சென்றார். அது ஏன்?

இப்படி நான் செய்த அலசலில், பிலிப் மட்டுமே என் முன் விரிந்தார். அவர் பல நிலைகளில் அடக்கப்பட்டவர். ஒடுக்கப்

பட்டவர். அப்பாவால். மனைவியால். குடும்பத்தாரால். அவர் குழந்தைப்பருவம் சந்தோஷமற்ற பொறாமை நாட்களாகவே இருந்துள்ளது. இதிலிருந்து விடுபட, நிகழ்காலத்தை நினைவூட்ட முடியாத கடந்த கால வரலாற்றுப் புத்தகங்களில் தஞ்சம் புகுந்துக் கொண்டார். கொப்பளிக்கும் அவர் உணர்வுகளெல்லாம் அவருக் குள்ளேயே ரகசியமாக்கப்பட்டன! லியோனைட் மரணத்தால் பிலிப் நல்ல சொத்தினை அடைந்திருப்பார் எனும் இலக்கு, கொலைக்கு போதுமானதாய் அமையவில்லை. ஏனென்றால் எல்லோர் மீதும் வேண்டிய மட்டும் சொத்து எழுதி அதை உயிலாக பதிந்தும் அறிவித்து விட்டார் பெரியவர். எனவே லியோனைடைக் கொன்று தான் பணத்தை அபகரிக்க வேண்டும் எனும் நோக்கம் சத்தற்றுப் போகிறது. பண ரீதியாய் தன் அப்பாவின் மரணத்தை அவர் விரும்பியிருக்க மாட்டார் என்பது எவ்வளவு நிஜமோ, அத்தனை நிஜம், உள ரீதியான ஒரு தாகம் - லியோனைடின் மரணத்தை வேண்டும் ஆழமான ஒரு மன தாகம் - அவருக்கு இருந்திருக்கும் என்பதும் ஆகும்!

பிலிப் மறுபடியும் தன் தந்தையோடு சேர்ந்து வாழும் நோக்கத் தோடு தன் குடும்பத்துடன் ஸ்வின்லீ டீன் வருகிறார். விதிவசத்தால், ரோஜரும் வந்து சேர்கிறார். நாட்கள் நகர ஆரம்பிக்கின்றன. அப்போதெல்லாம், தன் தந்தையின் அபிமான புத்திரனாக ரோஜரே விளங்குவதைக் காணும் துர்பாக்கிய நிலையும் பிலிப்'புக்கு ஆரம்பமாகின்றது. இதனால் உண்டான மன இறுக்கமும் உளைச்சலும், அவருக்குள் பொறாமை பூதமாக அவதாரமெடுக் கின்றன. சரி. அது, தன் தந்தையின் மரணம் மட்டும் தான் இதற்கு நிரந்தர முடிவு எனும் அளவுக்கா பிலிப்'பின் பாதிக்கப்பட்ட மூளையை நினைக்க வைத்திருக்கும்? தந்தையின் மரணத்தின் மூலம் ரோஜரின் மீது பழியைத் திருப்பி குற்றம் சுமத்தி அவரை அழித்து விடலாம் எனும் அளவுக்கா வக்கிரத்திருக்கும்? ரோஜருக்கு, பெரும் பணம், கண நேரம் கூட தாமதமின்றி அத்தியாவசியமாகியிருக் கின்றது. ரோஜருக்கும் லியோனைடுக்கும் இடையே கடைசியாய் நடந்த உரையாடல் தெரியாததாலும், மேலும், தன் அப்பாவே மறுபடியும் ரோஜருக்கு உதவ முன் வந்ததும் தெரியாததாலும், இப்போது அப்பாவைக் கொன்று விட்டால், அப்பாவின் மரணத்தைப் பணம் வேண்டி ரோஜர் தான் நிகழ்த்தியதாக சட்டத்தை நம்ப வைத்து விடலாம் என்று பிலிப் திட்டமிட்டிருக்கலாமோ? பல நாட்களாக ஒரு

வித மன நோயாளியாகவே வாழ்ந்து வரும் பிலிப்'பின் உணர்வு பூர்வ மற்றும் சிந்தித்தாயும் புத்தியின் சமநிலை, ரோஜரைப் பழி தீர்க்க இவ்விதம் ஒரு வாய்ப்பு அருமையாய் அமைந்து விட்டதால், கொலை புரியுமளவுக்குத் தடுமாறியிருக்குமா?

இப்படிப்பட்ட சிந்தனையில், முகச்சவரம் செய்துக் கொண்டிருப்பது கூட மறந்து மூழ்கிவிட்டதால் தான், முகத்தில் ஒரு வீரத் தழும்பு விழுந்தது!

எல்லோர் முகமூடியும் இந்தக் குடும்பச் சந்திப்பில் கலையும் என்று என்னை அழைத்துப் போய் நிறுத்தி, பிலிப்'பின் கோப மறு பக்கத்தைக் காட்டினாளே சோஃபியா! எதற்காக? சோஃபியா மூளைக்குள் ஏதோ ஒரு சந்தேகம் - யாரோ ஒருவர் மீதான சந்தேகம் - ஓடிக் கொண்டேயிருக்கின்றது. ஒரு வேளை அது அவள் அப்பா பிலிப் மீதானதாகவே இருக்குமா? இருக்காது என ஒரு மனமும் ஏன் இருக்கக் கூடாது என இன்னொரு மனமும் குத்தின. அப்படி ஒரு சந்தேகம் இருக்கும் பட்சத்தில், அது உண்மை என தீர்ப்பானால், என்னை மணக்க அவள் சம்மதிப்பாளா?

சம்மதிப்பாள் என்றே பட்டது. அது தான் சோஃபியா. உண்மை தெரிந்தாக வேண்டும் என்று தெளிவாக, கொலையாளியை எப்படியும் வெளிச்சத்துக்குக் கொண்டு வர வேண்டும் என தைரியமாக உள்ளாள், அவள்! எதையும் சந்திக்க அவள் தயார். உண்மையே தெரியாமல் எங்களிருவருக்கும் இடையே ஒரு சந்தேக அரண் சாகாவரம் பெற்று இருப்பதை விட, இன்னார் தான் இந்தக் காரணத்தால் கொலை செய்து விட்டார் என ஒரு தனி மனிதன் சுட்டிக் காட்டப்பட்டு, விடுகதை உடைவதையே அவள் விரும்புவாள். விரும்புகிறாள். 'என் மூளையைக் குடைந்துத் தள்ளும் இச் சந்தேகத்தை உண்மை இல்லை என நிரூபித்துக் காப்பாற்று. இல்லை, உண்மை என நிரூபித்தாவது எனக்கு விடுதலை கொடு. எந்த மோசமான உண்மையையும் நான் சந்திப்பேன்' என்றவளல்லவா அவள்!

பிலிப் மீது எடித் சந்தேகப்படுகிறாரா? வெறும் வழிபாடு மட்டும் எப்போதும் ஆபத்தானது என்று எதனை குறிப்பிட்டார். ஒருவரை தெய்வமாய் வழிபட்டு வர, அவர் இல்லையென்று ஆகும் போது மனத்தில் பிரளயம் வெடிக்கும் எனக் கோடிக் காட்டினாரா?

நீங்கள் யாரையேனும் சந்தேகப்படுகிறீர்களா என்றதற்கு, அது முறையற்றது என்ற க்ளெம்சி, அத்தோடு நிறுத்தாமல், பட்டும்

படாமல் ஏன் ப்ரெண்டாவையும் அந்த லாரன்ஸையும் குறிப்பிட வேண்டும்?

எதுவும் `தேறவில்லை. ஆரம்பம் முதலே வளர்ந்து வரும் சந்தேகங்கள் தான், விதவிதமான உடையணிந்து, இதோ, இன்னமும் உலவுகின்றனவே தவிர, புது திருப்பம் ஒன்றையும் காணோம். ஆனால் ஒன்று மட்டும் தெரிந்தது. இந்தக் குரூர வீட்டின் குணாதிசயம் என்னுள்ளும் இறங்க ஆரம்பித்துள்ள உண்மை மட்டும் தெரிந்தது. கொலையாளி யார் என்ற தீர்ப்புக்கு பதில், நான் கூட, நான் யார் மீது வசதியாக சந்தேகம் கொள்கிறேனோ அவரையே அல்லது அவர்களையே கொலையாளியாக்க விழைகிறேன்!

லாரன்ஸைச் சந்தித்து அவரை நீண்ட நேரம் பேச விட்டு ஆழம் காண வேண்டும் எனும் முடிவோடு குளியலறைக் கதவைத் தாழிட்டுக் குளிக்க ஆரம்பித்தேன்.

காலை உணவு சாப்பிட்டதும் உளவாட கிளம்பினேன். இரு குழந்தைகளும் மேலேயுள்ள வகுப்பறையில் பாடம் படித்துக் கொண்டிருக்க வேண்டும் என சோஃபியா சொன்னதால், முன்னறை யிலிருந்து மாடிக்கு நீண்ட படிகளில் ஏறி மாடியடைந்தேன்.

அப்போது ப்ரெண்டாவின் அறை எதிர்பட்டது. அழைப்பு மணியடிப்பதா? தட்டுவதா? இல்லை, அறிவிப்பின்றி உள்ளே நுழைந்தே விடுவதா எனும் குழப்பத்தில், சில நொடிகள், சாத்தி யிருந்த கதவருகே நின்றிருந்தேன். இது ஒன்றும் தனி வீடு கிடையாது. லியோனைட் பங்களாவின் ஒரு பகுதி. ப்ரெண்டாவின் பகுதி. நம் வீட்டின் ஓர் அறைக்குள் நுழைய என்ன தயக்கம் வேண்டிக் கிடக்கிறது?

தாழிடாமலிருந்த கதவினைத் திறந்து, தயக்கமேதுமின்றி, சில அடிகள் நடந்து உள்ளே போய் நின்றேன். அமைதி. யாரும் உள்ளே இருப்பதாய் அடையாளமில்லை. என் இடப்புறமிருந்த பெரிய அறையின் கதவு மூடப்பட்டிருந்தது. வலப்புறமிருந்த படுக்கை அறை - லியோனைடின் பெரிய படுக்கை அறை - இதுவும், அதனுள் இணைந்திருந்த விசாலமான கழிவறையும் திறந்திருந்தன. கழிவறையின் நுழைவில் இருந்த சுவர் அலமாரியில் தான் கண் மருந்தான எஸரினும் இன்சுலீனும் கையிருப்பில் வைக்கப்பட்டி ருந்தன என்பது, வழக்கின் ஆரம்பித்தில் போலீஸ் நடத்திய தேடுதல் வேட்டை மூலம் நான் அறியப் பெற்றிருந்தேன்.

ஒரு முறை படுக்கயறைக்குள் நுழைந்து மீண்டும் வெளியே அறைக்குள் வந்து சில நிமிடங்கள் நின்றேன். யாரும் வரவுமில்லை; கண்டு கொள்ளவுமில்லை. குடும்ப அங்கத்தினருக்கோ (அல்லது ஒரு வெளி நபருக்கோ!), யாருக்கும் தெரியாமல் இந்த அறைக்குள் நுழைந்து, சந்தடி எழுப்பாமல் ஏதேனும் காரியம் முடித்து விட்டுச் செல்வது, எத்தனை சுலபமான விஷயம் என்பது கலவரமாய் எனக்கு விளங்கிற்று.

குளியலறைக்குள் சென்று நோட்டமிட்டேன். பெரிய அறை. பிரமிக்க வைக்கும் விலையுயர்ந்த ஓடுகளால் தரையும் சுவரும் அமைக்கப்பட்டிருந்தன. முதியவர் ஒருவரைத் கவனித்துக் கொள்ளும் பணியாளுக்குத் தேவையான - கம்பித் தடுப்புக் கொண்ட இறைச்சி வேக வைக்கும் அடுப்பு, ரொட்டி சுடும் தட்டு, நீர் கொதிக்க வைக்க கெட்டில், சில கோப்பைகள், தட்டுகள் - ஆகியன இருந்தன. சுவரில் பதிக்கப்பட்டிருந்த, பளீர் வெள்ளை நிறத்தாலான அலுமினிய அலமாரியைத் திறந்து பார்த்தேன். இது ஒரு பெரிய அலமாரி. இதற்குள் சிறு மருத்துவமனையே தென்பட்டது! இரு சிறு மருத்துவ அளவுக்குடுவைகள். ரத்தப் பரிசோதனைக்காக உதவும் சிறு சிறு கண்ணாடிச் செவ்வகங்கள் சில. கண் சொட்டு மருந்துகள் மற்றும் அவற்றை உறிஞ்சி கண்களில் சொட்டுவதற்கு உதவும் சிறு நிரப்பும் உபகரணங்கள். வாய்க்குள் நுழையாத மருத்துவப் பெயர்களில் திரவ மருந்தடங்கிய குடுவைகள். பிளாஸ்திரி உருண்டைகள். சிறு சிறு பஞ்சுப் பொதிகள். காயமேற்பட்டால் பஞ்சு வைத்து மூடி சுற்றிக் கட்ட மருத்துவ வலைத் துணிகள். இவ்வலமாரிக்குள் ஓரிரு குறு அலமாரிகளும் அமைக்கப்பட்டிருந்தன! அவற்றில் ஒன்றில், மிகப் பிரத்யேகமாக, இன்சுலீன் பாட்டில்களும், அவற்றை உறிஞ்சி ஏற்ற ஊசிகளும், ஸபிரிட் குடுவைகளும் மட்டும் வைக்கப்பட்டிருந்தன. இன்னொன்றில் இரு வித, ஆபத்தான என லியோனைட் கருதிய மருந்துகள் மட்டுமிருந்தன. ஒன்று: கண் சொட்டு மருந்து - எஸரின் அடங்கியது. இன்னொன்று: 'மருத்துவரின் ஆலோசனையின் பேரில் ஒன்று மட்டும் இரவில் எடுத்துக் கொள்ள' என்ற குறிப்பிட்ட தூக்க மாத்திரைகள்.

எத்தனை அழகாய் நெறிப்படுத்தி அடுக்கப்பட்டுள்ள ஒழுங்கு. லியோனைட் குணாதிசயத்தின் பிரதிபலிப்பு. இத்தனை ஒழுங்கான மனிதர், கொலையாளி வந்து, எஸரினைத் தேடி எடுக்கும் சிரமம்

கூட வைக்காமல், அதனைத் தனியாய் எடுத்து வைத்து வழி செய்து தந்திருப்பதை நினைக்க நினைக்க விம்மியது. இதோ, இந்த மருந்துகளை வைத்துக் கொண்டு என்ன செய்ய வேண்டுமோ - அது நல்லதோ, கெட்டதோ, எதுவாயினும் - அதை நான் பண்ணி விட்டு, மூச்சு காட்டாமல் படியிறங்கி, சமர்த்தாய் வரவேற்பறை அடைந்து, நல்ல பிள்ளையாய் செய்தித்தாள் படிக்க ஆரம்பித்து விடலாம்! கவனிப்பாற் கிடையாது. இவ்வாறு நடந்துள்ளது என்பதை ஏற்கெனவே எங்கள் துப்பறியும் துறை போதுமான அளவு விவாதித்து முடித்திருந்தாலும், இச்சூழல், தடயமேதுமின்றி காரியத்தை நிறைவேற்ற கொலையாளிக்கு எவ்வளவு சாதகமாக அமைந்துள்ளது என்பதையும், இப்படி காற்றில் கரைந்துள்ள உண்மையைக் கண்டறிய போலீஸ் எத்தனை மெனக்கெட வேண்டியுள்ளது என்பதையும், இப்போது கசையடி விழுந்தாற் போல் வலிக்க வலிக்க உணர்த்திற்று.

அப்பா சொன்னது போல குற்றவுணர்வு பிரதிபலிக்கும் நபர்களிடமிருந்து மட்டுமே உண்மையைக் கறக்க முடியும்... கல்லுளிமங்கன்களாக உலவும் இவ்வீட்டு பிரஜைகளிடம் அது முடியுமா? நடக்குமா? சாத்தியமா? - என சற்று தளர்ந்து என் மனம் பின் வாங்கும் போது, 'விடாதே! துரத்து! ம்! மூச்சு முட்டட்டும்! துரத்து! கலவரமடையட்டும்! அவனிடம் தான் உண்மையுள்ளது என அறிந்தே நாம் துரத்தி வந்ததாய் உணர்த்து! நெருக்கு! ம்! நாம் உண்மையறிந்து வெளிச்சத்தில் தானிருந்தோம்! சாட்சிகளுக்காக காத்திருந்தோம்! அது கிடைத்து விட்டது! இனி தப்பிப்பில்லை என்பது போல மடக்கு! மூச்சு முட்டி முட்டி, ஓட முடியாமல் குப்புற விழுந்து, நீ மெல்ல மெல்ல நெருங்குவதைக் கண்டு துடிக்கட்டும்! இதோ... இப்போது... இத்தருணத்தில்.... இக்கணத்தில் கூட அவன் டம்பமடித்து, தானே புத்திசாலி என மிளிர்ந்தானென்று வைத்துக் கொள்! அவன்! அவன் தான்! அந்த மாபாதகன் தான், நம் நாயகன்!' - என்று நான் இங்கு தங்க கிளம்பும் போது முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனர் ஏற்றிய தன்னம்பிக்கை சத்து என்னுள் உத்வேகம் கொண்டு எழுந்தது. இந்நிலை தான் உச்ச நிலை.

ஆனால், இக்கட்டம் இது வரை ஆரம்பமாகவேயில்லை!

இந்த ஆறுதலிலும் புத்துணர்விலும் லியோனைட் கழிவறை விட்டு வெளியே வந்து முன் கதவடைந்து வெளியேறி பயண மானேன். இடப்புறம் மூடப்பட்டிருந்த சமையலறையும் வலப்புறம்

வேலைக்காரி ஒருத்தி எதையோ துடைத்து சுத்தம் செய்துக் கொண்டிருந்த ப்ரெண்டாவின் படுக்கயறையுமிருந்தன. இத்தனை நேரம் நான் உள்ளே இருந்து, அனைத்தையும் பார்த்து விட்டு, பெரும் சிந்தனையிலும் ஆழ்ந்து விட்டு வரும் வரை, என்னை எந்த ஜீவனும் கண்டு கொள்ளவேயில்லை. (ஒரு வேளை ஜோஸஃபைன் ஏதாவது கதவிடுக்கில் நின்று தன் நோட்டுப் புத்தகத்தில் வடித்திருப்பாளோ?!). இவ்வகையிலமைந்திருந்த அறைகளைக் கடந்து இருந்த ஏதோ ஓரறையிலிருந்து, மீன் வர ஏன் இவ்வளவு நேரமாகிறது என யாரையோ தொலைபேசியில் கடிந்துக் கொண்டிருந்தார் எடித். கதவு திறந்து வெளியேறி வராண்டாவில் நின்றேன். மேல் நோக்கிச் சுற்றிச் செல்லும் சுருள் படிக்கட்டுகள் இத்தளத்திற்கு மேலுள்ள பகுதிக்கு இட்டுச் சென்றன. அங்குதான் குழந்தைகளின் வகுப்பறையும், லாரன்ஸின் தங்குமிடமும், சில குளியலறைகளும், 'எடித்'தின் ஓய்வறையும் உள்ளன. முதல் படியில் காலடி எடுத்து வைத்தேன்.

எதிர்ப்பட்ட அறையின் வெளியே நின்றேன். கதவு சாத்தப் பட்டிருந்தது. கணீர் கணீரென்று லாரன்ஸின் குரல் உள்ளிருந்து வந்து விழுந்தது. லஜ்ஜையின்றி, கதவிடுக்கில் காது பொருத்தி, உள்ளே நடக்கும் பாடத்தினைக் கவனித்தேன். பிரெஞ்சு நாடு சம்பந்தப்பட்ட சரித்திரப் பாடமொன்று நடத்தப்பட்டுக் கொண்டிருந்தது. பாட போதனையைக் கேட்கக் கேட்க ஆச்சரியத் திகைப்பில் என் கண்கள் அகலமாகிக் கொண்டே போயின. காரணம்: லாரன்ஸின் போதிக்கும் திறன்!

எலி போன்ற அவரின் பயந்த புறத் தோற்றத்திற்கு துளியும் சம்பந்தமில்லாது, மாணவர்களிடம் உற்சாகத்தையும் கற்பனையையும் தூண்டி, அவர்களை அப்படியே வகுப்பறையில் மயக்கி வைக்கும் கலையை, இறைவரமாய் பெற்றிருந்தார் லாரன்ஸ். அவர் நடத்திய ஏதோ வரலாற்றில் வரும் பாத்திரங்களும் - வஞ்சகமான, கருணை நிறைந்த, அரச தோரணை மிக்க - என அத்தனை பாத்திரங்களும், ஆசிரியரின் உணர்ச்சிபூர்வமான குரல் பங்களிப்பில், வகுப்பறையில் நிஜமாய் வாழ்ந்துக் கொண்டிருந்தன. இடையிடையே சரித்திர பாடத்தில் காணப்பட்ட கதாபாத்திரங்களாக ஜோஸஃபைனையும் ஆஸ்டஸையும் நடிக்க வைத்துப் பார்த்தார் அவர். இந்தப் பொடியன் ஆஸ்டஸ், புத்திக் கூர்மை நிறைந்து ஒருவித வரலாற்று கற்பனை வளத்தையும் சேர்த்து, ஜாம் ஜாமென்று, ஏற்ற இறக்க குரல்

பங்களிப்போடு, உணர்வுபூர்வமாய், ஒரு சரித்திரக் காலத்து அரசனாகவே நடித்துக் காட்டினான்.

அதிகம் பேசியறியாத ஆஸ்டஸிடம் ஒளிந்துள்ள வீரியமான இத்திறமை, வரலாற்றிலேயே வாழ்ந்து வரும் பிலிப்'பிடமிருந்து இறங்கியிருக்க வேண்டும். இவ்விதம் நான் ஆஸ்டஸைக் கணிக்கும் போதே, 'மரபணு உண்மை... உளவுக்கு உதவும் விளக்கு' என அப்பா விவரமாய் சொன்ன விளக்கம் பொறி தட்ட, கொஞ்சம் பதற்றமானேன்.

உடனேயே நாற்காலிகள் பின்னுக்குத் தள்ளப்பட்டு தரையில் உராய்ந்து எழும் ஓசை உள்ளிருந்து கிளம்பியது. பதற்றத்தைத் தாற்காலிகமாய் ஒதுக்கி விட்டு, சட்டென சில அடிகள் பின்னுக்குத் தள்ளிப் போய், இத்தளத்திற்கு வந்து முடியும் சுருள் படிக்கட்டின் விளம்பில் நின்றுக் கொண்டு, ஏதோ அப்போது தான் இத்தளத்துள் நுழைவதாய் பாவித்தேன். கதவு திறந்துக் கொண்டு வெளியே வந்த இரு பிள்ளைகளையும் பார்த்து ''ஹாய்.... வணக்கம்'' என்றேன்.

ஆச்சர்யமாய் என்னைப் பார்த்த ஆஸ்டஸ் ''ஏதாவது கேட்க வேண்டுமா?'' என்றான். நானிருப்பதும் இல்லாதது போலத்தான் என்பது போல அந்த அழகற்றச் சிறுமி போயே விட்டாள்.

''வகுப்பறையைப் பார்க்கப் பிரியப்பட்டேன் ஆஸ்டஸ்.''

''அன்று ஒரு முறை வந்திருந்தபோது பார்க்கவில்லை? நர்சரி போன்றது. சிறு குழந்தை பொழுதிலிருந்தே இங்கு தான் பாடம் கற்பிக்கப்படுகின்றது. சில பொம்மைகள் கூட இன்னும் அப்படியே கிடக்கின்றன'' என்று அறை குறித்த சிறு அறிமுகம் தந்தபடி கதவை நெருங்கியவன், கதவைத் திறந்து நான் உள் நுழைய வழி விட்டு விட்டு, தானும் உள்ளே வந்தான்.

தன் ஆசிரியர் மேஜையருகே அமைதியாய் நின்றிருந்த லாரன்ஸ் என்னைப் பார்த்ததும் படபடவென கலவரமானார். முகம் இருண்டது. நான் சொன்ன வணக்கத்திற்கு பதிலாய் முணுமுணுவென ஏதோ தெரிவித்தார். வணக்கம் தான் போல ! பிறகு ஓர் ஓரமாய் போய் விட்டார்! கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என நாற்திசைகளிலும் சென்று தேடுங்கள். லாரன்ஸ் போன்ற கடைந்தெடுத்த ஒரு பயந்தாங்கொள்ளியைக் கண்டெடுக்க முடியாது!

''பயமுறுத்தி விட்டீர்கள்'' - என்று புன்முறுவினான் ஆஸ்டஸ். ''மூச்சு விடுவது போல், வெகு சுலபமாய் பயப்படுகிறார்!''

''அவரின் இந்த குணம் உனக்கு பிடிக்கிறதா ஆஸ்டஸ்?''

''நல்ல மனிதர் தான். அலறுவது அவர் பிரத்யேக முத்திரை குணம்!''

''நல்ல ஆசானா?''

''நிச்சயமாய். சரித்திரம் அறிவியல் கணிதம் என எல்லாப் பாடங்களிலும் ஒரு பள்ளிக்கூட மாணவனுக்கு போதிக்கத் தேவையான அத்தனை சரக்குகளும் அவரிடம் நிரம்பிக் கிடக்கின்றன. ஹென்றி எட்டாம் ராஜா கவிதையெழுதுவார் என்று எங்கும் சொல்லித் தரமாட்டார்கள். லாரன்ஸ் போதிப்பார். சுமாரான கவிதை தான். இருந்தாலும் இது ஒரு வரலாற்று சிறப்புமிக்க செய்தியல்லவா. இது போல பற்பல. அவர் ஒரு சரக்கு மாஸ்டர் - பாட விஷயங்களில்....!'' - இவ்வாறு அழகு நடையிலும் சிறு சிறு நகைச்சுவையோடும் பேசத் தகுந்தவன் ஆஸ்டஸ் என்பது எனக்குள் புதிய பிரகாசமாய் ஒளிர்ந்தது. ஆனால் அந்த ஒளி, ''நீயும் ஜோஸஃபைனும் ஒரு வகுப்பு தான் வித்தியாசமாமே! பாடங்களெல்லாம் ஏறத்தாழ ஒன்றே தானா....?'' என்று நான் ஜோஸஃபைன் பற்றி பேச்செடுத்ததும் அணைந்து விட்டது.

அவள் மீது இவனுக்கு இருக்கும் கோபம் வெறுப்பு ஒவ்வாமை பொறாமை ஆகிய உணர்வுகளெல்லாம் ஒன்று சேர்ந்து அவன் கண்களிலிருந்து அம்பு போல சீறின.

''அவள் கொஞ்சம் அதிகம் கணிதமும், லத்தீனும் கூடப் படிக்கிறாள்'' என்றவன், ''பெண்ணுக்கெல்லாம் ஏன் படிப்பு?'' என்று எரிச்சலானான். தன் வயதுக்குத் தேவையான புத்தி கூர்மையைவிட அதிகம் கொண்டு தான் அவள் விளங்குகிறாள் என்று விளக்கி, அவன் ஆணாதிக்கப் பேச்சினை அடக்க முயன்றேன். ஆனால் அவனோ, ''அப்படியா நினைக்கிறீர்கள்? என்னைப் பொறுத்தவரை அவள் ஒரு முட்டாள்'' என்றான். தொடர்ந்தான்:

''துப்பறிதலில் மட்டும் தான் அவள் முழு கவனமும். அறையறையாய் போய் நின்றுக் கொண்டு, யார் யார் என்னென்ன பேசுகிறார்கள் என ஒட்டுக் கேட்டு, அவற்றை ஒரு சிறு நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொண்டு, தனக்குத் தான் எல்லாம் தெரியும் என அலைகிறாள். இதுவா புத்திசாலித்தனம்! ஒரு வேளை உங்களுக்கும் ஏதாவது திடுக்கிடும் தகவல் தந்து அவள் உதவி யிருக்கலாம். அதனால் புத்திசாலியாகி விட்டாள்! ஒட்டுக் கேட்கும் ஒரு நபரைப் போய் புத்திசாலி என்கிறீர்களே.....!'' என்றவன், அடித்துச் சொன்னான்: ''பெண்கள் துப்பறிபவர்களாக இயங்கவே

முடியாது. இதை அவளிடமும் பல முறை சொல்லி, ஒழுங்காய் வேறெதிலாவது கவனம் செலுத்து என்றிருக்கிறேன். கேட்கவில்லை. அம்மா தான் என் கருத்தை ஒப்பு கொண்டாள். கூடிய சீக்கிரம் ஸ்விட்ஸர்லாண்டு போய் விடுவாள்'' என நிம்மதி மேலோங்க முடித்தான்.

''உன் சகோதரி அவள். அவள் பிரிவு உன்னை பாதிக்காதா?''

கிண்டலாய் சிரித்து, ''ம்ம்'' என மறுத்தான். ''என் நாடகத்தை மாற்றி எழுதிக் கொடு என யார் யாரையோ வீட்டுக்குள் அழைத்து வந்து கூத்தடிக்கும் அம்மா, ஒரு நாடக மன நோயாளி. அருகிலிருப்பவர் கூப்பாடு போடுவது கூட கேட்காத வண்ணம் வரலாற்றில் தொலைந்து போகும் அப்பா. பலதரப்பட்ட குணாதிசயம் கொண்டு வீடே பிதுங்கி வழிகின்றது. இவளால் ஓர் எண்ணிக்கை குறைவதே நிம்மதி. சுமையான பெற்றவர்கள் என் விதி. அதிர்ந்தே வாழும் ரோஜர் பெரியப்பா. அவரைப் பார்த்தலே போதும்... நீங்களும் நடுங்க ஆரம்பித்து விடுவீர்கள். அவரிடமிருந்து அப்படிப் பரவும் நடுக்கத் தொற்று....! எடித் பாட்டி தான் ஆறுதல்....! இருந்தாலும் தள்ளாமையால் பல நேரம் ஓய்வெடுக்கவே அவளுக்கு நேரம் பத்தாது. வீட்டின் இந்தக் குரூர நிலை, அக்கா சோஃபியா வந்ததும் தான் மாறியது. பழகப் பழக இனிமை. இருந்தாலும் இப்போதெல்லாம் புருவங்கள் முடிச்சிட ஏதோ சிந்தனையால் நெருங்க முடியாத அளவுக்கு கூர்மையாகி விடுகிறாள். இதில், என் அக்கா வயதில் எனக்கு ஒரு பாட்டி. ப்ரெண்டாவைத் தான் சொல்கிறேன். குழப்பப் பாத்திரங்களும் குரூர பாத்திரங்களும் குரூர குணாதிசயங்களும் நிறைந்துள்ள இவர்களில் யார் போனால் என்ன யார் வந்தால் என்ன!''

தெரிந்த இந்த விஷயங்களை, ஆஸ்டஸ் மூலம் நானறிய விழைந்ததே அவன் மனக் கோணத்தை என்னுள் பதிவு செய்துக் கொள்ளத்தான். எந்தப் புற்றில் எந்தப் பாம்போ என அப்பா போதித்ததால் விளைந்த தேடலிது.

''சரி. இவர்களனைவரையும் விட்டுத் தள்ளு. தாத்தா?'' - கேட்டேன். ''அவரைப் பிடித்திருந்ததா?''

''அவர் ஒரு சமூக விரோதி.''

தூக்கிவாரிப் போட்டது. லியோனைடை எல்லோரும் வானுயரப் போற்றிப் பேசும் போது ஆஸ்டஸின் கருத்து வேறுபட்டு நின்றது. ''எந்த வகையில்?''

''லாபம் லாபம் லாபம் தான். எல்லாம் பணம். வேறு கிடையாது. இக்குணம் முழுக்க முழுக்க தவறு என்றும், இவ்வகை அணுகு முறையால் சிதைந்து போன சமூகங்களையும், லாரன்ஸ் போதித் திருக்கிறார். இந்த அழகற்ற குணம் மனிதனுக்குத் தேவையற்றது. சமூகத்தைக் குட்டிச் சுவராக்கும் மனித குணம், சமூக விரோத குணம் தானே!''

'சமூக விரோதி' எனும் கருத்து, படித்த சிறு அறிவு புகட்டிய சிறுபிள்ளைக் கருத்து என்று விளங்கியது.

இப்பொழுது லாரன்ஸ் வகுப்பறைக்குள் நுழைய, ஆஸ்டஸ் அமைதியானான். கையிலிருந்த புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டியபடி வந்தாலும், அவர் கடைக்கண் பார்வை என்னைப் பார்த்துப் பார்த்து விலகின! கைக்கடிகாரத்தைப் பார்த்து விட்டு, ''பதினொரு மணிக்கு சரியாய் இங்கு வந்து விடு ஆஸ்டஸ். கடந்த சில தினங்களாய் அதிக நேரத்தை நாம் வீணடித்து விட்டோம். பாடப் பகுதிகளை விரைவில் நடத்தி முடிக்க வேண்டும்.''

ஏற்றுக் கொண்டு, நொண்டியபடி அறையை விட்டு வெளியேறினான் ஆஸ்டஸ்.

லாரன்ஸ் நிமிர்ந்து என்னைப் பார்த்தார். என்னுடன் பேசவென்றே மீண்டும் அவர் வந்துள்ளதில் எனக்கு திருப்தி கிடைத்தது. நாக்கால் உதடுகளை நனைத்தபடி, அவருக்கே உண்டான அதிர்விலிருந்தார். மேஜையிலிருந்த சில புத்தகங்களை இலக்கின்றி அடுக்கி - களைந்து ஏதோ ஒரு வேலை செய்துக் கொண்டிருப்பதாய் காண்பித்துக் கொண்டார். நான் அப்பா சொன்ன 'பேச விடு...' என்ற அறிவுரையை மீறுவதாயில்லை.

எத்தனை நேரம் தான், இருக்கும் நாலைந்து புத்தகங்களை அடுக்கு வார்! என் அமைதி பலித்தது. ''அவர்கள் என்ன நினைக்கிறார்கள்?'' என்று பேச்சைத் துவங்கினார்.

''எவர்கள்?''

''போலீஸ்'' - இந்த வார்த்தையை சொல்லும் போதே அவர் மூக்கு மிக மெல்லிதாய் துடித்தது. பொறிக்குள் மாட்டிக் கொண்ட எலி, கம்பி இடுக்குகளில் மூக்கு விட்டுத் துடிக்குமே... அது போல்!

''என்னை நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாய் கருத மறுக்கிறார்கள்.''

''ஓ....! உங்கள் தந்தை துணை கமிஷனராக இருந்துமா...?''

''அவர் உயரதிகாரிதான்'' என்றேன் நான். ''ஆனால் கொலை சம்பந்தப்பட்ட ரகசியங்களை, மகனாயிருந்தாலும் சொல்லி விடுவாரா என்ன....!'' - குரலில் வீணான பகட்டினை வேண்டு மென்றே சேர்த்துப் பேசினேன். இப்போதும் நான் கொலை எனும் வார்த்தையை பிரயோகித்ததும் அவரது மூக்கு நுனி பயத்துடிப்புக் கண்டது.

''ஒரு வேளை... போ..லீ...ஸ்...'' என தடுமாறி பேசியவர், அந்தத் தடுமாற்றத்தை அடக்க நினைத்துத் தோற்றுப் போய் தொடர்ந்தார்: ''போலீஸ்.... கைது... வரை போக மாட்டார்கள்... இல்...லையா...?''

''இது வரை அப்படி ஒன்றும் தெரியவில்லை. ஆனால் நான் தான் சொன்னேனே....! என்னிடம் எதையும் கலந்து பேசாததால், நாளை எப்படி முடிவெடுப்பார்களோ....?!''

'விடாதே ! துரத்து! ம்! மூச்சு முட்டட்டும்! நெருக்கு ! மடக்கு!' - டேவரெனர் அசரீரியாய் உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தார்.

எனது பதிலைக் கேட்டதும் கட்டுப்பாடிழந்தார். படபடப் பானார். வேகமாகவும் அதிர்வுடனும் பேச ஆரம்பித்தார்: ''காரணமின்றி குற்றம் சாட்டப்படாததால் உங்களுக்கு தெரியாது சார்ல்ஸ்! மண்டைக் குடைச்சல் என்ன என்பதை நீங்கள் உணர மாட்டீர்கள்! வருகிறார்கள்! போகிறார்கள்! விசாரணையாம்! வரும் அத்தனை பேரும் கேள்வி கேட்கிறார்கள்! எங்காவது இப்படி நடக்குமா! இங்கு கேட்பாரற்றுக் கிடக்கிறோம்! அது தான் போலீஸின் இந்தத் கோரத் தாண்டவத்துக்குக் காரணம்!''

உடைந்துப் போனார். நான் காத்திருந்தேன். மனம் முழுவதும் ரணம் அப்பியிருக்கிறது. கொட்ட நினைக்கிறார். நடக்கட்டும்!

''முதன்மை இன்ஸ்பெக்டர், பதவி தன் கையிலிருக்கும் திமிரில், அபாண்டமாய் ஒரு பழி சுமத்தினாரே....! என்ன விழிக்கிறீர்கள்! நீங்களும் தானே அப்போது இருந்தீர்கள்! நினைவில்லை? என்னையும் ப்ரெண்டாவையும் இணைத்து... சே! எத்தனை அபாண்டம்! அந்தப் பழியை சுமத்தும் போது ஆதரவற்ற நாங்கள் எப்படி இல்லை என நிருபிப்பது? கற்பனை செய்து நெருங்கும் மனிதர்களை எந்த சக்தி கொண்டு வெல்வது? அவையெல்லாம் தந்திரம் நிறைந்த மகா பொய்கள். ப்ரெண்டா, முதலாளிக்குப் பல வருடங்கள் இளையவள் என்ற ஒரே காரணத்தினால் தானே,அவள் தான் கொலைகாரி எனும் உங்களுக்கு வசதியான ஒரு முடிவில், வழக்கை ஜோடிக்கிறீர்கள்!

இவர்களெல்லாம் மனித இனங்களே அல்ல....! கொடூர மிருகங்கள்! கொடூர மிருகங்கள்! அவற்றின் *திட்டமிட்ட முடிவுகள்!''*

''திட்டமிட்ட முடிவுகள்! ஆச்சரியம்....!''

''என்னய்யா ஆச்சரியம் கண்டீர்....! இந்தக் குடும்பத்தினர் – எங்களிருவரையும் கழுகு போல் கொத்தக் காத்துத் துடிக்கும் இந்த லியோனைட் குடும்பத்தினர் – என்னிடம் என்றுமே கருணை காட்டியதில்லை. என்னிடமிருந்து விலகியே வாழ்ந்தனர். என்னை நொடிக்கு நொடி வெறுத்தனர். இகழ்ந்தனர். ஒருவரோடு பேசக் கூடச் செய்யாது, பழகியும் பார்க்காது அவரை ஒதுக்க முடியுமா...? இவர்களால் முடிந்தது!'' - இப்போது அவர் உடலே நடுங்கியது. ''அவர்களிடம் எண்ண முடியாத அளவு பணமும் பலமும் இருந்ததால், இந்த இறுமாப்பு! என்னை மிகக் கீழ்த்தரமாய் நடத்தினார்கள். நான் என்ன தீங்கு செய்தேன் அவர்களுக்கு. வெறும் டியூஷன் ஆசிரியன். அவ்வளவே. என் ஒவ்வொரு நடவடிக்கையும் மனச்சாட்சி சார்ந்தவை, சார்ல்ஸ், *மனச்சாட்சி சார்ந்தவை.* மனச்சாட்சியை மீறி ஒன்று செய்ததில்லை. அவர்களுக்கு அப்படி எதுவும் கிடையாது''

நான் ஒன்றும் சொல்லவில்லை. ஓட விட்டேன்.

''இருக்கட்டுமே...'' என்று புது வெடிப்பாய் ஆரம்பித்தார். ''நான் பயந்தவன் தான். இருக்கட்டுமே! அதனால் என்ன? பயத்தால், அது தரும் நடுக்கத்தால், செய்யும் வேலையில் தவறுகள் செய்துள்ளேன். நான் ஆரம்பக் காலத்தில் பணியாற்றிய ராணுவத்திலேயே, துப்பாக்கியை இயக்குவதற்கு முன், அதைச் செய்ய என்னை இயக்க எனக்கு வராது! காரணம் பயம்! யாரும் யாரையும் கொல்லக் கூடாது. கொல்வதற்கு அதிகாரம் கொண்டவன் இறைவன் மட்டுமே. இதனால், போராயிருந்தாலும், நாட்டிற்காக தன் விவசாயத்தையோ, குடும்பத்தையோ விட்டு விட்டு வந்து நிற்கும் ஓர் அரசியல் சாராத சாமானியனைக் கொல்வதா எனும் உள்ளப் போராட்டத்தாலேயே - மனச்சாட்சி சார்ந்த இந்த தர்மத் தயக்கத்தாலேயே நான் போரை வெறுத்தேன். *போர் தப்பு. கூடாது.''*

இப்போதும் என்னிடம் அமைதி தான். லாரன்ஸின் கருத்துக் களுக்கு நான் தரும் ஆமோதிப்பும் அல்லது ஆட்சேபமும் சாதிக்க இயலாததை, என் அமைதி சுலபமாய் சாதித்துக் கொண்டிருந்தது. வீட்டுக்குள் கொலை இக்கட்டு விளைந்த பிறகு ஒரு தனிமையும்,

அத்தனிமையின் சாதகத்தைப் பயன்படுத்தி உள்ளக் காயங்களைக் கொட்ட ஒருவரும், இவருக்கு கிடைத்திருக்கவில்லை. இப்போது, அது, நான் போலீஸால் நிராகரிக்கப்பட்டவன் என சொன்னதன் மூலம், என்னிடம் நிகழ்ந்துள்ளது. லாரன்ஸ், தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தார். அப்படிச் செய்வதால், தன் மன ஆழ பாதிப்புகளைப் பற்றித், தானே வலிய வந்துக் கொட்டிக் கொண்டிருந்தார்!

''என்னைப் பார்த்தாலே எல்லோருக்கும் ஏளனம் தான்! அது என் குணம் - மற்றவர்களை, நான் வேலை செய்யும் அவசரத்தைப் பார்த்து சிரிக்க வைக்கும் பரிதாப குணம்! ஏனோ தெரியவில்லை. பல காரியங்களை நான் தப்புத் தப்பான முடிவெடுத்து செய்கிறேன். முதிர்சியில்லாமலில்லை. ஆனால் தப்பாய்த் தான் - இல்லையில்லை - நகைப்புக்கு இடம் தந்து தான் அவை முடிகின்றன'' - தன்னைப் பற்றி தானே விமர்சனம் செய்துக் கொள்ளும் நடுக்கமும் வெட்கமும் அவர் குரலில் தெறித்தன. ''கொழுந்து விட்டு எரியும் வீட்டுக்குள் குழந்தை ஒன்று மாட்டிக் கொண்டதை கேட்டு, அவ்வீட்டுக்குள் ஓடியே விட்டேன். ராணுவத்திலிருந்த போது நடந்தது இது. எங்கும் நெருப்பு. குழந்தையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. சரி, வந்த வழியே தப்பித்து விடலாம் என்றால் வழியைத் தவற விட்டு விட்டேன். புகை சூழ மூர்ச்சையானேன். கடைசியில் என்னைக் காப்பாற்றுவது பெரும்பாடாய் போயிற்றாம். 'முட்டாள்.... சிறு குழந்தையை எங்களுக்குக் காப்பாற்றத் தெரியாது? எருமை மாடு போல உன்னைத் தூக்கி வருவது தான் பாடாய் போயிற்று' என என் காதுபட வைதனர். நான் குழந்தையைக் காப்பாற்ற நினைத்தது மிகச்சரி தான். இல்லையா? ஆனால் பலன்? எல்லோரும் எனக் கெதிராய் ஓரணியாய் திரண்டு பழித்தனர். இப்போதும் அதே கதிதான். எவனோ, எந்த பாவியோ, லியோனைடைக் கொல்ல, பழி என்மேல்!''

இடை புகுந்து, எரிந்துக் கொண்டிருந்த அவர் உணர்வு நெருப்பில், ''ப்ரெண்டா பற்றி என்ன கருதுகிறீர்கள்...?'' என கொஞ்சம் எண்ணெய் விட்டு நகர்ந்துக் கொண்டேன்! நெருப்பு பிரம்மாண்டமாய் எரிய ஆரம்பித்தது!

லாரன்ஸிடமிருந்த பதுங்கிப் பயப்படும் பாவம் மறைய, ஆண்மை கொண்டு எழுத்து ''அவர் ஒரு தேவதை'' என ஆரம்பித்தாரே பார்க்கலாம். எத்தனை வலுவான வர்ணனை இது! பின்வருமாறு உருகிப் போனார்: ''அவர் ஒரு தேவலோக தேவதை! அவரின் இனிமை, தனது வயதான கணவர் மீது அவர் பொழிந்த கருணை, இவை

எல்லாம் எந்தப் பெண்ணிலும் காணக் கிடைக்காத அதிசயமானவை! அபூர்வமானவை! அந்தப் புண்ணிய ஜீவனைப் போய் விஷத்தோடு ஒப்பிடுவதை, கீழே தெருவில் மேயும் நாய் கூடச் செய்யாது. உணர்ச்சியற்ற அந்த இன்ஸ்பெக்டருக்கு இதெல்லாம் விளங்கவும் விளங்காது.''

''அவரது அனுபவம் அப்படி'' என இடை மறித்தேன் நான். ''இளம் மனைவியரால் கொல்லப்பட்ட பல முதியவர்களின் வழக்குகள் தந்த அனுபவத்தால் அவர் அப்படி உணர்கிறார்.''

''உலகத்தின் முதன்மை ஜோக்... நகைச்சுவை'' என்று கோபமாய் தரையை எத்தியவர், என்னிடமிருந்து விலகி, அலமாரியை அடைந்து, ஏதோ ஒரு புத்தகத்தை உருவி படிக்கத் துவங்கி விட்டார். என் பக்கம் முதுகு காட்டி நின்றுக் கொண்டு, போதும் உன்னுடன் பேச்சு என்பது போல் வெறுப்பானார்.

''லாரன்ஸ்...'', என நான் அழைக்க, ''தொந்தரவு செய்யாதீர்கள். எனக்கு இப்போது வகுப்பு உள்ளது'' என்று நீ வெளியே போ என்பதை உணர்த்தினார்.

இனி அவரிடமிருந்து ஒன்றும் வாங்க முடியாது. நான் பேசாமலிருந்திருக்க வேண்டும். டேவரெனரைப் பற்றி பரிகசித்ததும் எகிறி விட்டேன். நான் சில நொடிகள் தாமதித்து பின் மெதுவாய் வெளியேறினேன். அது வெளிப்புறம் திறக்கும் கதவு. கதவை பாதி திறந்து வெளியேறியதும், மூடுவதற்கு முன், ஓர் ஆர்வ மிகுதியால் சட்டென திரும்பி, திறந்து ஒருக்களித்திருந்த கதவின் பின்னால் எட்டிப் பார்த்தேன். என் கணிப்பு சரி தான். ஜோஸஃபைன்! சரியான பேய்! ஆமாம்... பேய் படங்களில் தான் இப்படி திடுதிப்பென்று ஒன்று ஒளிந்து நிற்கும்!

அவள் கைகள் முழுவதும் அழுக்கு. தலை முழுவதும் ஒட்டடை நூல்கள்.

''எங்கிருந்து இந்தக் கோலத்தில் வருகிறாய் ஜோஸஃபைன்....?''

மேலே சுட்டிக் காட்டினாள். அவள் சுட்டிய திசை நோக்கினேன். சில மாடிப்படிகள் வழி காட்ட, பெரிய அளவிலான பல தொட்டிகள் நிறைந்திருந்த ஓர் அறை தெரிந்தது. அவை என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால், அதுதான் வீட்டின் உச்சம். அதற்கு மேல் அறைகள் கிடையாது. மொட்டை மாடி தான் என்பது புரிந்தது.

''அவையனைத்தும் வீட்டுக்கு குடி நீர் தரும் தொட்டிகள். சிறு அறை அது. அங்கிருந்தேன்.''

''உனக்கு அங்கு என்ன வேலை?''

அடித்தொண்டையில் சொன்னாள்: ''துப்பறிந்துக் கொண்டிருந்தேன்.''

''தொட்டிகளுக்குள்... அதுவும் நீர்த் தொட்டிகளுக்குள் தேட என்ன இருக்கிறது?''

இதற்கு ''என் கை கால்களைக் கழுவ....!'' என்றாள். சம்பந்தமில்லாமல் இப்படிச் சொல்லி விட்டு, அருகிலிருந்த ஒரு கழுவு மறைக்குள் நுழைந்தவள், ''அடுத்த கொலைக்கான நேரம் நெருங்கி விட்டது சார்ல்ஸ், நெருங்கி விட்டது. உனக்குப் புலப்படவில்லை?'' என்று திகைப்பூட்டினாள்.

''உளறாதே. ஏதாவது புரளிக் கிளப்பிக் கொண்டேயிருக்க வேண்டுமா? அடுத்த கொலையா?''

''புத்தகங்களில் படித்திருக்கிறேன். கதை இத்தனை தூரம் வளர்ந்தபிறகு, திடீரென்று இன்னொரு கொலை நிகழும். அதுவும் எப்படி தெரியுமா....? தனக்கு மட்டும் விஷயம் தெரியும் என்று சொல்லிக் கொண்டு உலவும் ஒருவர், அந்த விஷயத்தை சொல்ல வரும்போது, கொல்லப்படுவார்! இங்கும் அது நடக்கும் போல தோன்றுகிறது....!''

''கண்றாவி. நீ முதலில் துப்பறியும் புத்தகங்களைப் படிப்பதை நிறுத்து. ஊஃப்ப்ப்! உன் மூளை மிக பயங்கரமாய் இயங்குகின்றது. கதைகளுக்கு வேண்டுமானால் பொருந்தலாம். நிஜ வாழ்க்கை அப்படியல்ல. ஒரு வேளை, அப்படி வழக்கு சம்பந்தமாய் ஏதாவது தகவலை யாராவது அறிந்திருந்தாரென்றால், அவர் பண்ணத் துடிக்கும் ஒரே ஒரு செயல்: பேசத் துடிப்பது தான். போதுமா...?''

திறந்த குழாயிலிருந்து பீறிட்டடிக்கும் தண்ணீராய் பின்வரும் வாக்கியத்தைச் சொல்லி என்னை அந்தரத்தில் தூக்கிப் போட்டாள் ஜோஸஃபைன்: ''சில சமயங்களில் இன்னொன்றும் நடக்கலாம். தங்களுக்கு உண்மை தடயம் தெரிந்திருப்பதே கூட விளங்காமல் வளைய வந்துக் கொண்டிருக்கலாம்....''

அப்படி விவரம் தெரிந்தும், அதனை அறியாத - தெரியாத ஆளும் இங்குள்ளனரோ என நான் துணுக்குற்று சந்திக்கும் போது, ''ப்ப்ப்ர்ர்ர்...'' என்று உதடுகளால் ஓசையெழுப்பி கழுவுமறைக்குள் சென்று விட்டாள் அச்சிறுமி.

சரியாய் தானிருந்தேன், ஜோஸஃபைனுடன் ஓரிரு வார்த்தைகள் பேசும் வரை. இப்போது கலங்கியக் குட்டையாய் நடந்து படியிறங்க

முயலும்போது, நொடிப் பொழுதில் என் கைகளை ஒரு குளிர் கை பிடித்திழுத்து தன் உள்ளங்கைகளுக்குள் புதைத்துக் கொண்டது. நொடி தான். என்னைத் திணறடித்த சிலீர் பிடி. நிமிர்ந்து பார்த்தேன். என் கண்களை ஊடுருவியபடி, ப்ரெண்டா!

''வணக்கம்...'' - என்றேன், என் கைகளைப் பிடித்திருந்த ப்ரெண்டாவின் பிடியிலிருந்து விலகயியலாமல்.

லாரன்ஸ் என்னிடம் பேச்சைத் துவங்கும் போது கேட்ட அதே கேள்வியை வேறு வார்த்தைகள் போட்டுக் கேட்டாள். தெரியாது என தலையசைத்தேன்.

''எனக்கு ரொம்ப பயமாகயிருக்கிறது சார்ல்ஸ்'' என்றாள். ''எ...ன...க்...கு...நடுக்கமாயிருந்தது. தூக்கமேயில்லை.''

பயந்துத் தானிருக்கிறாள். பொய்யில்லை. அவள் முகம் மிரட்சி கொண்டு திகிலைப் பிரதிபலித்தது. மீண்டும் என்னுள், 'பாவம்... தனியே விடப்பட்டிருக்கிறாள்... உதவ வேண்டும்...' எனும் பச்சாதாபம் தலைதூக்க, 'நான் எப்படியும் உதவுவேன்' என சொல்லத் தோணிற்று.

அவள் அழுதாள். *''என் பக்கம் யாருமேயில்லையே சார்ல்ஸ்.''*

என்ன பதில் சொல்லி இட்டு நிரப்ப முடியும்? லாரன்ஸ்?! ஒன்றுமில்லாத அந்த லாரன்ஸ் யார்? பிரச்சினை சமயங்களில் தோள் கொடுக்கும் தைரியமற்றவன். கோழை. அவன் பெயரையா சொல்வது? இருவரும் அந்தி வேளையில் தோட்டத்தின் ஆழப் பகுதியிலிருந்து திருட்டுத் தனம் பொங்க வீட்டுக்குள் நுழைந்து மறைந்தகாட்சி நினைவுக்குள் வந்ததால் லாரன்ஸ் பெயரைச் சொல்வது சரியென்றேபட்டது. ஆனாலும் சொல்லவில்லை.

ப்ரெண்டாவுக்கு உதவத் தூண்டும் தீ என்னுள் எதிர்பாராது மீண்டும் மூண்டது. உதவித் தான் தீர வேண்டும். ஆனால் எதைச் சொல்லி, அல்லது எப்படி? சரி... எப்படியோ உதவலாம் என நான் ஓரடி எடுத்து வைக்க எத்தனித்தாலும், எனக்குள் ஒரு குற்றவுணர்வு - துப்பறியும் கண்கள் கொண்டு, சோஃபியா, ப்ரெண்டா சமாசாரத்தில், என்னைக் கண்காணித்துக் கொண்டேயிருப்பதாய் ஓர் அமானுஷ்ய உணர்வு - என்னை மிரட்டிய வண்ணமுள்ளது. 'உன்னை ஈர்த்தாயிற்று' என்று அன்று சோஃபியா, ப்ரெண்டாவையும் என்னையும் இணைத்துப் பேசிய அசிங்கம், இதோ, இப்போது கூட என் காதுகளில் இருக்கின்றது.

சோஃபியா, ப்ரெண்டாவின் உணர்வுகளைப் புரிந்துக் கொள்ளவும் மாட்டாள். புரிந்துக் கொள்ள துளி முயற்சி செய்யவும் மாட்டாள். பாவம் ப்ரெண்டா. தனிமையில். அதுவும் கொலை பழி சுமந்துக் கொண்டு. பயந்து நடுங்கி. சே.....!

''என் கணவர் கொலை பற்றிய விசாரணை! நாளை! அதிகாரிகள் வந்து என்னைக் குடைந்தெடுக்கப் போகிறார்கள்! நான் ஒருத்தி என்ன செய்வேன்!'' - பரிதவித்தாள். ''என்ன நடக்கும் சார்ல்ஸ்?''

இதற்கு என்னால் ப்ரெண்டாவுக்கு ஆறுதல் தரயியலும் எனும் போது, எனக்குக் கொஞ்சம் ஆறுதல் வந்தது!

''ஒன்றும் நடக்காது'' என்றேன். ''அந்தக் கவலையை விட்டு விடலாம். விசாரணை என்ன தீர்ப்பா? இதுவரை அதிகாரபூர்வமாக விசாரணை நடத்தாத போலீஸ், இனி அதிகாரபூர்வமாக விசாரணை நடத்தும். நடத்தி, ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் அறிக்கையை சமர்ப்பிக்க வேண்டும், என முடிவு செய்து வழக்கை ஒத்திப் போடுவார்கள். அவ்வளவே. நாளை முதல் பத்திரிகைக்காரர்களின் வாய்களுக்கு உங்கள் வீடு செழிப்பான அவலாய் இருக்கும். எழுதித் தள்ளுவார்கள். ஆக, நாளை துவங்கும் விசாரணையால் ஒன்று தான் மிஞ்சும். பத்திரிகைக்காரர்களின் கொண்டாட்டம்.''

''அவர்கள் என்னை... என்னை... மிக...வும்... கீழ்த்தரமாக நடத்துவார்களா....?''

''தேவையற்ற கற்பனை. உங்கள் தினசரி வேலைகளைப் போய் பாருங்கள் திருமதி லியோனைட். உங்கள் நிலைமையில் நானிருந்தால், அதாவது நாளை விசாரணையை சந்திக்கும் நிலையில் நானிருந்தால், அது குறித்து ஒரு வார்த்தை கூட பேசியிருக்க மாட்டேன். புரிந்ததா? அது சட்டப்படி குற்றம்'' என்று விளக்கி விட்டு, தொடர்ந்தேன் : ''சொல்வதைத் கேளுங்கள் ப்ரெண்டா. அடம் பிடிக்காதீர்கள். உங்களுக்கு ஒரு வக்கீல் அத்தியாவசியம்.''

வக்கீல்களின் மேலும் நம்பிக்கையில்லாமல் ''வேண்டாம்... வேண்டாம்... மாட்டேன்....'' என அலறினார்.

''இதில் பயப்பட ஒன்றுமில்லை. அதிர்ந்துள்ள உங்களுக்காக பேச, குழம்பியுள்ள உங்களுக்கு சட்டப்படி நுணுக்கங்களை எடுத்துச் சொல்ல, பயந்துள்ள உங்களைத் தடுமாறாது வழி நடத்த, எது செய்ய வேண்டும்... எது செய்யக் கூடாது என அறிவுறுத்த, ஒரு வக்கீல் அவசியம் தான்'' என்று அடித்துச் சொன்ன நான், கொஞ்சம் பரிவாய்,

''பாருங்கள் ப்ரெண்டா....! நீங்கள் தனித்துள்ளீர்கள். தனிமையிலும் இருக்கிறீர்கள். இது ஆபத்து'' என்று கூறினேன்.

பிடித்திருந்த என் கையை இன்னும் இறுக்கினாள். ''ஆமாம் சார்ல்ஸ்...!'' என்று உணர்ச்சிவயப்பட்டாள். ''நீ புரிந்துக் கொள்கிறாய் சார்ல்ஸ். புரிந்துக் கொண்டு உதவவும் செய்கிறாய்'' என்று விட்டு, சில நொடிகளின் மௌனத்தின் இறுதியில் தன் பகுதிக்குள் சென்றாள்.

ஒரு திருப்தியுடன், ஆதரவற்ற ஒரு பெண்மணிக்கு வழிகாட்டிய நிறைவுடன் படியிறங்கி கீழ்த் தளமடைந்தேன். அங்கு வாசலருகே நின்றிருந்த சோஃபியா, பரபரப்போடும் அவசரத் தோடும், ''எங்கு போய் தொலைந்தாய் இவ்வளவு நேரம்...?'' என்று என்னை நெருங்கி துரிதப்படுத்தனாள். ''லண்டனிலிருந்து தொலைபேசி வந்தது. வந்து ஒரு மணிநேரம் ஆகிறது.மேலே நீ இல்லையென்றார்களே. உன் அப்பா உன்னை உடனே வரச் சொன்னார்.''

''வீட்டுக்கா? இரகசியப் போலீஸ் அலுவலகத்துக்கா?''

''அலுவலகத்துக்கு.''

''என்னை எதற்கு வரச் சொல்லுகிறார்கள் என விந்தையாக உள்ளது. வேறொன்றும் சொல்லவில்லை?''

இல்லை என தலையசைத்தாள். அவள் கண்களில் கண் மணிகளாட துல்லிய ஒரு தேடுதலிருந்தது. அவளை என் பக்கம் இழுத்துக் கொண்டு, ''கவலைப்படாதே கண்ணே. விரைவில் வந்து விடுவேன்'' - என்று விட்டு கிளம்பினேன்.

# 17

அப்பாவின் பாதுகாப்புக் கிடுக்கிப்பிடி நிறைந்த ரகசியப் போலீஸ் அலுவலக அறையில் கூடியிருந்த மூன்று அதிகாரிகளிடமும் இறுக்க நிலை தெறித்தது. தன்னிருக்கையில் முழுவதுமாய் சாய்ந்திருந்த துணை கமிஷனர், முகவாயில் கை வைத்துக் கொண்டு, கன்னத்தைத் தடவியபடி விட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பின்னாலிருந்த அகலமான ஜன்னலின் வழியே வெளியே பார்த்தபடி நின்றிருந்த முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனர், ஆழ்ந்த சிந்தனையிலிருப்பது விளங்கியது. அப்பாவின் எதிரில் வரவேற்பாளர் நாற்காலியில், யாரோ நாலு பேர் வந்து ரணமாய் உலுக்கி விட்டுச் சென்றது போன்ற தளர்ச்சியில் அமர்ந்திருந்த வக்கீல் கைட்ஸ்கில், ''என்ன... என்ன... என்ன... தன்னம்பிக்கை இருந்திருக்க வேண்டும்....! எத்தனை தைரியம் இருந்திருக்க வேண்டும்...!'' என்று அமிலமாய் எரிந்துக் கொண்டிருந்தார். ஏதோ ஒரு சம்பவம், கைட்ஸ்கில் மனத்தினை, அதன் கரு வரை உலுக்கி யுள்ளது. இப்போது திரும்பிய டேவரெனர் என்னைப் பார்த்து சிரித்ததில், வரவேற்பை விட, எப்படி கேலிப் படுத்தப்பட்டுள்ளோம் எனும் உணர்வே மிகுந்திருந் தது.

''திரு கைட்ஸ்கில்'லுக்கு, இன்று காலை, வினோதமான - ஆச்சரியமான - கடிதமொன்று வந்துள்ளது, சார்ல்ஸ்!'' என்று நடந்துள்ள சம்பவத்தின் முக்கிய சாராம்சத்தை மட்டும் சொல்லும் இலக்கில் சற்றே துரிதகதியில் என்னிடம் பேசினார்: ''அக்ரோ-டோ-போலஸ் என்பவரிடமிருந்தது! இவரும் லியோனைடைப் போல உணவகச் சங்கிலி ஒன்றின் முதலாளி. மிக முதியவர். பிறப்பால் கிரேக்கர். தன்னுடைய வாலிப வயதில் அக்ரோ-டோ-போலஸ் இருந்த போது, லியோனைட், இவருக்கு நெருக்கமான நண்பராக இருந்து பல உதவிகள் செய்துள்ளார். தன்னை இவ்வளவு பெரிய செல்வந்தராக ஆக்கியது, லியோனைடின் உதவி மட்டுமே என்பதில், ஆழமான

நன்றி கொண்டு இருந்திருக்கிறார் இவர். நன்கொடை, தருமம் எனும் நல்ல காரியங்களை மனதார செய்யும் பரோபகாரியுமாவார். இதனால், லியோனைடும், அக்ரோ-டோ-போலஸ் மீது, பரிபூரண நம்பிக்கையும், உளம் சார்ந்த ஒப்படைப்பும் கொண்டும் வாழ்ந்திருக்கிறார்.''

துணை கமிஷனர் இவ்விதமாய் சுருக்கத்தைச் சொல்லி முடிக்கவே காத்திருந்தது போல கதறினார் கைட்ஸ்கில்: ''இத்தனை சந்தேகக் குணமும், ரகசிய நடவடிக்கையும் உள்ளவராய், ஒரு கணம் கமிஷனர்.... ஒரே ஒரு கணம்கூட நான் லியோனைடை நினைத்தது கிடையாது. நாகரீகமற்ற மனிதன்! ஆமாம்! இப்படிச் சொல்வதில் தப்பே இல்லை. அதுதான் அந்தக் குள்ளருக்கு மிகப் பொருத்தம்! நாகரீகமற்ற மனிதன்!''

''திரு. கைட்ஸ்கில்...'' என்ற அப்பா, எதனாலோ வக்கீலுக்குள் ஏற்பட்டுள்ள ரணத்திற்கு மருந்துப் போடுபவராய், ''வயதானாலே, மனமும் மூளையும், மெதுவாய் வழுக்கி, இளமைக்கால நாட்களில் போய் நிற்கும். இளமையிலிருந்து பழகி வரும் மனிதர்களையே உத்தமர்களாய் எண்ணி விரும்பும்'' என்றார்.

''நானும் லியோனைடின் இளமைக்கால நண்பன் தான் கமிஷனர்! அவரின் அத்தனை சட்டப் பணிகளும் நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாய் என் கைகளில் தானிருந்திருக்கின்றன'' என்ற வக்கீல், ''சரியாய் சொல்லப் போனால், நாற்பத்து மூன்று வருடங்கள், ஆறு மாதம்! எவ்வளவு முக்கியத்துவம் தந்து, உடனுக்குடன், தாமதமேயின்றி, அவருடைய நீதிமன்றப் பணிகளை முடித்துத் தந்திருக்கிறேன் தெரியுமா....!'' என ஆதங்கப்பட்டு நிறுத்தினார்.

முதன்மை இன்ஸ்பெக்டர் மறுபடியும் கேலிச் சிரிப்பினை உதிர்த்து அடங்கினார்.

''எதற்காக இத்தனை அதிர்வு...?'' என்று வக்கீல் கைட்ஸ்கில்'லைப் பார்த்தேன். ''என்னாயிற்று திரு கைட்ஸ்கில்?''

வக்கீல் பேச முந்த, கையமர்த்தி அடக்கி துணை கமிஷனர் விளக்கலானார்: ''லியோனைட் இட்டு வந்துள்ள சில ரகசியப் பணிகளையும், அறிவுறுத்தல்களையும், மறுப்பின்றி கீழ்ப்படிந்து நிறைவேற்றி வந்துள்ளதாய், தன்னுடைய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார், அக்ரோ-டோ-போலஸ்! இது பல வருடங்களாய் அவர்களிருவருக்குள்ளும் நம்பிக்கையின் அடிப்படையில் இடம் பெற்று வந்திருக்கிறது. கிட்டத்தட்ட ஒரு வருடத்திற்கு முன்னால் கூட, தான் இறந்ததும், தாமதமின்றி கைட்ஸ்கில்லுக்கு அனுப்பிவிடும்படி

அறிவுறுத்தி, ஒட்டப்பட்ட ஓர் உறையினை, தன் உயிர் நண்பனனான அக்ரோ-டோ-போலஸிடம் கொடுத்து அன்புக் கட்டளை இட்டிருக்கிறார் லியோனைட்! அக்ரோ-டோ-போலஸ் முதலில் இறக்கும் பட்சத்தில், லியோனைடுக்கு மிகவும் பிரியமான அக்ரோ-டோ-போலஸின் மகன், அதே கட்டளைகளை செய்து முடிக்க வேண்டும் என்றும் வேண்டுகோள் வைத்திருக்கிறார். தான் நிமோனியா வியாதியால் மிகவும் அவதிப்பட்டு வருவதாலும், மேலும், லியோனைடின் மரணச் செய்தி நேற்று மதியம் தான் அறிய நேர்ந்தது என்பதாலும் தாமதம் ஏற்பட்டு விட்டது எனக் குறிப்பிட்டு தாமதத்திற்கும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டுள்ள அக்ரோ-டோ-போலஸ், அந்த ஒட்டப் பட்ட உறையை நம் வக்கீலுக்கு அனுப்பியுள்ளார். அது இன்று காலை கைட்ஸ்கில் கைக்குக் கிடைத்துள்ளது.''

இப்படி அப்பா சொன்ன கதைக்கு, ''சட்டப்படி கையாளப்படாத தவறான அணுகுமுறை'' என்று, இதுவரை எனக்கு விளக்கப்படாமலிருக்கும் நடந்துள்ள ஏதோ ஒன்றினை விமர்சித்துக் காட்டினார் வக்கீல்.

அப்பா வக்கீலைப் பார்த்து பரிதாப சிரிப்பு ஒன்றினை உதிர்த்தபடி, ''உறையைப் பிரித்து அதன் சாராம்சத்தைப் படித்த கைட்ஸ்கில், அது லியோனைட் சம்பந்தப்பட்டது என்பதையும், எனவே வழக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கும் தருணத்தில் நமக்கு தெரிவிக்க வேண்டியது சட்டப்படி அவசியமென்றும் கருதி, இங்கு வந்தார்'' என்று சொல்லி, என் ஊகத்துக்கு இடம் தருவது போல் சில நொடிகள் நிறுத்தி, பின், ''அக்ரோ-டோ-போலஸின் விளக்கக் கடிதத்துடன், உறையுள் இருந்தது, உயில்! லியோனைட் மற்றும் சாட்சிகள் கையொப்பமிட்டுள்ள உயில்!'' என முடித்தார்.

''அப்பாடா....'' என்று நிம்மதிப் பெருமூச்சு வெளியிட்ட நான், ''கடைசியில் உயில் கிடைத்ததே'' என மெலிதாய் புன்னகைத்தேன்.

என்னைக் கண்கள் சிவக்க பார்த்த கைட்ஸ்கில், ''இது....! இது....! அந்த உயில் கிடையாது சார்ல்ஸ்....!'' என்று ஏறத்தாழ குரைத்தார்! ''லியோனைட்'டின் விருப்பப்படி, சொத்தினை அவர் பிரிக்க விரும்பிய எண்ணப்படி நான் வடித்துத் தந்த உயில் கிடையாது இது! அவர் கைப்பட எழுதிய உயிலிது! சட்டப்படி மிக ஆபத்தான செயல்! துணிந்து நிறைவேற்றியுள்ளார்! என்னை முழு முட்டாளாக்கி தன் பணியை முடித்துக் கொண்டுள்ளார் கிழ லியோனைட்!''

''பழிக்கக் கூடாது'' என்று இப்போது வாய் திறந்தார் டேவரெனர், கைட்ஸ்கில்'லுக்கு ஆறுதல் சொல்லும் எண்ணத்தோடு. ''வயதாக ஆக இப்படி சில கோமாளித்தனங்கள் நிகழ்ந்து விடுகின்றன. வேண்டுமென்றே செய்திருக்க மாட்டார். சில பயங்கள். இப்படிச் செய்ய தூண்டியிருக்கின்றன. மற்றபடி உங்களை முட்டாளாக்க வேண்டும் எனும் எண்ணம், கனிவே உருவாய் வாழ்ந்துள்ள அவருக்கு எப்படி இருந்திருக்கும்...?''

இதற்கு கைட்ஸ்கில் பதிலேதும் சொல்லாமல், வெறுப்பாய் காற்றினை உள்ளுக்கிழுத்தார்!

''விஷயத்தையும் உயிலின் சாறையும் தொலைபேசி மூலம் வக்கீல் சொன்னதும், எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு இங்கு வரச் சொன்னேன். உனக்கும் தகவல் தந்து வரவழைத்தேன்'' என்றார் அப்பா.

நடந்துள்ள விவரம் எனக்குக் கொஞ்சமாய் கிடைத்தது. இது இம்மூன்று அதிகாரிகள் சம்பந்தப்பட்டது. எனக்கு அவசர அவசரமாய் தெரிவிக்கப்பட வேண்டிய அத்தியாவசியம் ஏதுமில்லை. அதனால் நான் ஏன் வரவழைக்கப்பட்டேன் என்பது எனக்கு விளங்கவில்லை! அது மட்டுமல்ல. இப்போதைக்கு கையில் உள்ள ஒரே கையெழுத்தான உயில், இதோ, இப் புத்தம்புது உயில் தான். இதை வைத்துக் கொண்டு மேல் கொண்டு ஆக வேண்டியதைப் பார்க்கலாம். லியோனைட், பணத்தை எப்படி பங்கு போட்டிருந்தால் யாருக்கு என்ன....?! இச் சிந்தனையால், ''இது என்ன வேறு உயிலா...?'' என்றேன். ''அதாவது, சொத்தினை, இது வரை நாம் கேள்விப்பட்டது போலல்லாது, வேறு விதமாய் பிரித்து விளக்கும் உயிலா....?''

''ஆமாம்...'' என்றார் கைட்ஸ்கில் அழுத்தமாய்.

துணை கமிஷனர், போலீஸ் பார்வையால் என்னை நேருக்கு நேராய் துளைத்தார். டேவரெனரோ, என்னைப் பார்க்க வேண்டாம் என்பது போல காரணமாய் வேறு திசை பார்த்தார். இப்படிச் செய்வதால், இவ்விரு அதிகாரிகளும் ஏதோ எனக்கு முக்கியத்துவம் தருவதாய் பட்டது. அப்படித்தானிருக்க வேண்டும். தகவலனுப்பி வரச் செய்துள்ளார்களே. என்னை சிறு படபடப்பும் பரபரப்பும் தொற்றிக் கொண்டன. இரு அதிகாரிகளின் போலீஸ் மோப்ப மூளையிலும் ஒரே நினைப்பு ஓடிக் கொண்டிருக்கிறது. ஒரே நினைப்பு! நான் காரணமறியாத ஒரே நினைப்பு!

என்னைக் குறிபார்த்திருந்த இந்த அமைதியைக் கலைக்க, ''என்னிடம் இது வரை நீங்கள் தந்திருக்கும் இப்புதுத் தகவல்கள் அனைத்தும், நான் சம்பந்தப்படாதவை'' என கை கழுவி விடுவது போல பேசினேன். ஆனால் இன்னமும் அப்பா என்னைப் பார்த்துக் கொண்டேயிருந்தார்; இன்ஸ்பெக்டர் என்னைப் பார்க்காமலே யிருந்தார். இவை பத்ததாதென்று, எனக்குள் விளைந்திருந்த இறுக்கத்தை இன்னும் இறுக்கும்படி, ''உங்களுக்கும் சோஃபியா வுக்கும் நல்ல ஸ்நேகிதம் இருக்கிறது.... இல்லையா....?'' என்றார் கைட்ஸ்கில், தானிருந்த கோப நெடி குறையாமல். என்னால் இக்கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. ஊறரிந்த விஷயமன்றோ இது. அவரே தொடர்ந்தார்: ''லியோனைட், தனது சொத்தினைப் பகிர்ந்து, இதோ, இந்தப் புது உயிலில் குறிப்பிட்டுள்ளது, இனி ரகசியமாக இருக்க இயலாது. இது, காவல் துறை அதிகாரிகளுக்குத் தெரிவிக்கப்பட வேண்டும்; அவர்களின் அறிவுறுத்தலின் பேரில் ஆவன செய்ய வேண்டும் என்பது என் நிலை'' என்ற கைட்ஸ்கில், மீண்டும், இப்போது என்னிடம் கேட்ட கேள்வியையே கேட்டார்.

''நான் அவளை திருமணம் முடிக்க எண்ணியுள்ளேன்'' என்றேன் நான். ''ஆனால், இப்போதுள்ள களேபரம் முடியும் வரை அவள் எங்கள் திருமணம் பற்றி பேசப் போவதில்லை.''

''வழக்கு முடியும் வரை காத்திருக்க அவள் நினைப்பது வெகு சரி'' என்ற வக்கிலின் வாதத்தை ஒதுக்கித் தள்ளி, எத்தனை நாள் தான் காத்திருப்பது எனும் ரீதியில் பதிலளித்தேன். இருந்தாலும் இந்த வாக்குவாதத்துக்கு இது தளமில்லை ஆகையால் நிறுத்திக் கொண்டோம்.

''சார்ல்ஸ்....! இந்த உயில்'' என்று புதிதாய் பிறந்துள்ள உயிலைக் காற்றில் ஆட்டிப் பேசிய கைட்ஸ்கில், ''கடந்த வருடம் நவம்பர் 29 அன்று கையெழுத்தாகியுள்ளது. இதன் படி, லியோனைட், தன் மனைவிக்கு ஒரு லட்சம் பவுண்டுகளை எழுதி வைத்துள்ளார். மீதி உள்ள அத்தனையையும்...'' என்று அவர் என்னை நோக்கும் போது, வேறெங்கோ பார்த்துக் கொண்டிருந்த டேவரெனர் உட்பட மூவரும் என்னைக் கூர்மையாய் பார்க்க, ''....குண்டு மணி விடாமல் மீதி உள்ள அத்தனை சொத்தினையும், தன் ஒரே பேத்தியான சோஃபியாவின் மீது எழுதி வைத்து விட்டார்.''

எனக்கு மூச்சு முட்டியது. உள்ளே இழுத்த மூச்சுக் காற்றை வெளியே விட முடியவில்லை. சில நிமிடங்கள் முன் என்னைப் பார்த்து மூவரும் காட்டிய பாவனைகளின் காரணம் இது தான் என கொஞ்சமும் நான் எதிர்பார்த்திருக்கவில்லை. ''என்ன அசாதாரணம்! எப்படி இது சாத்தியம்! என்ன காரணம்!'' - நான் விக்கித்துக் கேட்டுக் கொண்டேயிருந்தேன்.

''உயிலோடு கூட லியோனைட் எழுதி வைத்துள்ள கடிதத்தில் தீர்க்கமாய் விளக்கியிருக்கிறார்'' என்ற அப்பா அவர் மேஜையில் நடுநாயகமாய் வைக்கப்பட்டிருந்த தாள் ஒன்றினை எடுத்தார். ''திரு கைட்ஸ்கில்....! இதனை சார்ல்ஸினைப் படிக்கச் சொல்வதால் சட்டப் பிரச்னை ஒன்றுமில்லையே...?'' என கேட்க, ''நான் உங்கள் கைகளில்....!'' என அழகாக பச்சைக் கொடி காட்டினார் கைட்ஸ்கில்.

அப்பாவிடமிருந்து கடிதத்தைப் பெற்றேன். சிறு நடுக்கத்துடனான போக்கில் வரிகள் ஓடியிருந்தன.

*''திருமிகு கைட்ஸ்கில்,*

*கடிதத்தைப் படிக்கும்போது நீங்கள் திகைத்துப் போகலாம்; என் மேல் வெறுப்பும் கொள்ளலாம். ஆனால் வலுவான காரணங்களால் தான், உங்களுக்கு தேவையற்றதாய் படும் ஒரு வகை ரகசியத் தன்மையில் நான் நடந்துக் கொண்டுள்ளேன். அக்காரணங்களை விளக்குகின்றேன். தனி நபர் துதி என்பது தவிர்க்க முடியாத ஒன்று என்பதில் நான் முழு நம்பிக்கை கொண்டவன். எல்லா குடும்பத்துக்கும் கூட இது பொருந்தும். குடும்பங்களில், ஒரு வலுவான [மனத்தளவில் வலுவான, குடும்பத்தில் பாசம் கொள்வதில் வலுவான, குடும்ப அங்கத்தினரின் நல்வாழ்வில் வலுவான எனும் கோணத்தில் கொள்ளவும்] ஒருவரிருப்பார். அவர் தான் குடும்பத்தைக் கவனிக்க வேண்டும்; ஏனையவர்களின் சுமைகளையெல்லாம் தாங்க வேண்டும்; அனைவரையும் கரை சேர்க்க வேண்டும், என்பது எழுதா விதியாகி விடும். அவரும், அவருக்கே உரித்தான இரக்க சுபாவத்தால், இந்த விதியிலிருந்து விடுவித்துக் கொள்ள மாட்டார். என் குடும்பத்தில், நான் அந்த சுமை தாங்கி. எத்தனை சுமைகள் தாங்கியுள்ளேன் தெரியுமா....! லண்டனுக்கு வந்து படாத கஷ்டங்களும் அவமானங்களும் பட்டு முன்னேறினேன்; என் தாயாருக்கு பக்கபலமாய் நின்றேன்; எங்கோ ஸ்மிர்னா*

மாகாணத்தில் கிடந்த என் தாத்தா பாட்டிமார்களைக் கவனித்துக் கொண்டேன் ; சட்டத்தின் பிடியிலிருந்து, கடுமையாய் குற்றம் சாட்டப்பட்டிருந்த என் சகோதரனை அரும்பாடு பட்டு மீட்டேன்; என் கண்மணியாய் நினைத்து வளர்த்த தங்கையின் படுமோசமான திருமண வாழ்விலிருந்து அவளுக்கு விடுதலைப் பெற்றுத் தந்தேன்; இன்னும் பலப்பல, பலப்பல! எல்லாம் இன்பச் சுமைகளாய்த் தான் கருதினேன். கடவுள் எனக்கு மிகப் பிரமாதமாக நீண்ட ஆயுளைத் தந்தான் - இவ்விதமாய் என் உறவுகளை, என் குழந்தைகளை, அவர்களின் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள.....! என் உறவுகள் பல - நான் பெற்றெடுத்த குழந்தை உட்பட - இறப்பின் கோரப் பிடிக்குள் சென்று விட்டாலும், மிச்சமுள்ள அத்தனையும், நான் பூரித்துப் பூரித்துப் பார்த்து ரசிக்கும் வண்ணம், என் கூரைக்குள்ளேயே வந்து விட்டன! ஆனால் என் நம்பிக்கைப்படி, நான் இறந்ததும், என் சுமை அத்தனையும் இன்னொரு சுமை தாங்கியின் தோள்களில் தான் இறக்கி வைக்கப்பட வேண்டும். ஏனென்றால், எந்தக் குடும்ப மானாலும், சுமை ஏற்க என்று, ஒரு தனி நபர் வேண்டும், வேண்டும், வேண்டும்! என் சொத்து முழுவதையும், என் உறவுகளுக்குள் சமமாக பகிர்ந்துக் கொடுத்து விடலாமா என நான் எனக்குள்ளேயே விவாதம் செய்து பார்த்ததுண்டு. எந்த அளவுகோலை வைத்து சமமான பங்கீடு என்பதை நிர்ணயிப்பது என விளங்கவில்லை. ஆனால், இந்த விவாதத்தையும் மீறி, தனி நபர் ஒருவரை, எனக்குப் பிறகு குடும்பச் சுமைகள் அனைத்தையும் சலிக்காது சுமந்து வழி நடத்தும் உரிமையாளராக ஆக்குவதிலேயே, நான் நம்பிக்கைக் கொண்டேன். கூர்ந்து கவனித்து வந்ததில், என் இரு மகன்களும் இந்தப் புனிதப் பதவிக்கு ஏற்றவர்களாக தேர்வாகவில்லை. என் கண்ணான ரோஜர் நிர்வாகத் திறனற்று, எதற்கும் உணர்ச்சிவசப்படும் வகையில் உள்ளான். இவனால் என்ன இக்கட்டை எதிர் கொள்ளயிலும்! பிலிப்'புக்கு அவன் மீதும் குடும்பத்தின் மீதும் என்றுமே நம்பிக்கை இருந்தது கிடையாது. அவனுக்கு வாழ்க்கையின் நிகழ்வுகளிலிருந்து விலகியே இருந்து விட வேண்டும். ஆஸ்டஸ் சின்னவன். குடும்பம் என்றால் விளங்காத பாலகன். இவனும் ஜோஸஃபைனும் அன்பாய் யாரும் பேசினால் அப்படியே நம்பி அவர்கள் கைப்பாவைகளாகி விடும்

முதிர்ச்சியற்றவர்கள். நான் எதிர்பார்க்கும் அனுகூலமான தகுதிகள் செறிந்து மிளிர்வது - சோஃபியா மட்டுமே! அவளுக்கு சரியாய் வேலை செய்யும் மூளை உள்ளது; சமயோஜித மனோதிடம் உள்ளது; குடும்பத்தாரிடையே நடுநிலையான நோக்கு உள்ளது; நேர்மை உள்ளது; பரோபகார உதவி மனப்பான்மை இருக்கிறது; பிறர் வாழ வேண்டும் எனம் ஆத்மா உள்ளது. ஆகவே சோஃபியாவிடம், மனப்பூர்வமாக, குடும்பத்தின் நல்வாழ்வையும், எனக்காக தன் வாழ்வைத் துறந்து குடும்பத்தைக் காத்து வரும் மதிப்பிற்குரிய எடித் ஹெவிலேண்டின் நல்வாழ்வையும் ஒப்படைக்கிறேன்.

இக்கடிதத்தோடு இணைத்துள்ள ஆவணத்தில் சோஃபியா விடம் நான் குடும்பத்தையும் சொத்தினையும் எழுதி வைப்பதை விவரித்துள்ளேன். ஆனால் திருமிகு கைட்ஸ்கில், உங்களை வஞ்சித்து விட்டதாய் நீங்கள் நினைக்கவிருப்பதை, எப்படி இல்லை என விவரிப்பது என்று தான் எனக்கு விளங்கவில்லை. நான் சொத்தினை எப்படிப் பிரிக்கப் போகிறேன் என ஆளுக்காள் ஊகித்துக் கொள்ள ஒரு வழி இருந்து விடக் கூடாது என்பதில் நான் எச்சரிக்கையாயிருந்தேன். அதே சமயம், நானிருக்கும் வரை, சொத்து முழுவதும் சோஃபியாவுக்கு எழுதப்படவிருப்பதையும் ரகசியமாக்க நினைத்தேன். இவ்விரு காரணங்களால் தான் உங்களை வேறு விதமாய், அதாவது எல்லோருக்கும் சொத்து பகிர்ந்தளிக்கப்படுவது போன்ற விதமாய் உயில் தயார் செய்யச் சொன்னேன். மன்னிக்கவும்.

குடும்ப அங்கத்தினர்கள் அனைவரையும் அழைத்து, நான் உட்கார்ந்திருந்த மேஜையிலிருந்து பல அடி தூரம் தள்ளி நிற்கச் செய்து, நீங்கள் வடித்துத் தந்த உயிலை, அவர்கள் அனைவரும் கேட்கும் வண்ணம் சத்தமாய் படித்தேன். ஒரு நம்பிக்கையை அவர்களுக்குள் ஸ்திரப்படுத்த, அந்த உயிலை மேஜை மீது வைத்தேன். இரு வேலையாட்களையும் சாட்சி கையொப்பமிட அழைத்தேன். உயில் தட்டச்சு ஆகியிருந்த ஆவணத்தின் கீழே உள்ள இடத்தில்தான் இவர்களிருவரும் கையொப்பமிட வேண்டும். அவர்கள் கையொப்பமிட வரும்போது, உயிலின் மேற்பகுதி அவர்களுக்குத் தெரியாமலிருக்க என ஏதோ ஒரு தாளை வைத்து மறைக்கும் சாக்கில் ஒரு சிறு பரபரப்பை ஏற்படுத்தி, அவர்கள் கவனத்தைக் கலைத்து, மூடிய தாளைத்

*தூக்கி நான் காட்டிய உயிலின் கீழ் பகுதி, இதோ உங்கள் கைகளில் இப்பொழுது தவழும் என் கையெழுத்துப் பிரதி உயிலின் கீழ் பகுதியாகும். நீங்கள் தட்டச்சு செய்து தந்த - நான் எல்லோரும் கேட்கும்படி வாசித்த உயிலின் கீழ் பாகமல்ல. இதில் தான் நானும் கையொப்பமிட்டிருந்தேன். ஆனால் அவர்களும் சந்தேகத்துக்கிடமின்றி கையெழுத்திட்டு சென்றனர். ஆக, நீங்கள் தயாரித்த உயில் கையெழுத்தாகவில்லை. நான் கைப்பட எழுதிய உயில் கையெழுத்தானது.*

*எதனால் இந்த வலையைப் பின்னி நடத்திக் காட்டினேன் என சொல்லத் தெரியவில்லை. ஆனால் மறுபடியும் கேட்டுக் கொள்கிறேன், மன்னியுங்கள், உங்களை ஏமாற்றி இருட்டில் நிறுத்தியதற்கு. மிக வயதான ஒரு கிழவன், சில ரகசியங்களைக் காப்பாற்ற நினைத்ததன் விளைவு இது எனக் கருதி ஆறி விடுங்கள்.*

*இத்தனை வருட காலமாக முழு நம்பிக்கையுடனும் ஈடுபாட்டுடனும் என் அத்தனை சட்ட சிக்கல்களையும் முன் நின்று முடித்துக் கொடுத்தமைக்கு மிக்க நன்றி, திருமிகு கைட்ஸ்கில். இதனை சோஃபியாவிடம் தந்து விடவும். குடும்பத்தைக் கண்காணித்துக் கொண்டு, காத்துக் கொண்டு, அவளையும் நல்ல வாழ்க்கையை வாழச் சொல்லவும்.*

*எப்போதும் உங்கள் உண்மையான,*
*அரிஸ்டைட் லியோனைட்.*

இந்தப் பாராட்டும்படியான கடிதத்தை மிகுந்த ஈடுபாட்டோடு, மூவருக்கும் கேட்கும் வண்ணம் படித்து முடித்தேன். ''அசாதாரணம்...! அசாதாரணம்...!'' என்று, கைட்ஸ்கில்லைப் போலவே நானும் பிரமித்துப் போனேன்.

''பயங்கரமான அசாதாரணம்...! மனிதரா அவர்..!'' என சிவந்தார், கைட்ஸ்கில்.

''கைட்ஸ்கில்....! முதலில் ஆறுங்கள்....!'' என ஆறுதல் சொன்ன அப்பா, ''லியோனைட் அப்படித்தான். இல்லையென்றால் எழுபது வருடங்களுக்கும் மேலாக நிர்வாக வெற்றிக் காண இயலுமா...? லியோனைட் ஒரு கடினமான மனிதர். நடப்பவற்றை ஒருவருக்கும் தெரியாமல் நடத்தி முடிக்கும் கிங்கரர்! ஒன்றிரண்டு காரியங்களை அல்ல....! தான் செய்யும் எல்லா காரியங்களையும் யாரும்

எதிர்பாராமல் முடிப்பதில் மட்டுமே நம்பிக்கை மிகுந்தவர். அவர், வெற்றியின் ரகசியமாக கருதியது இந்த அணுகுமுறையைத் தான்....! ஒரு வகை குரூர அணுகுமுறை....!''

''அது சரி துணை கமிஷனர். அந்த அணுகுமுறையை யாரிடம் காட்ட வேண்டும் என்பதில்லை...?'' - என்றார் டேவரெனர். தான் தொழில் ரீதியாக முட்டாளாக்கப்பட்டுள்ளதை தாளாமல் துடித்த கைட்ஸ்கில்'லின் நிலைமையைக் காண சகியாது இவ்வாறு பேசினார் முதன்மை இன்ஸ்பெக்டர். ''எத்தனை வழக்குகளை நெம்பி எடுத்திருப்பார் கைட்ஸ்கில்....! எனினும் துவண்டு விட்டார் எனில் அவர் படும் வேதனை சொல்லி மாளாதது. கைட்ஸ்கில் அண்ட் கம்பெனி மதிப்பிற்குரிய ஒரு நிறுவனம். சட்ட விரோதமான எந்த ஒரு வழக்கினையும் எடுத்துக் கொள்ளாத மரியாதைக்குரிய நிறுவனம். அதனை லியோனைட் ஏமாற்றியிருக்கிறார் !'' என்ற டேவரெனர், ''கைட்ஸ்கில்....! உங்களைப் போன்ற நேர்மையான ஆறேழு வக்கீல் நிறுவனங்களோடு ஆலோசனைப் பெற்று வாழ்ந்திருக்கிறார் லியோனைட்....! அது தெரியுமா! ஆக, அவர் யாரையும் நம்பவில்லை ! நம்பியதில்லை! தன்னை மட்டுமே நம்பி வந்துள்ளார்....! ஓ....! எத்தனை குரூர எண்ணம் கொண்டு, ஆனால் சிரித்தபடி, ஒருவர் விடாமல் அனைவரையும் முழுதுமாய் கவர்ந்து, நிம்மதியாய் வளைய வந்திருக்கிறார்.....!''

தலையை, இரு கைகளாலும் கெட்டியாகப் பிடித்தபடி தரையையே பார்த்து அமர்ந்திருந்தார் கைட்ஸ்கில். அப்பா, வழக்கில் ஓர் எதிர்பாரா திருப்பம் வந்துள்ளது எனும் அளவில் மட்டுமே, எதையும் நெஞ்சு வரை வாங்காது அமர்ந்திருந்தார். டேவரெனர், ''நாம் முட்டாள்....!'' என மறுபடியும் பேச ஆரம்பித்தார்: ''யார் நிஜ உயிலைக் கொள்ளை அடித்திருப்பது...? யார் உயிலோடு விளையாடியிருப்பது? - என்று, நாம், லியோனைட் தவிர உலகிலுள்ள அனைவரையும் சந்தேகப்பட்டு விசாரித்துக் குழம்பிக் கொண்டிருக்க, கடைசியில் உயில் குழப்பத்திற்கான காரணகர்த்தாவே, அந்தக் கறுப்புக் குள்ளக் கிழம் தான் எனும்போது, துப்பறியும் சரித்திரத்திலேயே யாராவது நம்மைப் போல முட்டாளாகியிருப்பார்களா என்பது சந்தேகமே....''

ஜோஸஃபைன், அதிமேதாவியாய் சிரித்து, 'முட்டாள் போலீஸ். கையாலாகாத கூட்டம்' என்று அறிவித்தது நினைவில் வந்தது. உயிலின் கதையை அறிந்து வைத்துதான் சொல்லியிருப்பாளோ....?

ஆனால் அன்று உயில் கையெழுத்தான அறையில் ஜோஸஃபைன் இல்லையே! ஒரு வேளை அவள் அருகில் ஏதேனும் கதவிடுக்கில் நின்று ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்ததாக வைத்துக் கொண்டாலும், தன் தாத்தா, இப்படி ஒரு திட்டத்தை நிறைவேற்ற உள்ளார் என அவள் அறிந்திருக்க சாத்தியமில்லை. பின் எதை ஆதாரமாய் வைத்து அவள் போலீஸை முட்டாள் என வகைப்படுத்தினாள்? எதையுமே ஆதாரபூர்வமாய் அச்சிறுமி விளக்குவதால் எனக்கென்னவோ இந்த முழுக்கதையும், அதாவது போலீஸை முட்டாள் என அடையாளம் காட்டும் உயில் கதை முழுவதையும் அவள் அறிந்திருப்பாள் என்றே தோன்றியது. இந்த எண்ணத்தால் அவள் மீது ஒரு பயம் கலந்த மரியாதையும் அவள் உயிர் மீது ஒரு பயம் கலந்த திகிலும் கூடின.

எல்லோரும் பேசாமலிருப்பதால் நிலவிய அமைதியால் அறையப்பட்ட நான் நிமிர்ந்து கூர்மையாய் அதிகாரிகளைப் பார்த்தேன். அப்பாவும் டேவரெனரும் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். அப்படி அவர்கள் பார்த்ததன் குணாதிசயம் எனக்கு விளங்காத நிலையிலும், என்னை அறியாமலேயே ஏதோ தற்காத்துக் கொள்ளும் தொனியில், ''இந்த சொத்து விவரம் குறித்து சோஃபியாவுக்கு எந்த விவரமும் தெரியாது'' என உளறினேன்.

மகனென்றும் கருதாமல், ''நாங்கள் நீ இப்படி பதில் கூறும்படி ஏதாவது கேள்வி எழுப்பினோமா...?'' என கேட்டார் அப்பா, என்னைப் பார்த்துக் கொண்டிருந்த சந்தேகப் பார்வையின் வீரியம் இன்னும் கூர்மையாக! இதனை எதேச்சையாய் கேட்டாரா இல்லை என்னை விசாரிக்க எழுப்பப்பட்ட முதல் கேள்வியாய் வைக்கிறாரா என எனக்கு ஒரு படபடப்பு எழுந்தது.

நான் தன்னிச்சையாக சொன்னேன்: ''அவள் வானுயர ஆச்சரியப்படுவாள்.....!''

''ஓஹோ....?'' என்று துணை கமிஷனரும், ''அப்படியா...?'' என முதன்மை இன்ஸ்பெக்டரும், ''உண்மையாக...?'' என வக்கீலும், நான் சொன்னதற்கு பரிகாச கேள்விகளை வீசி மும்முனைத் தாக்குதல் நடத்தினர்.

''ஆமாம். இதில் சோஃபியாவை சந்தேகப்படுவதோ, இல்லை, அவள் காதலனாயிருப்பதால் என்னை மையப்படுத்துவதோ, தேவையற்றவை. எல்லாம் லியோனைடின் தீர்ப்பு....!'' என்று நான் மூன்று அதிகாரிகளின் ஐயங்களுக்கும் முற்றுப்புள்ளி வைத்து

அவர்கள் ஏற்றுக் கொள்ளும்படி முடித்ததும், அப்பாவின் மேஜையிலிருந்த தொலைபேசி அலறிற்று.

''யாரது...?'' என்ற அப்பாவுக்கு மறுமுனையில் ஏதோ பதில் வர, ''ம்... இணைப்புக் கொடுங்கள்..'' என்றார் உத்தரவாய். இணைப்புக் கிடைக்கு முன், என்னைப் பார்த்தார். ''உன் காதலி....'' என்றார். ''நம்முடன் பேச வேண்டுமாம். அவசரம் என்றிருக்கிறாள்.''

தாமதியாது அவரிடமிருந்து ரீஸீவரைப் பிடுங்கினேன். காதில் பொருத்திக் கேட்டேன்: ''சோஃபியா....?''

''சார்ல்ஸ்...? சார்ல்ஸ்...? நீ தானே...? இப்போ...து... இப்போ...து... ... ... ஜோ...ஜோ... ஜோஸஃபைன்....!'' அவள் குரல் மறுமுனையில் உடைந்து அழுதது.

''ஜோஸஃபைனுக்கு என்ன இப்பொழுது....?'' - நான் பரபரத்து துடிதுடித்தேன். அதிகாரிகள் மூவரும் என் முக பாவத்தில் விஷயத்தைப் படிக்கத் துரிதமானார்கள்.

''ஜோஸஃபைன் தலையில் அடிக்கப்பட்டிருக்கிறாள். மூளை வரை பெருத்த பாதிப்பு ஏற்பட்டுள்ளது என்கிறார்கள். அவள்... அவள்... என் அருமை தங்கை... மிக மோசமான நிலையிலிருக்கிறாள் சார்ல்ஸ்...'' - உடைந்து போனாள். ''அவள் உயிர் பிழைப்பது....'' என நிறுத்தி விட்டு 'அரிது' என முடிக்க வராமல் விம்மினாள் சோஃபியா.

நான் அதிகாரிகளைப் பார்த்து, ''ஜோஸஃபைன் அழிக்கப்பட்டு விட்டாள்'' என அதிர்ச்சியும் நிராதரவுமாகி வேகமாய் சொன்னேன்.

என் கையிலிருந்த ரிஸீவரை எந்த வேகத்தில் இழுத்தாரோ, அதே ஆக்ரோஷத்தில் என்னைக் கேட்டார் அப்பா : ''அந்தக் குழந்தை மீது ஒரு கண்ணை எப்போதும் பதித்திரு என்றேனா இல்லையா....?!''

# 18

மறுநொடியில் நானும் டேவரெனரும் ஸ்வின்லீடினைக் குறி வைத்து போலீஸ் துரிதவேக வண்டியில் விரைந்துக் கொண்டிருந் தோம்.

வீட்டின் உச்சியிலிருந்த தண்ணீர் தொட்டிக் கும்பலிலிருந்து ஜோஸஃபைன் வெளிப்பட்டு என்னைச் சந்தித்த கடைசி சந்திப்பு நினைவிலாடிற்று. அப்போது, அடுத்த கொலைக்கான நேரம் நெருங்கி விட்டது சார்ல்ஸ் என்று எதையோ ஆதாரமாய் வைத்துத் தான் சொல்லிருக்கிறாள். பாவி....! அவளே அந்த இரையாயிருப்பாள் என அறிந்திடாமலிருந்து விட்டாளே....!

நேரடியாய் சொல்லாமல், ஜோஸஃபைனைப் பாதுகாக்கும் பணியில் நான் தவறி விட்டதாய் அப்பா சூட்டிய மறைமுகக் குற்றச்சாட்டை நான் இப்போது முழுவதுமாக ஏற்றுக் கொண்டேன். நான் வெளியேறிய போது அச்சிறுமிக்கு தக்க பாதுகாப்பு அளித்து விட்டுத் தான் வந்திருக்க வேண்டும். விட்டு விட்டேன். எனக்கும் டேவரெனருக்கும் - அந்த அழகற்ற சிறுமியின் வர்ணனையில் சொல்ல வேண்டுமென்றால் இந்த முட்டாள் போலீஸ் கூட்டத்துக்கு - யார் லியோனைடுக்கு விஷம் செலுத்தியிருக்க முடியும் எனும் துப்பு, இத்தனை நாட்கள் அல்லாடியும் துளிக் கூட கிடைக்காமலிருக்கலாம். ஆனால் ஜோஸஃபைன் அறிந்து வைத்திருக்கும் வாய்ப்பு அதிகம் என்று தோன்றியது. துப்பறியும் கதைகளின் தாக்கமென்றும், குழந்தைகளுக்கே உரிய மேதாவித்தனமென்றும் நான் நினைத்து ஒதுக்கிய ஜோஸஃபைனின் உளவுத் தகவல்கள், அப்படிப்பட்டவை அல்ல. அவளுக்கே உரிய இடைவிடாத துப்பறியும் அபிலாஷை களால், இவ்வழக்கு குறித்த ஏதோ விலைமதிப்பற்ற துப்பினை அவள் அறிந்துத் தானிருக்க வேண்டும்.

அவளுடன் தோட்டத்தில் தனியாயிருக்கும் போது, அதன் அமைதியைக் குலைத்து உடைந்த கள்ளியின் ஓசை, என்னை

இப்போது கதிகலக்கியது. யார் காலடி ஏற்படுத்திய ஓசை அது? அந்தக் கணத்தில் ஏதோ ஓர் ஆபத்து கழுத்தைப் நெறிக்குமளவு வந்து விட்டதாய் உணர்ந்தேனே....! பிறகு அதனை வெறும் சந்தேக மென்றும் உண்மையற்ற கருத்து என்றும் ஒதுக்கியது எத்தனை பெரும் தவறு....! கொலையாளி விழித்து விட்டான் - சிறுமிக்கு உன்னத ரகசியங்கள் சில தெரிந்திருப்பதால், அக் கொலையாளி கழுத்துக்கு கத்தி வந்து விட்டதை உணர்ந்து விழித்து விட்டான் - ஜோஸஃபைனைக் கொன்று விட்டால் உண்மையையெல்லாம் புதைத்து விடலாம் எனும் தன் பாதுகாப்புத் கருதி அவளை அவன் தீர்த்துக் கட்டி விடலாம் - ஒரு கொலை செய்தவனுக்கு பிறகு எல்லா கொலைகளும் கலையே - என ஏன் நான் எண்ணாமல் ஒதுக்கி னேன்....?!

தாய்க்கே உரிய வாசனையின் பலத்தால், மகதா, தன் பெண் ஜோஸஃபைன், அபாய வளையத்துக்குள் அகப்பட உள்ளதை, அமானுஷ்யமாய் உணர்ந்திருக்கலாம். விளக்க முடியாத அந்த உள்ளதிர்வு தான், அவசரகதியில் ஜோஸஃபைனை ஸ்விட்சர் லாண்டுக்கு மூட்டை கட்ட தூண்டியுள்ளது.

ஆனால், எல்லாமும் காலந்தாழ்ந்து போய் விட்டன.

நாங்கள் வீட்டையடைந்ததும், சோஃபியா தான் ஓடோடி வந்தாள். ஜோஸஃபைன், ஆம்புலன்ஸ் மூலம் பொது மருத்துவமனைக்கு அனுப்பப்பட்டுள்ளதாய் சொன்னாள். எக்ஸ்-ரே முடிவுகள் தெரிந்ததும் தான், கால அவகாசம் பற்றியும், சிகிச்சை பற்றியும் சொல்ல முடியும் என மருத்துவர்கள் விளக்கியதாயும் சொன்னாள்.

''எப்படி நடந்தது...? எங்கு நடந்தது....?'' - கேட்டார் டேவரெனர்.

வீட்டின் பின்புறத்தில் சற்றே ஒதுக்குப்புறமாய் அதிகம் உபயோகப்படுத்தப்படாமலிருந்த ஒரு புறக்கடை அறைக்கு எங்களை அழைத்துச் சென்றாள் சோஃபியா. அவ்வறையின் சிறிய கதவு ஒருக்களித்த நிலையில் திறந்திருந்தது.

''அதிகம் உபயோகப்படாத பொருட்களைப் போட்டு வைக்க உதவும் அறை இது...'' என விளக்க ஆரம்பித்தாள் சோஃபியா. அறையின் வாசலில் நின்றோம். ''இதோ, இந்தக் கதவின் அடியில் ஓர் அரை வட்ட துவாரம் தெரிகிறது பாருங்கள். தவறி பூனை ஏதாவது அறைக்குள் சென்று விட்டால் வெளியேற என்று அமைக்கப்பட்ட

துளை இது. இதில் கால் பதித்து, கதவினை முன்னும் பின்னும் ஆடி ஊஞ்சலாடுவது ஜோஸஃபைனின் மிகப்பிடித்த விளையாட்டு.''

என் சிறு பிராயத்தில் தாத்தாவின் பழைய வீட்டில் இதே போன்ற கதவில் நானாடி விளையாடியது நினைவுக்கு வந்தது.

அறை மிகச் சிறியதாய், தூசுகள் அதிகம் தட்டப்படாது, வெளிச்சமற்று இருந்தது. சில மரப் பெட்டிகள், பழைய தண்ணீர்க் குழாய்கள், தோட்ட வேலைக்கு உதவும் உபகரணங்கள், உடைந்த நாற்காலிகள் எல்லாமிருந்தன. க்தவருகே நல்ல கனமான - கண்ணாடி பளிங்கினாலான செவ்வகக் கல் ஒன்று விழுந்துக் கிடந்தது. ''வாசலில், வீட்டின் நிலைக் கதவு மூடிக் கொள்ளமலிருக்க பொருத்தப்பட்டிருந்த கல் இது'' என்றாள் சோஃபியா. கதவு திறந்திருக்கும் போது, அது காற்றில் அடித்துக் கொள்ளவோ மூடிக் கொள்ளவோ கூடாது என்பதற்காக உபயோகப்படுத்தப்படும் நாகரீகக் கல்.

உடனே நிமிர்ந்து கதவின் உச்சியைப் பார்த்தார் டேவரெனர். கைகளை உயர்த்தி அளந்தார். உயரம் குறைந்த கதவு தான். அவர் கை, கதவின் உச்சியைத் தாண்டி ஓரடி போல் நீண்டது. ஆனால் பருத்த கதவு. உடனே ஏதோ அறிந்து விட்டவராய், ''பார்த்தால் சந்தேகம் வராத பொருளில் அமைக்கப்பட்ட கண்ணி'' என தீர்மானமாய் அறிவித்தார்.

ஒரு முறை பரீட்சார்த்தமாக கதவினை முன்னும் பின்னும் ஆட்டிப் பார்த்துக் கொண்ட டேவரெனர், கீழே கிடந்தக் கல்லினைப் பார்த்து, ''யாரேனும் இதனை கையாண்டார்களா....?'' என்றார் கூர்மையாய்.

''இல்லை'' என முன்வந்த சோஃபியா, ''நான் யாரையும் தொட அனுமதிக்கவில்லை'' என்றாள்.

''மிகச் சரி. யார் குழந்தையை முதலில் பார்த்தது....?''

''நான் தான்...'' என்று உணர்ச்சிவயப்பட்ட சோஃபியா, ''மதிய உணவு சாப்பிட அவள் உள்ளே வரவில்லை. எப்போதும் டாண்' என்று ஒரு மணிக்கு வந்து அமர்ந்து விடும் அவள் வராததால், நானியைக் கேட்டேன். ஒரு பதினைந்து நிமிடங்களுக்கு முன்னால் கொல்லைப்புறம் நோக்கிச் சென்றதாய் சொன்னாள். ஓடைப் பாலத்திலோ அல்லது கதவில் ஊஞ்சலோ ஆடிக் கொண்டிருப்பாள் என்றாள் நானி. அவளை அழைத்து வருகிறேன் என்று நான் கிளம்பினேன்'' என கலவரமாய் பேசினாள்.

''கதவிலுள்ள பூனைத் துவாரத்தில் கால் ஊன்றி அவள் ஊஞ்சலாடி மகிழ்வாள் என்று குறிப்பிட்டீர்கள் இல்லையா...? எத்தனை பேருக்கு இது தெரியும்....?''

''அவளுடைய பல நாள் பழக்கமிது. எல்லோருக்கும் தெரிந்திருக்க வேண்டும்.''

''யாரெல்லாம் இந்த அறையை அதிகம் உபயோகப்படுத்து வார்கள்....? தோட்டக்காரர்கள்....?''

மறுத்துத் தலையசைத்தாள் சோஃபியா. ''உடைந்து உபயோக மற்றப் பொருட்கள் தான் இங்கு அதிகம். ஆகையால் யாரும் அதிகம் வந்து போவதே கிடையாது.''

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட டேவரெனர், ''ஆக இந்த அறை அனைவராலும் கவனிப்பாரற்று ஒதுக்கப்பட்டே இருக் கின்றது'' என முடித்துக் கொண்டு தொடர்ந்தார்: ''வீட்டிலிருந்து யாராவது... அல்லது வெளியிலிருந்தே கூட யாராவது... அரவமற்று நழுவி வந்து, இந்த பளிங்குக் கல் பொறியை அமைத்திருக்கலாம்'' ஓரிரு நொடிகள் இடைவெளி தந்து, ''ஆனால் இது நிச்சயமற்ற பொறி....'' என அவர் தனக்குத் தானே சொல்லிக் கொண்டே குறிப்பினை சற்று விளக்குமாறு, நானும் சோஃபியாவும் ஒரு சேர ஆதங்கமாய் கேட்டோம்.

''*வாய்ப்பின் அடிப்படையினாலான* பொறி என்றேன்'' என்று விட்டு, கதவினை உள்ளும் வெளியுமாக மீண்டும் ஊஞ்சலாட்டிக் காட்டி விளக்க ஆரம்பித்தார்: ''கல் தலையில் விழுந்து தலையை உடைக்கும் எனும் கொலையாளியின் இலக்குக்கு நூறு சத வாய்ப்பு கிடையாது. கல், மிக கனமானது. நாற்புறமும் கூராயும் உள்ளது. ஜோஸஃபைனோ குழந்தை. சிறு உயரத்திலிருந்து அவள் மீது விழுந்தால் கூட போதும்,தலையைத் துளைத்து துர்பாக்கிய நிலையை ஏற்படுத்தி விடலாம். அல்லது குறி தவறி தரையிலும் விழுந்து விடலாம். இப்படியும் அப்படியும் கதவிலாடும்போது, கதவின் மேலே வைக்கப்பட்ட இக்கல், சரியாய் தலையில் தான் விழுந்து ஆபத்தை ஏற்படுத்த வேண்டும் என எதிர்பார்ப்பது அறிவீனம். தவறிப் போகும் வாய்ப்பு தான் அதிகம். ஆனால் முட்டாள் கொலையாளி எதிர்பார்த்திருக்கிறான். ஜோஸஃபைன் அதிர்ஷ்டக் கட்டை. அவளிடம் பலித்து விட்டது.''

சோஃபியா நடுங்கிப் போனாள்.

டேவரெனர், கதவை ஒட்டிய தரைப் பகுதிகளைத் துளைப்பது போல் பார்த்தார். மண்ணும் சிமெண்டும் கலந்து ஸ்திரமற்றிருந்த தரையில், குத்தி குத்தி எடுத்தது போன்ற வடுக்கள் தெரிந்தன. ''கதவின் மேலே கல் கண்ணியை அமைக்கும் போது பரீட்சித்துப் பார்த்திக்கிறான். கல்லைக் கதவின் மீது வைத்து - ஊஞ்சலாடிப் பார்த்து - எப்படி அது விழுகிறது என சில முறை ஆராய்ந்து - விழும் போது ஓசையெழுப்பாமலிருக்கிறதா என பரிசோதித்துப் பார்த்திருக்கிறான். அப்போது விழுந்த கல் ஏற்படுத்திய வடுக்கள் இவை....!'' என தரையை சுட்டிக் காட்டினார்.

''இல்லை இன்ஸ்பெக்டர். எந்தவொரு ஓசையும் கேட்கவில்லை. இங்கு வந்து தங்கை தலைக்குப்புற ரத்த வெள்ளத்தில் கிடப்பதைப் பார்த்த பிறகு தான் விஷயம் விஷமாய் பாய்ந்தது'' - அக்காளின் கண்களில் கண்ணீர் எட்டிப் பார்த்தது.

கொஞ்சம் தள்ளி கீழே கிடந்த துணியொன்றைக் காட்டி, ''இது அவள் கழுத்துக் குட்டையா...?'' என்றார் முதன்மை இன்ஸ்பெக்டர்.

''ஆமாம். வெளியே பனி அவலாய் கொட்டுவதால், இன்று காலை தான் நான், அவள் தலை காது கழுத்து எல்லாவற்றையும் மூடும் வண்ணம் இந்த மஃப்ளரைக் கட்டி விட்டேன்''

அதே கழுத்துக் குட்டையை உபயோகப்படுத்தி, கொலைக் களனான அந்த பளிங்குக் கல்லினை பத்திரமாய் எடுத்த டேவரெனர், ''கை ரேகைகள் இருக்கலாம்'' என நம்பிக்கையின்றி சொன்னார். ''இருந்தாலும் ஒன்று நிச்சயம். யார் இதை நிகழ்த்தியிருந்தாலும், வெகு ஜாக்கிரதையாய் முடித்துள்ளனர்'' என்றவர், ''என்ன சார்ல்ஸ்....! வெகு கூர்மையாய் எதைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்...?'' என்று ஆர்வமானார்.

கதவருகே, உடைந்துப் போய் வீசப்பட்டுக் கிடந்த ஒரு மர நாற்காலி என் கவனத்தை ஈர்த்திருந்தது. உபயோகமற்றுக் கிடந்த அந்த நாற்காலியின் இருக்கையில், சில ஈர மண் அடிகள் காணப்பட்டன.

என் பார்வையைத் தொடர்ந்து வந்து இதை கவனித்த டேவரெனர், ''ஓ....!'' என வியந்தார். அறைக்கு வெளியே பனிப் பொழிவால், நிலம், கசகசவென இருந்தது. ''யாரோ களி மண் காலோடு இந்த நாற்காலியில் ஏறியிருக்கிறார்கள். மண்ணின் ஈரம் காயாதிருப்பதால், இப்போது தான் நிகழ்ந்துள்ளது'' என்றபடி, பாத அளவினைக் காண

முடிகிறதா என, இருக்கையருகே குனிந்து, கூர்ந்து பார்த்தார். இயலவில்லை. இருக்கை முழுதும் மண்.

''அவளை அடிபட்டக் கோலத்தில் நீங்கள் பார்த்தபோது மணி என்னயிருக்கும் சோஃபியா...?''

''ஒன்றடித்து ஐந்து நிமிடமாகியிருக்கலாம். அவ்வளவே.''

''அவள் கொல்லைப்புறம் செல்வதை, அதற்கு இருபது நிமிடங்கள் முன்பு தான் நானி பார்த்திருக்கிறார். எனக்கொரு முக்கிய விஷயம் தெரிந்தால் நலம்...'' என்று தொண்டையைச் செருமிக் கொண்டு, கொஞ்சம் ஒலி தாழ்த்திக் கேட்டார்: ''உங்களுக்குத் தெரிந்து கடைசியாய் இந்தப் புறக்கடை அறைக்கு வந்து போனது யார்...?''

''எனக்குத் தெரியவில்லை'' என்ற சோஃபியா, உடனே நினைவு வந்தவளாய், ''இன்று காலை சிற்றுண்டி முடிந்ததும் கூட இந்தக் கதவில் ஏதோ பாடலொன்றைப் பாடியபடி அவள் ஊஞ்சலாடிக் கொண்டிருந்தாள். எனவே ஜோஸஃபைனே கூட வந்து போயிருப் பாள் எனத் தான் தோன்றுகிறது'' என்றாள்.

''ஆக, அவள் காலையிலாடி முடித்து சென்றதிலிருந்து, மதியம் ஒன்றே காலுக்குள் தான் யாரோ வந்து கல் கண்ணியை அமைத்திருக் கிறார்கள். வாசல் கதவுக்கு உபயோகப்படுத்தப்பட்ட கல் இது என்றீர்கள். அது எப்போதிலிருந்து காணவில்லை என தெரியுமா....?''

தெரியாது என தலையசைத்தாள் சோஃபியா. ''சில நாட்களாக கதவைத் திறந்து வைப்பதேயில்லை. நுழைந்ததும் மூடி விடுகிறோம். மோசமான பனிப் பொழிவு தரும் குளிர் காரணமாக.''

''எல்லோரும் காலையிலிருந்து எங்கிருந்தார்கள் என ஏதாவது தெரியுமா?''

''நான் சற்று காலந்தாழ்த்தி எழுந்து ஒரு சிறு நடை சென்றிருந்தேன். ஆஸ்டிஸும் ஜோஸஃபைனும் பனிரெண்டரை வரை வகுப்பிலிருந்தார்கள். இடையே பத்தரை மணிக்கு ஒரு சிறு இடைவெளி உண்டு. அப்பா காலை முழுதும் நூலகத்தில் தானிருந் திருக்க வேண்டும்'' என முடித்து விட்டது போல நிறுத்திய சோஃபி யாவை, ''உங்கள் அம்மா...?'' என்று கூராய் கேட்டார் டேவரெனர்.

''பனிரெண்டே காலிருக்கும். வெளியே போயிருந்த நான் திரும்பும் போது தான் அம்மா தூக்கத்திலிருந்து எழுந்திருந்தார். முற்பகலில் எழுந்து கூட அவருக்கு வழக்கம் கிடையாது.''

புறக்கடை அறையைக் கண்களுக்குள் பதித்துக் கொண்டு, மீண்டும் வீட்டுக்குள் நுழைந்தோம்.

நேராய் நூலகமடைந்தோம். பிலிப் முகம் வெளிறிப் போய் சோர்வாயிருந்தது. தரையிலமர்ந்திருந்த மகதா, இரு கால் முட்டி களுக்குள் முகம் புதைத்துக் குலுங்கிக் கொண்டிருந்தார். சோஃபியா கேட்டாள்: ''மருத்துவமனையிலிருந்து ஏதாவது தகவல் வந்ததா?''

பிலிப் இல்லையென தலையசைக்க, மகதா அழுகையில் வெடித்தாள்: ''என்னை ஏன் அவளோடு மருத்துவமனைக்கு அனுப்ப மறுத்தீர்கள்? இப்படி அழகற்று வினோதமாய் நடந்துக் கொள்ளும் விதத்தால், எனக்குப் பிறக்காமல் ரகசியமாய் மாற்றி வைக்கப்பட்ட குழந்தை என எத்தனை முறை அவளைக் காயப்படுத்தியிருக் கிறேன்....! ஏனப்படி கொடூரமாய், அதுவும் நான் சுமந்த குழந்தையிடம் குரூரமாய் நடந்துக் கொண்டேன்....! இதோ, இறந்து விடப் போகிறாள்...! எனக்குத் தெரிந்து விட்டது....! போங்கள்...! நான் சொன்னேன் என்று அவளிடம் போய் சொல்லுங்கள்....! இப்போது சொல்கிறேன்...! அவள் என் குழந்தை தான்...! நான் சொன்னேன் என்று அவளிடம் போய் சொல்லுங்கள்...! இப்போது சொல்கிறேன்....! அவள் என் குழந்தை தான்...! மாற்றி வைக்கப் பட்டவளல்ல...! ஜோ கண்ணே....! நீ என் கண்மணியடா....!'' - மகதாவின் தாய்மைப் பரிதவிப்பு கண்கொண்டு பார்க்கும்படி இல்லை.

''ப்ளீஸ் மகதா....! கட்டுப்படுத்திக் கொள்...!'' - என்ற பிலிப் மீண்டும் இறுகிப் போனார்.

பாசப் பரிதவிப்பால் குமுறும் பெற்றோர் முன் நானிருப்பது சரியல்ல என்று விளங்கியது. அவர்களாய் கதறி ஓய்வது தான் ஒரே ஆறுதல். மெதுவாய் நகர்ந்து அடுக்களையிலிருந்த நானியிடம் வந்தேன். ஜோஸஃபைனின் நிலைமை என்னைக் கொஞ்சம் ஆட்டித்தான் விட்டுள்ளது. நானியின் பக்குவம் எனக்கு ஆறுதலாய் அமையலாம் என பட்டது.

''எத்தனை முறை அந்தக் குழந்தையிடம் சொல்லியிருக்கிறேன். அதுவும், பெரியவர் கொலையுண்ட பிறகாவது, இந்த துப்புத் துலக்கி நோட்டுப் புத்தகத்தில் கிறுக்கும் வேலையைக் கொஞ்சம் நிறுத்தி வை என கெஞ்சியிருக்கிறேன். கொலையாளி இங்கேயே இருக்கிறான் திரு சார்ல்ஸ். இதோ, வெட்டி வீழ்த்தி விட்டான்'' - நடுங்கினார் நானி.

''இது ஒரு குரூர வீடாகி விட்டது சார்ல்ஸ். தர்மம் தவறிய துன்மார்க்கன் இங்கு இருக்கிறான் சார்ல்ஸ், இருக்கிறான்....'' - துடித்தார் நானி. ''என்ன போலீஸ் நீங்கள். இன்னும் எத்தனை உயிர் போக வேண்டும் என எதிர் பார்க்கிறீர்கள்...? நான் முதலில் நம்பவில்லை. ஆனால், இதோ, இப்போது, கண்ணெதிரே நிகழ்கிறது. பெரியவரைக் கொன்ற அதே சண்டாளன் தான் - குரூரன் தான் - அந்தக் கொலை ரகசியம் அறிந்து விட்ட ஒரே காரணத்திற்காக ஜோஸஃபைனைப் பழி தீர்க்க முயன்றுள்ளான்....'' - கை குட்டையால் மூக்கைச் சிந்தி தொடர்ந்தார்: ''கண்மணி ஜோ'வுக்கு எல்லாம் தெரிந்தாக வேண்டும். சிறு விஷயமானாலும் விளங்கி விட வேண்டும். அவள் அப்படிப்பட்டவள் தான் என்பது நீங்கள் நன்கு அறிந்ததே'' என்ற கூற்றுக்கு, தாராளமாய் தலையசைத்து ஒப்புக் கொண்டேன்.

தொடர்ந்தார்: ''சாப்பாட்டு மேஜையின் அடியில் ஒளிந்துக் கொண்டு வேலையாட்கள் பேசுவதைக் கேட்பாள். மறுநாள் இப்படி பேசினீர்கள் இல்லையா என திகைப்படையச் செய்வாள். அவளுக்கு எல்லோரும் முக்கியத்துவம் தர வேண்டும் என்பது ஆசை....! தன் தாயாராலேயே பாவம் பழிக்கப்பட்டவள். மகதாவின் மற்ற இரு குழந்தைகளைப் போல அழகும் நேர்த்தியும் ஜோஸஃபைனுக்குக் கொஞ்சமும் இல்லை. அதனால் வீட்டு நாற்காலி போல நடத்தப் பட்டாள். நீ எனக்கு பிறந்தவளில்லை என்றே சொல்வாள், அந்த மகதா. மகதா செய்த மாபெரும் தப்பு இது. இதனால் ஜோ, மிக வாடுவாள். அவளுக்கும் ஒரு முதுகெலும்பு தேவைப்பட்டது. பிறர் பேசுவதை ஒட்டுக் கேட்டு ஒட்டுக் கேட்டு, தனக்கு எல்லாம் தெரியும்... தான் ஆபத்தானவள் எனும் கருத்தினை உண்டுபண்ணி, பாவம், அதையே அவள் தன் முதுகெலும்பாக்கிக் கொண்டாள். குழந்தை என எல்லோரும் காலப்போக்கில் பழகி விட்டாலும், ஒரு குரூரக் கொலைகாரன் உலவும் வீட்டில், இக்குணம், எத்தனை ஆபத்தானது.....!''

ஆமாம் என என் மனம் உணர்ந்த கணமே, நானி மேற்சொன்ன கடைசி வாக்கியம் என்னுள் ஒரு மின்னலை வெட்டிற்று. ''நானி....! துப்புத் துலக்கி ஜோஸஃபைன் குறித்து வைக்கும் அந்தக் கறுப்பு நோட்டு புத்தகத்தை அவள் எங்கே வைப்பாள் என தெரியுமா....?''

''எதைக் கேட்கிறீர்கள் என புரிகிறது, திரு சார்ல்ஸ். அதில் அவளுக்கு அப்படி ஒரு பைத்தியம். பென்சிலை வாயில் தேய்த்து

அந்த நோட்டுப் புத்தகத்தில் அவள் குறிப்பெழுதுவதை நான் பல முறை பார்த்திருக்கிறேன். 'பென்சில், லெட் - அதாவது தாமிரத்தால் ஆனது. வாயில் தேய்க்காதே. விஷம். அதனால் தான் லெட் பென்சில் என பெயர் வந்தது' என்பேன். "தப்பு நானி. பென்சிலில் இருப்பது தாமிரமல்ல. கார்பன். கரி. நீ காலையில் பல் துலக்குகிறாயே....! அது....! கரி விஷமா?' என்பாள். பார்த்தீர்களா. இந்த விஷயத்தைக் கூட எப்படி நுணுக்கமாய் அறிந்து வைத்துள்ளாள் என்று....! நான் தாமிரம் என்றே நினைத்திருந்தேன்...''

''நீங்கள் நினைக்கலாம். ஆனால் உண்மையில் ஜோஸஃபைன் தான் சரி'' என்றேன். அவள் என்று தான் தவறாயிருந்திருக்கிறாள்...?! ''அந்த நோட்டு புத்தகம் பற்றி...? எங்கு வைத்திருப்பாள் என தெரியுமா...?''

''தெரியாது சார்ல்ஸ். அவள், மிகவும் மறைத்து மறைத்துப் பாதுகாத்த புத்தகமது. எனக்குத் தெரிந்து அது எப்போதும் அவள் கைகளிலேயே தானிருக்கும்.''

''அவளைத் தோட்டத்தில் மூர்ச்சையாகிப் பார்த்த போது கையில் இருந்ததா....?''

''ஓ...! இல்லை திரு சார்ல்ஸ்...!'' - இருவரும் துரிதமானோம். ''அப்போது அவளிடம் அந்த நோட்டு இல்லை.''

அவள் வீழ்ந்ததும் அந்த நோட்டுப் புத்தகம் களவாடப்பட்டு விட்டதா? இல்லை, தன்னறைக்குள்ளேயே எங்காவது பதுக்கி வைத்திருப்பாளா....? உடனே போய் பார் என்று ஓர் உந்து சக்தி என்னைத் தள்ளியது. எது ஜோஸஃபைன் அறை என விளங்காது நான் வராண்டாவில் பரபரக்கும் போது, டேவரெனரின் குரல், சப்தமாய், ''இங்கே வா சார்ல்ஸ்....! வந்து பார்....! சிறுமியின் அறையிலிருக் கிறேன்....! இது போல எங்காவது நீ ஒரு கோரக் காட்சியைப் பார்த்திருக்கிறாயா எனச் சொல்....!'' என ஒலித்தது.

அந்த அறைக்குள் நுழைந்த நான் உறைந்துப் போனேன். சூறைக் காற்று அடித்து பிய்த்தெறிந்த நகரமாய் இருந்தது அந்த அறை. அலமாரிகள் திறக்கப்பட்டு அதிலிருந்த அத்தனையும் கீழும் மேலுமாய் சிதறியிருந்தன. அவளுடைய சிறு கட்டிலிலிருந்து மெத்தையும் போர்வையும் இழுத்து சரிந்திருந்தன. நாற்காலிகள் தடம்புரண்டிருந்தன. காரணமில்லாமல் சுவரிலிருந்த படங்கள் எடுக்கப்பட்டு, சட்டக் கண்ணாடி உடைக்கப்பட்டு கிழித்தெறியப் பட்டிருந்தன. ''கடவுளே... என்ன களேபரம்'' என திகைத்தேன்

நான். ''யாரோ, எதையோ தேடியிருக்கிறார்கள்'' என்ற என் ஆலோசனைக்கு, ''அதுவும் அவசர அவசரமாக'' என்று வலு சேர்த்தார் டேவரெனர்.

சுற்றும் முற்றும் பார்த்து, திகைப்பிலிருந்து விடுபடாது, ''யாரும் பார்க்காது, துளி ஓசையும் எழுப்பாது, இங்கு வந்து ஒருவராலும் இப்படி சிதைத்திருக்க முடியாது'' என்று நான் சொன்னதும், ''ஏன் முடியாது...? முடியும்!'' என்று அழுத்திச் சொன்னார் டேவரெனர். வீட்டின் அங்கத்தினரின் மீது சலிப்பேற்பட்டவராய் தொடர்ந்தார்: ''வெகு நேரம் கழித்து விழிப்பதோடு மட்டுமல்லாமல், நகச்சாயம் பூசுவதிலும், பெண்களோடு தொலைபேசியில் வம்படிப்பதிலுமே காலைப் பொழுதைக் கழிப்பவர் மகதா. சரித்திரப் புத்தகங்களுக்குள் புதைந்தே கழியும் பிலிப்'புக்கு யார் வந்தால் தெரியப் போகின்றது, அல்லது யார் போனால்தான் தெரியப் போகின்றது. எடித் மீன் காரியோடு மல்லுக்கு நின்றுக் கொண்டிருப்பார். இப்படி கோடு போட்டுக் கொண்டு, ஒவ்வொருவரும் ஒவ்வொரு கூண்டுக்குள் வாழும் இவ்வீட்டில், யாருக்கும் தெரியாது இப்படி சிதைத்திருக்க முடியாது என சொல்லாதே சார்ல்ஸ்; அது வெகு சுலபம் என்று புரிந்துக் கொள். யார் வேண்டுமானாலும் சலவைக் கல் பொறியினை அமைத்து விட்டு, அவள் வீழ்ந்ததும் அவளின் அறையை உலுக்கித் தேடி விட்டுப் போயிருக்கலாம். ஆனால் இதில் கவனிக்க வேண்டியது ஒன்று தான். அவசரக்காரன், முடித்து விட வேண்டும் எனும் குணம் கொண்டவன், பொறுமையற்றவன்தான் இதில் ஈடுபட்டிருக்கிறான்.''

''இந்தக் குடும்பத்திலிருப்பவரேயா....?''

''ஆமாம். நிச்சயமாய். நான் சரிபார்த்து விட்டுத்தான் சொல்கிறேன். எல்லோரும், சிற்சில சமயங்களில், தங்கள் இடங்களை விட்டு விட்டு, எங்கு போய் வருகிறார்கள் என்று தெரிந்து விடாமல் வெளியேறி திரும்பியிருக்கிறார்கள். அதாவது - அவரவர் இடத்தை விட்டு சட்சட்டென்று காணாமல் போய், மீண்டும் வந்திருக்கிறார்கள். பிலிப், மகதா, ரோஜர், வேலையாள்... ஏன் உன் காதலி... எல்லோரும் தான். அந்தக் குறுகிய நேரத்தில் களையப்பட்டது போலத் தான் இந்த அறையின் நிலை உள்ளது. லாரன்ஸுக்கு பத்தரை மணியளவில் கொஞ்சம் நகர நேரம் கிடைத்துள்ளது. சோஃபியாவுக்கு வெளியே நடை போய் வந்ததும், பகல் உணவு உண்ண அமரும் முன், ஒதுங்க நேரம் கிடைத்துள்ளது. எடித், சமையலின் நடுவே தோட்டத்தில் சற்று

நேரம் இருந்து வந்தேன் என்கிறார். இதற்கெல்லாம் என்ன சொல்கிறாய்...?''

''இன்று, க்ளெம்சி மட்டும் தான் தன் லண்டன் அலுவலகத் துக்குப் போயிருக்கிறார்....!''

''அதுவுமில்லை சார்ல்ஸ். தாளாத தலைவலி என்று அவரும் வீட்டில் தானிருக்கிறார். நிச்சயமாய் சொல்கிறேன். யாரோ தான், இங்கிருக்கும் யாரோ தான், இப்படி அப்படி நழுவும்போது சிறுமியின் அறையில் எதையோ தேடி இப்படி சின்னாபின்னப் படுத்தியிருக்கிறார்கள்.''

இப்படிச் சொல்லி விட்டு, கவிழ்த்து வைத்தாற் போலாகியிருந்த அறையை நோட்டமிட்டப்படி, ''இங்கு அவன் என்ன தேடினான் என்பது மட்டும் தெரிந்து விட்டால்....'' என உஷ்ணமானார். ''அப்படி அக் கொலைகாரன் தேடியது மட்டும் கிடைத்திருக்குமானால்...'' என பற்களைக் கடித்தார்.

டேவரெனரின் 'அவன் என்ன தேடினான்' என்ற வசனம் எனக்குள் ஒரு புது ஒளி கூட்டிற்று. அந்த ஒளிக்கு இன்னும் பிரகாசம் கூட்டினார் டேவரெனர், பின்வரும் கேள்வியைக் கேட்டு: ''சொல் சார்ல்ஸ்...! சிறுமி, நீ கடைசியாய் பார்த்த பொழுது என்ன செய்துக் கொண்டிருந்தாள்....?''

''ஒரு நிமிஷம்...'' என்றேன் நான். அவளை நான் கடைசியில் பார்த்தது, மொட்டை மாடியின் தண்ணீர் தொட்டிகளுக்கு இடையே. சரேலென்று என்னை இந்த அறையிலிருந்து உருவிக் கொண்டு, விடுபட்ட அம்பாய் மாடிப் படிகளேறித் தாவினேன். மொட்டை மாடியடைந்து தொட்டிகளிருந்த அறைக்குள் நுழைந்தேன். அறையின் உயரம் கம்மி ஆகையால் குனிந்து நடந்தபடி தேடினேன். நீ இங்கு என்ன செய்துக் கொண்டிருந்தாய் என்று கேட்டதற்கு துப்பறிந்துக் கொண்டிருந்தேன் என்றாளே....! அப்போது, நடக்கக் கூட இடமில்லாது வெறும் நீர்த் தொட்டிகளாய் நிறைந்திருக்கும் இங்கு என்ன துப்பறிய முடியும் என எண்ணியிருந்தேன். இப்போதோ, இது, சிறப்பான ஒரு பதுக்குமிடம் என்பது புலப்பட்டது. இங்கு எதையோ.... அவளிடம் இருக்கக் கூடாது என்று தெரிந்த எதையோ... அவள் பதுக்கியிருக்க வேண்டும். என் எதிர்பார்ப்பு சரியெனில், இந்த சிறு அறையிலிருந்து அதைக் கண்டுபிடிக்க வெகு நேரமாகாது. இடுக்கு விடாமல் தேட ஆரம்பித்தேன்.

மூன்றே நிமிடங்கள் தான் பிடித்தன. சுவரோடு ஒட்டியபடி பெரிய தொட்டி ஒன்றிருந்தது. இருந்தவற்றிலேயே அது தான் பெரிது. அதனருகிலிருந்த சிறு இயந்திரமொன்றிலிருந்து உஸ்ஸ்ஸ்' ஸென்ற ஓசை எழுப்பியபடி இருந்தது. இதனால் அப்பெரிய தொட்டியின் அருகில் யாரும் நெருங்காத நிலைமை தானாகவே உண்டாகியிருந்தது. அந்தத் தொட்டிக்குப் பின்னால் ஒரு கிழிந்த ப்ரவுன் நிற உறைக்குள் பதுக்கப்பட்டிருந்த சில கடிதங்கள் கிடைத்தன. அவற்றில் ஒன்றை எடுத்து படித்தேன்.

*ஓ லாரன்ஸ்....! என் உயிரே....! எனக்கென பிறந்துள்ள காதலே...! நேற்றிரவு நீ அந்த கவிதையைப் படித்துக் காட்டிய பாங்கு... அப்பப்பா... தனி சுகம்...! லியோனைட் நீ உணர்ந்து படிப்பதாய் பாராட்டினார். அப்போது நாமிருவரும் எத்தனை ஏகாந்தத்தை உணர்ந்துக் கொண்டிருந்தோம் என்றோ, அக்கவிதையின் நாயக நாயகியாய் நாமிருவரும் நம்மை பாவித்துக் கொண்டிருந்தோம் என்றோ அவர் அறிந்திருக்க வாய்ப்பில்லை. இன்னும் கொஞ்ச காலத்தில் எல்லாம் நேர் செய்யப்பட்டு விடும் என்றே தெரிகிறது. தான் இறந்ததே தெரியாமல் சட்டென பெரியவர் இறந்து விட்டார். போகட்டும். அவர் எனக்கு இனிமையாய் தானிருந்திருக்கிறார். அவர் கடைசி காலத்தில் அவதிப்படுவதில் எனக்கு சம்மதமில்லை. எண்பதுக்கு மேல் வாழ்வதினால் ஒருவருக்கு எந்த இன்பமும் விளைந்து விடப் போவதுமில்லை. அதனால் அவர் போய் விட்டதே மேல்....! வெகு விரைவில், நாம் இருவரும் எப்போதும் இணைந்தே வாழும் காலம் வந்து விடப் போகின்றது. நினைத்துப் பார்த்தாலே எவ்வளவு புல்லரிக்கின்றது தெரியுமா...! உன் காதருகே வந்து 'அன்புக் கணவரே... ஆருயிர் கணவரே....' என்பேன். கண்ணா...! நாம் ஒருவருக்கொருவர் என படைக்கப் பட்டுள்ளோம். ஐ லவ் யூ....! ஐ லவ் யூ...! ஐ லவ் யூ....!*

இவ்விதமாய் விவரித்தபடி கடிதம் நீண்டது. படித்தொன்றும் ஆகப் போவதில்லை. போன வேகமிழந்து இறுக்கமாய் டேவரெனரை அடைந்து உறையை அவர் கைகளுக்குள் திணித்தேன். ''இதைத் தான், ஒரு வேளை நாம் இது வரை அறியாத கொலைகாரன் தேடியிருக்கலாம்'' என்று அவர் காதருகே சொன்னேன். மறைவாய்

வைத்து ஒரு சில வரிகளைப் படித்த டேவரெனர், விசிலடித்து விட்டு, இன்ன பிற கடிதங்களின் சரக்கிலும் மேலோட்டமாய் கண்களை மேய விட்டார். பிறகு, இரை கிடைத்து உண்டு மகிழ்ந்த பூனையின் திருப்தி பார்வையை என் மேல் வீசிய டேவரெனர், ''இவற்றால் எல்லாம் புரிந்து விட்டது. ப்ரெண்டாவும், அந்த லாரன்ஸும் *தான்....!* இல்லையா...? அவளுக்கும் லாரன்ஸுக்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்று எப்படிப் பாசாங்கு செய்தாள் அவள்....?''

தன் காலால் தரையை ஆவேசமாய் எத்தினார் டேவரெனர். இக்கடிதங்கள் அவர்களுக்குள்ளிருந்த காதலைத் தான் ஊர்ஜிதம் செய்கின்றனவே அன்றி, அவர்கள் கொலை செய்தார்கள் என என்ன அத்தாட்சி உள்ளது....? டேவரெனர் உணர்ச்சிக் கொந்தளிப்பில் இருந்ததால் இதை நான் கேட்கவில்லை.

# 19

இருந்தாலும், இக்கடிதங்கள் - ப்ரெண்டா, லாரன் ஸுக்கு எழுதிய இக்கடிதங்கள் - கைகளில் கிடைத்ததும், அவள் மீது எனக்குள்ளிருந்த இரக்கமும் அனுதாபமும் வடிந்துப் போயின. லாரன்ஸின் இளமையால் ஈர்க்கப்பட்டு தன்னை ப்ரெண்டா இழந்துள்ளாள் எனும் உண்மையையும் அதனை சத்தியம் செய்து என்னிடம் மறைத்துப் பொய் சொல்லியுள்ளாள் எனும் நிஜத்தையும், என்னுடைய சுயமரியாதையால் ஏற்றுக் கொள்ள இயலவில்லையா? நான் மன நல நிபுணரல்ல. அதனால் எனக்கு விளக்க இயலவில்லை. ஆயினும் ஈவிரக்கமில்லாமல் வீட்டில் நடமாடியுள்ள ப்ரெண்டா - லாரன்ஸ் ஆகியோர் குறித்த ரகசியங்களை சேகரித்துக் காத்து வந்து, அதனால் இப்போது உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கும் குழந்தை ஜோஸஃபைனின் நினைவுதான், இவ்விருவர் மீதான கருணை ஊற்றினை என்னுள் வற்றிவிடச் செய்துள்ளதாய் நம்பினேன்.

''லாரன்ஸ் தான் அந்தக் கல் கண்ணியை அமைத்திருக்க வேண்டும்....'' என்ற டேவரெனரின் வார்த்தைகள் ஜோஸஃபைன் மீதான என் அனுதாப சிந்தனையைத் தடுத்தன. ''இருந்தாலும் அவர் எப்படி செய்யத் துணிந்தார் என்பதில் எனக்கு திகைப்புத் தாளவில்லை!''

''எப்படிச் சொல்கிறீர்கள்...?'' எனக் கேட்டு, அவர் நீண்ட பதிலொன்றைத் தர வழி செய்தேன். எனக்கு இப்போது யாரோடும் பேச மனமில்லை.

''சாதாரணமான திட்டமில்லை இது....! அசாதாரணமானது....! வெகு திறமை வாய்ந்த திட்டமிது...!'' என்றவர், விவரிக்க ஆரம்பித்தார்: ''கடிதங்களை - இந்த லஜ்ஜையற்றக் காதல் கடிதங்களைக் குழந்தை சேமித்து வைத்திருக்கிறாள். ஆக முதல் வேலையாய் முயற்சி செய்து எப்படியாவது இக்கடிதங்களை அபகரித்து விட வேண்டும். ஆனால் அது இயலவில்லை. ஏனென்றால் இவை இருக்குமிடம்

ரகசியமாயுள்ளது. போலீஸின் பிடி வேறு இறுகும் இந்நேரத்தில், இருக்கும் ஒரே வழி, மேலும் மேலும் அந்தக் குழந்தை துப்பறிவதை ஒரேயடியாக நிறுத்துவது! ஏற்கெனவே ஒரு கொலை செய்தாகி விட்டது. இனி என்ன...? எத்தனை செய்தாலும் தவறில்லை எனும் நிலை! உபயோகமற்ற அந்தப் புறக்கடை அறைக் கதவில் தினசரி ஊஞ்சலாடி மகிழ்வது ஜோஸஃபைனின் தவிர்க்கயியலா வாடிக்கை என்பது வீடறிந்த விஷயம். அப்புறக்கடைப் பகுதிக்கு யாரும் செல்வதே கிடையாது. பனிப் பொழிவின் ஆதிக்கத்துக்கு பயந்து எல்லா கதவும் ஜன்னலும் மூடப்பட்டே கிடக்க, யாரும் வெளியே வருவதே இல்லை. சிறுமியை முடித்துப் போட இது போன்ற சிறப்பான நேரம் அமையுமா...?! கதவுக்குப் பின்னால் ஒளிந்திருந்து, குழந்தை வந்து ஆட ஆரம்பித்ததும், இரும்புக் கழியோ கடப்பாரையோ கொண்டு தலையில் ஒரு போடு போட்டால் சாட்சியே இல்லாது செய்து விடலாம். இது தான் திட்டம். இரும்பு சாமான்களுக் கென்று தேடி ஓட வேண்டிய அவசியமேயில்லை. இந்தா எடுத்துக்கோ என எல்லாம் அங்கேயே செறிந்துக் கிடக்கின்றன. கண்மணி வலி தாங்காது என்ன தான் கத்தினாலும் யாருக்கும் கேட்காது; எல்லாம் தான் அடைத்துக் கிடக்கின்றனவே! இப்படிப்பட்ட அனுகூலமான நிலையிலும், கதவின் மீது கனமான மற்றும் கூரான சலவைக் கல் ஒன்றினை வைத்து, அக்கல், ஜோஸஃபைன் ஊஞ்சலாடும் போது தலையில் விழுந்து பிளக்கட்டும் என முயற்சித்திருப்பது தான் என்னைத் திகைப்பில் ஆழ்த்துகின்றது'' - இவ்வாறு முதன்மை இன்ஸ்பெக்டர் விவரித்ததும் எனக்கு சிறு தெம்பு வந்தது. கூர்மையானேன்.

இன்ஸ்பெக்டர் தொடர்ந்தார். ''கல் விழாமலே கூட இருந்து விடலாம். விழுந்தால் தள்ளிப் போய் விழலாம். தலையிலேயே விழுவதாய் வைத்துக் கொண்டாலும் மூளை வரை குடைந்து கொல்லும் என்பதற்கான வாய்ப்பு மிக மிகக் கம்மி. இப்படி இருக்கும் போது, ஏன் இந்தக் கல் கண்ணி முறையை கொலைகாரன் தேர்ந்தெடுக்க வேண்டும்...? ஏன்...?''

''தெரியவில்லையே...'' என்று புருவங்கள் முடிச்சிட கேட்ட நான், அவரிடம் விளைந்த சிறு குறும்புப் புன்னகையின் சாதகத்தால், ''நீங்கள் இதற்காக காரணத்தைக் கணக்கிட்டுள்ளதாய் தெரிகின்றது....'' என்று விடை அறியும் நோக்கில் கேட்டேன்.

கல் கண்ணி அமைத்ததற்கான காரணமாய் தான் கணிப்பதைச் சொன்னார் முதன்மை இன்ஸ்பெக்டர்: ''தன் தப்பிப்பிற்காக கொலை நடக்க வேண்டும்; ஆனால் தான் அங்கு இருக்கக் கூடாது - எனும் கொலைகாரனின் மனோநிலை தான் என் திகைப்புக்கான பதிலாய் எதிர்படுகின்றது'' என்று தன் கருத்தை முன் வைக்க ஆரம்பித்தார் டேவரெனர்; ''கல் தலையில் வீழ்ந்து சிறுமி சிதையும்போது, தான் ஏற்பாடு செய்திருந்த கல் கண்ணி வேலை செய்திருக்கலாம் எனும் எதிர்பார்ப்பில் கொலையாளி வேறெங்கோ, தன் இருப்பிடத்தில் காத்திருந்திருக்க வேண்டும். இது தான் தர்க்கம், லாஜிக்....!'' என்றவர் கைகளை நெட்டி முறித்து வாயகல சோம்பல் முறித்தார்.

''இதற்கு உங்கள் விளக்கம்...?'' - இது நான்.

''கொலையாளியின் சுபாவம். அவனுடைய ஆழமான குணாதிசயம். லாரன்ஸின் சுபாவம்'' என்று முடித்துத் திணறடித்தார் டேவரெனர்.

''லாரன்ஸுக்கு இம்சை பிடிக்காது. அவரால் எந்த ஜீவனுக்கும் உடலால் துன்புறுத்தல் தரவே இயலாது. இதனால் தான் அவர் ராணுவத்தை விட்டே ஓடி வந்தார். எனவே, தொந்தரவாய் அமைந்து விட்ட சிறுமியின் தலையில் இரும்புக் குழாய் எடுத்து அடித்துக் கொல்லும் வல்லமை அவருக்குக் கிடையாது. ஆனால் ஏதோ ஒரு பொறி அமைத்து - இந்தக் கல் கண்ணி போல ஒன்றினை அமைத்து- ஓடி ஒளிந்துக் கொண்டு, இறந்ததற்கான சேதியை எதிர்பார்த்துக் காத்திருக்கும் வல்லமை அவருக்கு உண்டு.''

''ஆமாம்... விளங்குகிறது'' என்ற நான், ''எஸரின் கண்ணியும் இதே போல ஏற்பாடாய்த்தான் புலப்படுகின்றது,'' என்றேன்.

''ரொம்பச் சரி! மருந்தினை மாற்றி வைத்து ஓடி விட்டார். பின், லியோனைட் மரணித்த சேதி கிடைத்து, அமைதியானார்.''

''எஸரின் மாற்றி வைத்த திட்டத்தை ப்ரெண்டாவின் அறிவுறுத்தலோ அனுமதியோ இல்லாமல் செய்திருப்பார் என எண்ண இடம் உண்டா....?''

''இருவரும் சேர்ந்து திட்டம் தீட்டியிருக்கலாம். இல்லை, ப்ரெண்டா மட்டும் சிந்தித்து எஸரின் விஷ திட்டத்தை முன் மொழிந்திருக்கலாம். தங்களின் சொர்க்கபுரி வாழ்விற்காக, நாடி தளர்ந்து விட்ட தன் கணவனுக்கு வலியில்லாத மரணமாய் இத்திட்டத்தை அவள் விரும்பியுமிருக்கலாம்....! இன்சுலீன் - எஸரின் திட்டம்

ப்ரெண்டா தந்ததாயிருக்கும். அவள் அடிமையான லாரன்ஸ், பாட்டில் விட்டு பாட்டில் மாற்றும் இயந்திரப் பணியை செய்து முடித்திருப் பான். கடைசி பகுதியை ப்ரெண்டா நிறைவேற்றியிருப்பாள்...! ஆனால் இந்தக் கல் கண்ணியை அவள் வைத்திருக்கவே மாட்டாள். நான் சவால் வைத்துக் கொள்ளவும் தயார். இது அவள் திட்டமில்லை. இது போன்ற இயந்திர நுட்பம் நிறைந்த வழி முறைகளின் செயல்பாட்டில், கொஞ்சமும் நம்பிக்கையற்றவர்கள் பெண்கள்....!''

கொஞ்சம் நிறுத்தி விட்டுத் தொடர்ந்தார்:

''இந்தக் கடிதங்களை துணை கமிஷனர் கண்ணுற்றால் அவர்கள் மீது ஒரு வழக்குப் போட வலுவான தளமிருப்பதாய் முடிவு செய்வார். வழக்கும் ஆரம்பமாகும். தெய்வாதீனமாய் ஜோஸஃபைன் பிழைத்து எழுந்தாள் என்றால், வழக்கும் சட்டென்று முடியும்'' என்ற டேவரெனர், என்னைக் குறும்பாய் பார்த்து, ''மில்லியின் பவுண்டு தொகைக்கு கணவனாகப் போவதை எண்ணும்போது என்ன உணர்கிறாய்...?'' என்றார்.

ஒரு முறை தலையை உலுக்கிக் கொண்டேன். கடந்த சில மணிநேரங்களாய் ஏற்பட்ட திருப்பத்தில் உயில் குறித்த வாக்கு வாதங்களையே மறந்துப் போயிருந்தேன். ''சோஃபியா வுக்கு, இந்த நிமிடம் வரை புது உயிலின் சாராம்சம் தெரியாது. நான் சொல்லி விடட்டுமா...?''

''நாளை விசாரணை முடிந்ததும், கைட்ஸ்கில், உயில் மீதான சமீப நிலைமையை அறிவிக்க உள்ளார்'' என்று நிறுத்தியவர், ''குடும்பத் தினரிடமிருந்து எப்படியெல்லாம் விளைவுகள் வருமோ....! பிரமிப்பாயுள்ளது!'' என சூசகமாய் சொன்னார்.

# 20

விசாரணை நான் எதிர்பார்த்தபடி தான் சென்றது. போலீஸாரின் வேண்டுகோளுக்கிணங்கி, இன்னும் தள்ளி வைக்கப்பட்டது.

ஸ்தலத்தில் பார்த்து முடிவெடுத்தது போல ஜோஸஃபைனின் காயங்கள் ஆழமாயில்லை என்றும், ஆதலால் அவள் மிக விரைவில் சுகமாகி விடுவாள் என்றும், நேற்று இரவு மருத்துவமனையிலிருந்து தகவல் வந்ததிலிருந்து எங்களைப் பிடித்திருந்த சோர்வு விலகியிருந்தது. தற்சமயம் அவள் தாயார் உட்பட யாரும் வந்து அவளைப் பார்த்து சிறுமியின் மூளைக்கு வேண்டாத வேலை தர வேண்டாம் என அறிவுறுத்தப்பட்டனர்.....!

''அம்மாவை அனுப்பவே கூடாது'' என என்னிடம் முணு முணுத்தாள் சோஃபியா. ''மருத்துவரிடம் கண்டிப்பாக இதைச் சொல்லி விட்டேன். அவருக்கும் அம்மாவின் குணம் தெரியும்....!''

நான் அவளை சற்று வேற்றுமையாய் பார்ப்பது விளங்கியிருக்க வேண்டும். ''என்ன, அப்படி ஒரு திருப்தியற்ற பார்வை....?'' என்றாள்.

''இது போன்ற சமயங்களில், ஒரு தாயாருக்கு, தன் சின்ன பிள்ளை மீதான பாச ஆதங்கங்கள் இருக்கக் கூடாதா....?'' என பேச முயன்ற என்னை, ''உன் ஆதிகால கருத்துக்களுக்கு வாழ்த்துக்கள் சார்ல்ஸ்....! ஆனால், இன்னும் உனக்கு, என் அம்மா என்னவெல்லாம் செய்வாள் என்பது குறித்த பூரண அனுபவம் கிடைக்கவில்லை. பாவம்....! அவளைச் சொல்லி என்ன பலன்....! அவள் வேதியியல் கூறுகள் அப்படி....! அங்கு வந்து, நாடகப் பாணியில் வசனம் பேசி, அழுது, துடித்து, எல்லாம் செய்வாள்...! செய்தே தீருவாள்...! உலகே நாடக மேடை எனும் தத்துவம், என் அம்மா கடைபிடிக்கும் வாழ்க்கை....! நாடகத் துக்கு வேண்டுமானால் இப்படிப்பட்ட கூத்து பொருந்தும்...! முன்னேறி வரும் ஜோஸஃபைனுக்குப் பொருந்துமா...! சொல்!''

''இனியவளே...! நீ, எல்லோரின் நல்வாழ்வு பற்றியும் நினைத்தபடி வாழ்கிறாய்...! இல்லையா....!''

''குடும்பத்தில் யாராவது ஒருத்தர் அப்படி இருந்து தானே ஆக வேண்டும்...! அதுவும் தாத்தா இல்லாத இச்சமயத்தில்....!''

தனது வாரிசாய், சோஃபியாவை, எத்தனை சரியாக கணித்துள்ளார் லியோனைட்....! பெரியவர் ஏமாற்றப்படவில்லை. இதோ, குடும்பத்தின் நல்வாழ்வு கருதிய சுமை, ஏற்கெனவே, சோஃபியாவின் தோள்களில், ஒரு சுகச் சுமையாய் ஏற ஆரம்பித்து விட்டது....!

மகதாவின் வரவேற்பறையில் உயில் குறித்த அறிவிப்பை வெளியிடுவதாய் ஏற்பாடு. தன் தொண்டையை தீர்க்கப்படுத்திக் கொண்ட கைட்ஸ்கில், ''வணக்கம். என் கடமையின்படி, உங்கள் எல்லோருக்கும் ஓர் அறிவிப்பினை செய்ய உள்ளேன்'' என்று துவங்கினார். வக்கில் என்ன சொல்லப் போகிறார் என்பது முன்கூட்டியே எனக்குத் தெரிந்திருந்ததால், விஷயம் அறிவிக்கப் பட்டதும், குடும்பத்தாரின் முக பாவங்கள் எப்படியெல்லாம் மாறப் போகின்றன எனும் குறிப்பெடுக்க நான் தயாராகினேன்....!

வளவளக்காமல், வக்கீலின் பணி இது எனும் கோணத்தில் பேசினார் கைட்ஸ்கில். முதலில் லியோனைட்'ஸின் கடிதத்தையும் பின் உயிலையும் படித்தார். படிக்கும் போதே, ஒவ்வொருவரின் தனிப்பட்ட உணர்வுகளையும் கோபங்களையும் கவனித்த வண்ணமிருந்தார்.

ஆஹா....! எப்படியெல்லாம் ஒவ்வொருவரும் முகம் மாறுகின்றனர்.....! எல்லோரையும் ஒரே சமயத்தில் ரசித்து கவனிக்க, எல்லாப்புறமும் எனக்குக் கண்கள் இருக்கக் கூடாதா என வேண்டினேன்!

ப்ரெண்டா லாரன்ஸ் இருவர் மீதும் நான் அதிக கவனம் செலுத்தவில்லை. ப்ரெண்டாவின் பங்கில் எந்த மாற்றமும் இல்லை. ரோஜர், பிலிப், பிறகு க்ளெம்சி, மகதா ஆகியோரைத் தான் நான் கூர்மையாய் ஊடுருவினேன்.

ஆரவாரம் செய்யாமல் அமைதி காத்தனர் என்பது தான் என் முதல் கருத்து. பிலிப் வழக்கம்போல் உதடு திறக்காமல், தன் நாற்காலியில் தலையை சாய்த்து அமர்ந்துக் கொண்டு மேலே பார்த்த வண்ண மிருந்தார். பேசவில்லை.

மாறாக, மகதா, கைட்ஸ்கில் வாசித்து முடித்த மறுகணம், மளமளவென பேச ஆரம்பித்தார். வேகமாய் பீய்ச்சி அடிக்கும் குழாய் நீரின் வேகத்தில் கதறினார்: ''கண்ணே சோஃபியா....! எப்படிப்பட்ட அசாதாரண பொக்கிஷம் கிடைத்துள்ளதடீ....! கிழவனுக்குத் தான் எத்தனை தந்திரம்...! கபடு....! குடும்பத்தையே என்னமாய் வஞ்சித்து விட்டார்....! அவர் பணத்துக்குத் தானே நாங்கள் எல்லோரும் அவர் வாலைப் பிடித்துக் கொண்டு சுற்றினோம்....! இப்படி சூது செய்து விட்டாரே...! எங்களை நம்பவேயில்லை, பார்த்தாயா....! பழைய உயில்படியே பிரித்திருந்தாலும், பணம் கிடைத்ததும் நாங்கள் என்ன கிழத்தை நட்டாற்றிலா விடப் போகிறோம்...! சோஃபியா மீது இத்தனை அபிலாஷையும் மதிப்பும் வைத்திருந்ததாய் காட்டிக் கொண்டதே கிடையாது....! அப்பப்பா....! எந்த நாடகமும் இப்படி திருப்பம் கண்டிருக்காதுடா சாமி....!'' - இப்படி பேசி முடித்தவர், சட்டென சோஃபியாவின் இடைகளுக்குள் கை விட்டு தன்னுடன் அணைத்து, அவளை இப்படியும் அப்படியும் ஆட்டி, நாடகப் பாணியில் வாழ்த்துத் தெரிவித்து விட்டு, ''செல்வி சோஃபியா...! செல்வமற்ற - நெஞ்சுடைந்த உன் கிழத் தாயார் கை நீட்டிக் கேட்கிறேன்...!'' என்று அவள் முன் தடாலென மண்டியிட்டவர், கிளையில் அமரும் பறவையின் பிடியாய் அவள் கையைப் பிடித்து, ''அவ்வவ்போது சிறு பணம் தந்து உதவ மாட்டாயா....! நான் படம் பார்க்க வேண்டுமடீ....!'' என்று ஓய்ந்தார்.

திரும்பிய பிலிப், ''மகதா. நிறுத்து'' என்று எரிச்சலானார். ''எந்த கோமாளி ஆட்டத்துக்கும் இது மேடை கிடையாது.''

அவள் கண்டு கொள்வதாகவே இல்லை. ''ஓ....! ரோஜர்...!'' என அவன் பக்கம் பாய்ந்தார். ''நீ பாவமப்பா. உன் அருமை தந்தை உன்னை மீட்க ஓடோடி வந்தார். அது நிறைவேறுமுன் போய் விட்டார். இந்நிலையில் உனக்கு ஒரு பவுண்டு.... ஒரே ஒரு பவுண்டு கூட இல்லாமல் போய் விட்டதே ராசா....!'' என்று அவனிடம் போய் வசனம் பேசியவர், சோஃபியா பக்கம் திரும்பி, ''சோஃபிம்மா....!'' என்றழைத்தபடியே அவளை நெருங்கி ''பெரியப்பாவுக்கு உதவ என்று ஏதேனும் செய்து விடடீ, என் செல்லம்....'' என்று சிபாரிசு செய்தார்.

''ஒன்றும் வேண்டாம்'' என இடைமறித்தார் க்ளெம்சி. ஓரடி முன் வந்து நின்றார். அவர் முகத்தில் எதிர்ப்பு இருந்தது. ''எந்த உதவியும்,

குறிப்பாய் பணச் சம்பந்தமாய் எந்த உதவியும் வேண்டாம். வேண்டவே வேண்டாம்''

தன் உடம்பைத் தூக்கிக் கொண்டு, பாரம் தாங்காது ஓர் அவலட்சணமான நடை நடந்து சோஃபியாவை நெருங்கிய ரோஜர், இளகிய மனம் கொண்டவராய், ''என்னருமை சோஃபியா. சொத்தில் துளியும் எனக்கு வேண்டாம். அசோசியேட்டட் கேட்டரிங் பிரச்னை தீர்ந்ததும் - அல்லது நிர்வாகம் முழுதுமாய் திவாலாகி மடிந்ததும், இது தான் நடக்கும் என்று முடிவாகியுள்ளது - நானும் உன் பெரியம்மா க்ளெம்சியும் வெகு தூரம் நகர்ந்து, மேற்கிந்திய நாட்டுக்குச் சென்று, மிக சாதாரணமான வாழ்க்கையை வாழ முடிவு செய்துள்ளோம். நான் மிகவும் சாதாரணப் பிரஜையாக வாழ நினைப்பவன் சோஃபியா. பணம் எனக்கு ஒரு பொருட்டே அல்ல. வேண்டுமென்றால் என்னை முழுதுமாக அறிந்துள்ள க்ளெம்சியைக் கேட்டுப்பார்'' என்று தழுதழுத்தார்.

உணர்ச்சிவயப்பட்ட ரோஜர் அவளுக்கு முன் தலை குனிந்து அமைதியாய் நின்றுக் கொண்டிருந்த போது அதிகார தோரணையோடு ஒரு குரல் உடைந்து ஒலித்தது. எடித் ஹெவிலேண்ட்! ''அதெல்லாம் சரிதான் ரோஜர். இருந்தாலும் உன் நிறுவனம் அடைந்துள்ள அவப்பெயருக்கு நீ பொறுப்பேற்றுத்தான் ஆக வேண்டும். இந்த நாலு சுவற்றுக்கள் அல்ல. சமுதாயத்தின் முன். புரிகிறதா...? இப்பொழுது ஏற்பட்டுள்ள திருப்பங்களுக்கு நடுவில் - அதாவது இந்த உயில் திருப்பத்தைக் குறிப்பிடுகிறேன் - இதன் நடுவில் நீ பூமி உருண்டை யின் அடியில் எங்காவது போய் ஒளிந்துக் கொள்ளப் பார்த்தா யென்றால், அதனால் சோஃபியா மிது விழக் கூடிய குற்றச்சாட்டுக்கள் மிக மோசமானவைகளாக இருக்கும்.''

''சமூகத்தைப் பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்....? நாக்கில் நரம்பற்ற சமுதாயமிது....!'' என மிளகாயாய் கேட்டார் க்ளெம்சி.

''உனக்கு சமுதாயம் ஒரு பொருட்டே அல்ல என்பது நாங்களறிந்ததே க்ளெம்சி'' என்று க்ளெம்சி அதிரும்படி ஒரு குத்துக் குத்தினார் எடித். ''ஆனால் சோஃபியா இந்த சமூகத்தில் தான் வாழ்கிறாள். சமுதாயத்தை மதித்தும் இருக்கிறாள். இன்னும் திருமணமாகாத பெண் வேறு. அவளுக்கு இச்சமுதாயம் பற்றிய பயம் உண்டு'' என்று விட்டு சோஃபியா பக்கமாய் சில அடிகள் நடந்து நின்ற எடித், ''சிறப்பான தராசுத் தனம் மிக்க சிந்தனை உள்ள

பெண்ணிவள். நல்ல இதயமும் உள்ளது. லியோனைட், தனக்குப் பிறகு குடும்ப எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு இவளைத் தெரிவு செய்திருப்பதில் இரண்டாம் கருத்து இருக்கவே முடியாது; கூடாது....!'' என்று முழங்கி விட்டு, சோஃபியாவை நெருங்கி அவளுக்கு மட்டும் சொல்லும் தொனியில் ''பணம் கிடைத்து விட்ட கனத்தில் பேராசை கொண்டோ அல்லது ரோஜர் தானே நிறுவனத்தின் இந்நிலைக்குக் காரணம்; எனவே நொடித்துப் போகட்டும் என்று நினைத்தோ, நீ பணத்தை அவனுக்களித்துக் காப்பாற்றுவதில் சுணக்கம் காட்டினால், அது எங்களின் மாபெரும் துரதிர்ஷ்டமாகி விடும்'' என்றார்.

அங்கு நின்றுக் கொண்டிருந்த ரோஜருக்கும் இது கேட்டிருக்க வேண்டும். துடித்தார். ''அம்மா....! உங்களை அவ்வளவு விரும்பு கிறேன். ஆனால், இத்தனை நாட்கள் என்னை வளர்த்துள்ள நீங்கள் என்னைப் புரிந்துக் கொள்ள இன்னும் துவங்கக் கூட இல்லையே எனும்போது மனம் வாடுகிறதம்மா...! எனக்கும் க்ளெம்சிக்கும், எங்களுக்கு என்ன வேண்டுமென்று தெரியும். என்ன வேண்டா மென்றும் தெரியும். எங்களுக்கு பாத்யதை இல்லாதது எங்களுக்குத் தேவையில்லை அம்மா....!''

கணவரின் இந்த தன்னிலை விளக்கம், க்ளெம்சியைக் கோபத்தின் உச்சத்திற்கு இட்டுச் சென்றது. கன்னங்கள் சிவந்தன. ''ஒருவரும் ரோஜரைப் புரிந்துக் கொள்ளவில்லை....!'' என்றபடி விறுவிறுவென ரோஜரை நெருங்கியவர், ''நிறுவனம் மூழ்கி விட்டதால் ஏதோ நாங்கள் பணம் பணம் என அலைய உள்ளதாகவே முடிவு கட்டிப் பேசி வருகிறீர்கள். அவரை எப்போதும் நீங்கள் புரிந்துக் கொண்டதில்லை. புரிந்துக் கொள்ளவும் மாட்டீர்கள். வா ரோஜர். இவர்களிடம் என்ன விளக்கம் வேண்டிக் கிடக்கிறது....!'' என்று அவர் கையைப் பிடித்தபடி வெளியேறினார்.

நொடியும் வீணாக்காது, ஆவணங்களைத் தயார் செய்ய முனைந் தார் கைட்ஸ்கில். குடும்பத் தகராறுகள் அவரை எரிச்சலூட்டுவது விளங்கியது.

இப்போது சோஃபியாவிடமே என் கண்கள் வந்து நின்றன. கைகளை மார்புக்குக் குறுக்கே கட்டியபடி, குளிருக்காக மூட்டப்பட்டு அருகில் எரியும் தீயின் ஜ்வாலை வெளிச்சத்தில் தகதகக்கும் தங்கமாய், நேர்பார்வை பார்த்தபடி ஸ்திரமாய் நின்றுக் கொண்டி ருந்தாள் அவள். இதோ.... சில நொடிகளுக்கு முன்பு தான், எதிர்பாராத

கோடீஸ்வரியானாள் சோஃபியா. ஆனால் என் தலையாய சிந்தனை, அவள், இந்த அதிர்ஷ்டத்தால், எத்தனை தனிமையாக்கப்பட்டு விட்டாள் என்பதிலேயே சென்றது. அவளுக்கும் அவளின் ஏனைய குடும்பத்தாருக்கும் இடையே தாண்ட முடியாத ஒரு பெருஞ்சுவர் எழுப்பப்பட்டு விட்டது. ஆக சோஃபியா எல்லோரிடமிருந்தும் பிரிக்கப்பட்டு விட்டாள். பணம் படுத்தும் பாடு. எனினும் முழு நிதானமாய் கடுகளவுக்குக் கூட அதிராமலிருந்தவளைக் கவனித்த போது, அவளுக்கு இத்தகவல்கள் ஏற்கெனவே தெரிந்திருக்குமோ என எனக்குள் ஒரு விந்தையான கற்பனை உருவாயிற்று. லியோனைட், தாளாத சுமை கொண்ட இந்த அகண்ட குடும்ப பாரத்தை சோஃபியா தோள்களில், இதோ, இப்போது, அதிகார பூர்வமாக இறக்கி வைத்து விட்டார். அவர் ஆன்மா சாந்தியடைந் திருக்கும். இவளும் சுமத்தப்பட்டுள்ள இச்சுமையைத் தூசாகத் தாங்கக் கூடியவள் தான். சந்தேகமேயில்லை. இருந்தாலும் திடுமென தனிமையாகிக் கொண்டிருக்கும் அவளைப் பார்க்க எனக்கு மிகப் பரிதாபமாக இருந்தது.

இது வரை சோஃபியா எதுவும் பேசவில்லை. அதற்கு ஒரு வாய்ப்பு அளிக்கப்படவில்லை. அப்படியே இருந்து விட முடியுமா! இன்னும் துரித நேரத்தில் வாய் திறக்க வேண்டிய நிர்ப்பந்தம் வரத்தான் போகின்றது. இது வரை பேசியவர்களிடமிருந்து, அவர்களின் குடும்பப் பாசம் எனும் நிலைக்கு அடியில், இவளுக்கு எதிராக விரோதப் போக்கு ஒன்று உருவாவது விளங்கியது. மகதாவின் அருமையான நாடகப் பங்களிப்பில் வெளிவந்த வசனங்கள் கூட, சோஃபியா அடைந்துள்ள பணத்தை எப்படியாவது அபகரிப்பதிலும், இவ்வாறு ஒரு நொடியில் இங்கிலாந்தை விலைக்கு வாங்கும் அளவு செல்வத்தைப் பெற்று விட்டதால் அவள் மேல் ஒரு வெறுப்பையும், உமிழ்ந்தன. யாருமே மனம் திறந்து பேசவில்லை. எல்லோர் மன ஆழத்திலும், தளம் தொடாத விரோத மின்சாரம் இருக்கத்தான் வேண்டும். அவை அமிலமாய் வெளியாகும் போது சோஃபியா எதிர் கொண்டு பேசித்தானே ஆக வேண்டும்!

எனக்கு சோஃபியாவின் பாதுகாப்பு மீது புது பயம் விளைந்தது.

திரு கைட்ஸ்கில்லின் தொண்டைச் செருமல் சிறு உரை ஒன்றுக்கு வாசல் திறந்தது. ''என் வாழ்த்துக்களைப் பெற்றுக் கொள்ளுங்கள் சோஃபியா'' என்று துவங்கினார். ''நீங்கள் மாபெரும் செல்வந்தராகி விட்டீர்கள். அத்தனையையும், அதாவது உங்களைச் சேர வேண்டிய

முழுச் சொத்தினையும், அதிகாரபூர்வமாக எழுதி நிலைப்படுத்த சில தினங்கள் ஆகும். ஆனால், இப்பொழுது உங்களுக்குத் தேவைப்படும் அவசர பணத்தை மட்டும் அளிக்க முடியும். உங்கள் கைகளுக்குள் வந்து விட்ட இச்சொத்தினைப் பற்றி எதிர்கால ஒப்பந்தங்கள் ஏதேனும் செய்ய வேண்டுமென்றாலும், என்னால் இயன்ற, மிகச் சிறப்பான சட்ட அறிவுரை வழங்க இயலும். இதற்கு, முன்னரே தெரிவித்து விட்டு என் அலுவலகம் வந்தீர்களாயின் விரிவாய் பேசலாம்.''

சோஃபியா இப்போதும் பேசவில்லை. ஆனால் எடித், ''ரோஜர்...'' என்று, ரோஜர் நிலைக்கு என்ன செய்வது எனும் போக்கில் இழுத்தார்.

''ரோஜர், அவராய்த் தான் பிழைத்தாக வேண்டும். முதிர்ந்தவர். ஐம்பத்து நான்குக்கு மேல் வயது. நான் கூட முதலில் கோபப்பட்டேன். ஆனால், இவ்விதமாய் தன் சொத்துக்களை முடிவு செய்திருப்பதில் லியோனைட் ரொம்பச் சரி தெரியுமா...? ரோஜர் நிர்வாகத் திறனற்றவர். விட்டுவிடுவோம்'' என்று பொதுவாய் பேசிய வக்கீல், சோஃபியா பக்கம் திரும்பி, ''மறுபடியும் எப்படியோ அசோசியேட்டட் கேட்டரிங்'கைத் தூக்கி நிறுத்தி ரோஜரிடம் தந்தாலும், அவரால் அதனை நிர்வகிக்கவே முடியாது என்பதை மட்டும் மறந்து விடாதீர்கள்'' என்றார்.

இப்போது வாய் திறந்தாள் சோஃபியா: ''அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனத்தை மீண்டும் உயிர்ப்பிப்பதாய் நான் கனவு கூட காண மாட்டேன்''. அவள் குரல் மொறுமொறுவென நிர்வாகத் தோரணையில் மிளிர்ந்தது. ''அப்படி முயல்வது ஒரு முட்டாள் தனம்'' என்று வேறு சேர்த்துக் கொண்டாள்.

தன் இடுங்கிய இமைகளின் இடைவெளியில் சோஃபியா வைப் பார்த்து வெற்றி கண்டதாய் சிரித்து நிம்மதியடைந்து கைட்ஸ்கில் எல்லோரிடமிருந்தும் விடைபெற்று வெளியேறினார்.

அவரவர் குடும்ப வட்டத்துக்குள் சென்றுக் கொள்ள அவகாசம் அளிக்கப்பட்டது போன்ற, சில நொடி மௌனம்! பின், பிலிப் விறைப்பாய் எழுந்து, ''நான் என் நூலகத்துக்குச் செல்ல வேண்டும். அதிக நேரத்தை வீணாக்கி விட்டேன்'' என்றார்.

''அப்பா...'' - நம்பிக்கையற்று, விண்ணப்பம் தருவது போல் அழைத்தாள் சோஃபியா. சிவந்தக் கண்களோடு திரும்பிய

பிலிப்'பைக் கண்டதும், சோஃபியா நடுங்கி தனக்குள் ஒடுங்குவதைக் கவனித்தேன்.

''உன்னை நான் வாழ்த்தாததற்கு மன்னிக்கவும்'' என்ற பிலிப், ''இது எனக்கு ஓர் அதிர்ச்சி. எதிர்பார்த்திரா பேரதிர்ச்சி. இப்படி என்னை மனிதத்தன்மை அற்று என் அப்பாவே நடத்துவார் என நான் நினைத்தக் கூட பார்த்தில்லை. என்னை.... அவர் மீது நான் வைத்திருந்த பாசத்தை.... அவர் மீது நான் கொண்டிருந்த கரிசனத்தை.... எல்லாவற்றையும் விட அவர் மீது நான் செலுத்தி யிருந்த பக்தியை... ஆமாம்... பக்தி, அந்த பக்தியை... அவமதித்து விட்டார்''. குரல் உயரா விட்டாலும் உள்ளுக்குள் வெடித்தார். ஐஸ் கட்டியாய் இறுகியேயிருந்தது, பிலிப்'பின் உணர்ச்சிக் கொந்தளிப்பு. ''ஓ கடவுளே....! எனக்கு ஏன் இப்படிச் செய்தார்? அவருக்கு எப்பொழுதுமே நான் ஓர் எடுப்பார் கைப்பிள்ளை தான். எப்பொழுதுமே'' - கைத்தாங்கலாய் நாற்காலியைப் பிடித்துக் கொண்டு மீண்டும் உட்கார்ந்துக் கொண்டார்.

''கிடையாது பிலிப்....'' என ஓடி வந்தார் எடித். ''நீ அப்படி நினைக்கவே கூடாது. அது தவறு. நீ அற்பமாக்கப்பட்டதாகவோ, இதை உனக்கிழைக்கப்பட்ட அவமரியாதையாகவோ, கருதாதே. அப்படி கிடையாது. வயதாக ஆக, இளையவர்களின் மீதே நம்பிக்கை இருக்கும். பேரனோ, பேத்தியோ பிறந்து விட்டால் என்னமாய் துள்ளுகிறார்கள், இந்த முதியவர்கள்....! அது போல....! தவிர நிறுவனங்களிலேயே மூழ்கிப் பழக்கப்பட்ட மூளை, லியோனைடு டைய மூளை. அதனால் தான் இப்படி....!''

எடித்'தைப் பேச விடவில்லை பிலிப். ''அவர் என்று தான் என்னை கவனித்துள்ளார்? எப்போதும் ரோஜர், ரோஜர், ரோஜர். இருந்தாலும் இறுதியில்...'' என்று தொடர்ந்த பிலிப்'பின் ஆணழகு ததும்பும் முகத்தில் ஒரு வஞ்சக சந்தோஷம் வந்து அமர்ந்துக் கொண்டது. ''இருந்தாலும், இறுதியிலாவது, இந்த ரோஜர் - முட்டாள், எதற்கும் உபயோகமற்றவன் - என புரிந்துக் கொண்டாரே....!'' என்று வெகு திருப்தியாய் நிறுத்திக் கொண்டார்.

இப்படிச் சொல்லி முடித்த பிலிப்'பின் முகத்தில் தான் எத்தனை குரூர நிம்மதி!

''ரோஜரைப் பற்றி அப்படி புரிந்துக் கொண்டார்....! என்னைப் பற்றி....?'' - இடைபுகுந்தான் ஆஸ்டஸ்.

இதுவரை நான் அவனை ஒரு பொருட்டாகவே எண்ணவில்லை, ஆனாலும், அவன் கேள்வியைக் கேட்ட விதத்திலிருந்து, அவன் சொல்லொணா உணர்வுக் கொந்தளிப்பில் ததும்பிக் கொண்டிருப்ப தாய் தோன்றியது. முகம் சிவந்துப் போயிருந்தது. கண்களின் அடி முழுதும் கண்ணீர் அணை கட்டியிருந்தது. மதம் பிடித்தவனாய் கட்டுப்பாடின்றி கத்தினான்:

''அவமானம். எனக்கு அவமானம். என்ன திமிர் இருந்தால் தாத்தா எனக்கு இப்படி செய்திருக்கலாம்....! கிழத் திமிர்! அவரின் ஒரே பேரன் நான். இல்லையா...? என்னை எந்த தைரியத்தில், எந்தக் காரணத்தால் ஒதுக்கி விட்டு, அத்தனையையும் அள்ளி சோஃபியா வுக்குக் கொடுத்துள்ளார் என்று எனக்குத் தெரிந்தாக வேண்டும்! இது நேர்மையே அல்ல! அவரை நான் வெறுக்கிறேன். தூற்றுகிறேன். என் உயிர் உள்ள வரை அவரை மன்னிக்கவே மாட்டேன். சபித்துக் கொண்டேயிருப்பேன். அவர் ஆன்மா சாந்தியடையக் கூடாது'' என்று சிறுபிள்ளைத்தனமாய் கத்தியபடி, ''ம்ம்ம்...'' என ஓசையெழுப்பி அழத் தொடங்கினான். ''பார்த்தாலே அருவெறுப்பு வரும் குள்ளன். என் சொந்தக்காலில் நின்று உலாவ நினைத்தேன். முடியவில்லை. என் ஆசைகளுக்கெல்லாம் மண் போட்டு வீட்டுக்குள்ளேயே அடைத்து வைத்த சர்வாதிகாரி. அவர் இறக்க வேண்டும் எனத் தான் நினைத்திருந்தேன். நடந்து விட்டது. இருந்தும் என்ன பயன்...? விடுதலை இல்லையே! இனி, எதற்கெடுத்தாலும் இந்த சோஃபியா முன்னால் கையேந்தி நிற்க வேண்டும். மறுபடியும் ஒரு சிறை. அவள் முதுகில் தான் வாழ வேண்டும். அவராவது வயதானவர். மண்டையைப் போட்டார். இனி ஏது சுதந்திரம். நான் செத்து விட்டதாகவே தோன்றுகிறது'' என்று நிர்தாட்சண்யமாய் சோஃபியாவை சபித்த ஆஸ்டலை, ''மூடு வாயை. சிறு பிள்ளையாய் லட்சணமாயிரு'' என்று எடித் அடக்கினார்.

''அவன் எப்படி குமுறுகிறான் என்பது எனக்குத்தானே தெரியும்'', என்று எடித்'தை ஆட்சேபித்த மகதாவைப் பார்த்து, ''தெரியும் மகதா. எரியும் நெருப்பில் இன்னும் எண்ணெய் ஊற்றுமளவு உனக்குத் தெரியும் - என்பது எனக்கும் தெரியும்'' என்று கடிந்தார் எடித்.

தரையை ஆக்ரோஷமாய் எத்தி ஓடிய ஆஸ்டலை, ''அருமை மகனே...'' என ஏதோ நாடக ஒத்திகைப் போல கூப்பிட்டுக் கொண்டே ஓடினார் மகதா. எடித்'தும் வெளியேறினார்.

சோஃபியா, பிலிப்'பைப் பார்த்தபடி நின்றாள். ஒரு கெஞ்சல் அவள் கண்களில் இருந்தது போல் தோன்றியது. எனில், அதற்கு ஒன்றும் பிலிப்'பிடமிருந்து பதில் கிடைக்கவில்லை. மாறாக, இரக்கமற்றவராய், ''உன் பங்கினை அழகாக விளையாடி வெற்றி பெற்று விட்டாய் சோஃபியா....'' என்றபடி வெளியேறிப் போனார்.

''அபாண்டமாய் பேசக் கூடாது திரு பிலிப்....'' என்றேன் நான். அவர் செவி தராது மறைந்தே விட்டார்.

சோஃபியா என்னை நோக்கி கைகளை நீட்ட, அந்த இளம் உள்ளங்கைகளிரண்டையும் வாங்கி என் உள்ளங்கைகளுக்குள் பொத்திக் கொண்டேன். ''உன் பூ போன்ற உள்ளத்துக்கு இது ரொம்ப அதிகம் சோஃபியா...'' - மருகினேன்.

''கலக்கமெதற்கு? அவர்கள் ஒவ்வொருவரும் எப்படி உணர் கிறார்கள் என்பதைப் புரிந்துக் கொள்ள வாய்த்த வாய்ப்பு இது....!'' - அதிரவே இல்லை.

''அந்தக் கிழ லியோனைட், உன்னை, இப்படி பரிதவிக்க விட்டிருக்கக் கூடாது. உயிருடனிருந்தபோதே எல்லாவற்றையும் நேர் செய்து விட்டுப் போய் தொலைந்திருக்க வேண்டும்.''

அவள் தன் தோள்களை நிமிர்த்தி தைரியமாய் நின்றாள். ''என்னால் குடும்ப பாரத்தைத் தூக்க முடியும் என நம்பினார்'' - நிமிர்ந்த தன் தோள்களை இடவலமாக வெற்றி மிளிரப் பார்த்து விட்டுச் சொன்னாள்: ''நானும், வெற்றி பெறுவேன் என நம்புகிறேன். ஆஸ்டஸை விடு. அவன் பங்குக்குக் கத்த வேண்டும் என அம்மா சைகைக் காட்டியிருப்பாள். கத்தினான். அப்பா மனமுடைந்தது தான் என்னை பாதித்தது.''

''உன் அம்மா...?''

''துணுக்குற்றிருக்கிறாள். மகளாயிருந்தாலும், ஒரு பெண்ணின் பின்னால் போய் ஒவ்வோர் அரிசிக்கும் நிற்க முடியுமா...? தன்மானப் பிரச்னை தான்....! பார்த்துக் கொண்டேயிரு. நாளையே அந்த எடித் தாம்ஸன் நாடகத்தைத் துவங்கலாம் என்று வந்து என்னை நச்சரிக்கத்தான் போகிறாள்....! முதிர்ச்சியற்றவள் அவள்.....!''

''அதற்கு நீ என்ன சொல்லப் போகிறாய்?''

தன் கைகளை என்னிடமிருந்து உருவிக் கொண்டு முடிவாய் சொன்னாள்: ''முடியாதென்பேன். அது ஒரு கனமற்ற கதை. அம்மாவால் அந்த பாத்திரத்திலெல்லாம் நிச்சயம் சோபிக்க முடியாது. படு தோல்வி நிச்சயம்.''

தாயென்றும் பாராமல் நடுநிலையாய் அவள் சொன்ன இப்பதிலைக் கேட்டதும், ஓர் எண்ணம் என்னுள் ஓடி மறைய மெலிதாய் சிரித்தேன். கட்டுப்படுத்த முடியவில்லை.

''என்ன சிரிப்பு...?'' - பதில் சொல்லத்தான் வேண்டும் என்பது போல் கேட்டாள் அவள்.

''இப்போது தான், உன்னை நம்பி சொத்தையும் இந்தக் குடும்பத்தையும் உன் தாத்தா ஏன் விட்டுச் சென்றார் என்பது எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாய் புரிகிறது'' என்று, ஒரு சிறு இடைவெளி கொடுத்து சொன்னேன்: ''நீ, அந்தக் கருங்கல் கிழவரிட மிருந்து பிடுங்கப்பட்ட ஒரு சில்லு, சோஃபியா....!''

# 21

இந்தக் களேபரத்தையெல்லாம் பார்த்து ரசிக்க ஜோஸஃபை னால் இயலாமல் போய்விட்டதே எனும் எண்ணம்தான், இச் சமயத்தில் எனக்குள் விளைந்த ஒரே ஓர் ஆழ்ந்த வருத்தமாய் அமைந்தது. அவள் மட்டும் இருந்திருந்தால், இக்கூட்டம் ஆடிய ஆட்டத்தை அந்த அளவுக்கு அனுபவித்திருப்பாள். இது மட்டுமல்ல....! அவள் விரைவாக குணமாகி விட்டதால் எந்நேரத் திலும் மருத்துவமனையிலிருந்து விடுவிக்கப்பட்டு வீட்டுக்கு வந்து விடலாம் எனும் நிலை உருவாகியிருந்தபோதி லும், லியோனைட் குடும்பத்தில் நடந்த இன்னொரு சம்பவத்தையும் அவள் இருந்து ரசிக்க முடியாமலேயே போய் விட்டது....! தவறவிட்டு விட்டாளே என்று இதிலும் எனக்கு வருத்தம்தான்!

சோஃபியா மற்றும் ப்ரெண்டாவுடன், வீட்டின் பின்னாலிருந்த வசந்தமயமான தோட்டத்தில், ஓர் இனிய காலைப் பொழுதில் சிற்றுண்டி அருந்தச் சென்றிருந்தேன். அச்சமயம் ஒரு கார் நல்ல வேகத்தில் வந்து வீட்டு வாசலில் நின்றது. முதன்மை இன்ஸ்பெக்டர் டேவரெனரும், லாம்ப்'பும் இறங்கினர். வீட்டுக்குள் நுழைந்தவர்கள், விறுவிறுவென படியேறி மேலே போனார்கள்.

அவர்களைக் கண்டதும், ப்ரெண்டா பேயறைந்தாற் போல் ஆனார். காரை வெறித்தபடி அப்படியே சில நொடிகள் அமர்ந்திருந்தார். அவரிடமிருந்த இயல்பு நிலை போயிற்று. ''அதே போலீஸ்காரர்கள்'' என குரல் நடுங்கச் சொன்னார். ''மறுபடியும் வந்து விட்டார்கள். எல்லாம் முடிந்து விட்டதாகவும், வழக்கினை கை கழுவி விட்டதாகவும் அன்றோ நினைத்திருந்தேன்.''

அவள் கைகளும் கால்களும் நடுங்குவது தெரிந்தது.

ஒரு பத்து நிமிடங்களுக்கு முன்னால் தான் எங்களுடன் வந்து இணைந்துக் கொண்டிருந்தார், ப்ரெண்டா. பனித் தாக்கத்துக்காக

மழை கோட் அணிந்து வந்தவர், ''சுதந்திரக் காற்றை சுவாசித்து உடற்பயிற்சி செய்யாவிடில், நான் பைத்தியமாகிப் போவேன். ஒரு சிறு நடை சென்று வரலாம் என வாசல் கதவைத் தாண்டினால், அங்கு, மேலே விழ என்றே நிருபர் கூட்டம் தவசு கிடக்கின்றது. பிணைக் கைது....! இப்படியே தான் வாழ்க்கை ஆகி விடுமா...?'' என்று கேட்டார். எங்களருகிலும் அமர்ந்துக் கொண்டார்.

''எவ்வளவு நாட்கள் தான் வாசலிலேயே நிற்பார்கள். ஓரிரு தினங்களில் கலைந்துப் போய் விடுவார்கள்'' என்றாள் சோஃபியா. ''நீங்கள் காரில் ஏறி வெளியே போய் இளைப்பாறி வரலாமே....!'' என்றும் ஆலோசனை சொன்னாள்.

''நடந்து ஓடி பயிற்சி செய்ய வேண்டும் சோஃபியா. இல்லையானால் இந்தப் பனியில் ரத்தமெல்லாம் கட்டியாகி நின்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை'' என்றவர், சட்டென்று பேசும் தளம் மாற்றிக் கொண்டு, சற்றே காட்டமாய் பின்வருமாறு கேட்டார்: ''லாரன்ஸைப் பணி நீக்கம் செய்யப்போகிறாயாமே சோஃபியா....! ஏன்?''

''ஆஸ்டஸுக்கு மாற்று ஏற்பாடுகள் செய்கிறோம். ஜோஸஃபைனோ ஸ்விட்சர்லாண்டு கிளம்புகிறாள்'' என்று சோஃபியா அதிராமல் விடை தந்தாள்.

''நீ தேவையற்று லாரன்ஸ் மனதைப் பாதித்து விட்டாய். அவர் மீது நம்பிக்கையற்றுத் தான் நீ இப்படி ஒரு திடீர் நடவடிக்கை செய்துள்ளதாய் அவர் வருந்துகிறார். பாவம்....!''

இதற்கு சோஃபியா மறு பதில் தேவையில்லை எனும் போக்கில் அமர்ந்திருக்கும் போது தான், டேவரெனரின் கார் வந்து நின்று ப்ரெண்டாவை அச்சுறுத்தியது.

குளிரினாலா, இல்லை போலீஸைப் பார்த்ததிலா என்று புரியவில்லை. அந்த அளவு நடுங்கிய வண்ணம், ''என்ன தான் வேண்டுமாம்....? ஏன் மறுபடியும் வந்துத் தொலைத்துள்ளீர்கள்....?'' என்று அவர்கள் மேலே போன வழியைப் பார்த்தபடி ஏறத்தாழ பிதற்றிக் கொண்டிருந்தார் ப்ரெண்டா. ''இன்னும் இன்னும் இங்கு குடைய, உள்ளே என்ன புதையல்களா உள்ளன....?!''

அவர்கள் எதற்கு வந்திருக்கிறார்கள் என ஓரளவு கணித்தேன். நீர்த் தொட்டிகள் நிறைந்திருந்த மொட்டை மாடி அறையிலிருந்து நான் கண்டெடுத்திருந்த கடிதங்கள் பற்றி இது வரை சோஃபியாவிடம் நான் இதழ் பிரிக்கவில்லை. அவற்றை சாட்சியாக எடுத்துக் கொண்டு,

தாமதிக்காது வழக்குத் தொடர, போலீஸ் கூட்டம் முனைந்துள்ள தாகவேபட்டது.

இந்நிலையில், டேவரெனர் மாடியிலிருந்து இறங்கி நடுக்கூடம் வந்து, பின் வீட்டை விட்டு வெளிப்பட்டு பின்புறம் வந்தார். தோட்டத்தின் குறுக்கே விரைவாக இறங்கி நடந்து எங்களை நெருங்கினார். இன்னும் அதிகமாய் ப்ரெண்டா பயப்பட்டு நடுங்கினார். ''அய்யோ....! நம்மை நோக்கியல்லவா வருகிறார்....!'' - நரம்பதிர கேட்டார் ப்ரெண்டா. ''என்ன வேண்டுமாம் இந்த காக்கிச் சட்டைக்கு....!''

எங்களில் ஒருவராக வந்து நின்றுக் கொண்ட டேவரெனர், சட்ட ரீதியாக, போலீஸ் வார்த்தைகளை இட்டு நிரப்பி, கறாராக சொன்னார்: ''உங்கள் கைதுக்கான உத்தரவுடன் வந்துள்ளேன் திருமதி ப்ரெண்டா. கடந்த செப்டம்பர் 19 ஆம் தேதி, அரிஸ்டைட் லியோனைடுக்கு எஸரின் கொடுக்க நீங்கள் களம் அமைத்து உதவியதாக குற்றம் சாட்டப்பட்டுள்ளீர்கள். எங்களுடன் தாமதியாது கிளம்புங்கள். இந்த நொடி முதல் நீங்கள் என்ன பேசினாலும், அவை விசாரணையின் போது சாட்சியமாக எடுத்துக் கொள்ளப்படும் என எச்சரிக்கிறேன்.''

ப்ரெண்டா சுக்கு நூறாகிப் போனார். ''அப்படியேதுமில்லை. பொய். சுத்தப் பொய்'' என அலறினார். பட்டென என் மீது தாவி, தன் இரு கைகளாலும் என்னை இறுக்கமாகப் பிடித்துக் கொண்டார். இந்த பனிக்குளிரிலும் அவருக்கு வியர்த்தது. கண்கள் சொருகின. ''நோ, நோ, நோ...! உண்மையல்ல. அபாண்டம். சார்ல்ஸ்...! சார்ல்ஸ்...! சொல்...! அவர்களிடம் பொய் எனச் சொல் சார்ல்ஸ்....! நான் எஸரின் கொடுக்கவில்லை. அது பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. நான் இவ்விஷயத்தில் அப்பாவி. கட்டுக்கதை கட்டி என்னைப் பலிகடாவாக்க நினைக்கிறார்கள். என்னை இக்குடும்பம் வெறுத்துத் தான் வந்தது என நினைத்திருந்தேன். கடைசியில்... கடைசியில் இப்படிப் பொய் வழக்கு ஜோடித்து.... ஓ, நோ...! எனக்கு ஒன்றும் தெரியாது....!'' - கண்கள் இன்னும் உள்ளுக்குள் சொருக, சற்று மயக்கமானவர் போல ஆனார். ஆனாலும் மீண்டும், ''சார்ல்ஸ்...! என்னை அழைத்துப் போக வேண்டாம் என்று சொல்....! ம்...! சொல் சார்ல்ஸ்...! உண்மை அல்ல. ஆமாம்... உண்மையேயல்ல. நான் என் கணவரின் உயிருக்கு பங்கம் வரும் வகையில் எதுவும் செய்யவில்லை. கடவுளே....!''

ப்ரெண்டாவின் துடிப்பு, நீரிலிருந்து வெளியில் விழுந்த அழகு மீனின் உயிர்த் துடிப்பாயிருந்தது. கண்கொண்டு பார்க்க சகிக்க வில்லை. நம்ப முடியாத பயங்கரம். ஓர் அனாதையின் கதறல். இருந்தாலும் நடைபெறுவதோ சட்டப்படியான நடவடிக்கை. நான் என்ன செய்ய முடியும். என்னைக் கவ்வியிருந்த அவள் கைப் பிடியினை கடினப்பட்டு விலக்கி விட்டேன். கவலையேப்பட வேண்டாம் - நிச்சயம் ஒரு வக்கீலை உடனடியாக ஏற்பாடு செய்கிறேன் - இப்போதைக்கு உடல் நலம் பாதித்துப் போகாத அளவுக்கு அமைதியாயிருந்தால் போதும் - மற்றதை வக்கீல் கவனித்துக் கொள்வார் - என்றெல்லாம் விளக்கம் தந்து, மிரண்டு துடித்த ப்ரெண்டாவை அடக்க முயன்றேன்.

காலம் தாழ்த்தக் கூடாது எனும் அவசரத்தினால், ஆர்ப்பாட்ட மில்லாமல், தன் முஷ்டிகளுக்குள் ப்ரெண்டாவை வசப்படுத்தி ''கிளம்பலாம் திருமதி லியோனைட்ஸ். குளிர் அதிகமுள்ளது. தொப்பி அவசியமா? வேண்டாமா? சரி! கிளம்பலாம்....!'' என்று கூட்டிச் சென்றார் டேவரெனர்.

அவர் முஷ்டியை உதறித் தள்ளி, வெறி கொண்ட பார்வையால் அவரை முறைத்தார் ப்ரெண்டா. கேட்டார் : ''லாரன்ஸ்...?'' - நெஞ்சு ஊஞ்சலாட மூச்சு வாங்கிற்று அவருக்கு. பயம் வெறி இரண்டின் கலவை தரும் தாக்கம். ''லாரன்ஸை என்ன செய்தீர்கள்...?''

''திரு லாரன்ஸ் ப்ரௌனும் கைது செய்யப்பட்டுள்ளார்.''

வாடிப் போனார். அவரின் அத்தனை ஆர்ப்பாட்டமும் அடங்கிற்று. அவர் உடல் தளர்ந்து மடிந்தது. சத்திழந்து நெகிழ்ந்தார். ''நடக்கிறீர்களா? இல்லை தூக்கிச் செல்ல வேண்டுமா?'' என டேவரெனர் எகிற, சிரமப்பட்டு ஸ்திரமானார் ப்ரெண்டா. கண்களில் கண்ணீர் பொலபொலவென வழிந்தது. அமைதியாய் முதன்மை இன்ஸ்பெக்டரைப் பின்தொடர்ந்து வாசலை அடைய, ஏற்கெனவே அங்கு திரு லாம்ப், லாரன்ஸைக் கைது செய்து வந்து காத்திருந்தார். நால்வரும் காருக்குள் அடங்க, அதீத வேகத்தில் புறப்பட்டுப் பறந்தது அந்தப் போலீஸ் கார்.

நீண்ட உள் மூச்சு வாங்கி சோஃபியா பக்கம் திரும்பினேன். அவள் முகம் வெளிறி, கிலேசம் படர்ந்திருந்தது. ''இது பயங்கரம் சார்ல்ஸ்....!'' என வருந்தினாள். ''அதி பயங்கரம்....!''

''தெரிகிறது சோஃபியா....!''

''ப்ரெண்டாவுக்காக வாதாட முதல் தர வக்கீலைத் தான் நீ நியமிக்க வேண்டும். யார் கொலையாளி என தீர்ப்பாகும் வரை வாதிக்கும் பிரதிவாதிக்கும் அத்தனை சட்ட அனுகூலங்களும் சென்று அடைதல் அவசியம். இல்லையா...?''

''நிச்சயமாக...!''

''எனில், சந்தேகத்தின் அடிப்படையில் கைதாகியிருக்கும் ப்ரெண்டாவுக்குத் தேவையான அத்தனை சட்ட வசதிகளும் தரப்பட வேண்டும். இதை நான் சோஃபியாவாகச் சொல்லவில்லை சார்ல்ஸ். லியோனைட் தாத்தாவின் பிரதிநிதியாகச் சொல்கிறேன்'' - அவள் குரல் வழுக்கியது.

ஏற்றுக் கொண்ட நான், ''கைது என்பது என்ன என்று எனக்கும் தெரியாது சோஃபியா....!'' என்றேன். அவள் மௌனமாயிருந்தாள்.

''அதாவது, நடுக் கூடத்தில் ஒரு குடும்பத்தின் முக்கிய நபர் கைதாகும் போது ஏற்படும் உணர்ச்சிப் போராட்டம் - இதோ இப்போது மலங்க மலங்கப் பார்த்தோமே, இது போன்ற உணர்ச்சிக் கொந்தளிப்பு நானறியாதது'' என்றேன்.

இருவரும் கார் பறந்த திசையையே நோக்கியபடி வார்த்தைகளற்று நின்றுக் கொண்டிருந்தோம். ஆதரவற்ற ப்ரெண்டா முகத்திலிருந்த பீதி என்னை அறைந்தது. கலப்பற்ற சுத்த பீதி. நியாயமான ஒருவர் அபாண்டமாய் பழி சுமத்தப்பட்டு நிராதரவாய் நிற்கும் போது எதிர் கொள்ளும் கலப்படமற்ற பீதி. ப்ரெண்டா ஒரு சண்டைக் கோழி அல்ல. கொலை செய்யும் தைரியம் அவருக்கு இருக்குமா என பல முறை நான் நினைத்துப் பார்த்து வியந்ததுண்டு. அவர் நேரடியாய் கொலை செய்திருக்க நியாயமில்லை. லாரன்ஸ், தன் மனம் விரும்பும் இளையவளை சுருட்டிக் கொள்வதற்காக, தன் படபடக்கும் அசிங்கமான குணாதிசயத்தையும்-வென்று, வெற்றிகரமாக, எஸரின் ஏற்றி, பெரியவரைக் கொன்றிருக்கலாம்.

இவ்விதமாய் குழப்பமுற்று நான் நின்றிருக்க, ''எல்லாம் முடிந்தன'' என்று விரக்தியாய் சொன்ன சோஃபியாவின் வார்த்தைகள் என்னை இடைமறித்தன. வாசலையே கூர்மையாகப் பார்த்து நின்றிருந்தவள், ''அவர்களை இப்பொழுது கைது செய்ய என்ன அவசரம்?'' என நான் எதிர்பார்த்திருந்த புத்திசாலித்தனமான கேள்வியைக் கேட்டாள். ''நான் தேவையான ஆதாரங்கள் இன்னும் கிடைக்கப் பெறவில்லை என்றல்லவா எண்ணியிருந்தேன்....!''

''சில முக்கிய ஆதாரங்கள் வெளிச்சத்துக்கு வந்துள்ளன'' என்றேன். ''கடிதங்கள்....!''

''அவர்களுக்கிடையிலான காதல் கடிதங்கள்...?''

''ஆமாம்....!''

''அந்தக் கடிதங்களையா இந்த இரு முட்டாள்களும் இன்னும் சேகரித்து வைத்திருக்கின்றன....!'' என கோப வியப்புக் காட்டினாள் சோஃபியா.

சரியான அடைமொழி. முட்டாள்கள். காதல் முட்டாள்கள். மறைத்து வைத்த காதல் கடிதங்கள் உண்டாக்கும் அவல நிலையை, எத்தனை செய்தித்தாள்களில், நாடகங்களில் பார்த்திருந்தாலும், அந்த அனுபவத்தின் மூலம் உஷார் படாத அறிவிலிகள். காதலர் கைப்பட எழுதிய வார்த்தைகளின் மீதான தீவிர ஆசையும் காமமும் - காதல், எழுதி சாசனமாக்கப்பட்ட திருப்தி தரும் ஏகாந்தமும் - காதலர்களை, அவர் தம் காதல் கடிதங்களை அடைக்காக்கச் செய்து விடுகின்றன.

''விரும்பத்தகாத உறவை, அருவெறுப்பான தொடர்பை நியாயப்படுத்தும் கடிதங்கள் அவை, சோஃபியா'' என்றேன் நான். ''அவற்றை இப்போது கிளறுவதில் கிட்டப் போவது ஒன்றுமில்லை. விட்டு விடு. சொல்லப் போனால், இதைத்தானே நாம் இத்தனை நாட்களாக எதிர்பார்த்திருந்தோம், இல்லையா! நான் மீண்டும் திரும்பி இங்கு வந்ததும் நிகழ்ந்த நம் முதல் சந்திப்பில், இதைத் தானே நீ மரையோ உணவகத்தில் குறிப்பிட்டாய்! நீ குறிப்பிட்ட அந்த வார்த்தைகள் இன்னும் என் நினைவில் உள்ளன.....!'' என்ற நான் அவற்றை அப்படியே திருப்பிச் சொன்னேன்: ''சரியான நபர் அவரைக் கொன்றிருக்கும் பட்சத்தில், பாதகமில்லை.... என்றாய். அல்லவா....! அவரைக் கொல்ல உடனடி உரிமையுள்ளவர் ப்ரெண்டா தானே....!''

''பேசாமலிரு சார்ல்ஸ். என்னைக் குழப்பாதே. அவருக்கு ஏதேனும் பகையிருந்து, அந்தப் பகைவன் கொன்றிருக்கும் பட்சத்தில்... எனும் கோணத்தில் சொன்ன வார்த்தைகள் அவை. தயவுசெய்து உன் பங்குக்கு குழப்பாதே.''

''வேண்டாம்! குழப்பவில்லை! குடும்பத்தினர் அனைவரும் இப்போது ஏறத்தாழ விடுவிக்கப்பட்டதாகவே ஆகி விட்டது. இனி ஏன் தாமதம்? நாம் திருமணம் கொள்ளலாமில்லையா...? இனியும் என்னைக் காக்க வைக்காதே....!''

திரும்பி வெறுப்பாய் என்னைப் பார்த்தாள். ''ஆம்....!'' என்றவள், 'ஆம்...! இக் கொலை வழக்கிலிருந்து மீதி எல்லோரும் தப்பித்து விட்டதாகவே தோன்றுகிறது' என்று தனக்குள் அழுந்த சொல்லிக் கொண்டு விட்டு, என்னைப் பார்த்து, ''அப்படியா...? நாமெல் லோரும் கழற்றி விடப்பட்டதாகவா சொல்கிறாய்...?'' என்று கேட்டாள்.

''பின்....?'' என்று ஊர்ஜிதப்படுத்திய நான், ''கொலைக்கான இலக்கு உங்கள் ஒருவரிடமும் காணப்படவேயில்லை சோஃபியா. இதை துப்பறியும் இலாக்காவும், போலீஸூம் ஏற்றுக் கொண்டு விட்டன. ஆதாரத்துடன் இலக்கும் கொண்டிருந்த இருவரும் இப்பொழுது கம்பிகளுக்குப் பின்னால்....! பிறகென்ன.....?''

அவள் முகம் சட்டென இறுகிற்று. ''மற்றவர்களை விட்டுத் தள்ளு சார்ல்ஸ்...'' என்றவளின் குரல் சற்று வெறி கொண்டது. ''எனக்கு இலக்கு இருந்தது சார்ல்ஸ். தாத்தாவின் உயிர் பறிக்க எனக்கு ஆணித்தரமான காரணமிருந்தது சார்ல்ஸ்'' என்றாள்.

நான் பின் வாங்கினேன். அவள் வார்த்தைகள் மரண அடியாய் விழுந்தன. தாத்தாவின் உயிர் பறிக்க தனக்கு ஆணித்தரமான காரணமிருந்ததாய் விளம்பரப்படுத்துகிறாளே....! பைத்தியம் பிடித்து விட்டதா இவளுக்கு....?! இதை மட்டும் போலீஸ் கேட்டிருந்தால்.....! ஓ நோ...! ''உளறாதே சோஃபியா....! உன் தாத்தாவைக் கொல்ல உனக்கென்ன உள் எண்ணம் இருந்தது...? உனக்கும் அவருக்கும் என்ன பகை....?''

''பகையேதுமில்லை. ஆனால் சொத்து....! சொத்து இருந்ததே.....!''

''இந்தச் சொத்து உனக்கு மட்டுமில்லையே சோஃபியா. குடும்பத்திலுள்ள அனைவருக்குமன்றோ இருந்தது. அந்தச் சொத்தும் எல்லோருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டதாகத் தானே ஒரு கானல் நிலையை பெரியவர் உருவாக்கி வைத்திருந்தார். புது உயில் பற்றி யாரும் அறியாதபோது எங்கிருந்து வரும் கொலை வெறி?''

ரகசியமாய் சொன்னாள் : ''புது உயிலின் சாராம்சம் - அதாவது தாத்தாவின் அத்தனை சொத்தும் எனக்கே என்ற உண்மை - எனக்கு முன்னமேயே தெரியும் சார்ல்ஸ்....!''

''எ... எ... என்ன...? எப்படி...?''

''அவரே என்னிடம் சொல்லியிருந்தார்....!''

''எப்போது...?''

''அவர் கொல்லப்பட்ட இரு வாரங்களுக்கு முன்னால்.'' நான் ஆணியிலறைந்தாற் போல் ஆனேன். தொடர்ந்தாள் : ''ஒரு நாள் கூப்பிட்டனுப்பியிருந்தார். அவர் அறைக்குப் போயிருந்தேன். 'எல்லா சொத்துக்களையும் உனக்காகவே விட்டுவிட்டேன் சோஃபியா. என் காலத்துக்கு பிறகு இக்குடும்பத்தைச் சாயாது பார்த்துக் கொள்வது உன் கையில் தான் உள்ளது' என்று அதிரடியாய் சொல்லி விட்டு அனுப்பி விட்டார். இப்போது சொல்....! அத்தனை சொத்தும் என் கையில்...! என்னிடம் கொலைக்கான இலக்கு தென்பட வில்லை....!''

விக்கித்துப் போனேன். ''இவ்விஷயத்தை நீ என்னிடம் சொல்லவேயில்லை சோஃபியா'' என குற்றம் சாட்டினேன்.

''தேவையில்லாமல் போயிற்று. எல்லோரையும் அழைத்து, அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டதாய் ஓர் உயிலையும் வாசித்து, தானும் கையொப்பமிட்டு சாட்சி கையொப்பங்களையும் பெற்றுக் கொண்ட போது, அவர் ஏதோ ஞாபக மறதியாலோ அல்லது வயதான காரணத்தால் எதையோ கற்பனை செய்துக் கொண்டோ, எனக்கு முழுச் சொத்தையும் எழுதி வைத்ததாய் சொல்லி விட்டார் எனத் தான் எண்ணினேன். அப்படியே சொத்து முழுதும் எனக்கெனவே உயில் எழுதியிருந்தாலும் அது தொலைந்து போயிருக்குமோ என்றும், இனி திரும்பாது எனும் நிலையில் ஒரு வேளை இப்படி எல்லோருக்கும் பிரித்து இன்னொன்று எழுதி விட்டாரோ என்றும் எண்ணினேன்'' என்றவள், ''சொத்து, எனக்கென மட்டுமே ஸ்தாபிக்கபட்ட அந்த உயில், திரும்ப கிடைத்து விடக் கூடாது என பிரார்த்தனை செய்திருக்கிறேன் சார்ல்ஸ்...!'' என்று தழுதழுத்தாள். ''காரணம் : நான் பயந்திருந்தேன்''

''பயம்...? ஏன்...''

''தாத்தா கொலையானது தான் காரணம். ''

லியோனைட்ஸ், தன் முழுச் சொத்தினையும், சோஃபியாவுக் கென்று மட்டுமே ஸ்தாபித்து எழுதிய உயில் மட்டும் கிடைக்கப் பெற்றால், தன் மீது கொலைக்கான இலக்கு அறியப்பட்டு, அனைவரின் சந்தேகப் பார்வையும் தன் மீது தான் நிலைக்கும் என்று ஏற்கெனவே எடை போட்டு, அதை இத்தனை நாட்கள் மனத்துள் போட்டுப் பூட்டி வைத்திருந்த சோஃபியாவின் தீர்க்க தரிசனம் என்னை வியப்பில் ஆழ்த்திற்று. என்னை உடனடியாய் திருணம்

செய்துக் கொள்வதை தள்ளி வைத்து, உண்மையைக் கண்டறிந்தே ஆக வேண்டும் என அவள் காட்டி வரும் தீவிரத்தின் நேர்மை எனக்குத் தெளிவாயிற்று. உண்மையைத் தவிர வேறு ஏதும் அவளை அமைதி யடையச் செய்யாது என்று சொல்லியிருக்கிறாள். எத்தனை காதலும் கண்ணியமும் கொண்ட வேண்டுகோள் அது என்பதும் தெளிவாயிற்று.

நாங்கள் திரும்பி வீட்டிற்குள் நுழைய நடந்த போது, திடீரென்று, தன் ஆரம்பக் கால பயம் பற்றி குறிப்பிடும்போது சோஃபியா சொல்லிருந்த வேறு சில வார்த்தைகள் என்னுள் ஒளிர்ந்து நின்றன. 'நானும் கொலை செய்யலாம்....! ஆனால் அந்தக் கொலை நிச்சயம் அவசியமான தேவையான ஒன்றாய்த்தானிருக்கும்' என்பதே அவை.

# 22

தோட்டத்தின் பின்னாலிருந்து வந்துக் கொண்டிருந்த ரோஜரும் க்ளெம்சியும், எங்களை நோக்கி புத்துணர்ச்சி கொண்டோராய் நெருங்கினார்கள். ரோஜர் ஓர் உத்வேகத்துடனும் பொங்கிய ஆவலுடனும் என்னை நோக்கி ஓட்டமும் நடையுமாய் வந்தார். க்ளெம்சி கடுமையாயிருந்தார்.

''வணக்கம் காதலர்களே....'' என்ற ரோஜர், ''கடைசியில் முடிந்தது....! வாவ்...! அந்த விவஸ்தையற்ற பெண்ணைக் கடைசி வரை கைது செய்யாமல் கை நழுவ விட்டு விடுவார்களோ என பயத்திலேயே இருந்தேன்...! எதை எதிர்பார்த்து இத்தனை தாமதம் செய்தார்களோ....! ஒழியட்டும். இப்பொழுதாவது மடக்கினார்களே. அவளையும் அவளுடைய அந்தக் கையாலாகாதக் கள்ளனையும் தூக்கிலிட வேண்டும்...!'' - கோபம் தீர்ந்தவராய் பேசிக் கொண்டிருந்தார் ரோஜர்.

க்ளெம்சியின் கோபம் கூடியது : ''ரோஜர்..'' என அதட்டினார். ''அநாகரீகமாய் நடந்துக் கொள்ள வேண்டாம்.''

''அநாகரீகம்...? ஹஹ்ஹா...'' என அடித்தொண்டை அகல சிரித்தார் ரோஜர். ''நாடி தளர்ந்துப் போய் தளர்ச்சியிலிருந்த அப்பா, எத்தனை தூரம் இவளை நம்பியிருந்திருப்பார். அவரை, நெஞ்சில் துளியும் ஈவிரக்கமின்றி விஷம் வைத்து சாய்த்துள்ளாள் இவள். காரணம் : காதல். தூ...! சதைப் பித்தர்கள்......! இப்படிப்பட்ட இரு பாதகர்கள் கைது செய்யப்பட்டுள்ளது எத்தனை நியாயம் - தர்மம் என்கிறேன் நான். நீயோ இதை அநாகரீகம் என்கிறாய்....! அவளின் தூக்குத் தண்டனையை நான் நிறைவேற்றப் போகிறேன் பார்....!''

க்ளெம்சியிடம் மேலும் பேசுவதைத் தவிர்த்த ரோஜர், சோஃபியா பக்கம் திரும்பி, ''கண்மணி....! போலீஸ் வந்து கைது செய்யும் போது ப்ரெண்டா உன்னுடன் தானேயிருந்தாள்...? கைதினை அவள் எப்படி எடுத்துக் கொண்டாள்...?'' எனக் கேட்டார்.

காதுகளைப் பொத்திக் கொண்டு, ''கொடுமை'' என்றாள் அவள். ''பயந்துச் சிதறியிருக்கிறாள்.''

''ரொம்பச் சரி'' என்ற ரோஜரை, ''வேண்டாம் ரோஜர். பழி வாங்கும் நோக்கில் இருக்கவே கூடாது'' என்று திருத்தினார் க்ளெம்சி. அவர் கண்டு கொள்வதாகவே இல்லை. ''அவளைத் தண்டனை தந்து கொல்லக் கூடாது. அணுஅணுவாக.... அணுஅணுவாக வதைக்க வேண்டும்'' என்று குரூரமானார். தொடர்ந்தார்: ''பழி வாங்கக் கூடாது என்பது சரி தான் க்ளெம்சி. ஆனால் என் உணர்வுகள் உனக்குப் புரியவில்லையே....! புரியவும் புரியாது. ஏனென்றால் இறந்தது உன் தகப்பனார் இல்லை. என் தகப்பனார். நான் என் உயிருக்கும் மேலாக எண்ணி பூஜித்த தகப்பானார். உனக்குப் புரியுமா என்ன....!''

மௌனமான க்ளெம்சியை மெதுவாய் சீண்டினார் ரோஜர் : ''கண்ணே....! ஒரு வேளை, நான் தான் அப்பாவுக்கு விஷம் வைத்துக் கொன்றதாய் வைத்துக் கொள்வோம்....''

இவ்வாறு நகைச்சுவையாய் ஆரம்பித்த ரோஜரின் இதழ்களைத் தன் கைகளால் பொத்திய க்ளெம்சி, ''விளையாட்டுக்குக் கூட இப்படிப் பேச வேண்டாம் ரோஜர். அதுவும் வழக்கு நடந்துக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் பேசும் எல்லாமும் கணக்கில் கொள்ளப்படும்'' என்று கலக்கமானார்.

''உனக்குக் கூட பதறத் தெரியுமா....!'' என்று மீண்டும் சீண்டிய ரோஜர், க்ளெம்சியை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு, ''கவலைப் படாதே டார்லிங். இந்த அத்தனை இக்கட்டுக்களிலிருந்தும் நாம் விடுதலை அடையும் நாள் மிக சமீபித்து விட்டது....!'' என்றார்.

வீட்டுக்குள் நுழைந்தோம். பெரியப்பாவும் பெண்ணும் முன்னுக் குச் சென்று விட, ''இனி எங்களைத் தடைபடுத்த மாட்டார் களில்லையா...?'' எனும் க்ளெம்சியின் கேள்வியினால் நாங்களிரு வரும் நுழைவிலேயே நின்றோம்.

''வெளியேறி விட வேண்டும் என்று அத்தனை அவசரமா...?'' - கேட்டேன்.

''இல்லையென்றால் துருப்பிடித்து விடுவேன்.''

நான் அவரை ஆச்சரியமாய் பார்த்தேன். இது தான் உண்மை என லேசாய் என்னைப் பார்த்து தலையசைத்து விளக்கி, ஆதரவற்றப் பார்வையையும் வீசினார். ''என் கதையைத் தான் சொல்லி யிருக்கிறேனே சார்ல்ஸ்....! அதிலிருந்து நான் எப்படி வாழ்க்கையோடு போர் புரிந்து வருகிறேன் என விளங்கவில்லையா....?'' என்று

என்னை அடிக்கண்களால் பார்த்துக் கொண்ட க்ளெம்சி, "எங்கள் சந்தோஷத்துக்காக, நிம்மதிக்காக, இடையூறு அற்ற நிர்சலன தூக்கத்துக்காக, நான் பல வருடங்களாக வாழ்க்கையோடு யுத்தம் நடத்தி வருகிறேன் சார்ல்ஸ். இங்கேயே இந்த இங்கிலாந்திலேயே எங்களிருவரையும் இருக்கச் சொல்லி விடுவார்களோ என நானும் அவரும் அவ்வளவு பயந்திருக்கிறோம். சோஃபியா, ரோஜருக்குக் கொஞ்சம் பணம் வர வழி செய்து, இங்கு தான் வசதியும் உதவியும் கிட்டும் என போதித்து, இந்த வீட்டிலேயே மீண்டும் அடைத்து விடுவாளோ எனும் பயம் வேறு எங்களை அரித்தெடுக்கிறது. ரோஜரிடம் உள்ள கஷ்டம் என்னவென்றால், சொல் பேச்சைக் கேட்க மாட்டார். ஏதாவது அவருக்கு செயல்படுத்தத் தோன்றும் - ஆனால் அத்தனையும் தோல்வி தரும் செயல்களாகவே முடியும். இப்படி அனுபவித்து அனுபவித்து அலுத்து விட்டேன் திரு சார்ல்ஸ்....! அவர் அடி மனதில், ஒரு பெண்ணென்றால், அவளின் பிரதான சந்தோஷம் பொருளும் பணமும் தான் என்று வேறு ஓர் எண்ணம் உள்ளது. என்னைப் பொறுத்தமட்டில், அது பொய் என நிரூபிக்காமல் ஓய மாட்டேன் சார்ல்ஸ்....! இக்கூட்டத்திலிருந்து பிய்த்துக் கொண்டு, எங்காவது தூர தேசம் சென்று, எனக்கே எனக்கு என்று அவரைக் கைக்குள் அடக்கி வாழ்ந்தால் தான் நான் அமைதியாவேன்."

என்னைத் துணுக்குற வைக்கும் துணிச்சலுடன் விரைவான கீழ்க் குரலில் பேசி ஓய்ந்தார் க்ளெம்சி. வாழ்வின் நுனியில் நின்றுக் கொண்டிருந்தாலும், ரோஜரின் மீது தனக்கே என இவர் கொண்டிருக்கும் உரிமையும், லாயக்கற்றுள்ள அவர் மீது இன்னும் கொண்டுள்ள துணிச்சலான நம்பிக்கையும் அசாத்தியமாயிருந்தன.

எடித் என்னிடம் முக்கியத்துவம் கொடுத்து குறித்துக் காட்டிய, 'வெறும் வழிபாடு மற்றும் எப்போதும் ஆபத்தானது' எனும் வசனம் இப்போது நினைவுக்கு வந்தது. க்ளெம்சியை மனதில் கொண்டு தான் அப்படி சொல்லியிருப்பாரோ என சிறு சந்தேகமும் எழுந்தது.

எத்தனை தான் தன் மனைவி மீது ரோஜர் பேரவா கொண்டு வாழ்ந்திருந்தாலும், அவரையும் விட, தன் தந்தையைத் தான் தலையில் வைத்து தாங்கியிருக்கிறார் என்பது புலனாயிற்று. இதிலிருந்து ரோஜரைப் பிரித்தெடுத்து, தனக்கு மட்டுமே என்று ஆக்கிக் கொள்வதில் க்ளெம்சிக்குள் அவசரம் இருந்திருக்கிறது. ரோஜரின் மீதான காதல் மட்டுமே, அனைத்தையும் இழந்து விட்டிருந்த க்ளெம்சியை, வாழ வைத்துள்ளது. ரோஜர், இவருக்குக்

குழந்தை; காதலன்; கணவன்; எல்லாமும் ; எடித் பாணியில் சொல்லப் போனால், வழிபாடும்....! க்ளெம்சி கொஞ்சமாய் உள்ளே நடந்து செல்லத் துவங்கினார். நான் இறுகிய அவர் முகத்தைப் பார்த்த வண்ணமேயிருந்தேன்.

அப்போது, வாசல் கதவு வரை ஒரு கார் வந்து நின்றது.

''ஹாய்...!'' என்று சந்தோஷத்தில் அலறியே விட்டேன். அதே உற்சாகத்தில் ''ஜோஸஃபைன். வந்து விட்டாள்....!'' என கத்தினேன். வீடு முழுதும் இது எதிரொலித்திருக்க வேண்டும். அப்படி ஒரு சந்தோஷ எக்காளம்....!

ஜோஸஃபைனும் மகதாவும் இறங்கினர். தலையைச் சுற்றி ஒரு கட்டு இருந்ததே தவிர மற்றபடி வாடிக்கையாயிருந்தாள் ஜோஸஃபைன்.

காரிலிருந்து கீழே இறங்கி கால் நிலம் பட்டதும், முதல் வேலையாய் பின்னால் ஓடையில் நீந்தும் தங்க மீன்களைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று அடம் பிடித்தாள்.

''கண்ணம்மா....'' என்று கெஞ்சிய மகதா, ''முதலில் உள்ளே வாம்மா. வந்து படுத்து ஓய்வெடுத்துப் பிறகு போய் பார்க்கலாம். எல்லாம் நன்றாய் தானிருக்கின்றன. வா. முதலில் கொஞ்சம் சூப் வைத்து தருகிறேன். குடி'' என்று மருகினாள்.

''போதும்மா...'' என்று கடுப்பானாள் ஜோஸஃபைன். ''எனக்கென்ன இப்பொழுது...? நான் நன்றாய் தானிருக்கிறேன். எனக்கு இந்த சூப்பெல்லாம் பிடிக்காது....!''

மகதாவால் மேற்கொண்டு ஒன்றும் பேச முடியவில்லை. பிடிவாதக் குழந்தை. சில நாட்களுக்கு முன்பே மருத்துவமனை யிலிருந்துக் கிளம்பி வீட்டுக்கு வந்திருக்க வேண்டியவள் தான், இந்த ஜோஸஃபைன். டேவரெனர் தான் இவள் பாதுகாப்புக் கருதி, குணமான நிலையிலும் சற்று தாமதமாக்கும்படி வேண்டியிருந்தார். அவர் சந்தேகப்பட்டவர்கள் கம்பிகளுக்குப் பின்னால் தள்ளப்படும் வரை, ஜோஸஃபைனின் உயிரோடு விளையாட டேவரெனர் விரும்பவில்லை.

''திருமதி பிலிப். நான் கவனித்துக் கொள்கிறேன். கவலை வேண்டாம். மருத்துவமனை வாசமும் சூழலும் போக, புதுக் காற்று உதவும்'' என்றேன்.

இருவரும் பின்புறமிருந்த ஓடைக்குச் சென்றோம். ''ஜோஸஃபைன்....! நீ இங்கில்லாத போது என்னவெல்லாம் நடந்து

முடிந்து விட்டன தெரியுமா...?'' என்று பேச்சை ஆரம்பித்தேன். அவள் பதிலேதும் சொல்லவில்லை. ஓடைக்குள் நீந்தும் தங்க மீன்களின் மீதே கண்களைப் பதித்திருந்தாள்.

''ஃபெர்டினேன்டை'க் காணவில்லை....'' என்று அறிவித்தாள்.

''யாரது ஃபெர்டினேன்ட்....?''

''அவனுக்கு மட்டும் தான் நான்கு வால்கள் இருந்தன.''

''ஓ....! நான்கு வால்கள் கொண்ட மீனா....! ஆச்சரியம்....!'' என்ற நான், ''அதோ...! அந்த மஞ்சள் நிற மீனும் தான் எத்தனை அழகு.....!'' என்றேன்.

''அது ஒரு சராசரி மீன் தான் சார்ல்ஸ்....!'' என்றவள், ''அதோ...! அதன் பெயர் ஷெபுன்கின். ரொம்ப கிராக்கி. விலையும் கூட. எனக்கு ரொம்பவும் பிடித்த வகை.''

''ஏன் ஜோஸஃபைன். இங்கு சில முக்கிய திருப்பங்கள் நடந்துள்ளதாய் சொல்கிறேன். அறிய விருப்பமில்லையா...?'' என்று மீண்டும் கேட்டேன்.

''எல்லாம் எனக்குத் தெரிந்தவை தான்...!'' என உத்தரவாயும் அதே சமயம் ஓர் அலுப்புடனும் சொல்லி, வழக்கம்போல் என்னைத் திகைக்க வைத்தாள்.

''வேறொரு புது உயில் கண்டறியப்பட்டுள்ளது. அதன்படி அத்தனை சொத்துக்களும் சோஃபியாவுக்கே செல்கின்றன.''

''ம்ம்...!'' - ஏற்றுக் கொண்டாள். ''வரும் வழியில் அம்மா சொன்னாள். ஆனால் எனக்கு ஏற்கெனவே தெரியும்.''

''மருத்துவமனையில் வந்த உறவினர்கள் யாராவது பேசிக் கொண்டார்களா....?''

''சேசே...!'' என்று, தன் திறமை அவ்வளவு தாழ்ந்தது இல்லை என்பது போல மறுத்தாள். ''தாத்தா, சொத்தினை சோஃபியாவுக்கு என்று முடிவு செய்தது தெரியும் என்றேன். ஒரு நாள் அவர் சோஃபியாவை அழைத்து இந்த முடிவினை சொல்லிக் கொண்டிருந்தார். கேட்டேன்.''

''ஒட்டுக் கேட்டாயா....?''

''அது எனக்குப் பிடிக்கும்.''

''நாகரீகமற்ற செயல் அது. இனி பண்ணாதேம்மா. ஒட்டுக் கேட்பவர்களைப் பற்றி அவதூறுதான் பேசுவார்கள்.''

''இதையேத்தான் இந்த நானியும் சொல்லிக் கொண்டே யிருக்கிறாள். கதவு கதவாய் நின்று கேட்பது பாவமாம்....!''

''அவள் சரியான அறிவுரை தான் தருகிறாள்....!''

''பூஃப்ப்ப்....!'' என்று விட்டேற்றியாய் பழித்தாள் ஜோஸஃபைன்.

நான் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை மாற்றிக் கொண்டு தொடர்ந்தேன்: ''கொஞ்சம் காலந்தாழ்த்தி வந்து விட்டாய் ஜோ....! சற்று நேரத்துக்கு முன்னால் தான் முதன்மை இன்ஸ்பெக்டர், ப்ரெண்டாவையும் லாரன்ஸையும் கைது செய்து அழைத்துப் போனார்.''

துப்பறிதலிலேயே வாழ்ந்து வரும் ஜோஸஃபைனின் மூளைக்கு இத்தகவல் சிலிர்ப்பேற்படுத்தும் என்று கருதித் தான் சொன்னேன். ஆனால் அவளோ, ''தெரிந்ததையே சொல்லிச் சொல்லி அறுக்காதே சார்ல்ஸ்....!'' என என் மூக்குடைத்தாள்.

''அளக்காதே. உனக்குத் தெரிந்திருக்க வாய்ப்பேயில்லை. இதோ, இப்போது தான் அது நடந்து முடிந்தது.''

''நடந்து முடிந்தாகி விட்டதில்லையா...! பிறகென்ன ரகசியம்....!'' என்று கேட்டாள். யாரும் அறியாத ரகசியங்களை அறிந்துள்ள எனக்கா, நடந்து முடிந்ததாய் நீ கூறும் இது தெரியாமல் போயிருக்கும் எனும் ஏளனம் வெடித்தது. தொடர்ந்தாள் : ''போலீஸ் துரித ஊர்தி நாங்கள் வரும்போது எங்களைக் கடந்துத் தான் போனது. முதன்மை இன்ஸ்பெக்டர், அந்தத் தவறான காலணி அணிந்திருந்து ராணுவத்தான், ப்ரெண்டா, லாரன்ஸ் எல்லோரும் உள்ளேயிருந்தனர். கைதாகி விட்டார்கள் என்பது தெளிவானது. சட்டப்படிதானே கைது செய்யப்பட்டார்கள்....?''

ஆமாம் என்ற நான், ''அவரிடம் கடிதங்கள் பற்றிய ரகசியத்தைச் சொல்ல நேர்ந்து விட்டது ஜோ...'' என்று மன்னித்து விடு என வேண்டும்படி சொன்னேன். ''நீர்த் தொட்டிகளுக்குப் பின்னாலிருந்து அவற்றைக் கண்டெடுத்தேன். அக்கடிதங்களுக்காகத் தான் நீ தாக்கப்பட்டதாயும் உணர்ந்துக் கொண்டோம்....!''

அவள் கைகள் தன்னிச்சையாக தலையை அடைந்து பாதிக்கப் பட்ட தலைப் பகுதியை லேசாய் தடவித் தந்தன. ''நான் இறந்திருக்க வேண்டும்...!'' என்று முணுமுணுத்தாள். ''அந்த அளவு ஆழமான காயம்...!'' தொடர்ந்தாள்: ''இங்கு இரண்டாவது கொலை நிகழ நேரம் நெருங்கி விட்டதென்று நான் சொன்னேனில்லையா....! நீர்த் தொட்டிகள் போன்ற கண்றாவி இடங்களிலா காதல் கடிதங்களைப் பதுக்கி வைப்பார்கள்....! செய்யும் வேலையில் ஒரு முதிர்ச்சி வேண்டாம்....! அந்த இடுக்கிலிருந்து ஒரு நாள் லாரன்ஸ் வெளியேறி

வருவதைப் பார்த்தேன். அங்கு போய் தொட்டியை சுத்தம் செய்யவோ, குழாயைப் பழுது பார்க்கவோ, விளக்குக்கு ஃபியூஸ் போடவோ லாயக்கற்றவர் அவர் என்பதால், ஏதோ தில்லுமுல்லு செய்துத் தான் வருகிறார் என விளங்கினேன்.''

அப்போது, ''ஜோஸஃபைன்...! ஜோஸஃபைன்...! உடனே இங்கு வா...! பனி அதிகமடீ....! போதும் அங்கு இருந்தது....! ஓடி வா...!'' என்று எடித்'தின் குரல், அதிகார தோரணையில் அழைத்தது.

அவள் தளர்ச்சியாய் அழைப்பு வந்த திசையைத் திரும்பிப் பார்த்து, ''இது ஒரு தொல்லை....!'' என்று எடித்'தைப் பழித்து விட்டு, ''வா....! உள்ளே போகலாம்...'' என்று கிளம்பி வீட்டுக்குள் சென்று மறைந்தாள்.

மாடியில், தன் ஓய்வுப் பகுதி தளத்திலிருந்த எடித்'துடன் இணைந்துக் கொண்டேன். முகமெங்கும் கவலைச் சுருக்கங்கள் ஓட, வாடியிருந்தார். சத்தற்றுத் தோற்கடிக்கப்பட்டவராய் காணப்பட்டார். இதனால் அவரின் மீது எனக்கு ஏற்பட்ட கரிசனத்தை என் முகத்தில் படித்தவர், லேசாய் சிரித்து அழைப்பு விடுத்தார். ''இந்த சிறு வயதுக்குத் தேவையற்ற சாகசகங்கள் என்று நினைத்து அவள் செய்த துப்பறிதல், எப்படியாப்பட்ட பரிசை அவளுக்குத் தந்துள்ளது பார்த்தீர்களா...?'' என கலங்கினார். ''எதிர்காலத்தில் அவளை நல்ல படி பார்த்துக் கொள்ள வேண்டும். பாவம், அனைவராலும் ஒதுக்கப்பட்ட தளிர். இனி அவளுக்கு ஒன்றும் பயமில்லையே...?'' - இப்படி கரிசனம் பொங்கக் கேட்டு விட்டுத் தொடர்ந்தார்: ''ஒரு வழியாய் கொலையாளி அடையாளம் காணப்பட்டு விட்டான். சந்தோஷம். நிம்மதி. ஆனால் என்னமாய் மாய்மாலம் செய்தார்கள் கவனித்தாயா...! கொலைக்குற்றம் சாட்டப்பட்டு கைது செய்யும் போது ஸ்திரமான சாட்சியங்கள் ஏதும் இல்லாமலா கைது செய்வார்கள்...? பச்சை பச்சையாக காதல் கடிதங்கள் எழுதிக் கொண்டு இரட்டை வாழ்க்கை வாழ்ந்தது வெட்ட வெளிச்சமாகி விட்ட பிறகும், உத்தம சீலர்கள் போல எப்படியாப்பட்ட கண்ணீர் நாடகத்தை அரங்கேற்றினார்கள் பார்த்தாயா....! ஊஃப்ப்ப்...! அப்படியே பொடிப் பொடியாய் ஆனது போல என்ன ஒரு பாசாங்கு.....! ப்ரெண்டா போன்ற ஆட்களை நிற்க வைத்துச் சுட வேண்டும்...! மனோ திடமற்ற வஸ்துக்கள்...! அந்த லாரன்ஸ்...!'', எனும் போது கேலிச் சிரிப்புப் பொங்கியது எடித்'துக்கு...! ''இடுக்கில் மாட்டிக் கொண்ட முயல் போல என்ன நடுக்கம் நடுங்குகிறான்...!''

கொலைக் குற்றம் சாட்டித் தான் கைதாகியுள்ளார்கள் எனினும் அவர்கள் மீது தேவையற்ற இரக்கம் ஒன்று என்னுள் துளிர்க்க, ''பாவப்பட்ட ஜென்மங்கள்...!'' என்று இரங்கினேன். மேற்கூறிய வாறு அவர்களை நிந்தித்தாலும், ''ஆமாம்....! பாவப்பட்ட ஜென்மங்கள் தான்....! இனி, அவளுக்குத் தேவையான அனைத்து சட்ட நடவடிக்கைகளையும் அவளே செய்துக் கொள்வாளா....?'' என்று ஆதங்கமாய் குறிப்பிட்டு விட்டு, ''அதாவது வக்கீல்கள், இத்யாதி இத்யாதி...'' என்று விளக்கினார்.

எத்தனை தான் ப்ரெண்டா மீது கோபங்கள் இருப்பினும், அவளுக்குத் தேவையான சட்டப் பாதுகாப்பு அனைத்தும் கிடைக்க வேண்டும் என்பதில் காட்டப்படும் நேர்மைமிகு சிரத்தை விந்தை யாகத் தானிருந்தது.

எடித் தொடர்ந்தார் : ''முழுவதும் முடிய எவ்வளவு நாட்கள் பிடிக்கும் சார்ல்ஸ்....?''

சரியாகத் தெரியாது என்றேன். போலீஸ் காவலுக்கு அனுப்பப்பட்டு, வரிசையாய் தீவிர விசாரணைகளுக்கு உட்படுத் தப்படலாம் என்றும், இது முடிய நாலைந்து மாதங்களுக்கும் மேலாகும் என்றும், சந்தேகத்துக்கிடமின்றி குற்றம் நிரூபிக்கப் பட்டு தண்டனை விழும் பட்சத்தில் மேல் முறையீட்டுக்குப் போகலாம் என்றும், இருக்கும் அத்தனை சாத்தியக் கூறுகளையும் சொன்னேன்.

சிரத்தையோடு கேட்டார் : ''குற்றம் நிரூபிக்கப்பட்டு விடுமா...?''

வானத்தை வெறித்தபடி, ''தெரியவில்லை அம்மா..'' என்று சிறு பயத்தோடு சொன்னேன். ''நாமறியாது இன்னும் என்னென்ன சாட்சியங்களைப் போலீஸ் திரட்டி வெளியிடாமல் வைத்துள்ளதோ...? நமக்குத் தெரிந்து இருப்பவை கடிதங்கள்....!''

''காதல் கடிதங்கள்....!'' என்று விரக்தியாய் சொன்னவர் கேட்டார்: ''எனில் அவர்கள் காதலர்களா...?''

''ஆமாம்....! அவர்களிருவரும் ஆழ்ந்த காதலில் தான் வாழ்ந்துள்ளனர்....!''

அவர் முகம் இறுகியது. ''வயிறெரிகிறது சார்ல்ஸ். இதனால் ப்ரெண்டாவை நான் வெறுக்கிறேன்....! ஆரம்பத்திலேயே, இப்படி ஏதாவது ஏடாகூடம் இருக்கலாம் என நான் குடும்பத்தாருடன் பேசிக் கொண்டதுண்டு. ஏன், அவள் காதுபடவே கூட அமிலமாய் பேசியிருக் கிறேன்....!'' என விசனப்பட்டவர், ''எல்லாம் வயதுக் கோளாறு....!''

என்று சற்றே குளிர்ந்தார். ஒரு நிமிடம் போல் நழுவியது. ''விதி'' என்று ப்ரெண்டாவின் இந்நிலையை எடுத்துக் கொண்டார். தொடர்ந்தார்: ''ஆனால் இப்பொழுது, இந்த நிலைக்குத் தள்ளப்பட்டு பூகம்பம் கண்ட கட்டிடம் போல அவள் நொறுங்கி சின்னா பின்னமாகும் போது, சகிக்கவில்லை சார்ல்ஸ். அவளுக்கு எல்லா சட்ட வசதிகளும் போய்ச் சேர வேண்டும் என விரும்புகிறேன். கொஞ்சமும் பாரபட்சமின்றி. சரியா? வேறு எதற்காகவும் இல்லை - அவள் மீது அபரிமித நம்பிக்கைக் கொண்டிருந்த லியோனைடின் ஆன்மா இதைத்தான் விரும்பும் - அதற்காக! பெரியவர் ஸ்தானத்தில் இப்பொழுது நானிருப்பதால், இந்த நடவடிக்கையை, நான் தான் துரிதமாக முடுக்கி விட வேண்டும்.'' இவ்விதம் முடித்தவர், கைக்காடிகாரத்தைப் பார்த்து, ''ஓ சார்ல்ஸ்....! மதிய உணவு நேரம் கூட கடந்து விட்டது...! எல்லோரும் சாப்பிட்டு முடித்திருப் பார்கள்....!'' என்றவர், தனக்குத் துணையாக மதிய உணவுக்கு உள்ளே வருமாறு அழைத்தார். நான் லண்டன் வரை செல்லவுள்ளதால் வழியில் எங்காவது சாப்பிட்டுக் கொள்கிறேன் என்றேன்.

''உன் காரிலா செல்கிறாய்....?''

''ஆமாம்...!''

''ம்...'' என்று சிந்தித்தவர், ''என்னையும் உன்னுடன் அழைத்துச் செல்வாயா....? இப்பொழுது தான் ஒரு வழியாக வீட்டுக்காவல் போன்ற நடவடிக்கையெல்லாம் ஒரு முடிவுக்கு வந்து விட்டதே....!'' என்று கேட்டார்.

''சந்தோஷமாக வரலாம்'' என்ற நான், ''ஆனால் மகதாவும் சோஃபியாவும் கூட அங்கு கிளம்ப உள்ளதாய் அறிகிறேன். என்னுடம் வருவதை விட அவர்களுடன் செல்வது உங்களுக்கு நலமாயிருக்கும் என எண்ணுகிறேன்'' என்றும் அறிவுறுத்தினேன்.

''அவர்களுடன் வேண்டாம். உன்னுடனேயே வர விரும்புகிறேன். உன்னுடன் வருவதாய் எல்லோரிடமும் சொல்லிக் கொண்டும் இராதே.''

ஆச்சரியப்பட்டேன். இருந்தாலும் அவர் வேண்டுகோள்படியே நடந்துக் கொண்டேன். வழியில் அதிகம் பேசிக் கொள்ளவில்லை. லண்டன் நெருங்கும் போது எங்கு இறங்க வேண்டும் என நான் கேட்டது தான், எங்களிருவரின் இடையேயான பிரதானப் பிரயாணப்

பேச்சாயிருந்தது. ஹேர்லி சாலை என்றவர், உடனேயே மாற்றிக் கொண்டு, டேபன்ஹேம்ஸில் இறக்கி விடும்படி கேட்டுக் கொண்டார். அங்கு மதிய உணவு சாப்பிட்டு விட்டு ஹேர்லி சாலை போகப் போவதாய் கூறினார்.

முன் பதிவு இல்லாமல் சந்திக்க இயலாத பிரபல மருத்துவர்கள் வசிக்கும் கூடாரமாய் விளங்கும் ஹேர்லி சாலைக்கு, எடித் ஏன் செல்ல வேண்டும் எனும் சிறு பயம் என்னுள் துளிர்த்தது.

''நானும் உங்களுடன் ஹேர்லி சாலைக்கு ... .... .... ....'' என இழுத்தேன்.

''இதற்காகத் தான் மகதாவோடு செல்ல மாட்டேன் என்றேன். நீ வரட்டுமா என்கிறாய். அவள் கற்பனைப்படுத்தி பெரும் நாடகமே ஆடி விடுவாள்....!'' என்றபடி, ''ஆங்....! அப்படி நிறுத்தி விடு'' என்றார்.

நான் காரை ஓரமாக நிறுத்தினேன். இறங்குமுன், ''நான் மிக திருப்தியான வாழ்க்கை வாழ்ந்து விட்டேன் சார்ல்ஸ்....!'' என்றார். இப்படிச் சொன்னதை நியாயப்படுத்தி ரசிக்கும் தொனியில் நீண்ட நிம்மதிப் பெருமூச்செறிந்தார். ''நியாயமான நேர்மை தவறான வாழ்க்கை அது....!'' என்றும் பெருமைப்பட்டவர் சிறு இடைவெளி தந்து அடுத்து என்ன சொல்லப் போகிறார் என ஆவலாய் காக்க வைத்து விட்டுச் சொன்னார்: ''அந்த நேர்மையான வாழ்க்கையில், நிறைவேற்ற வேண்டிய தர்மம் ஒன்று இன்னும் பாக்கி உள்ளது....!''

இறங்கி மின்னலாய் நடந்த அவரை வெறித்தபடி அமர்ந்திருந்தேன் நான்.

# 23

நான் அப்பாவைச் சில நாட்களாக சந்தித்திருக்கவில்லை. லியோனைட் வழக்கு தவிர இருந்த அவரது பிற வழக்குகளில் அவர் மூழ்கியிருந்ததுவே முக்கிய காரணம். எனவே டேவரெனரைச் சந்திக்க சென்றிருந்தேன். அவர், ப்ரெண்டா - லாரன்ஸ் கைதினால் ஒரு நிலையில் நின்றுள்ள லியோனைட் வழக்கினால், தாம், சிறிது நேரம் சாவகாசமாக ஓய்வெடுக்க விரும்புவதாகவும் சிறு இளைப்பாறலுக்கு என்னுடன் உணவகம் வர விரும்புவதாகவும் கூறினார். இந்த அளவுக்கு வழக்கினை வெற்றியடையச் செய்தமைக்காக முதன்மை இன்ஸ்பெக்டரைப் பாராட்டினேன். ஏற்றுக் கொண்டார்; ஆனால், மனப்பூர்வமாக அல்ல. ''ஏதோ முடிந்தது'' என்றார். தொடர்ந்து, ''போலீஸுக்கு குடைந்தெடுக்க அதிகாரபூர்வமாக ஒரு வழக்கு அமைந்துவிட்டது. இதை யாரும் மறுக்க முடியாதில்லையா...!'' என முழு சந்தோஷம் கொள்ளதாவராய் பேசினார்.

''இந்த வழக்கில் அவர்களைக் குற்றவாளியென்று நிரூபித்து விட முடியும் என எண்ணுகிறீர்களா....?''

''இதற்கு கருத்து சொல்வது ரொம்பக் கடினம் சார்ல்ஸ்....! எல்லா கொலை வழக்குளிலும் அமைவது போன்றே, இதிலும் சாட்சியங்கள் தீர்க்கமானவை கிடையாது; எதிர்மறையானவை. அதாவது காதல் கடிதங்களை வைத்துக் கொண்டு இருவரையும் கொலைகாரர்கள் என நிரூபித்தாக வேண்டிய நிலை. நீதிமன்ற நடுவர்களிடம் இவர்கள் உண்டுபண்ணுகிற தாக்கத்தைப் பொறுத்திருக்கிறது, தீர்ப்பு....!''

''அந்தக் காதல் கடிதங்கள் எந்த அளவு பிரயோஜனப்படும்...?''

''முதலில், அவை, ரொம்பக் கீழ்த்தரமான கடிதங்கள். அக்கடிதங்களில் உள்ள 'லியோனைட் மரிக்க ரொம்பக் காலமில்லை' எனும் வாசகங்கள், இவள் கணவர் இறந்ததும் இவர்களிருவரும் சேர்ந்து வாழ எண்ணியிருந்ததற்கானக் குறிப்புகள் தான்; இதில் சந்தேகமில்லை. ஆனால், இதனை எதிர்தரப்பு வாதத்தில் அப்படியே

திருப்பி அர்த்தப்படுத்த வாய்ப்பு உள்ளது. அதாவது - பெரியவர் தொண்ணூறு வயதை நெருங்கும் மகா முதியவர் தானே... அதனால் தான் அவர் கொஞ்ச காலத்தில் மறைந்து விடலாம் என எண்ணி யிருப்பார். நீங்களும் நானும் கூட ஒரு வயதானவரைப் பார்த்து இப்படித்தானே எண்ண முடியும் - என தலைகீழாய் அர்த்த மாக்குவார்கள். எதிர்க்க முடியாது. விஷம் வைத்துக் கொன்று விடலாம் என இருவரும் திட்டமிட்டதாகவோ, இல்லை ஒரு பேச்சுக்கு நினைத்துப் பார்த்ததாகவோ கூட, கறுப்பு வெள்ளையில் வார்த்தைகளே கிடையாது. இப்படி அர்த்தம் தரும் சில பத்திகள் அவர்களின் அந்த அசிங்கமான கடிதங்களில் இருந்தாலும், நான் மேலே சொன்ன உதாரணம் போல, எதிர்தரப்பில், தாராளமாக மாற்றி அர்த்தம் தந்து விடலாம்'' என்றவர், இந்த வழக்கினை விசாரிக்க வரும் நீதிபதியின் கையில் தான் எல்லாம் உள்ளது என்று அதிர வைத்தார். அதையும் விளக்கினார்:

''நீதிபதி கார்பெர்ரி மட்டும் விசாரித்தால், இந்தக் கூட்டத்தையே சின்னாபின்னமாக்கி விடுவார். முறை தவறிய காதல் என்றால் தீர்த்துக் கட்டி விடுவார். தப்பிக்கயியலா தண்டனை தான். ப்ரெண்டா தரப்பில், கொலை வழக்குகளின் அதிபதியான வக்கீல் கெர்'ரியை நியமிக்கவுள்ளதாக கேள்விப்பட்டேன். ஆனால் கெர்'ருக்கு ஒரு பலவீனம் உண்டு. பக்கம் பக்கமாக வாதாட அவருக்கு பெரிய அளவிலான சாட்சிகள் வேண்டும். உப்புசப்பற்ற இக்கடிதங்களின் மேல் அவர் எந்த அளவு ஜெயிப்பார் என்பது கேள்விக் குறியே! ஆனாலும் சார்ல்ஸ்....'' என்ற முதன்மை இன்ஸ்பெக்டர், திட்டவட்ட மாகக் கூறினார்: ''நடுவர்களுக்கு இவர்களைப் பிடித்து விடுமா என்பது தான் இப்போதைய கேள்வி. இந்த நடுவர்களை நாம் கணிக்கவே முடியாது. இருவருமே கருணை கண் கொண்டு பார்க்க வேண்டிய பாத்திரங்களே அல்ல. அவள் ஓர் அழகி.... வெறும் பணமும் போக வாழ்வும் மட்டுமே கருதி லியோனைடை மணந்தவள். லாரன்ஸ் ஓர் அப்பிராணி. ஆதாரமாய் இருப்பவை நீ அழகி, நீ அழகன் என அறிவிக்கும் சில கனமற்ற காதல் கடிதங்கள். ஆக ஆதாரமில்லை என தள்ளுபடி செய்து விடலாம். இல்லை, துருவித் துருவி விசாரித்து கொலை செய்ததற்கான தடயம் ஏதேனும் ஸ்திரமாய் கிடைத்து விட்டால், அவளைக் கொலையாளியாக்கி இவனை நிரபராதியாகவோ, இல்லை, அவளை விடுவித்து அவனை

குற்றவாளியாகவோ, இல்லை, இருவரையுமே குற்றம் செய்தவர்கள் என்றோ தீர்ப்பு செய்யலாம்''

''நடுவர் கூட்டம் நினைப்பதிருக்கட்டும்'' என்ற நான் அழுத்தமாய் கேட்டேன்: ''நீங்கள், உங்கள் மனதில் என்ன நினைக்கிறீர்கள்...?''

மரம் போல உணர்ச்சியற்ற முகத்தோடு என்னைப் பார்த்தார். ''நான் ஒன்றும் நினைக்கவில்லை'' என்று உதடு பிரியாமல் பெரிதாய் புன்முறுவினார். ''நான் கண்டறிந்த உண்மைகளை எடுத்துக் கொண்டு போய் துணைக் கமிஷனரிடம் வைத்தேன். அதிகார பூர்வமாக அவர்கள் மீது வழக்குத் தொடர முகாந்திரம் உள்ளதாய் அவர் அலுவலகம் முடிவு செய்தது. என் கடமை முடிந்தது. கை கழுவி விட்டேன்.''

இப்படிச் சொன்னாலும் பெரியவரின் கொலை பற்றிய துப்பறியும் பணி இந்த அளவில் இப்போது நிற்பதில் முதன்மை இன்ஸ்பெக்டர் திருப்தி அடைந்துள்ளதாக தெரியவேயில்லை.

இந்த நிலையை மூன்று நாட்களுக்குப் பிறகு அப்பாவை சந்தித்தபோது அப்படியே இறக்கி வைத்தேன். வழக்கு பதிந்து விட்டதை அவராகவே வந்து என்னிடம் சொல்லவில்லை. அவராக என்னிடம் சொல்வதில் ஒரு தடுப்பு இருப்பதாக அறிந்தேன். அது பிடிக்கவில்லை. அந்தத் தடுப்பினை வளர விடாது நான் இடித்தே ஆக வேண்டும். ''நமக்குள் முளைத்துள்ள இந்த இறுக்கத்தை வளர விடக் கூடாது அப்பா...'' என்ற நான், ''ப்ரெண்டாவும் லாரன்ஸூம் தான் கொலையாளிகள் என்பதில் மனப்பூர்வ உடன்பாடு, டேவரெனிடம் காணப்படவில்லை. நீங்களும் அதே நிலையில் தான் இருக்கிறீர்கள்'' என ஆரம்பித்தேன்.

இக்கோணத்தில் உரையாடல் தொடர்வதை விரும்பாதவராய், ''இப்போது எதுவும் நம் கைகளில் இல்லை என்று டேவரெனர் சொல்லும் பதிலைத் தான் நானும் தர வேண்டியுள்ளது சார்ல்ஸ். விடை காண வேண்டிய ஒரு வழக்கு உருவாகி விட்டது. நீதிமன்றத்தில் நிலுவையில் உள்ள அது பற்றி வெளியே நாம் விவாதிப்பது குற்றம்'' என்று நழுவியவரை நான் விடுவதாக வேயில்லை.

''ஆனால், நீங்களோ, டேவரெனரோ, அவர்களிருவரும் குற்றம் செய்தவர்கள் என முழுதும் கருதவில்லை...!''

''இது நடுவர் குழுவும் நீதிமன்றமும் முடிவு செய்ய வேண்டிய விஷயம்....!''

''போதும், போதும்....'' என சற்றே கத்தினேன். ''சட்ட வார்த்தைகளைப் போட்டு நிரப்பிக் குழப்ப வேண்டாம். நீதிமன்றமிருக்கட்டும். என் கேள்வி நேரான கேள்வி. நீங்களிருவரும் தனிப்பட்ட முறையில் அதாவது துணை கமிஷனரும் முதன்மை இன்ஸ்பெக்டரும் – என்ன நினைக்கிறீர்கள்....!''

''இதில், உன் கருத்தை விட, உன் முடிவை விட, என் பிரத்யேக முடிவு ஒன்றும் பெரிதாக இருந்து விடாது சார்ல்ஸ்....!''

''என் கேள்விக்கு இதுவா பதில்...!'' பொறுமையிழந்து இருக்கையின் நுனிக்கு வந்து கதறினேன். ''என் கருத்தை விட உங்களுடைய கோணம் நிச்சயம் வலுவானதாகத் தானிருக்கும். பற்பல வருட பொதிந்த அனுபவம் உங்களிடமுள்ளது.''

''அப்படியெனில் நான் உன்னிடம் நம்பிக்கை மிகுந்தவனாகத் தான் சொல்கிறேன். நான் எதுவும் நினைக்கவில்லை.''

''அவர்கள் குற்றவாளிகளாக இருக்க வாய்ப்புள்ளதா...?''

''உள்ளது....!''

''பார்த்தீர்களா....! பார்த்தீர்களா...! உங்கள் பதில் நூறு சதம் முழுமையாக இல்லை. பதிலில் சந்தேகம் தொக்கி நிற்கிறது....! அவர்கள் குற்றவாளிகள் என்று நீங்கள் முழுமையாக நம்பவில்லை...! சரியா...?''

அப்பா தோள்களிரண்டையும் உயர்த்தி ''வாத - பிரதிவாதங்கள் விசாரிக்கப்படாமல் எப்படி முடிவெடுக்க இயலும்?'' என்று ஆச்சர்யப்பட்டாற்போல் கேட்டார்.

''மூடி மறைக்காதீர்கள் அப்பா...! பல நேரங்களில் சந்தேகத்துக்கிடமின்றி முடிவாயிருந்திருக்கிறீர்கள். உங்கள் மூளையில் குழப்பமேயில்லாத முடிவுகள் அவை. இறுதி செய்யப்பட்ட முடிவுகள்....! உண்டா இல்லையா...?''

''சில சமயங்களில். ஒப்புக் கொள்கிறேன். ஆனால் எல்லா வழக்குகளிலும் அல்ல.''

''இந்த முறையும் அப்படி ஓர் ஐயமற்ற முடிவை நீங்கள் அடைய வேண்டும் என ஆண்டவனை வேண்டுகிறேன்.''

''என் பிரார்த்தனையும் அதுவே!''

பிடி கொடுக்காமலே பேசினார். இருவரும் அமைதியானோம். தனிமை, நடுக்கம், பயம் கலந்த கலவையில், யாரும் கண்டு விடாதபடி பதுங்கிப் பதுங்கி, அந்தி சாய்ந்துவிட்ட பொழுதில்,

*தோட்டத்தின் உள்ளாழத்திலிருந்து வெளிபட்ட இருவரும் என் நினைவிலாடினார்கள். ஆரம்பத்திலிருந்தே போலீஸ் என்று விட்டால் போதும்.... இருவரும் பயந்து சாகிறார்கள். இது அவர்களிருவரின் ஒருங்கிணைந்த குற்ற மனப்போக்கினைக் காட்டவில்லையா?*

*இருக்க வேண்டிய அவசியமில்லை என எனக்கு நானே பதில் கூறிக் கொண்டேன். கள்ளக் காதல், என்றாவது ஒரு நாள் நம்மை கொலையாளிகளாக வர்ணித்து விடுமோ எனும் பயம் அவர்களிரு வரின் அடி மனத்திலும் திகில் போர்வையாக உள்ளது. இதனால் அவர்களின் மீதும் அவர்களின் வாழ்க்கை மீதும் அவர்களுக்கு பயம். அப்படி ஏதேனும் நேரின் அதனை எதிர்த்து முறியடிக்கவும் பயம். இந்தக் குற்றவுணர்ச்சியே அவர்களை பயத்தில் இட்டுள்ளது.*

*நிலவிய அமைதியை, கனிவான குரல் எடுத்து, ''சார்ல்ஸ்...! எதிர் கொள்வோம்...!'' என்று என் தோள் தட்டி கலைத்தார் அப்பா. ''லியோனைட் குடும்பத்தின் ஒருத்தர் தான் அவரைக் கொன்றது என நிச்சயமாய் உன் மூளையில் ஒரு முடிவு உள்ளது. இல்லையா...?''*

*''ம்...'' என சற்று யோசித்தேன். ''அப்படி இருக்குமோ என...'' என்று நான் ஆரம்பிக்க, ''அதெல்லாம் வேண்டாம். அப்படி ஒரு முடிவில் உள்ளாய். அது தவறாக கூட இருக்கலாம். ஆனால் நீ நினைக்கிறாய். இல்லையா?''*

*''ஆமாம்'' - பதிலளித்தேன்.*

*''ஏன்...?''*

*''ஏனெனில்... ஏனெனில்...'' - என் விவேகத்தையெல்லாம் முன் நிறுத்தி ஒரே வார்த்தையில் சொன்னேன்: ''ஏனெனில்... அவர்கள் ஒவ்வொருவரும் அப்படியே நினைக்கிறார்கள்....!''*

*''அவர்கள் ஒவ்வொருவரும் அப்படியே நினைக்கிறார்கள்....!'' என்று தனக்குத் தானே கூறி புன்னகைத்தவர், ''இன்ட்ரஸ்டிங்...'' என்று சொன்னார். ''மிக விநோதமாயுள்ளது. அவர்கள் ஒவ்வொரு வரும் அவர்களுக்குள்ளேயே சந்தேகப்பட்டுக் கொள்வதாக சொல்ல வருகிறாயா...? இல்லை, இன்னார் தான் செய்திருக்கலாம் என ஒரே ஒருவர் மீது சந்தேகம் கொண்டுள்ளதாக நினைக்கிறாயா....?''*

*''இப்படி கேட்டால் பதில் தெரியவில்லை'' என்றேன். ''கிரகணம் பிடித்தால் போல் உள்ளது. எனக்கென்னவோ அவர்களுக்கு தெரிந்ததையும், அவர்களுக்குள் தோன்றுவதையும் கூட மறைக்கப் பார்ப்பதாய்படுகிறது.''*

அப்பா கேட்டுக் கொண்டார்.

''ஆனால் ரோஜர் அப்படியல்ல'' என்று தொடர்ந்தேன். ''சரியோ தவறோ, அவர் முடிவில் ஆரம்பம் முதலே குழம்பாமலுள்ளார். ப்ரெண்டா தான் கொலைகாரர். அவளைத் தொங்கவிட வேண்டும். இது அவர் நிலை. இவர்.... இவர் மட்டும்தான் அங்குள்ள ஒரே ஆறுதல். எதையும் மறைக்காமல், நேரடியாக, விகல்பமில்லாமல் பேசுவதால், துப்பறியும் நமக்கு, இவர் மட்டும் தான் அங்குள்ள ஒரே ஆறுதல். மற்றவர்கள் குழம்புகிறார்கள். குழப்புகிறார்கள். திடுமென ப்ரெண்டாவுக்கு சட்ட ரீதியாக தேவையான அத்தனை அனுகூலங் களையும் செய்து தாருங்கள் என்று வற்புறுத்துகிறார்கள். ஏன்...? புரியவில்லை.''

அப்பா பதில் தந்தார் : ''ஏனெனில், நெஞ்சார, ப்ரெண்டா தான் கொலையாளி என்று அவர்கள் கருதவில்லை....'' என்றவர், ''இது முக்கியத்துவம் வாய்ந்தது....'' என்று கூர்மையானார். கேட்டார்: ''நீ சொல். யார் செய்திருக்கலாம். நான் கேட்டுக் கொண்டது போல் நீ அவர்களோடு இருந்திருக்கிறாய். பழகியிருக்கிறாய். பேசி யிருக்கிறாய். யார் சரியான பொருத்தம்....?''

''தெரியவில்லை அப்பா...! மண்டையே சுக்கு நூறாகிப் போகின்றது. நீங்கள் பேருரையாற்றி விளக்கிய கொலையாளி எனும் வர்ணனைக்குள் ஒருவர் கூட பொருந்தவில்லை. மன்னிக்கவும். இருந்தாலும், அவர்களில் ஒருவர் தான் பெரியவரைத் தீர்த்துக் கட்டியுள்ளார்கள் என்பதில் நான் ஸ்திரமாய் தான் உள்ளேன்.''

''சோஃபியா...?''

''இல்லையில்லை....! கடவுளே...!''

''அந்த சாத்தியமும் என்னிடம் உள்ளது சார்ல்ஸ். நிச்சயம் உள்ளது. கடவுளையெல்லாம் அழைக்காதே. அதையும் மீறி வீரியமாய் நீ அந்த எண்ணத்தை எதிர்க்கிறாய். காரணம் : அவள் உன் காதலி'' என்றவர், ''இதை பிறகு பேசுவோம்...! மற்றவர்கள்...? பிலிப்...?''

''அவரை நோக்கி விரல் நீட்ட அருமையான இலக்கு உள்ளது.''

''இலக்கு என்று தான் இருக்க வேண்டும் தவிர, அருமையான, சிறுமையான என இனம் பிரிக்கக் கூடாது சார்ல்ஸ்'' என திருத்தினார். ''அவரைக் குற்றவாளியாக்கிப் பார்க்க உள்ள இலக்கு....?''

''ரோஜரின் மீது தாள முடியாத பொறாமையில் தான் வாழ்ந்து வந்துள்ளார், பிலிப். பெரியவர், ரோஜர் மீது கொண்டிருந்த அளப்பரிய அபிலாஷையைப் பார்த்துப் பார்த்து, தன் வாழ் நாள் முழுவதும்

பொறாமைத் தீயிலேயே இருந்திருக்கிறார் பிலிப். ரோஜர் நிர்வாகம் மூழ்கியது. அது பெரியவருக்கும் தெரிய வந்தது. மறுபடியும் உதவி, நிர்வாகத்தையும் ரோஜரையும் மீட்க எண்ணியிருக்கிறார் பெரியவர். இது மட்டும் பிலிப்' பிற்கு தெரிய வந்திருந்தது என வைத்துக் கொள்வோம். அந்த இரவே பெரியவர் இறந்து விட்டால், பிறகு ரோஜருக்கு உதவ நாதி கிடையாது எனும் குரூரம் நிச்சயம் பிலிப் மனதில் எழ வாய்ப்பு உண்டாகியிருக்கும். அப்புறம் ரோஜர் மூழ்கி உரு தெரியாமல் போக வேண்டியது தான் எனும் உண்மையும் பூதாகாரமாய் எழுந்து நின்றிருக்கும்'' என்ற நான், ''ஓ...! நினைக்கவே கலக்கும் அசாதாரணம்....!'' என வியந்தேன்.

''அசாதாரணம் தான். ஆனால் அரங்கேறவல்ல அசாதாரணம் தான்'' என்ற அப்பா, ''மகதா....! அவள் எப்படி...?'' என்றார்.

''குழந்தைத்தனமானவர். ஆனால் இவரைப் பற்றியும் நான் ஆழமாக உற்று நோக்கினேன். எப்போது தெரியுமா...? அவசர அவசரமாக ஜோஸஃபைனை ஸ்விட்சர்லாண்டுக்கு மூட்டை கட்ட பறந்த போது....! சிறுமி எதையோ தெரிந்து வைத்துள்ளதை அறிந்து தான் இப்படி அவசரப்படுகிறாரா, என்று சிறுபிள்ளைத் தனமாக நடந்துக் கொள்ளும் மகதா மீதே நான் கண் பதிப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. அந்த உண்மையை சிறுமி வெளியே சொல்லி விடுவாளோ என பயந்து தான்...'' என்று தொடர்ந்த நான், அவளை ஸ்விட்சர்லாண்டுக்கு மூட்டை கட்ட நினைத்தாரோ என முடிக்க நினைத்தேன். ஆனால் அப்பாவோ, ''சிறுமியின் மண்டையை உடைத்து விட்டாரோ....?'' என முடித்தார்.

தடுமாறிப் போன நான், ''ஜோஸஃபைனுக்கு நேர்ந்த அபாயம், மகதாவால் நேர்ந்திருக்காது'' என்றேன்.

''ஏனிருக்கக் கூடாது...?''

''ஆனால், அப்பா... ஒரு தாய் போய்.. தன் குழந்தையையே...'' - மலங்க மலங்க விழித்துத் தடுமாறினேன் நான்.

''சார்லஸ் கண்ணா...! போலீஸ் செய்திகளைப் படிக்க மாட்டாயா...? பல நேரங்களில், மீண்டும் மீண்டும், ஒரு குழந்தை மீது மட்டும் தாய்க்கு ஒரு வித ஒவ்வாமை இருந்துக் கொண்டே யிருக்கும். அவளும் விலக்க நினைப்பாள், ஆனால், முடியாது. மற்ற குழந்தைகள் மீது உயிரையே பொருத்தி வாழும் அந்தத் தாய், ஒரே ஒரு கவனி, சார்ல்ஸ்... ஒரே ஒரு - குழந்தையிடம் பகைமை யுடனேயே இருந்து வருவாள். காரணமிருக்கும். ஆனால் அது விளக்க

முடியாத காரணமாயிருந்து விடும்...! அப்படி ஒரு வெறுப்பு, பெற்ற தாயிடமிருந்தால், அந்த வெறுப்பு, அத்தனை ஸ்திரமானதாக வலுவானதாக இருக்கும் சார்ல்ஸ்...! சொல், அப்படி ஏதேனும் ஒவ்வாமையை மகதாவிடம் கவனித்திருக்கிறாயா...?''

''ஜோஸஃபைனை, மாற்றி வைத்ததால் தனக்கு வந்தவள், என்று பழித்திருக்கிறாள் மகதா....'' - கசப்பாக ஒப்புக் கொண்டேன்.

''கொடூரம்...! இதற்கு சிறுமி வருந்தியிருக்கிறாளா...?''

''அப்படியொன்றும் தெரியவில்லை.''

இப்பேச்சினை அப்படியே விட்ட அப்பா, ''இன்னும் அங்கு வேறு யாரெல்லாம் இருக்கிறார்கள்....? ரோஜர்...?'' என்று முன்னேறினார்.

''அவரை விட்டு விடுவோம் அப்பா. ரோஜர் அவர் அப்பாவைக் கொல்லவில்லை. நிச்சயம்.''

''அவரைக் கழுவி விடு. அவர் மனைவி... என்ன பெயர் அது... க்ளெம்சி...?''

''ஆமாம்...'' என்றேன். ''பெரியவரின் கொலைக்கு க்ளெம்சியை இலக்காக்கலாம். ஆனால் அதற்கு வலுவற்ற ஒரு காரணம் தான் உள்ளது'' என்ற நான், க்ளெம்சியுடன் நிகழ்ந்த நீண்ட சம்பாஷனை களைப் பிரித்து வைத்தேன். ரோஜர் மீது கொண்டிருக்கும் கண்மூடித் தனமான அன்பு - அவருடன் தான் மட்டுமே வாழ வேண்டும் என க்ளெம்சி கொண்டிருக்கும் வெறி - இக்காரணத்தால் இங்கிலாந்தினை விட்டே ஓடி விட அவருக்குள் உள்ள தாகம் - இவற்றையெல்லாம் ஸ்தாபித்து, இதனால் பெரியவரை விஷம் வைத்து தீர்த்து கட்டும் திண்ணம் வாய்ந்தவர் தான் க்ளெம்சி என முடித்தேன்.

தான் புரிந்துக் கொண்டவை சரிதானா என்று பின்வருமாறு விளக்கி சரிபார்த்துக் கொண்டார் அப்பா: ''விஷயத்தை அப்பாவிடம் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி விடலாம் என ரோஜரைத் தூண்டியிருக்கிறார் க்ளெம்சி. ஆனால் பெரியவருக்கு எப்படியோ நிர்வாக சீர்கேடு தெரிந்து விடுகிறது. அசோசியேட்டட் கேட்டரிங் நிறுவனத்தை சீர் தூக்க உதவுகிறேன் என்று வேறு முன் வந்து விட்டார். ரோஜரைக் கடத்திச் சென்று தனக்கு மட்டுமே உரித்தாகி வாழ நினைத்திருந்த அவரது நினைப்பிலும் திட்டத்திலும் மண்....! அப்போது, ரோஜரைத் தனி மனித வழிபாடு செய்து வந்த க்ளெம்சியின் மன நிலை, கொலை அளவுக்குத் தள்ளப்படுவதில் வியப்பொன்றுமில்லை....''

''அப்பா...'' என பயந்தபடி அழைத்தேன் நான். ''இதையே தான்.... தனி மனித வழிபாடு ஆபத்து எனும் இதே கருத்தை தானப்பா, திடுமென எடித் ஒரு நாள் வந்து என்னிடம் திணித்து விட்டுப் போனார்....''

எடித் பெயரைக் கேட்டதும், என் பயத்தில் அதிகம் ஈடுபாடு காட்டாமல், ''எடித்....! அவர் மீது எனக்கு ஆரம்பம் முதலே சந்தேகம் வலுத்துள்ளது சார்ல்ஸ்....!'' என்று தன் எண்ணத்துக்குள் புகுந்துக் கொண்டார். ''ஏன் என்று தான் தெரியவில்லை. சரியெனபட்டால், சட்டத்தைத் தன் கைகளுக்குள் எடுத்துக் கொண்டு தீர்ப்பு வழங்கி விடுவார். அப்படிப் பட்ட குணாதிசயம் கொண்ட வீராங்கனை அவர். ஒரு வேளை, இதனால் தான் அவர் மீது என் கண்கள் பதிந்துள்ளனவோ தெரியவில்லை....!''

''மேலும், ப்ரெண்டாவுக்கு அதிகபட்ச சட்ட உதவி வழங்க வேண்டும் என்று சமீப காலமாக என்னை ரொம்பவும் வற்புறுத்து கிறார்''

''மனச்சாட்சி காரணமாக இருக்கலாம்'' என்ற அப்பா, எடித் பற்றிய தன் கண்ணோட்டம் சரியோ என நினைவிலாழ்ந்தார். பிறகு சொன்னார்: ''ஒரு வேளை எடித் தான் குற்றவாளியாக இருப்பின், அவரின் தராசு மனம், இந்த இரு இளைஞர்களையும் தண்டனை அனுபவிக்கவே அனுமதிக்காது. ஆனால்...'' என்று குழப்பமாய் கண்களைக் குறுக்கிய அப்பா, ''ஜோஸெஃபைன் இப்போது அதிரடி யாய் தாக்கப்பட்டுள்ளாளே...! இதனை எடித் செய்திருக்க இயலுமா...?'' என்று சிறு குழப்பமானார்.

''இயலாது...'' என்று சன்னமாய் சொன்னேன். ''எடித், ஜோஸெஃபைனைத் தாக்குவதாய் கற்பனை கூட செய்ய முடியாது. இந்த சமயத்தில் ஜோஸெஃபைன் சொன்ன ஒரு விஷயம் அரளும் புரளுமாக நினைவிலாடுகிறது. சரியாக நினைவுக்குள் கொண்டு வர முடியவில்லை. வழுக்குகிறது. அது மட்டும் ஞாபகம் வந்தால்... ... ...''

''விட்டு விடு. ஞாபகம் வரும். அந்த வாலைப் பிடித்துக் கொண்டே அலைந்தால், ஞாபகத்திலிருப்பவையும் குழப்பும்...'' என்ற அப்பா, ''வேறுயாராவது உன் நினைவில் உள்ளார்களா...?' என்று நிறைவாய் கேட்டார்.

''ஆமாம்...'' - இது நான். ''நிறைவாக இன்னும் ஒருவர் உள்ளார்'' என்று சொல்லி விட்டு, ''இளம்பிள்ளை வாதம் பற்றி என்ன

தகவல்கள் தெரியும்...? அது ஏற்படுத்தவல்ல குண மாற்றங்கள், இது பற்றி...?''

''ஆஸ்டஸ்...?''

''ஆம்...! இது பற்றி விவரம் தெரியாமல் சிந்திக்க சிந்திக்க, ஆஸ்டஸ் மீது நான் நிறைய ஐயம் கொள்கிறேன். பெரியவர் மீது அவனுக்கு இருந்துள்ள வெறுப்பு, கோபம்...! அவனுக்குள் எப்போதும் உள்ள குரோதம்...! எல்லோரையும் விலக்கி வைத்து வாழ நினைக்கும் விநோதம்...! அவன் சராசரியாயில்லை...!'' என்ற நான், சற்று முக்கியத்தவம் கொடுத்து, ''அவனுக்கு ஜோஸஃபைனைக் கண்டால் பிடிப்பதேயில்லை. அதிலும் அவள் துப்பறிந்து எழுது கிறேன் என்று சொல்லும் நடத்தையில் இவனுக்கு உடன்பாடே இல்லை. அந்தக் குடும்பத்தில் ஆஸ்டஸைப் போல அச்சிறுமியை தூற்றுவாரே இல்லை எனலாம். இவனைப் பற்றி, எல்லாம் தெரிந்து வைத்துள்ள அவளின் துப்பறியும் கண்கள், எதையாவது கண்டு வைத்திருக்குமோ எனும் பயத்தால் இப்படி இருக்கிறானா என தெரிய வேண்டும்'' என்றேன். ''அந்தச் சிறுமிக்கு எல்லாம் தெரிந் திருக்கிறதப்பா....! தனக்குத் தெரிந்த அத்தனையையும் ஒரு சிறு நோட்டுப் புத்தகத்தில் வேறு எழுதி, அதனைப் பதுக்கி வைத்து... ... ....''

நிறுத்தினேன்.

''ஓ.. கடவுளே...!'' - உடலெங்கும் பலம் வாய்ந்த மின்சாரம் தாக்கி விட்டது போல் மயிர்க் கூச்செறிந்தேன். ''தவறு செய்து விட்டேனப்பா...'' என்று பதற்றத்தோடு எழுந்தேன்.

அப்பாவும் பதற்றமானார். ''என்ன விஷயம்...?''

''நாங்கள், அதாவது நானும் டேவரெனரும், ஜோஸஃபைனின் அறையை தலைகீழாய் கவிழ்த்துப் போட்டுத் தேடப்பட்டது - அந்தக் காதல் கடிதங்கள் தான் எனத் தான் எண்ணியிருந்தோம். அக்கடிதங் களைக் கைப்பற்றி அவற்றை நீர்த்தொட்டிகள் நிறைந்திருந்த மொட்டை மாடி அறையில் அவள் பதுக்கி வைத்துள்ளதாய் நினைத்தேன். ஆனால் அன்று என்னிடம் பேசிக் கொண்டிருந்த போது, அங்கு அவற்றை *லாரன்ஸ் தான்* ஒளித்து வைத்திருந்ததாய் கூறினாள். அவன் மொட்டை மாடிப் பகுதியிலிருந்து வருவதைப் பார்த்து விட்டு, எதனால் அங்கிருந்து வருகிறான் எனப் போய் மோப்பம் பிடித்துள்ளாள். கடிதங்கள் கிடைத்துள்ளன. பிறகு

அவற்றை படித்திருக்கிறாள். அவள் செய்யக் கூடியவள் தான். அவற்றை எடுத்துக்கூட வராமல் அங்கேயே விட்டு வந்திருக்கிறாள்.''

''இப்பொழுது அதற்கென்ன...?''

''விளங்கவில்லை...? குழந்தையை மூர்ச்சையாக்கி விட்டு, அவள் அறையை சின்னாபின்னமாக்கித் தேடப்பட்டது கடிதங்கள் அல்ல....!''

''பிறகு...?''

''அவள் துப்பறிந்து சேகரித்து எழுதி வைத்திருந்த அந்த சிறு கறுப்பு நோட்டுப் புத்தகம்...! அதைத் தான் தேடியிருக்கிறார்கள். ஆனால், அந்த எமகாதகனின் கைளில், அன்று, அந்த நோட்டுப் புத்தகம் கிடைக்கவில்லை. ஜோஸஃபைனிடம் தான் அது இன்னும் இருக்க வேண்டும்...!'' என்று முடித்த நான், ஏறத்தாழ இருக்கை யிலிருந்து பாதி எழுந்த நிலையில், ''அப்படியெனில், அப்படி யெனில்....'' என பதறினேன்.

அப்பாவும் சற்று துணுக்குற்று, ''எனில், அச்சிறுமி இன்னும் ஆபத்தில் தான் உள்ளாள், சார்ல்ஸ்....! இதைத் தானே சொல்ல வந்தாய்...!'' என்றார்.

''ஆமாம் அப்பா...'' - இப்பொழுது முழுவதுமாக எழுந்தே விட்டேன். ''அவள் ஸ்விட்சர்லாண்டுக்குக் கிளம்பும் வரை ஆபத்து தான். அவளை அங்கு பள்ளியில் சேர்க்கவுள்ளார்கள் அப்பா...''

''அவள் போகப் பிரியப்படுகிறாளா...?''

கேள்வியின் முக்கியத்துவத்தை ஏற்றேன். ''பிரியப்படவில்லை எனத்தான் ஊகிக்கிறேன்.''

''அப்படியானால் அவள் போயிருக்க மாட்டாள். அவள் பிடிவாதம் அப்படி'' என்றார் அப்பா. ''அவள் ஆபத்து பற்றி நீ அலறுவது ரொம்பச் சரி சார்ல்ஸ்...! உடனடியாய் நீ அங்கு புறப்படு. குழந்தையுடனேயே இரு. இன்னொரு முறை தவறு நேர்ந்து விடக் கூடாது.''

நான் ஆடிப் போயிருந்தேன்.

ஆஸ்டஸா...? க்ளெம்சியா...? சிறுமி மீது குறி வைத்து நிற்பது யார்...?

''எனக்கு இப்பொழுது ஒருமுகப்பட்டது போல் ஓர் எண்ணம் உதிக்கிறது சார்ல்ஸ்...! நீ அங்கு நடந்ததையெல்லாம் சொன்னாயே, அதை வைத்து தோன்றுகிறது...! உனக்கு ஏன், எனக்கு உதித்துள்ள

இந்த நிலைப்பாடு தோன்றாமல் போயுள்ளது என்று தான் யோசிக்கிறேன்...!'' என்ற அப்பா, ''அதாவது...'' எனத் துவங்கி, அந்த எண்ணம் என்ன என்பதை விளக்கத் துவங்கும் போது... ... ...

''மன்னிக்கவும் திரு சார்ல்ஸ்...!'' என்று வேகமாய் உள்ளே ஓடி வந்த பணியாள், ''உங்களுக்கு தொலைபேசி. செல்வி சோஃபியா. ஸ்வின்லீ டீனிலிருந்து. மிக அவசரம் என்றார்'' என்று பவ்யமாய் சொல்லி நகர்ந்தான்.

இவ்விதமாய் அப்பாவுடன் விவாதித்துக் கொண்டிருந்த போது தான், இதே வசனங்களடக்கி, அன்று ஜோஸஃபைன் வீழ்ந்த சேதியும் வந்தது. அந்தக் குரூர நாடகம் மீண்டும் அரங்கேறி விட்டதா...? மீண்டும் ஜோஸஃபைன் சீவப்பட்டு விட்டாளா...? எந்தத் தோல்வியு மின்றி கொலைகாரன் இம்முறை வென்றிருப்பானா...?

ரிஸீவரை எடுத்துக் காதுகளில் பொருத்தினேன். ''சோஃபியா...? சோஃபியா...?'' - அலைபாய்ந்தேன். ''நான்.. சார்ல்ஸ்...!''

சோஃபியாவின் குரல், கயவனிடம் அகப்பட்டுக் கொண்ட பெண்ணின் பாவனையில் அலறிப் புடைத்துப் பொங்கியது. ''சார்ல்ஸ்...! எதுவும் முடியவில்லை சார்ல்ஸ்....! கொலைகாரன் இன்னும் இங்கேயே, இந்த வீட்டுக்குள்ளேயே தான் உலாவிக் கொண்டிருக்கிறான் சார்ல்ஸ்...!'' - ரிஸீவரின் வழியே வழிந்து விடத் துடிப்பது போல் பய அவசரமானாள்.

''என்ன உளறுகிறாய்...?'' - நான் நிலை தடுமாறினேன். ''என்ன ஆயிற்று...? மறுபடியும் ஜோஸஃபைனுக்கு... ஏதாவது விபரீதம்...?''

''ஜோஸஃபைனுக்கு இல்லை சார்ல்ஸ்...! நானி...! நானிக்கு...!''

''நானி...?''

''ஆமாம்..'' பதற்றத்தோடு நடந்துள்ளதை மிகச் சுருக்கமாக சொன்னாள்: ''ஒரு கோப்பை காபி கலந்திருக்கிறாள். ஜோஸஃபைனுக்காக. அவள் குடிக்காமல் அடம்பிடித்துப் போய் விட்டாள். வீணாக்க வேண்டாமே என்று கருதி நானி குடித்திருக்கிறாள்'' - மற்றதை நானே புரிந்துக் கொள்ள விட்டு விட்டு அழுதாள்.

''ரொம்ப மோசமாக இருக்கிறாளா...?''

சோஃபியாவின் குரல் உடைந்தது:

''ஓ சார்ல்ஸ்...! நானி இறந்து விட்டாள்...!''

# 24

மீண்டும் அதே பிரளய அதிர்ச்சி. நானும் டேவரெனரும் லண்டனுக்கு விரையும்போது இப்படித்தான் நினைத்துக் கொண்டோம். அன்று ஜோஸஃபைனுக்காக பறந்தோம். இன்று நானிக்காக. டேவரெனர் அவ்வப்போது ஆழ்ந்து மூச்சினை வெளியிட்டுக் கொண்டார். நான், எவ்வித உதவியையும் முதன்மை இன்ஸ்பெக்டருக்குப் பெற்றுத் தரயியலாத, 'ஆக, ப்ரெண்டாவும் லாரன்ஸும் இல்லை. ப்ரெண்டாவும் லாரன்ஸும் கிடையாது' எனும் வசனங்களை முட்டாள்தனமாக உதிர்த்துக் கொண்டிருந்தேன்.

அவர்களிருவரும் கொலைக் குற்றம் செய்திருப்பார்கள் என நான் எண்ணியதுண்டா...? இல்லை என்பதே உண்மை. பட்டியலிலிருந்து இருவர் நீங்கியதில் மகிழ்ச்சி ஏற்பட்டது.

இருவரும் ஒருவரை ஒருவர் விரும்ப ஆரம்பித்தனர். காதல் உணர்வுகளைத் தூண்டும் விடலைக் காதல் கடிதங்களையும் ஒருவருக்கொருவர் பரிமாறியுள்ளனர். காதல் கை கூட வேண்டும் எனும் உந்துதலில், வெறியில், பெரியவர் சீக்கிரம் இறந்து விடுவார் என எதிர்பார்த்துள்ளனர். சொல்லப்போனால், லியோனைட் இறந்து விட வேண்டும் என இருவரும் வேண்டியிருந்தனரோ என்று கூட எனக்கு சந்தேகம் தோன்றியது. மணம் புரிந்துக் கொண்டு நிம்மதியாய் நடத்தப்படும் இல்லறத்தை விட, இது போல் காதல் தொடர்பு மட்டும் கொண்டு வாழும் போக்கு இருவருக்கும் அழகாய் பொருந்தியதாய் தோன்றிற்று. மிகச் சரியாய் சோஃபியா கணித்துச் சொன்னது போல, ப்ரெண்டா ஓர் அந்தப்புரத்து ராணி. அவளுக்கு குடும்பம் போன்றவற்றிலெல்லாம் உற்சாகம் கிடையாது. அவள் ஏங்கியதெல்லாம் ஒரு வகை கிளர்ச்சிக்காக. அவ்வளவே. இதைத் தருவதில் லியோனைட் கை தேர்ந்திருந்ததால் மட்டும் தான் அவரிடம் இந்த அளவு ஒட்டி வாழ்ந்திருக்கிறார் ப்ரெண்டா. ஏறக்குறைய லாரன்ஸும் இவ்வகையே.

இப்படிப்பட்ட இருவரும், பெரியவர் கொலை வழக்கில், அனைவராலும், சந்தர்ப்ப சூழ்நிலையின் காரணமாக சந்தேகிக் கப்படுகிறார்கள். அதனால் பயம். தப்பிக்க துப்பற்ற பயம். லாரன்ஸ், அவருக்கே உரிய உயரிய முட்டாள் தனத்தின் தாக்கத்தால், இந்த இக்கட்டிலும், அக்காதல் கடிதங்களை அழிக்காமல் அடை காத்து வந்துள்ளார். பாதுகாப்பான ப்ரெண்டா, இந்த அப்பிராணி எழுதிய காதல் கடிதங்களைப் புத்திசாலித்தனமாய் அப்போதேக் கிழித்தெறிந் திருக்க வேண்டும்; இல்லையென்றால் அவை பின்னர் கிடைத் திருக்குமா? அந்தச் சலவைக் கல்லினைக் கதவின் மேல் வைத்துப் பொறி செய்தது, நிச்சயமாக லாரன்ஸ் கிடையாது. இன்னும் முகமூடி விலகாத வேறு யாரோ...!

கார் சென்று, நிலை வாயிலை அடைந்து நின்றது. டேவரெனரைத் தொடர்ந்து நான் இறங்கினேன். அங்கிருந்த எனக்கு அறிமுகமில்லாத ஒருவன் டேவரெனருக்கு சல்யூட் வைத்தான். இருவரும் சற்றே ஒதுங்கிப் போய் பேசினர். இவனை விட என்னை ஈர்த்தவை, வரவேற்பறையில் தயார் நிலையில் குவிந்துக் கிடந்த பயணப் பைகள். அவற்றை நான் கவனித்துக் கொண்டிருக்கும்போதே, க்ளெம்சி, மாடிப் படியிறங்கி வந்து எங்களருகில் நின்றார். வெளியே கிளம்பு வதற்கு ஏதுவாக கோட் தொப்பி சகிதமாய் தயாராய் வந்தார் அவர்.

''எங்களை வழியனுப்ப சரியாக வந்து விட்டீர்கள் சார்ல்ஸ்...'' என்றாள் அவள்.

''கிளம்புகிறீர்களா என்ன...?''

''இன்றிரவு லண்டன் அடைகிறோம். அங்கிருந்து நாளை அதி காலை எங்கள் வசந்த வாழ்விற்கான விமானம் கிளம்பும்.''

அமைதியாய் சிறு சிரிப்பூடே சொன்னாள். ஆனாலும் அவள் கண்களில் ஒரு தேடலை உணர்ந்தேன்.

''ஆனால் இப்பொழுது செல்வதைத் தவிர்க்கலாமில்லையா...?''

''ஏன்...?'' - சட்டென அவள் குரல் உயர்ந்தது.

''இங்கு ஒரு மரணம் சம்பவித்துள்ள தருணத்தில்... ... ...''

''நானியின் மரணத்துக்கு வருந்துகிறோம். அவ்வளவு தான் இயலும். அவள் மரணம் எங்களைக் கட்டுப்படுத்தாது.''

''ம்...'' என கிண்டலாய் சொன்னேன். ''உங்களுக்கு வித்தியாசம் தெரியாது தான். அவர் இருப்பதும் மரித்ததும் ஒன்று தானே உங்களுக்கு....!''

''உங்களுக்கு வித்தியாசம் தெரியாது என ஏன் சொல்கிறாய்...! அவள் மரணம் நாங்கள் சம்பந்தப்படாதது. ரோஜரும் நானும் எல்லாவற்றையும் அடுக்கிக் கொண்டு மேலே இருந்தோம். காபி கலந்து அதனை அந்தச் சிறுமி மறுத்து பிறகு நானி குடித்து நிகழ்ந்த சம்பவம் எதிலும் நாங்கள் இங்கிருக்கவில்லை.''

''நிரூபிக்க முடியுமா...?''

''எனக்காக ரோஜரும் அவருக்காக நானும் சாட்சி கூற இயலும்.''

''வேலிக்கு ஓணான் சாட்சி போல...! நீங்களிருவரும் தம்பதிகள். நினைவிலிருக்கட்டும்.''

அவள் கோபத் தீ வளர்ந்தது.

''நீ சந்தர்ப்பவாதி சார்ல்ஸ்...! நானும் ரோஜரும் எல்லோரையும் விட்டு வெகு தூரம் கிளம்பி விட்டோம். எங்களுக்கான வாழ்க்கையை மட்டும் வாழ...! அனுபவம் வாய்ந்த ஒரு கிழ சமையற்காரியை, எங்களுக்கு எந்தத் தீங்கும் இழைத்திராத ஒரு மூதாட்டியைப் போய் நாங்கள் ஏன் கொல்ல வேண்டும்...? வீணாக எங்களை இதற்குள் நுழைக்க வேண்டாம்.''

''ஒரு வேளை அவளுக்கு விஷம் வைக்க நீங்கள் முனையாமல், வேறு யாருக்காவது முனைந்திருக்கலாமில்லையா...? அது தவறி நானி கைகளுக்கு அகப்பட்டு... ... ...''

''யாருக்கு...? ஜோஸஃபைனுக்கா...? என்னாயிற்று உங்களுக்கு...? ஒரு குழந்தையைக் கொல்லுமளவு நாங்கள் கொடூரமானவர்கள் இல்லை...!''

''அது, எந்த மாதிரியான குழந்தை என்பதைப் பொறுத்துள்ளது...!''

''என்ன பேசுகிறீர்கள்...?''

''ஜோஸஃபைன் ஓர் அசாதாரண குழந்தை. இது யாவரும் அறிந்ததே. ஒவ்வொருவர் பற்றியும் அவர்களின் மறுபக்கங்கள் பற்றியும், இக்குழந்தைக்கு நன்றாய் தெரியும். அவள் ... ... ....''

என நான் முன்னேற முடியாமல், அங்கிருந்த அடுத்த அறைக்கு இட்டுச் செல்லும் கதவின் இடுக்கிலிருந்து வெளிப்பட்டாள் ஜோஸஃபைன். அவள் விரும்பும் பெரிய அளவிலான ஆப்பிளைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த அவள் சிகப்புக் கண்களில் அதிக களிப்பு இருந்தது.

''நானி விஷம் வைத்து அழிக்கப்பட்டு விட்டார்'' என்று அந்த களிப்பினூடே முணுமுணுத்தாள். ''தாத்தா மாதிரியே...!'' என்றாள். ''விறுவிறுப்பாயில்லை....!''

''என்ன ஜோ இது...? உனக்குத் துளியும் துயரம் இல்லையா...? உன்னைப் புரிந்துக் கொள்ளவே முடியவில்லையே....! அவளை உனக்குப் பிடிக்குமில்லையா....?''

''அப்படி ஒன்றும் பிரமாதமாய் பிடிக்காது. நான் துப்பறிவதிலும் ஒட்டுக் கேட்பதிலும் அவளுக்கு திருப்தி இருந்ததே இல்லை. வசவு பாடிக் கொண்டேயிருப்பாள்.''

''உனக்கு யாரைத் தான் பிடிக்கும்...!'' என்று குழந்தையை ஒதுக்கினாள் க்ளெம்சி.

தன் பெரிய கரு விழிகளை க்ளெம்சி நோக்கி திருப்பினாள் ஜோஸஃபைன். ''நான் எடித் பாட்டியை நேசிக்கிறேன்...!'' என்றாள். ''அவரை ரொம்ப விரும்புகிறேன். என்னையும் என் துப்பறியும் ஆவலையும் தூஷிக்காமல் யாரந்தக் கொலையாளி என அறிவதில் எனக்கு உதவும் பட்சத்தில், ஆஸ்டஸையும் நான் இன்னும் அதிகம் விரும்பலாம்.''

''போதும் போதும் ஜோஸஃபைன். இந்த உளவு பார்த்து குற்றவாளியை அறியும் உன் முயற்சிகளை முதலில் நீ நிறுத்து'' என்றேன் நான். ''உன் பாதுகாப்புக்கு இது நல்லதே அல்ல.''

''இனி ஒன்றும் புதிதாக கண்டுபிடித்து வலு சேர்க்க வேண்டிய அவசியமில்லை சார்ல்ஸ்'' என்றவள், ''யாரென்று எனக்குத் தெரியும்'' என்றாள் உறுதியாய்.

அக்கணம், அந்த அறையே அமைதியில் உறைந்தது. ஜோஸஃபைனின் நகராத பயப்படாத தீர்ப்பு கூறும் பெரிய விழிகள் க்ளெம்சி மீது நிலைகுத்தியிருந்தன. அப்போது திடீரென சப்தமாய் வெளியிடப்பட்ட ஒரு பெரிய தும்மல் என் செவிகளை அறைந்தது. என் சிந்தையைக் கலைத்த அந்தப் பேரோலி எங்கிருந்து வந்தது என அறிய சுற்றும் முற்றும் கூர்மையாய் நோட்டமிட்டேன். மாடியிலிருந்து வந்துக் கொண்டிருந்தார் எடித். மற்றபடி இங்கு வேறு யாருமில்லை. தும்மல் அவரிடமிருந்து வரவில்லை. என் பக்கவாட்டிலிருந்து, இப்பொழுது ஜோஸஃபைன் வந்தாளே, அந்தக் கதவின் பின்னாலிருந்து தான் ஒலி வந்தது.

தாமதிக்காது அப்பக்கம் சென்று ஒருக்களித்திருந்த கதவை விரித்து பின்னால் தேடினேன். யாருமில்லை. யாரோ இக்கதவின் பின்னால்

நின்றிருந்திருக்கிறார்கள், ஜோஸஃபைன் என்ன பேசுகிறாள் எனக் கேட்க....! திரும்பிய நான் சிறுமியை என் கையகப்படுத்திக் கொண்டேன். ஆப்பிளைத் தின்றபடி, க்ளெம்சியைத் தொடர்ந்து விழுங்குவது போல் பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். தீர்மானமாய் இருந்த அந்தப் பார்வையில் ஏதோ முடித்து விட்ட திருப்தியும் இருப்பதாய் எனக்குத் தோன்றியது.

''வா ஜோ...'' என்று நான் பிடித்திருந்த அவள் கைகளைப் பற்றி சற்றே இழுத்தேன். ''உன்னுடன் கொஞ்சம் பேச உள்ளது.''

தடுப்பாள் என நினைத்தேன். அவள் தடுக்கவும் செய்யாமல், ஒப்புக் கொண்டும் வராமல், என் இழுப்புக்குக் கட்டுப்பட்ட பொம்மையாய் உடன் வந்தாள். அவள் பகுதிக்கே அழைத்துப் போனேன். கதவை அடைத்தேன். வசதியாய் ஒரு நாற்காலியில் அமர வைத்தேன். அவளைப் பார்க்கும்படி நானும் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தேன். ''இப்பொழுது ஜோஸஃபைன்...'' என துரிதமாக ஆரம்பித்தேன். ''நாம் மலரும் நினைவுகளில் மூழ்கப் போகிறோம். லியோனைட் கொலை சம்பந்தமான மலரும் நினைவுகள். உனக்கு நிச்சயமாய் என்னவெல்லாம் தெரியும்...?''

''நிறைய நிறைய.''

''அதில் எனக்குத் துளியும் சந்தேகமில்லை. உன் தலை, வேண்டியது வேண்டாதது என எல்லா தகவல்களும் அடைக்கப்பட்டுப் பொங்கி வழிந்துக் கொண்டிருப்பதை நானறிவேன். ஆனால் அதிலிருந்து நான் எடுக்க நினைப்பது என்ன என்று உனக்குத் தெரியும். எனவே பொதுப்படையான பதில்கள் தராதே.''

''தெரியும். நீ என்ன எதிர்பார்க்கிறாய் என எனக்குத் தெரியும். அது கூட கிரகித்துக் கொள்ள முடியாத முட்டாளல்ல நான்.''

இந்த குத்தல் எனக்கா போலீஸுக்கா என புரியவில்லை, இருந்தாலும் இதற்கெல்லாம் முக்கியத்துவம் அளிக்காது, ''உனக்காக வைக்கப்பட்ட காபியில் யார் எதையோ கலந்தது என உனக்கு தெரியுமில்லையா...?''

ஆம் என்பது போல் ஆமோதித்தாள்.

''உன் தாத்தாவை விஷம் வைத்து தீர்த்தது யாரென்று உனக்கு தெரியுமில்லையா...?''

ஆமாம் என்று தலையசைத்தாள்.

''உன் தலைக்கு வேட்டு வைத்தது யாரென்றும் நீ அறிந்திருக் கிறாய்...!''

நிச்சயமாய் என்று ஒப்புதலாய் தலையசைத்தாள்.

நான் அவளை இன்னும் நெருங்கி வளைந்து, ''அப்படியெனில் உனக்குத் தெரிந்த அத்தனை தகவல்களையும் நீ என் முன் இப்போது வைக்கத்தான் வேண்டும். நீ முடிவெடுத்து வைத்துள்ள உன் நிலையை என்னிடம் இப்போதே சொல்ல வேண்டும். இப்போதே. தாமதமின்றி.''

''மாட்டேன்!''

''முடியாது. சொல்லித் தீர வேண்டும். உனக்குத் தெரிந்துள்ள தகவல்கள் ஒவ்வொன்றும் அங்குலம் அங்குலமாக வெளி வர வேண்டும். இனி தாமதிக்க முடியவே முடியாது. சொல்லாவிட்டால், போலீஸ், அத்தகவல்களை வாங்கும் விதத்தில் வாங்கும்.''

''போலீஸுக்கு நான் எதையுமே சொல்ல மாட்டேன். அவர்கள் முழு முட்டாள்கள். இப்படி நான் குற்றம் சுமத்துவது வெறும் அறிக்கை அல்ல சார்ல்ஸ். அவர்களே பல முறை ஊர்ஜிதப்படுத்திக் காட்டியுள்ள உண்மை. ப்ரெண்டாவோ லாரன்ஸோ தான் தாத்தாவைக் கொலை செய்ததாக சொன்னார்கள். கைதும் செய்துள்ளார்கள். ஆனால் நான் இந்த முட்டாள் முடிவை எடுக்கவேயில்லை. அவர்கள் செய்யவில்லை என சின்னஞ்சிறு சிறுமி என்னால் முடிவு செய்ய இயன்றது. போலீஸால் இயலவில்லை. ஆரம்பம் முதலே யாராயிருக்கும் என்பதில் எனக்குக் குழப்பமற்ற சந்தேகமிருந்தது....! பிறகு ஒரு சிறு பரீட்சை செய்து பார்த்தேன். இப்போது என் குழப்பம் தீர்ந்து அது ஊர்ஜிதமாகி விட்டது.''

கம்பீரமாய் முடித்துக் கொண்டாள். பொறுமையை மட்டும் இழந்து விடக் கூடாது என்று வேண்டாத தெய்வங்களையெல்லாம் பிரார்த்தித்துத் தொடர்ந்தேன்: ''இதோ பார் ஜோஸஃபைன். மேடை போட்டுப் பேசி ஒப்புக் கொள்கிறேன். நீ மகா புத்திசாலி. இதில் இரு கருத்துக்கள் கிடையாது'' - இப்போது சந்தோஷம் பொங்க என்னைப் பார்த்தாள். ''ஆனால் உண்மை குற்றவாளியை நீதி மன்றத்தில் ஏற்றும் போது நீ உயிருடன் இல்லாமல் போய் விட்டால், அது போன்ற முட்டாள் தனமும் இருக்காது. எனக்குத் தெரியும் என்று மூச்சுக்கு முன்னூறு தரம் சொல்லிக் கொண்டு நீ ரகசியம் காப்பதால் உன் முன் வளரும் உன் உயிருக்கான ஆபத்தினை உணரவேயில்லையா...?''

''தெரியும் சார்ல்ஸ், தெரியும்...!'' - என்று மனப்பூர்வமாய் ஏற்றுக் கொண்டாள்.

''ஏற்கெனவே நீ இருமுறை மயிரிழையில் தப்பித்திருக்கிறாய். அவற்றில் ஒன்று, உன்னை எமன் வாய் வரை கொண்டு சென்று பின் தான் தோற்றுள்ளது. இன்னொன்றோ உயிரையே வாங்கி விட்டது. நானியின் உயிரை. இந்நிலையில் வீட்டின் மூலை முடுக்கெல்லாம் ஒட்டடை தட்டுவது போல் நீ அலைந்து, உரத்த குரலில், எனக்கு கொலைகாரன் யார் என தெரிந்து விட்டது என்று மார் தட்டிக் கொண்டு அலைந்தாயேயானால், உன் உயிருக்கு உலை வைக்க இன்னும் முயற்சிகள் இடம்பெறும் என்றும், அம்முயற்சிகள், உன் உயிரையோ, இல்லை தவறி விட்டால், இன்னும் யாரேனும் உயிரையோ குடித்து விடும் என்று தெரியவில்லை...?''

''சில கதைகளில் ஒருத்தர் மாற்றி ஒருத்தர் கொல்லத் தான் படுகிறார்கள்'' என்று கொஞ்சமும் துணுக்குறாமல் வெறுப்பேற்றி னாள். ''கடைசியில் கொலையாளி யார் என்று தெரிய வரும். அது, மீதமுள்ள அந்த ஒரே ஆள்....!''

''ஜோஸஃபைன்...!'' என் ரத்தம் கொதித்தது. நான் கோப மடைந்து விட்டேனா என என் முகம் பார்த்து பரீட்சித்தாள். அடக்கிக் கொண்டேன். ''இது ஒன்றும் துப்பறியும் கதையல்ல. இது, ஸ்வின்லீ டீனில் கொலையாளி உலவும் வீடு. நீ, தேவையில்லாமல் என்னத்தை யெல்லாமோ படித்துப் படுத்தும் குட்டிப் பிசாசு'' - பொறுமை நழுவியது. ''உன்னை உலுக்கி எடுத்து, பற்களைப் பிடுங்கி எறிந் தாவது, உன்னிடமிருந்து உண்மையை வாங்காமல் விடப் போவ தில்லை. சோதிக்காதே.''

''அப்படி ஏதாவது செய்தாயேயானால் என் வாயில் வருவதை சொல்லி, அதாவது உண்மையை மறைத்து எதையாவது சொல்லி, தப்பிக்கத்தானே பார்ப்பேன். முட்டாள்.''

''நீ செய்யலாம். ஆனால் செய்ய விட மாட்டேன். எல்லாம் தெரியும் என்கிறாய். சொல்லித் தொலைய வேண்டியது தானே. பின் எதற்காக காத்திருக்கிறாய்..?''

''புரியாத ஆளய்யா நீ....'' என்றாள். ''நான் கடைசி வரை சொல்லாமலே கூட இருந்து விடலாம். அந்த நபர், அந்தக் கொலையாளி, எனக்கு மிகவும் பிடிக்கிறவராக இருக்கும் பட்சத்தில், சொல்வேனா....!'' - இப்படிச் சொல்லி விட்டு நிறுத்தினாள், அவள் சொன்னது என்னுள் பூரணமாய் இறங்கட்டும் என்று!

''அதையும் மீறி சொல்ல வேண்டிய சரியான தருணம் வந்தால்'' என்றவள், கூர்மையாக சொன்னாள்: ''முறைப்படி சொல்வேன்.

இப்படி மூடிய அறைக்குள் அல்ல. எல்லோரையும் அழைத்து சுற்றி வர உட்கார வைப்பேன். ஒவ்வொரு சாட்சியமாக எடுத்து என் முன் வைத்து, கடைசியில், சுட்டு விரல் நீட்டி, 'அந்தக் கொலையாளி - நீ தான்' என நிலைதடுமாறச் செய்வேன்''

இப்போது சுட்டு விரல் நீட்டி மூர்க்கமாய் ஜோஸஃபைன் காட்டிய இடத்தில் வந்து நின்றார், எடித். நின்றவர், ''இந்தக் கற்பனையை யெல்லாம், அழுக்குக் கூடையில் போடு ஜோஸஃபைன்'' என்றார். ''கைக்குட்டை இருக்கிறதா. கண்டதைத் தின்று உன் கை பிசுபிசு வென்று இருக்கிறது. சுத்தமாய் துடை. இல்லை கழுவி வா. உன்னை காரில் அழைத்துக் கொண்டு வெளியே செல்ல உள்ளேன்''. இப்படிச் சொல்லி விட்டு எனக்கு முக்கியத்துவம் கொடுத்து திரும்பியவர், ''இந்த வீட்டின் ஆபத்திலிருந்து அவளுக்கு என்னால் இயன்ற பாதுகாப்பினை நான் தர விழைகிறேன் சார்ல்ஸ்'' என்றார். ''லாங்க் பிரிட்ஜ் அழைத்துப் போய் உணவு வாங்கித் தந்து பொழுது போக்கி விட்டு வருகிறேன். இங்கிருக்கும் ஒவ்வொரு நொடியும் அவளுக்கு பேராபத்து.''

ஜோஸஃபைனின் கண்கள் பிரகாசமாயின. ''வாவ்...'' என்று குதூகலமானாள். அவளிடம் நான் முதன் முதலில் பார்க்கும் குழந்தைத் துள்ளல்.

''கோட், தொப்பி, மஃப்ளர் எல்லாம் போட்டுக் கொள் ஜோ...! குளிர் பிரமாதமாய் உள்ளது. சார்ல்ஸ், உடைகளை மாற்றிக் கொள்ளும் போது அவளுடனேயே இருங்கள், ப்ளீஸ். தனியே விட வேண்டாம். அவள் தயாராவதற்குள் நான் சில முக்கியமான குறிப்புகள் எழுத வேண்டியுள்ளது. முடித்து விட்டு வந்து விடுகிறேன்'' என்றவர், ஜோஸஃபைனின் தோளினைச் செல்லமாய் தட்டியபடி வெளியேறி னார்.

ஜோஸஃபைன் உடை மாற்றிக் கொள்ளத் தயாராக, நான் அறை வாசலில் வந்து காவலிருந்தேன். எடித் சொல்லாமலிருந்தாலும், ஜோ'வை அட்டை போல் ஒட்டித் தொடர்வதிலிருந்து நான் விலகுவதாக இல்லை...!

ஜோஸஃபைனுக்கு ஆபத்து இருப்பதை அனைவரும் உணரத் தொடங்கியுள்ளதில் சிறு திருப்தி எழுந்தது. ஜோ வரும் வரை சிறுமியின் குளியலறையைப் பார்த்தபடி நான் நின்றுக் கொண்டி ருந்தபோது, உள்ளே நுழைந்த சோஃபியா, ''என்ன சார்ல்ஸ்...! இங்கு

ஜோஸஃபைனின் குளியலறைக்குள் என்ன துப்பறிகிறாய்! இல்லை, அவள் உன்னைப் பணியாளாக மாற்றி விட்டாளா...!''

அப்போது உடைகள் மாற்றி வெளிப்பட்ட ஜோ, ''நான் எடித் பாட்டியோடு லாங்க் பிரிட்ஜ் செல்கிறேன்'' என்றாள். ''ஓட்டல் போய் சாப்பிடப் போகிறோம். ஐஸ் கிரீம் கேட்கப் போகிறேன்'' என்று சொன்னதில் துள்ளலிருந்தது.

''இந்தக் குளிரில்...?''

''எனக்கு ஐஸ் கிரீம் தான் வேண்டும்...!''

மூவரும் எடித் அறை பக்கம் சென்ற போது சில உறைகளை ஒட்டி முடித்து, இளைய பெண் போன்ற துடிப்போடு எழுந்து, அணிந்திருந்த கம்பளிச் சட்டையை இழுத்து சரி செய்து கொண்ட எடித், ''என் வேலை முடிந்தது...! இதோ... நான் ரெடி'' என்றார் புன்னகைத்தபடி. ''ஓட்டுனரிடம் காரை எடுத்து வரச் சொல்லி விட்டேன்.''

வெளியே விரைந்த அவர் நடையைப் பின்பற்றினோம் நாங்கள். வெளி வாசலுக்கு செல்லும்போது கண்களில் பட்ட ரோஜர் குடும்பத்தின் பிரயாணப் பெட்டிகள் எனக்குள் இனம்புரியாத பயத்தை ஏற்படுத்தின.

வானத்தைப் பார்த்தபடி, இரு உள்ளங்கைகளை விரைவாய் சேர்த்து இழைத்து சூடேற்றிக் கொண்ட எடித், ''அருமையான வசந்த காலம். எத்தனை குளிர். வீட்டுப் பிரளயத்தில், செலவின்றி நம் முன்னால் விரிந்துள்ள விலைமதிப்பற்ற இயற்கையைக் கூட ரசிக்க மனமில்லாமல் அலைகிறோம்'' என்று சொன்ன வார்த்தைகளின் முக்கியத்துவம் புரிந்தது.

கார் வந்து நின்றது. ''பனியால் குச்சிக் குச்சியாய் இலைகளற்று ஆகி விட்ட மரங்கள், வானத்தைப் பார்த்து கை நீட்டி, 'இலையைத்தா, இலையைத்தா'என இறைஞ்சுவது போல இல்லை...!'' என எடித் குதூலகமாயிருந்தார்.

படிகளிறங்கி காரினை நெருங்கியவர், என்ன நினைத்தாரோ, சில நொடிகள் வானத்தையே பார்த்தபடி நின்றிருந்தார். பிறகு திரும்பி மீண்டும் படிகளேறி சோஃபியாவை நெருங்கி, அவளைத் தோளோடு சாய்த்து அணைத்து, நெற்றியில் முத்தமிட்டார். பின்னர் சொன்னார்: ''குட் பை டியர்.'' தொடர்ந்தார்: ''ரொம்பக் கவலைப்படாதே. இளமையை அனுபவி. அது திரும்ப வராது. சில விஷயங்களை அப்படியே எதிர் கொண்டு ஜீரணித்து விட வேண்டியது தான். வேறு வழியேயில்லை.''

வாசற் படிகளிறங்கிப் போய், ஓட்டுநரிடம் சாவியைப் பெற்று, அவரிருக்கையில் எடித் ஏறிக் கொள்ள, ஜோஸஃபைன் ஓடிப் போய் பின்னால் ஏறிக் கொண்டாள். காரை ஓட்டியபடி எங்களைக் கடக்கும் போது, அழுத்தமாய் கையசைத்தார்.

''எடித் சொல்வது மிகச் சரி'' என்றேன் நான். ''ஜோஸஃபைனை வீட்டிலிருந்து தள்ளி வைப்பதே அவள் உயிருக்கு நாம் தரவல்ல ஒரே பாதுகாப்பு'' என்று சொல்லிவிட்டு, உள்ளே நுழைய திரும்பியபடி, ''அவளிடமிருந்து, அவளுக்குத் தெரிந்துள்ள அத்தனை உண்மை களையும் கறந்தே தீர வேண்டும் சோஃபியா'' என்றேன்.

''நீ வேற சார்ல்ஸ்...! அவளுக்கு ஒன்றும் தெரியாது. ஏமாற நீ கிடைத்தாய். எனவே சும்மா ஓட்டுகிறாள். அவள் தான் பிரதானமாக இருக்க வேண்டும். அதற்காக அவள் செய்யும் வேலைகள் இவை....!''

''ம்ம்...'' என்று மறுத்த நான், கேட்டேன்: ''காபியில் கலக்கப் பட்ட விஷம் என்ன என்று கண்டாகி விட்டதா...?''

''டிஜிட்டலின் என்று நினைக்கிறார்கள். எடித் பாட்டி அவருடைய இருதய சிகிச்சைக்காக உண்ணும் மருந்தாம். ஒரு பாட்டில் மருந்தினை சமீபத்தில் தான் வாங்கியிருக்கிறார். இப்போது அந்த பாட்டில் காலி.''

''பூட்டி வைத்திருந்திருக்க வேண்டும். ஒரு முறை விபரீதம் நடந்தும் விட்டேற்றியாய் இருக்கலாமா...?''

''பூட்டித் தான் வைத்திருந்தார்கள். சாவியையுமா பூட்ட முடியும்! அச்சண்டாளனுக்கு சாவி வைக்கப்படும் இடம் தெரிந்திருக்கிறது.''

''யாரந்தச் சண்டாளன்...?'' என்ற கேள்வியோடு உள்ளே நுழைந்த என் கண்களில் அந்தப் பிரயாண மூட்டைகள் தட்டுப் பட, உள்ளே ஏதோ ஓர் உணர்வு, விடை இவை தான் என புலம்பிற்று.

''அவர்கள் போகக் கூடாது'' என என்னையறியாமல் கத்தினேன். அம்மூட்டைகளை வெறித்தபடி, ''அவர்களைப் போக அனுமதிக்கக் கூடாது'' என்றேன்.

சோஃபியா ஆச்சரியமாய் என்னைப் பார்த்தாள் : ''ரோஜர்...? க்ளெம்சி...?''

''ஆமாம்...'' என்றேன். ''நீ என்ன நினைக்கிறாய்...?''

''தெரியவில்லையே சார்ல்ஸ்! என்னருமை ரோஜர் பெரியப் பாவா...??'' - கலவரமானாள். ''நான் மறுபடியும் பழைய அதிர்ச்சியில் மூழ்கி மறைவதாய் தோன்றுகிறது சார்ல்ஸ்...!''

''நானும் டேவரெனரும் இங்கு வரும்போதும் இதையேத் தான் கூறிக் கொண்டோம். இவ்வளவு தூரம் கடந்தும், ஆரம்ப அதிர்ச்சியில் தான் மீண்டும் மீண்டும் போய் நிற்கிறோம்.''

''தினம் பழகும் உறவுகள் - தினமும் நம் கூட அமர்ந்து உணவு சாப்பிடும் உறவுகள் - நம் பக்கத்திலேயே படுத்து உறங்கும் ஆட்கள் - நாம் உயிருக்கு உயிராய் நினைத்து ஆராதிக்கும் பந்தங்கள் - நாம் பார்த்துக் கொண்டிருக்கும் போதே முகம் மாறி - கடைவாயில் பற்கள் முளைக்க விகாரமாகி - கடைசியில் இன்னாரென்று அடையாளம் காணயியலா வண்ணம் அரக்கனாகி...''

இப்படிப் பேசிக் கொண்டே போன சோஃபியா, வீல்'லென வீறிட்டுக் கதறினாள். அழுதாள். மளமளவென கொட்டும் பனியையும் பொருட்படுத்தாது வீட்டுக்கு வெளியே ஓடிப் போய் தெருவில் நின்றுக் கொண்டு அலறினாள் : ''வா சார்ல்ஸ்! வந்து விடு! வெளியே வந்து விடு! இது தான் பாதுகாப்பு! அந்த வீட்டில் இனி இருக்க மாட்டேன்! பயம் வதைக்கிறது! தெரு தான் பாதுகாப்பு...! அது வீடல்ல. குரூர காடு...!''

# 25

உள்ளே போகாமல் தோட்டத்திலேயே வெகுநேரமிருந்தோம். பதறிப் போன மனதுக்கு அமைதி வரவேண்டும் என்பதற்காக வீட்டில் அரங்கேறி வரும் குலை நடுங்க வைக்கும் நிகழ்வுகள் எதையும் பேசவில்லை. நானியின் பிரிவு தனக்குள் ஏற்படுத்தியுள்ள துயரம் பற்றி மட்டும் சோஃபியா பேசிக் கொண்டிருந்தாள். இவர்களிருவரும் சேர்ந்து விளையாடிய விளையாட்டுக்கள், அவர் மடியில் பயமின்றி உலகையே கைகளில் பிடித்துவிட்ட திருப்தியில் அமைதியாய் தூங்கிய நாட்கள், குழந்தையாயிருந்தபோது அடம் பிடித்து அவரை அலைக்கழித்த சம்பவங்கள், இவற்றையெல்லாம் கொஞ்சமும் முகம் சுளிக்காமல் நானி தாங்கிய சிரத்தை என்று பலப்பல சொல்லி துயரப்பட்டாள்.

''நாங்களெல்லோரும் அவரின் செல்லப் பிள்ளைகள் சார்ல்ஸ்...! எதேச்சையாய் ஒரு வேலைக்காரியாய் தான் சேர்ந்தாள். பிறகு இக்குடும்பத்துக் குழந்தைகளுக்காக அவர் உயிர் கொடுத்து உழைத்த உழைப்பின் பலனால், தாத்தாவால், ஒரு குடும்ப அங்கத்தினராகவே உயர்த்தப்பட்டார். எங்கும் போகலாம், எங்கும் வரலாம். அவருக்கு கட்டுப்பாடுகள் கிடையாது. அவர் வேலைக்கு சேர்ந்த போது ஜோஸஃபைன் ஒரு கைக் குழந்தை'' - பெருமூச்செறிந்தாள்.

வீட்டை நினைத்தாலே அரண்டுப் போன சோஃபியாவுக்கு நானியின் நினைவுகள் ஒத்தடம் தந்தன. எனவே அவளை ஆமோதித்துப் பேச விட்டுக் கொண்டேயிருந்தேன். ஆனால் எனக்குள் இந்த டேவரெனர் எங்கு என்ன செய்துக் கொண்டிருக்கிறார் என்ற எண்ணம் இப்போது ஓடிக்கொண்டிருந்தது. வீட்டில் யாரையாவது புலன் விசாரித்துக் கொண்டிருக்கலாம் என எண்ணிக் கொண்டிருக்கையில், ஒரு காவல் ஊர்தி, சில சிப்பந்திகள் மற்றும் ஒரு புகைப்படக்காரர் ஆகியோருடன் உள்ளே நுழைந்தது. பின்னாலேயே ஓர் ஆம்புலன்ஸும் வந்தது.

ஏற்கெனவே அதிர்ந்திருந்த சோஃபியா இதைக் கவனித்ததும் நடுங்கிப் போனாள். கொஞ்ச நேரத்தில் ஆம்புலன்ஸ் மட்டும் பறந்து மறைந்தது. நானியின் உடல் பிரேதப் பரிசோதனைக்கு கொண்டு செல்லப்படுவது புரிந்தது. ''நானி போய் விட்டார் சார்ல்ஸ்...!'' என்று சோஃபியா வாய் திறக்காது ஆழமாய் அழுதாள்.

இன்னும் நாங்கள் வீட்டுக்குள் போகவில்லை. அவளாய் பயம் விலக்கி அழைத்தால் மட்டுமே உள்ளே போவதாய் தீர்மான மாயிருந்தேன். பனியையும் பொருட்படுத்தாது, உட்கார்ந்தும் நடந்தும் பேசிக் கொண்டேயிருந்தோம். எங்கள் மனங்களில் இத்தனை நாட்களாக தேங்கிக் கிடக்கும் பல எண்ணங்கள், பல கருத்துக்கள், பல முடிவுகள், பல அலறல்கள் என எல்லாம் கொட்டிக் கொண்டே யிருந்தன. இறுதியில் சிறு நடுக்கத்தோடு, சோஃபியா நிகழ்காலத் துக்குள் நுழைந்தாள். சொன்னாள்: ''ரொம்ப நேரம் ஆகியிருக்க வேண்டும் சார்ல்ஸ். இருட்டி விட்டது. உள்ளே போக வேண்டும். வேறு வழி...?'' என்றவள், கலவரமாய் கேட்டாள்: ''எடித்'தும் ஜோஸஃபைனும் இன்னும் வரவில்லை. இந்நேரத்திற்குள் வந்திருக்க வேண்டும்...!''

சின்னதாய் ஓர் இருப்புக் கொள்ளாமை என்னுள் விழித்தது. இருட்டியும் வராமல் போக என்ன நடந்திருக்கும்? இக்குரூர வீட்டில் சிறுமிக்கு உள்ள ஆபத்தினை அறிந்து இயன்ற வரை வெளியே இருந்து பிழைக்கட்டும் என வேண்டுமென்றே காலம் தாழ்த்து கின்றாரா?

எழுந்து இருவரும் உள்ளே போனோம். எல்லா திரைச் சீலைகளையும் இழுத்து விட்டாள். குளிர் குறைந்து வெப்பம் நிலவ நெருப்பு மூட்டினாள். வந்த மருத்துவக் குழுவால் நானியின் உடலில் தெளித்து விடப்பட்ட மருந்துகள் ஒரு கலவையாய் வாசம் வீசி, நெஞ்சினை கனக்க வைத்தன.

ஒரு வேலைக்காரியை வரச் சொல்லி டீ எடுத்து வர ஆணை யிட்டாள் சோஃபியா. வந்தவள் நானி போட்டுத் தரும் அற்புத டீயை நினைவு கூர்ந்து விம்மினாள். அழுது அழுது அவள் கண்கள் சிவந்தும் மூக்குகள் புடைத்துமிருந்தன.

டீ வந்தது. குடிக்கும் போது, மகதாவும் எங்களுடன் இணைந்துக் கொண்டார். துக்க மயமாயிருந்த மகதா ரொம்பக் கம்மியாய் தான் பேசினார். ''எடித்'தும் ஜோஸஃபைனும் எங்கு போவதாய் சொன்னார்கள்? எவ்வளவு நேரமாகி விட்டது அவர்கள் போய்...?!

இந்த இருட்டில் வண்டி ஓட்டுவதெல்லாம் வெகு கடினம் வேறு'' என்று மனம் பிசையப் பேசினார். ''கொட்டும் பனியில் எதிரே வரும் வாகனங்கள்கூட தெரியாது.''

எனக்குள் விழித்திருந்த இருப்புக் கொள்ளாமை வளர்ந்து மிரட்டியது. டேவரெனர் போய் விட்டாரா என்று நான் கேட்டதற்கு இல்லை என நினைப்பதாய் சொன்னார், மகதா. அவரைத் தேடிக் கிளம்பினேன். மாடியிலிருந்தார். நிலைமை யைச் சொல்லி, எடித் மற்றும் ஜோஸஃபைன் பற்றி அமானுஷ்யமாய் ஓர் உணர்வு வயிற்றில் புளியைக் கரைப்பதாய் விளக்கினேன்.

உடனடியாய் தொலைபேசி எடுத்து சில முக்கிய காவலர்களைத் தொடர்புக் கொண்டு அவசர ஆணைகளைத் தந்தார். ''தகவல் வந்ததும் சொல்லி அனுப்புகிறேன்'' என்றார், என்னிடம்.

நன்றி தெரிவித்து விட்டு மீண்டும் கீழே வந்தேன். ஆஸ்டஸ் இருந்தான். மகதா சென்று விட்டிருந்தாள். தகவல் வந்ததும் சொல்வ தாய் சொன்னார் என்று சோஃபியாவுக்கு சிறு தைரியம் தந்தேன்.

''ஏதோ நடந்திருக்கிறது சார்ல்ஸ்....'' கீழ்க் குரலில் பதறினாள். ''ஏதோ நடந்திருக்க வேண்டும். இல்லையென்றால் இப்படித் தாமதம் ஏன்...?''

''சோஃபியா. ஏற்கெனவே நீ நிலை தடுமாறியுள்ளாய். எனவே சிந்திக்காதே. குழப்பம் தான் மிஞ்சும். நடுநிசியா ஆகி விட்டது?''

''நடுநிசியானாலும் வர மாட்டார்கள் சார்ல்ஸ்....'' - ஏதோ ஆரூடம் சொல்வது போல் அவள் அறிவித்தது எனக்கும் கொஞ்சம் நடுக்கத்தைத் தந்தது.

''ஏன் வீணாக பயமுறுத்துகிறாய் சோஃபியா...?'' என்றான் ஆஸ்டஸ். ''சினிமா கினிமா என்று எங்காவது போயிருக்கலாம். அதனால் தான் காலம் கடக்கிறது. பேசாமல் இரு.''

இப்படிச் சொல்லி விட்டு போய் விட்டான் அவன்.

''கவலைப்படாதே சோஃபி. ஜோஸஃபைனை அழைத்துக் கொண்டு இரவு சாப்பாடு சாப்பிட ஓட்டல் போயிருப்பார். கையிலோ காருள்ளது எனும் தைரியத்தில், இன்னும் மகிழ லண்டன் வரை கூட போயிருக்கலாம். நம்மை விட குழந்தை ஆபத்திலிருப்பதை உளப் பூர்வமாக அவர் உணர்ந்திருக்கலாம். ஆகவே அவளுக்கு இன்று சிறப்பான விருந்து தந்து தானும் மகிழ்ந்துக் கொண்டிருக்கலாம்'' என்றேன்.

தரையை உற்றுப் பார்த்துக் கொண்டே, நரம்பதிரச் சொன்னாள்: ''கிளம்பும் போது, என்னிடம் வந்து, எடித் பாட்டி, குட் பை டியர் என்றார்.''

திடுமென மாலையில் இடம்பெற்ற இந்த வசனத்தை ஏன் சொல்கிறாள் என்றோ, இதனைச் சொல்லி என்ன உணர்த்த வருகிறாள் என்றோ எனக்குப் புரியவில்லை. மகதா கவலைப்படுகிறாரா எனக் கேட்டேன்.

''அம்மா...?'' என்று என்னையே மறுபடி கேட்டவள், ''இல்லை. அவள் சராசரியாகத் தானிருக்கிறாள். எந்த நேரத்தில் எப்படி நடந்துக் கொள்வது என்றெல்லாம் தெரியாத ஒரு பித்துக்குளி அவள். ஏதோ நாடகத்தைப் படித்துக் கொண்டு அதில் வரும் ஒரு யாத்திரமாய் நடித்தால் எடுபடுமா என ஆராய்ந்துக் கொண்டிருக்கிறாள்.''

கையிலிருந்த புத்தகங்களைப் படிப்பது போல் பாசாங்கு செய்துக் கொண்டு இருவரும் அமர்ந்திருந்தோம். இருவர் மனங்களும், வெளியே கிளம்பிச் சென்று இன்னும் திரும்பியிராத இருவர் மீதே படிந்துக் கிடந்தன.

ஆறரை மணியிருக்கும். தடாலென்று கதவைத் திறந்துக் கொண்டு உள்ளே நுழைந்தார் டேவரெனர். சோக வார்த்தைகளைப் பேசப் போவதாய் எங்களைத் தாயர் படுத்தியது அவர் முகம். சோஃபியா எழுந்து ''என்ன இன்ஸ்பெக்டர்...?'' என்று பதறினாள்.

''ஒரு துயரச் செய்தி வந்துள்ளது. காரின் நிறம், அடையாளம், பதிவு எண் ஆகியவற்றைக் கொடுத்து, நகர் முழுவதுக்கும், ஒரு பொது அபாய அறிவிப்பு அனுப்பியிருந்தேன். ஒரு பாதசாரி, குறிப்பிட்டிருந்த நிறம் மற்றும் அடையாளம் கொண்ட கார் ஒன்று ஹீத் நெடுஞ்சாலை அருகே தடம் மாறி, சாலையோர மரப் பாதாளத்துக்குள் விழுவதைப்பார்த்ததாய் தகவல் தந்திருக்கிறார்.''

இருக்கையிலிருந்து அலறிப்புடைத்து எழுந்த சோஃபியா, ''ஓ, கடவுளே...! கொடூரப் பள்ளத்தாக்காயிற்றே அது...!'' என கதறினாள்.

''ஆமாம் சோஃபியா.'' கொஞ்சம் நிறுத்தி விட்டுச் சொன்னார்: ''அது, இங்கிருந்து எடித்'தையும் ஜோஸஃபையும் சுமந்து சென்ற காரே தான் என்று காவலர்களால் ஊர்ஜிதமாகி விட்டது. நொறுங்கிப் போய் விட்டதாம். காரிலிருந்த இருவரும் இறந்து விட்டனர். அடையாளம் தெரியாத அளவு குரூரமாய் நசுங்கி ஸ்தலத்திலேயே கொல்லப்பட்டு விட்டனர்.''

''ஜோஸஃபைன்...!'' - வாயிற்படியில் நின்றிருந்த மகதாவின் வானத்தைக் கிழித்த அலறல். ஓர் உன்னதத் தாயின் கதறல். ''ஜோஸஃபைன்! என் தாயே...!''

சோஃபியாவும் கதறியபடி ஓடி, நிலைதடுமாறிய மகதாவின் உடலைச் சுற்றி கை வளையமிட்டு அமரச் செய்வதில் முனைந்தாள்.

என்னருகிலிருந்த டேவரெனரிடம், ''ஒரு நிமிடம்...'' என்று வேண்டி தனிமையானேன். மாலையில் நடந்த ஒரு நிகழ்வு எனக்கு ஞாபகம் வந்தது. தான் சில குறிப்புகள் எழுதப் போவதாய் சொல்லி தன் அறை சென்ற எடித், அவற்றை தயார் செய்து, உறைகளுக்குள் அடைத்து, ஒட்டியும் முடித்தார். ஆனால் வெளியே கிளம்பிய அவர், கைகளில் அவற்றை எடுத்துச் சென்றிருக்கவில்லை. மின்னல் ஒன்று என் உளவு மூளைக்குள் வெட்டியது.

மடை திறந்த காட்டாறாய் இங்கிருந்து விடுபட்டு படிகளேறி எடித் அறைக்குள் பாய்ந்தேன். அந்த இரு ஒட்டப்பட்ட உறைகளும் எடித் கிளம்பும்போது அமர்ந்திருந்த நாற்காலியின் அருகிருந்த மேஜை யிலேயே இன்னும் கிடந்தன. நான் ஓடி வந்த அவசரத்தைப் பார்த்து அனைவரும் என்னைத் தொடர்ந்து இப்போது எடித் அறைக்குள் பிரவேசித்திருந்தனர்.

மேலே இருந்த உறையின் பெறுநர் முகவரியில் 'திரு டேவரெனர், முதன்மை இன்ஸ்பெக்டர்' என இருந்தது. இது, ஓடி வந்ததற்கான என் சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தியது. அதை டேவரெனரிடம் ஒப்படைத்தேன். உறையைக் கிழித்து உள்ளிருந்து ஒரு தாளை உருவியவர், வாய் விட்டுப் படித்தார் :

*''நான் இறந்த பிறகு இந்தக் கடிதம் பிரிக்கப்பட வேண்டும் என்பதே என் இறுதி ஆசை. விளக்கம் எதுவும் தர எனக்கு விருப்பமில்லை; ஆனால் என் கொழுந்தனார் லியோனைட் மற்றும் சமையற்காரி நானி ஆகிய இருவரின் மரணத்திற்கான முழு பொறுப்பும் - நானே - என ஒப்புக் கொள்கிறேன். லியோனைட் கொலை வழக்கில் ப்ரெண்டாவும் லாரன்ஸும் நிரபராதிகள் என்று, இறை சத்தியமாய் அறிவிக்கிறேன். 783, ஹார்லி தெரு, என்ற முகவரியில் வசிக்கும் டாக்டர் மைக்கேலுட னான விசாரணை, என் வாழ்நாள் முடிந்து விட்ட ஒன்று எனும் உண்மையையும், இன்னும் சில மாதங்களில் என் உயிரைக்*

*குடிக்கவல்ல புற்று நோயுடன்தான் நான் வாழ்ந்துக் கொண்டிருக்கிறேன் எனும் உண்மையையும் ஊர்ஜிதப்படுத்தும். இந்த முறையில் வெளியேறி என் வாழ்க்கைக்கு முடிவு தேடிக் கொண்டு, செய்யாத குற்றத்திற்காக தண்டனையை எதிர் நோக்கியிருக்கும் இரு நிரபராதிகளை விடுவிப்பது தான் உகந்தது என்று முடிவு செய்து செயல்படுத்தி விட்டேன். சுய நினைவுடன் இக்கடிதத்தை எழுதி சட்டத்தின் முன் சமர்ப்பிக் கிறேன்.*

*எடித் ஹெவிலேண்ட்.*

''எடித் பாட்டியா...?'' - த்ராணியற்று முணுமுணுத்தாள் சோஃபியா.

வேலியில் படர்ந்திருந்த ஓர் அழகு கொடி, தன் படர் குழல்களைத் தேவையின்றி வெளியே நீட்டியபடியிருக்க, அதை வெகு மூர்க்கத் தனமாய் இழுத்துப் பிய்த்து தூர எறிந்த குரோதக்கார எடித் குணம் என் கண்முன் விரிந்து மறைந்தது. அப்போது எடித்'தையே குற்றவாளியாக்கி நான் செய்த கற்பனையும் நினைவுக்கு வந்தது.

ஆனால் ஜோஸஃபைன் ஏன்...?

இந்தக் கேள்வி எங்கள் மூன்று பேருக்குள்ளும் உதித்து மேற்கூறிய எடித் ஹெவிலேண்ட்'டின் கடிதத்தையே சந்தேகக் கண் கொண்டு பார்க்க வைத்தது. இதனை சோஃபியா அவசர அவசரமாய் எங்களிடம் முன்மொழிந்தாள்: ''எதற்காக ஜோஸஃபைனையும் கூட்டிச் செல்ல வேண்டும்?'' கைகளைப் பிசைந்தபடி திண்டாடினாள்: ''ஏன்...? ஏன்..?''

''எதற்காக அந்தக் குழந்தையை தன்னுடன் கூட்டிப் போய் கொல்ல வேண்டும்...?'' என நானும் ஆணையாய் அலறினேன். ''இதற்கு என்ன காரணம்...?''

நான் இவ்வாறு கேட்டாலும், அப்படி எடித் செய்ததற்கான காரணம் எனக்குள் பிடிபட்டு விட்ட ஓர் உண்மையாய் பிரகாச மாயிற்று. எனில் ஜோஸஃபைனும் இக்கொலைகளில் உள்ளடங்கி யிருக்கிறாளா...? நான் என் கைகளில் எடித் தயார் செய்திருந்த இன்னொரு கடிதத்தை இன்னும் சுமந்துக் கொண்டுதானிருந்தேன். அது உறுத்தியது. குனிந்து அதன் பெறுநர் முகவரியைப் படித்தேன். 'திரு சார்ல்ஸ்' என்றிருந்தது.

இந்த உறை, முதல் உறையை விட நல்ல தடிமனாகவும் கனமான தாகவும் இருந்தது. உள்ளே இருப்பது என்ன என பிரிப்பதற்குள் ஊகித்து விட்டேன். உறையை அவசரகதியில் பிரித்தபோது, உள்ளிருந்து, ஜோஸஃபைன் சொல்லி வந்த சிறு கறுப்பு டைரி, வழுக்கிக் கொண்டு கீழே விழுந்தது. பரபரத்து அதைக் கையிலெடுத்தேன். எடுக்கும் போதே அதன் முதல் பக்கம் விரிந்தது.

இப்போது -

இதையெல்லாம் கூர்ந்து ஆராய்வது போல் கவனித்துக் கொண்டிருந்த சோஃபியா -

தீர்மானமாய், வானமதிர கத்தினாள்:

''எடித் செய்திருக்க வாய்ப்பில்லை. அவர் கடிதம் ஒரு சப்பைக்கட்டு.''

''சோஃபி....! என்ன சொல்கிறாய்...?!'' - நான் திறந்து விரிந்த பக்கத்திலிருந்து கண் அகற்றி, புருவங்கள் முடிச்சிட சோஃபியாவைப் பார்த்து கெஞ்சினேன் : ''பின் யார்...?''

''ஜோஸஃபைனின் டைரியை உனக்கு சமர்ப்பித்திருப்பதிலிருந்தே விளங்கவில்லையா...?'' - என்று ஒட்டமாய் என்னை நெருங்கியவள், ''அது - எடித் அல்ல. ஜோஸஃபைன்...! சரி தானே...? ஜோஸஃபைன் தானே...?'' என்று என் சட்டையைப் பிடித்து வெறி கொண்டவளாய் உலுக்கினாள். ''சொல் சார்ல்ஸ்...? அது ஜோஸஃபைன் தானே...?''

இருவரும் குனிந்து, பயக் கண்களோடு, விரிந்திருந்த டைரியின் முதல் பக்கத்தின் மையத்தில், சிறு பிள்ளைக் கையெழுத்தோடு ஆக்கிரமித்திருந்த, அந்த ஒரே ஒரு வரியைப் படித்தோம். அது:

***நான் இன்று தாத்தாவைக் கொன்றேன்.***

# 26

எத்தனை குருடர்களாய் நாங்களிருந்திருக்கிறோம் என்று பிரமித்து, ஆச்சரியத்து, அதிசயித்து, நொந்துப் போனேன். உண்மை, இந்த வழக்கு நடந்த முழு காலகட்டத்திலும் பட்டவர்த்தனமாக பிரசன்னமாகிக் கொண்டுதானிருந்திருக்கின்றது. ஜோஸஃபைன் கோணத்தில் சொல்ல வேண்டுமாயின், இந்த முட்டாள் போலீஸின் கண்களுக்குத்தான் அது அறியப்படாமலேயே இருந்திருக்கின்றது. ஜோஸஃபைன்...! ஜோஸஃபைன் மட்டும்தான் தேவையான அனைத்து தகுதிகளும் பொருந்தி கொலையாளி என நிரூபண மாகிறாள். அவள் வீண் டம்பம் - கொலை பற்றி மட்டுமே ஓயாமல் பேசுவதில் அவள் காட்டிய மகிழ்ச்சி - தான் தான் மகா புத்திசாலி, அதுவும் இந்தக் கொலை பற்றிய சம்பவங்களைச் சேகரிப்பதில், என அவள் காட்டிக் கொண்டேயிருந்த மேதாவித்தனம் - போலீஸ் எத்தனை முட்டாள் என அவள் போதித்துக் கொண்டேயிருந்த நேர்த்தி இவையனைத்தும் சந்தேகத்துகிடமின்றி, அவளைக் குற்றவாளி என நிரூபித்து விடுகின்றன.

ஜோஸஃபைனை நான் நொடிப் பொழுது கூட கொலையாளியாய் முன் நிறுத்தவேயில்லை. அவள் ஒரு குழந்தை எனும் காரணத்தால். குழந்தைகள் கொலை செய்துள்ளனர் எனும் ஆதாரங்கள் இருப்பினும், ஜோஸஃபைனை அவ்வகையில், நான் துளியூண்டு கற்பனை கூட செய்ததில்லை. ஆனால், இப்பொழுதோ, அதிர அதிர, லியோனைடின் கொலை, மிகச் சுலபமாக ஒரு குழந்தை செய்த கொலை என்பதற்கான வட்டத்துக்குள் அடங்கி வருகின்றது. அவளுடைய தாத்தாவே வலியின்றி தன்னைக் கொல்வதற்கான முறையை குறித்துக் காட்டியுள்ளார். படிப்படியான செய்முறையையே ஜோஸஃபைனிடம் ஒப்படைத்துள்ளார் என்று கூட சொல்லலாம். ஆக ஜோஸஃபைன் செய்ய வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்று தான் - எந்தத் தடயமும் இல்லாமல் கொலையை நிகழ்த்தி முடிப்பது...! இதற்கான வழியினை அவளுக்கிருந்த துப்பறியும் கதைகளின் புலமை சுலபமாய்

புகட்டியிருக்கும். மற்றபடி, வழக்கு நெடுகிலும் ஜோஸஃபைன் செய்த அத்தனை பிரகடனங்களும், அவளறிந்த போலீஸ் கதைகளிலிருந்து சம்பவங்களைத் தேர்ந்தெடுத்து அவளாகவே அரங்கேற்றிக் கொண்ட கற்பனைகள்...! அந்த நோட்டுப் புத்தகம் - அதில் மோப்பம் பிடித்து எழுதித் தள்ளுவதாய் ஏற்படுத்திய மாயை - யாரோ கொலை செய்துள்ளதாய் அவளே ஏற்படுத்தி வந்த தொய்யாத புரளி - தனக்கு ஊர்ஜிதமாகும்வரை உண்மையை சொல்லப் போவதில்லை என்ற போலியான டம்பம் - போன்ற அனைத்துமே, அவளாகவே அரங்கேற்றிக் கொண்ட கற்பனைகள்....!

அதிலும், இவை எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல, தனக்குத் தானே அவள் எற்படுத்திக் கொண்ட, அந்தப் பளிங்குக் கல் கண்ணி...! மனிதனால் நம்பவே முடியாத நாடகம்! அவளை அவளே கொன்றுக் கொண்டிருக்கலாம் என்று நம்மை குலை நடுங்க வைக்கும் விபரீதம்! இங்கு தான் அவளுடைய பக்குவமற்ற குழந்தை மனம் அவளைக் காட்டிக் கொடுத்து விடுகின்றது. எந்த, வளர்ந்த, கொலைக் கலை தெரிந்த மனிதனும், இப்படி, ஆபத்து செறிந்த ஒரு கல் கண்ணியை எண்ணிக் கூட பார்த்திருக்க மாட்டான். ஆனால் ஜோஸஃபைனோ, கதவின் மேலிருந்து விழுவதால் தலை ஒன்றும் உடைந்து உயிர் போய் விடாது என, குழந்தைத்தனமாய் நினைத்திருப்பாள்...! நினைத்திருக்கிறாள்...! எப்படியோ பிழைத்து விட்டாள். இந்த நிகழ்விலும், சிறுமியை முன் நிறுத்தும் துப்பு உள்ளது. அது - அங்குள்ள உடைந்த நாற்காலியின் இருக்கை முழுதும் அப்பியிருந்த ஈர மண் தடங்கள்...! பளிங்குக் கல்லினை, விழுந்து விடாமல் கதவின் மேல் நிலைக்க வைக்க, உயரமில்லாத காரணத்தால், ஜோஸஃபைன் மட்டும் தான் அந்த நாற்காலியில் ஏறி, இப்படியும் அப்படியுமாக முயற்சி செய்திருக்க வேண்டும். தவறித் தவறி, சில முறை, அக்கல், கீழே விழுந்திருக்கிறது. இதனால் தான் புறக்கடை அறையில், கதவருகே, தரை முழுவதும், கல் விழுந்து ஏற்படுத்திய வடுக்கள் இருந்தன. பொறுமையாக முயன்று, தன் கழுத்துக் குட்டையால் கல்லினைக் கையாண்டு (கை ரேகைகள் பதிந்து விடக் கூடாதே....!), விழாதபடி கதவின் மேல் நிலைநிறுத்தி யிருக்கிறாள். பிறகு, அவள் நினைத்தபடி கல் விழுந்திருக்கிறது. சின்னதாய் காயமாக்கும் என்ற அவளின் எதிர்பார்ப்புக்கு மாறாக, உயிருக்கே உலை வைத்தது. மயிரிழையில் உயிர் பிழைத்தாள்.

அவள் ஆபத்திலிருக்கிறாள் - அவளுக்குக் கொலையாளியின் முகவரி தெரிந்துள்ளது - அதனால் தான் அவள் தாக்கப்பட்டிருக்கிறாள்

- என்ற பதிப்பினை எல்லோர் மனத்திலும் ஏற்படுத்த எண்ணிய ஜோஸஃபைனின் வெற்றிகரமான இலக்கு, இந்தக் கல் கண்ணி...! கல் கண்ணி நாடகத்தின் அரங்கேற்றத்துக்கு செல்லுமுன், ஒரு கலை இயக்குனரின் கை வண்ணத்துடன், தன் அறையை அமளி துமளியாக்கிப் போட்டுச் சென்றுள்ளதும் - இவளே...!

தண்ணீர் தொட்டி அறையிலிருந்து என் கவனத்தை என்னமாய் கவர்ந்து திசை திருப்பினாள் என்பது இப்பொழுது நிதர்சனமாயிற்று. ப்ரெண்டா-லாரன்ஸ் காதல் கடிதங்களை இவளே கொண்டு போய் தண்ணீர் தொட்டிகள் நிறைந்திருந்த மொட்டை மாடி அறையில் பதுக்கி வைத்து விட்டு - அங்கிருந்து லாரன்ஸ் வருவதைப் பார்த்து, அதனால் சந்தேகம் கொண்டு, தானே அங்கு போய் துப்பறியும் போது தான் அக்கடிதங்களைக் கண்டுபிடித்ததாக அதிகாரமாய் விளக்கி - என்னமாய் எல்லோரையும் முட்டாளாக்கியிருக்கிறாள்....!

மருத்துவமனையிலிருந்து வெளியாகி வீட்டுக்குத் திரும்பும் வழியில் ப்ரெண்டாவும் லாரன்ஸும் கைதாகி செல்வதைக் கண்ணுறும் ஜோஸஃபைனின் நிம்மதி தடுமாறுகிறது. இவர்களிருவரின் கைதினால், வழக்கு, சிறப்பான ஒரு முடிவை நோக்கி - அது சரியோ தவறோ - செல்வதை அவளால் ஜீரணிக்கவே முடியவில்லை. ஒரு முடிவு நேர்ந்து விடின், ஜோஸஃபைன், வீட்டின் பிரதான தகுதியிலிருந்து இறங்கி விடுவாளே...! அழகற்ற சிறுமி என ஒதுக்கப்படும் இவளை, பிறகு யார் சீண்டுவார்கள்...?! எனவே, எடித்'தின் மருத்துவ அலமாரியிலிருந்து டிஜிட்டலின் மருந்து அனைத்தையும் திருடி, காபிக்குள் போட்டுக் கலந்து, அப்படியே மேஜையில் வைத்து விட்டு நழுவி விடுகின்றாள்.

நானி அதை எடுத்துக் குடித்து விடலாம் என அவள் எதிர்பார்த்திருப்பாளா? இருக்கலாம்...! அன்று காலை என்னுடன் பேசிக் கொண்டிருந்தபோது, நானி தன்னை எப்போதும் வசவு பாடிக் கொண்டே இருப்பதாய் குறை கூறியிருக்கிறாள் ஜோஸஃபைன். இதுவும் ஒரு கல் கண்ணிப் போலத்தான்...! அங்கு எப்படி கல் தலையில் விழுந்துக் காயமேற்படுத்தினால், தன்னைக் கொலைகாரன் குறி வைத்து விட்டான் என அனைவரையும் நம்ப வைத்து விடலாம் என்று எண்ணித் துணிந்தாளோ, அதே போல, நானி மட்டும் உலவும் சமையலறைப் பகுதியில், தனக்களிக்கப்பட்ட காபியில் டிஜிட்டலின் கலந்து நானி பார்வைபடும்படி வைத்து, குடித்து இறந்துத் தொலையட்டும் என துணிந்திருக்கிறாள். நானியின் துரதிர்ஷ்டம்...!

தன் வாழ்நாள் முழுவதும் வீட்டின் தினுசு தினுசான குழந்தைகளோடே இருந்து வாழ்ந்து விட்ட நானிக்கு, ஜோஸஃபைனின் போக்கு பயம் ஏற்படுத்தியிருக்குமா? ஆமாம் என்றே எனக்கு விளங்கிற்று. ஜோஸஃபைன் சாதாரணக் குழந்தையாய், குழந்தைத் தனம் கொண்டு இருக்காமல், அசாதாரண சிந்தனைகளோடு வளைய வருவதை, நானி நிச்சயம் நுகர்ந்திருக்க வேண்டும். வயதுக்கு மீறிய ஜோஸஃபைனின் மூளை வளர்ச்சி, நீதி நெறி தர்மங்களை, வழுவச் செய்து விட்டது. ஏனென்றால், இக்குடும்பத்தாரின் மரபணுக்களில் கலந்து வாழையடி வாழையாய் இறங்கி வரும் குரூரங்கள் - சோஃபியா குறிப்பிட்டு விவரித்த குரூரங்கள் - அத்தனையும், ஒட்டு மொத்தமாய் ஜோஸஃபைனுக்குள் இறங்கி இருக்கின்றன.

ஜோஸஃபைனுடைய பாட்டியின் 'உண்மையைத் தவிர வேறொன்றில்லை' எனும் குரூரம் மற்றும் மகதாவின் தலை விரித்தாடும் தற்பெருமை குரூரம் ஆகியவை, மிச்சமில்லாமல் சிறுமிக்குள் வியாபித்து விட்டன. அவர் தந்தை பிலிப் போன்ற ஒதுக்கப்பட்ட சிறுமி, 'பிறந்தவுடன் மாற்றப்பட்ட குழந்தை' போன்ற அவதூறுகளால் மனம் முழுதும் ரணமாகியே வாழ்ந்திருக்கிறாள். இவை மட்டுமல்ல...! மிக முக்கியமாக, ஜோஸஃபைனின் ஒவ்வோர் அணுவிலும் லியோனைடின் நரித்தனக் குணாதிசயம் மாற்றமின்றி இறங்கியுள்ளதைத் கவனிக்க வேண்டும். பெரியவர், வக்கீல் கைட்ஸ்கில்'லுக்கு இழைத்தது போன்றே, இவளுக்குள்ளும் ஊறியுள்ள, நம்ப வைத்துக் கழுத்தறுக்கும் நய வஞ்சகத் தனம் ஓர் எடுத்துக்காட்டு. ஆனால், குடும்பத்தாரின் மீது பரவி அவர்களை மகிழ்வித்த லியோனைடின் அன்பும் பாசமும், ஜோஸஃபைனிடம், வெளியே செல்லாமல், திரும்பி, அவளுக்குள்ளேயே பரவிக் கிடந்து, இவளை மட்டுமே பரவசப்படுத்திப் பார்த்திருக்கின்றன....!

ஜோஸஃபைன், - அவளுக்கும், மேலும் குடும்பத்தாருக்கும் மிக ஆபத்தானவள் எனும் அபாய உண்மையை - லியோனைட் முளையிலேயே அறிந்திருக்கிறார் என்றே தோன்றியது. கூட படிப்பவர்களை இவள் என்ன வேண்டுமானாலும் செய்து விடலாம் எனும் பயத்தின் அடிப்படையில் தான், இவளைப் பள்ளிக்கு அனுப்பாமல், பிடிவாதமாய் மறுத்து வந்திருக்கிறார் பெரியவர். இவளின் வினோதப் போக்குக்கு தானே ஒரு கவசமாயிருந்து, வீட்டைக் கேடயம் போல் காத்து வந்திருக்கிறார். தனக்குப் பிறகும் இவள் கண்காணிக்கப்பட வேண்டியது அத்தியாவசியம் என்றும் அதற்கு சோஃபியா தான் உகந்தவள் என்று அவர் அவசரப்பட்டுள்ளதும் புரிந்தது.

மகதா கூட ஜோஸஃபைனை, இதே போல அபாயக் கோணத்தில் அனுமானித்துத் தான் ஸ்விட்சர்லாண்டுக்கு அனுப்ப எத்தனித்தாரோ? ம்ம்...! அப்படியிருக்கத் தேவையில்லை...! அது, தன் குழந்தைக்கு நேரவுள்ள முடிவினை, அமானுஷ்யமாய் அந்தத் தாய் உணர்ந்துள்ள உணர்வு...!

அப்படியெனில் எடித் ஹெவிலேண்ட்...? ஒரு வேளை, எடித், முதலில் சிறுமியின் நடவடிக்கைகளை சந்தேகித்து, பிறகு பயந்துத் தொடர்ந்து, கடைசியில் அறியப் பெற்றிருப்பாரோ...?!

எனக்கு வைத்திருந்த உறையுள் எடித் எழுதியிருந்த ஒரு சிறு கடிதம் என் கையில் தான் உள்ளது. அதனை, இப்பொழுது படித்தேன்.

*அருமை சார்லஸ்,*

*இது உனக்கு மட்டும் ரகசியமாய் எழுதப்பட்டது. நீ விரும்பினால் சோஃபியாவுக்கும். மற்றபடி சத்தியமாய் வேறு யாருக்கும் கிடையாது. யாராவது ஒருவருக்கு உண்மை தெரிந்தே ஆக வேண்டும் என்பது விதி. என்னைப் பொறுத்தவரை, அது நீ. இந்த உறையோடு நான் இணைத்துள்ள கறுப்பு நோட்டுப் புத்தகத்தை, யாருமே உபயோகப்படுத்தாமல் குலைந்த நிலையில் கொல்லைப்புறமுள்ள சிறு நாய்ப்பட்டியிலிருந்து எடுத்தேன். ஜோஸஃபைன், பல வருடங்களாக யாருமே செல்லாத அந்தப் பட்டிக்குள் தான் இதை மறைத்து வைத்திருக்கிறாள். கொஞ்ச நாட்களாக எனக்குள் வீரியமாய் வளரத் துவங்கியிருந்த அவள் மீதான சந்தேகத்தை, இது நடுநடுங்க ஊர்ஜிதம் செய்து விட்டது.*

*ஜோஸஃபைனை இனியும் வீட்டில் நீடிக்க விடுவது சரியே அல்ல. இதன் பொருட்டு நான் எடுக்க உள்ள நடவடிக்கை சரியோ தவறோ - நானறியேன். எது எப்படியோ, என் வாழ்க்கை, ஏறக்குறைய முடிந்தே விட்டது; அதிகபட்சம் இன்னும் ஓரிரு மாதங்கள் தான். ஜோஸஃபைன் செய்துள்ள அதிரடி செயல்கள் போலீஸ் மற்றும் நீதிமன்றக் கண்களுக்குக் கொண்டு சொல்லப் பட்டால், அந்த சிறு தளிர் எதிர் கொள்ள வேண்டிய சம்பவங்கள், என்னால் அனுமதிக்க இயலாதவை....! எனவே... ... ...*

*நான் தவறு இழைத்தவளாயின், கடவுளே, என்னை மன்னித்து விடு. நான் செய்யவிருப்பதும் ஒரு வகையில் கொலையே....! ஆனால், இது நிகழ்வது, சிறுமியின் மீதும் இக்குடும்பத்தின் மீதும் நான் கொண்டுள்ள அபரிமித அன்பின் காரணமாக....!*

*கடவுள் உங்களிருவரையும் ஆசீர்வதிக்கட்டும்.*

*எடித் டி ஹெவிலேண்ட்.*

சரியெனப்பட, கடிதத்தை சோஃபியாவிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னேன். பிறகு இருவரும் சேர்ந்து ஜோஸஃபைனின் கறுப்பு நோட்டுப் புத்தகத்தைத் திறந்து முன்னேறினோம்.



*நான் இன்று தாத்தாவைக் கொன்றேன்.*

பக்கத்தைத் திருப்பினோம். வியத்தகு தயாரிப்பாயிருந்தன, கறுப்பு நோட்டுப் புத்தகத்தில் அந்த அழகற்ற சிறுமி பதிவு செய்திருந்த நிகழ்வுகள்...! ஒரு மன நல நிபுணரின் பயிற்சிக்கு மிக உதவும் பதிவுகள்....! ஜோஸஃபைனுக்குள்ளேயே மறைந்துக் கிடந்துள்ள 'தான் தான் முக்கியம்' எனும் அகங்காரத்தின் ஆவேச வெளிப்பாடாய், அவள் நிகழ்த்தியுள்ள அறம் மீறிய ஒவ்வொரு செயலும், மிகச் சுத்தமாக பொறிக்கப்பட்டிருந்தன. இவற்றில் - குழந்தைத்தனம் மிக்க, ஆகவே முதிர்ச்சியற்ற, கொலைகளுக்கான இலக்குகள் - ஐயங்களுக்கிடமின்றி தெளிவாயின.

*தாத்தா, என்னை, நான் உயிருக்குயிராய் ரசித்துக் கற்றுக் கொள்ளத் துடிக்கும் பாலே நடனத்தைப் பயில அனுமதிக்க மாட்டார் என்பது திண்ணமாகி விட்டது. வீட்டில் யாரும் அவரை மீறி என் ஆசையைப் பூர்த்தி செய்யப் போவதுமில்லை. எனவே தாத்தாவைக் கொன்று விட முடிவு செய்தேன். அவர் இறந்ததும், நாங்கள் லண்டன் போய் வாழ்க்கையைத் தொடருவோம். அப்போது, அம்மா, நான் பாலே கற்றுக் கொள்ள நிச்சயம் முழு ஒத்துழைப்புத் தருவாள்.*

இவ்வாறு கறுப்பு நோட்டுப் புத்தகம் நெடுகிலும் பரவியிருந்த குறிப்புகளில் ஒருசிலவற்றை மட்டும் இங்கு வைக்கிறேன். அவை ஒவ்வொன்றும் அர்த்த புஷ்டி நிறைந்த விசேஷமானவை.

*ஸ்விட்சர்லாண்டு போவதற்கு எனக்குப் பிடித்தமேயில்லை - நான் போக மாட்டேன். ரொம்பவும் வற்புறுத்தி என்னை அங்நாட்டுக்கு அனுப்ப ஏற்பாடுகள் ஆகி விட்டால், நான் அம்மாவையும் கொன்று விடுவேன். அதற்காக விஷம் தேடுவது எப்படி என இப்பொழுதே நான் சந்திக்க வேண்டும். யூபெர்ரீஸ் வீட்டில் உள்ளது. அவற்றைப் பயன்படுத்தி கொலையை நிகழ்த்தி விடலாம். அவை விஷத்தன்மை மிக்கவை என புத்தகங்கள் கூறுகின்றன.*

*ஆஸ்டஸ் தேவையில்லாமல் தினம் தினம் என் மூக்கினை உடைக்கிறான். நான் பெண் என்பதால், உபயோகமில்லையாம். என்னால் துப்பறிய முடியாதாம். நான் துப்பறியும் முறைகளும் தவறாம். ஹஹ்ஹா. நான் தான் தாத்தாவைக் கொன்றுள்ளேன் என்று மட்டும் தெரிந்து விட்டால் என்னை உபயோகமற்றவளாய் நினைப்பானா...!*

*யாரைக் கொலைக்காரன் என்று பிரகடனப்படுத்துவது என இன்னும் நான் முடிவெடுக்கவில்லை. ப்ரெண்டா அல்லது லாரன்ஸ் என்று தான் முடிக்க வேண்டும். லாரன்ஸை விட்டு விடலாம். பாவம் அவர். அப்பிராணி. மேலும் எனக்குப் பாடமெல்லாம் சொல்லித் தந்தவர். இந்த ப்ரெண்டாவைப் போட்டுக் கொடுத்து விட வேண்டியது தான். அவள் ஒழுங்கற்றவள். நெறி தவறி வாழ்ந்தவள். அவள் வீட்டுப் பக்கமே நான் வந்ததில்லை என்றெல்லாம் சமயத்துக்கேற்றாற் போல் பொய்களைச் சொல்லிக் கொண்டு நழுவத் துடிக்கும் அபாய மானவள். லியோனைட் தாத்தாவைக் கொன்றவள், இவளாகவே இருக்கட்டும்.*

இவை தவிர இந்த நோட்டுப் புத்தகத்தில் கடைசியாய் பதிவாகியிருந்த பின்வரும் வாக்குமூலங்கள் ஜோஸஃபைனைத் தோலுரித்துக் காட்டும் நிதர்சனம்.

*நானியை நான் வெறுக்கிறேன், வெறுக்கிறேன், வெறுக் கிறேன். எப்படியோ அந்த வேலைக்காரியை இந்த அளவு இவ்வீட்டில் வளர விட்டு விட்டார்கள். நான் சின்னப் பெண் என்றும், நான் பெரியவள் போல காட்டி அலட்டிக் கொள்கிறேன் என்றும் எனக்கு முன்னாலேயே பலரிடம் என்னைத் தாழ்த்திப் பேசுகிறாள். வேலைக்கார கிழம். அம்மாவைத் தூண்டித் தூண்டி ஒரு வழியாக என்னை வெளி நாடு கடத்திப் படிக்க வைப்பதில் வெற்றி கண்டு விட்டாள். அவளைக் கொல்லத்தான் போகிறேன். இதில் பின்வாங்கலே கிடையாது. பாட்டி எடித்'தின் இருதய மாத்திரைகள் ஏதேஷ்டம். பிறகு போலீஸ் வரும்... பழையபடி சுறுசுறுப்பாய் நடந்துக் கொண்டு எல்லோர் பார்வையையும் என் மேல் திருப்பி, வளைய வரலாம்.*

*நானி இறந்து தொலைத்தாள். எத்தனை சந்தோஷம். இனி என்னை விமர்சிப்போர் கிடையாது. அந்த இருதய மாத்திரை*

*பாட்டிலை எங்கு மறைப்பது என்றே தெரியவில்லை. எடித் பாட்டி அறையிலேயே வைத்து விடலாம். இல்லை, ஆஸ்டஸ் அறையில்...? ஆம், அது தான் சரி. அப்போது தான் எல்லோரும் அவனை சந்தேகப்பட்டுக் கொண்டு அலையோ அலை என அலைவார்கள். பார்க்கப் பார்க்கப் பரவசமாயிருக்கும்.*

*ஒரு நாள் நானும் மிக வயதாகி இறக்கும் போது இந்த நோட்டுப் புத்தகத்தை முதன்மை இன்ஸ்பெக்டரின் முகவரிக்கு தபால் செய்து விட்டுத் தான் மூச்சினை நிறுத்துவேன். உண்மையிலேயே நான் எத்தனை பெரிய மகா கொலைகாரி என்றும் போலீஸின் கண்களில் மண்ணைத் தூவிக் கொண்டு எத்தனை வருடங்கள் வாழ்ந்திருக்கிறேன் என்றும் அவர்களுக்கு அப்போது விளங்கும்.*

அந்தக் கறுப்பு நோட்டுப் புத்தகத்தை மூடினேன்.

அடக்கமுடியாமல் ஓசையின்றி ஆழமாய் கதறிக்கதறி அழுதாள் சோஃபியா. ''ஓ சார்ல்ஸ்...! ஓ சார்ல்ஸ்...!'' - வார்த்தை எழமால் அஞ்சினாள். ''எத்தனை கொடூரம்...! எவ்வளவு பயங்கரம்...! பேயாய் தான் உலவியிருக்கிறாள்....! பேயே தான்...! குட்டிப் பிசாசு என்போமே, அது எத்தனை சரியாய் பொருந்தி விட்டது பார்த்தாயா...! ஆனாலும், அவள் என் தங்கை சார்ல்ஸ்....! இக்குடும்பத்தாரை எத்தனை நேசித்தேனோ, அதை விட சில மடங்கு அதிகமாய், அவள் அழகற்று ஒதுக்கப்படுகிறாள் எனும் ஒரே காரணத்திற்காக, அவளை நான் நேசித்திருக்கிறேன். அதனால்... அதனால்... அவளுக்கு நேர்ந்துள்ள இக்கதி என்னை உலுக்கித் தள்ளுகிறது சார்ல்ஸ்....!''

நானும் இதே மனோநிலையிலேயே இருந்ததால் எதுவும் பேசவில்லை. இந்த வீட்டில் இருப்போரை விட, அந்தக் குட்டிப் பிசாசு, அதிகம் பேசிப் பழகிக் களித்து சண்டையிட்டு வாழ்ந்தது என்னிடம் தான். நான் அச்சிறுமியின் நடவடிக்கைகளில் வசியமாகி பிரமித்திருக்கிறேன். அவளின் அருகாமையில் ஒரு வகை பாதுகாப்பு கலந்த தைரியத்தோடு இருந்திருக்கிறேன். எடித் இறந்ததில் கூட - அவர் வயதானவர், புற்று நோய் கண்டு ஏறத்தாழ உதிர்ந்தே போனவர் எனும் காரணங்களால் - இழப்பு தெரியவில்லை. ஜோஸஃபைனின் அகால மரணத்தில் இழப்பு இருந்தது. இக்குரூர வீட்டில் குரூர செய்கைகள் செய்து குரூர முடிவு அடைய என விதிக்கப்பட்ட சிறுமி. என் கண்களும், பொல பொலவென அழுதன.

*கண்களைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்த சோஃபியா கேட்டாள்: ''அவள் இருந்திருந்தால் - போலீஸ் கைகளில் அகப்பட்டிருந்தால் - என்ன முடிவு கிடைத்திருக்கும்...?''*

*''சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பப்பட்டிருப்பாள் என நினைக்கிறேன். பிறகு விடுவிக்கப்பட்டிருப்பாள் - கொலைகள் செய்த பெண் எனும் முத்திரையோடு. இது கொடுமையாய் தெரியவில்லை....? இல்லை, அவள் செய்துள்ள கொலைகள் மன்னிப்புக்கு அப்பாற்பட்டவை என முடிவாகி, அவள் வாழ்க்கைப் பூராவும் கம்பிகளுக்குப் பின்னாலும் போடப்பட்டு விடலாம்.''*

*''இப்படியே இருந்து விடட்டும்...'' என்று நடந்ததை ஜீரணிக்க முயன்றவள், ''ஆனால் பாட்டி எடித்...! எத்தனை உயர்ந்தவள் பார்த்தாயா...! ஒரு கொலைப் பழியையே தன் மேல் சுமந்துக் கொண்டு மடிய நினைத்திருக்கிறாள்....! தியாகி...!''*

*''நிச்சயம் தியாகி தான்...! எடித், ஹேர்லி சாலைக்குச் சென்று வரும் போதே நினைத்தேன், அவருக்கு ஏதோ நோய் பீடித்துள்ளது என்று...! ஆனால், புற்று நோயாயிருக்கும் என்று எதிர்பார்க்கவேயில்லை...!'' என்ற நான், இறுக்கத்தைத் தளர்த்தி அமைதி காணும் பொருட்டாக, ''ப்ரெண்டாவும் லாரன்ஸும் அடுத்த விசாரணைக்கு வரும்போது, அவர்கள் மீது குற்றம் இல்லை என நிரூபிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டு விடுவார்கள்'' என்றேன்.*

*பிறகு, சோஃபியாவை மிக அருகில் நெருங்கி, தோளோடு இழுத்து அணைத்துக் கொண்டு, ''சோஃபியா....! இனி நீ என்னை மணந்துக் கொள்வாய்....!'' என்றேன், அவள் மறுக்க மாட்டாள் என்ற உறுதியுடன். இம்முறை, காதல் காமம் தோயாமல், ஆறுதலாய் சொன்னேன்....! தொடர்ந்தேன்: ''நான் பெர்ஸியாவுக்கு மாற்றப்பட்டுள்ளேன். இந்தக் குரூர வீட்டின் சாயல் கூட பட்டு நம் நிம்மதி பறிபோய் விடாமலிருக்க இறைவனாய் அள்ளித் தந்த மாற்றலாய்படுகின்றது, இது...! உன் தாயார் இனி வேண்டிய நாடகங்களைப் போட்டுக் கொண்டு வாழலாம். உன் அப்பா, இன்னும் இன்னும் புத்தகங்கள் வாங்கி மூழ்கலாம். ஆஸ்டஸ், ரொம்ப சீக்கிரமாய் ஏதாவதொரு பல்கலைக் கழகத்தில் கல்லூரி வாழ்க்கையில் சிறகடிக்கலாம். விட்டு விடு. எல்லோரும் இனி வாழ்வர். அவர்களைப் பற்றிய நினைவும் கவலையும் வேண்டாம்.'' என்ற நான், அவள் முகத்தோடு முகம் செருகி, கண்களோடு கண்கள் ஊடுருவி சொன்னேன்: ''என்னைப் பற்றி மட்டும் நினை....!''*

அவள், இத்தனை நாட்களில், முதல் முறையாக, என்னை இறுக்கி அணைத்தாள். அவளும் என் கண்களுக்குள் தன் கண்களைப் பதித்தாள். கேட்டாள்: ''உனக்கு பயமாயில்லையா சார்ல்ஸ், என்னை மணக்க....!''

''எதற்காக பயப்பட வேண்டும்...? வீட்டிலுள்ளோர் அனைவரது மோசமான குணங்களின் மரபணுக்களும், ஒன்று சேர்ந்து, பரிதாபகரமான ஜோஸஃபைனிடம் இறங்கியிருந்தன. உன்னிடம், என் அருமை சோஃபியா, உன்னிடம், லியோனைட் பரம்பரையின் தைரியமும் பரோப குணங்களும் பரவி நிலைத்துள்ளன. எப்பொழுதும் மிகச் சரியான முடிவுகளையே எடுக்கவல்ல சிந்தனையாளர் லியோனைட், இக்குடும்பத்தின் சுமை தாங்கியாய் உன்னை நியமித்திருப்பதிலேயே அது ஊர்ஜிதமாகிறது. நிமிர்ந்து நில், என் உயிரே. எதிர்காலம் நம் கைகளில்....!''

''உறுதியாய் நிற்பேன் சார்ல்ஸ். ஐ லவ் யூ. உன்னைக் கரம் பிடிப்பேன். உன்னை மகிழ்ச்சியாய் இருக்க வைப்பேன்'' என்றவள், என் கையிலிருந்து கறுப்பு நோட்டுப் புத்தகத்தைக் கண்ணுற்று, ''பரிதாப ஜோஸஃபைன்'' என்று பெருமூச்செறிந்து அமைதியானாள்.

நானும், தன்னிச்சையாக, ''மிகப் பரிதாபமான குழந்தை'' என்றேன்.

அப்பாவை சந்தித்த போது, ''என்ன முடிவு நேர்ந்துள்ளது...?' என்று கேட்டார்.

''எல்லாம் அந்த குழந்தை ஜோஸஃபைன் தானப்பா...'' என்றேன் நான்.

''நான் ஊகித்திருந்தேன் சார்ல்ஸ்...! உனக்கு நினைவிருக்கிறதா...? நானி இறந்த தகவல் வந்த போது நாமிருவரும் விவாதித்துக் கொண்டிருந்தோமே...! அந்த விவாத இறுதியில், ஜோஸஃபைனை மட்டும் நாம் ஏன் விட்டு வைக்கிறோம் - அது சரியில்லை - எனக்கு வரும் இச்சந்தேகம் ஏன் உனக்கு வரவில்லை - என உன்னிடம் பேச ஆரம்பித்தேன். அதற்குள் நானியின் தகவல் வந்து...'' என்றவர், தன்னிருக்கையிலிருந்து எழுந்து என் கைகளைக் குலுக்கி, ''போகட்டும்...! பரவாயில்லை...! வென்று விட்டாய்'' என்று வாழ்த்தி விட்டு, பிறகு ஜன்னல் நோக்கி நகர்ந்தவர், விரிந்திருந்த வானின் எல்லையைப் பார்த்தபடி, ''மிகப் பரிதாபமான குழந்தை'' என்றார்.

[முடிந்தது]